# ஆவிக்கென்று விதைக்கிறவன் ஆவியினாலே நித்திய ஜீவனை அறுப்பான்.

கலாத்தியர் 6:

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 161 - JAN. 98

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்' சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11–16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1–3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் –மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்–மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்–மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்–யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்–யோவா. 21:15–17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5–8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூறும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்–1 கொரி. 11:23–26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1–6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40–43).

CHIEF APOSTLE N. LAZAR

## இதழின் உள்ளே . . .

PUDHIYA YERUSALEM CHEIDY
B'LORE -53
(YEAR→1998 JAN - 98 DEC

# ஆசிரியர் உரை

ஒரு புத்தாண்டை ஆரம்பித்திருக்கிறோம். ஆண்டின் துவக்க முதல் முடிவு மட்டும் தேவனுடைய ஆசீர்வாதம் உண்டாயிருப்பதாக. காலத்தைப் பார்த்தால் மிகவும் குறுகிய காலத்திற்குள்ளாக நாம் வந்து கொண்டிருக்கிறோம். தேவன் நீதியை சரி கட்டும் நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறது. ஆனபடியினால் நாம் பரிசுத்தத்தைக் கண்டிப்பாக கடைபிடித்து தேவனுடைய வல்லமையைப் பெற்றுக் கொள்வோமாக. தேவன் மகா பரிசுத்தராயிருக்கிறார். பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரை தரிசிக்க முடியாது. பரிசுத்த ஜீவியம் தேவ கிருபையினால், தேவ வல்லமையினால் மாத்திரம் ஆகும். இரட்சிப்பு எப்படி தேவனுடைய கிருபையோ அப்படியே பரிசுத்தமும் தேவனுடைய கிருபையே. இரட்சிக்கிறவர் கர்த்தர். பரிசுத்தமும் அவராகவே இருக்கிறார். நாம் கண்டிப்பாக பரிசுத்த ஜீவியத்தை உண்மையை, ஒழுக்கத்தை, தேவ கீழ்ப்படிதலை, ஜெப வாழ்க்கையை நாம் தீவிரப்படுத்துவோமாக. ஜெபத்தின் மூலமாக தேவ வல்லமைப் பெற்று, அந்த வல்லமையினால் மாத்திரமே நாம் பரிசுத்த வாழ்க்கை வாழ முடியும். தேவனுடைய வார்த்தையின்படி நாம் செய்யும் பொழுது அவருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து, பரிசுத்த வாழ்க்கை வாழும்போது தேவனுடைய வல்லமை நம்மை ஆட்கொள்ளும்; தேவ சமூகம் நம்மோடு கூட இருக்கும். வெற்றிக்கு அதுவே வழி. இந்த ஆண்டு வெற்றி வாழ்க்கையை தேவன் நம் எல்லோருக்கும் கட்டளையிடுவாராக! கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் உங்கள் எல்லோரையும் வாழ்த்துகிறோம். ஆமென்!

கிறிஸ்துவுக்குள்,

CHIEF APOSTLE **N. LAZAR**

(தொடர்ச்சி)

# திருச்சபை

அதன்படி தேவனாகிய கர்த்தர் சிருஷ்டிந்தவைகளில் சூரியனாகிய பெரிய சுடரும் சந்திரனாகிய சிறிய சுடரும் மகத்தான சுடராக இருந்தன என்றும், இவற்றில் சூரியனாகிய மகத்தான பெரிய சுடர் பகலில் பூமியின்மேல் பிரகாசித்து, பூமியை ஆண்டு கொள்ள வேண்டுமென்றும், மகத்தான சிறிய சுடராகிய சந்திரன் இரவிலே பிரகாசித்து இரவை ஆண்டு கொள்ள வேண்டுமென்றும், இதன் மூலமாக இரவுக்கும், பகலுக்கும் வித்தியாசமுண்டாக்கி, நாட்களையும், வருஷங்களையும், காலங்களையும், அறிந்து கொள்ள வேண்டுமென்றும், இதன் மூலம் அவ்விரண்டும் அடையாளங்களாக இருக்க வேண்டுமென்றும் கர்த்தர் அவைகளை சிருஷ்டித்தார் என்று உணர்ந்து கொள்ள முடிந்தது.

இதன் பின்பு இந்த வார்த்தைகளுக்குள் மறைந்திருக்கும் ஆவிக்குரிய இரகசியத்தையும் ஆவியானவர் விளக்கித்தந்தார். இதன் மூலமாக ஆவிக்குரிய வானில் பிரகாசிக்கும் மகத்தான பெரிய சுடர், நீதியின் சூரியனாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என்றும் கண்டு கொள்ள முடிந்தது. இந்த மகத்தான பெரிய சுடராகிய நீதியின் சூரியன் பகலில் பிரகாசித்து உலகத்தற்கு ஒளியைக் கொடுக்க கூடியதாயிருந்தது.

'பகற்காலமிருக்குமட்டும் நான் என்னை அனுப்பினவருடைய கிரியைகளைச் செய்ய வேண்டும்; ஒருவனும் கிரியை செய்யக்கூடாத இராக்காலம் வருகிறது; நான் உலகத்திலிருக்கையில் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறேன்' யோ. 9:4,5 என்ற வார்த்தையின் மூலம் இது விளங்கும். இதுவும், ஆனாலும் என் நாமத்திற்கு பயந்திருக்கிற உங்கள் மேல் நீதியின் சூரியன் உதிக்கும், அதின் செட்டைகளின் கீழ் ஆரோக்கியம் இருக்கும் நீங்கள் வெளியே புறப்பட்டுப் போய் கொழுத்த கன்றுக்களைப்போல் வளருவீர்கள் மல். 4:2. என்ற வார்த்தையின் நிறைவேறுதலாயிருந்தது.

'இருளில் இருக்கும் ஜனங்கள் பெரிய வெளிச்சத்தைக் கண்டார்கள்; மரண இருளின் திசையிலிருக்கிறவர்களுக்கு வெளிச்சம் உதித்தது' ஏசா. 9:2 என்று தீர்க்கதரிசி உரைத்தப்படி மரண இருளின் திசையிலிருந்தவர்கள் இடறுண்டு விழுந்து போகாதபடிக்கு நீதியின் சூரியனாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அவர்களுக்கு வெளிச்சமாயிருந்தார். அவர் ஊழியம் செய்த நாட்கள் பகற்காலமாயிருந்தது.

பின்பு ஒருவரும் கிரியை செய்யக்கூடாத இராக்காலம் வரும் என்று கர்த்தர் கூறியபடி ஒரு இராக்காலம் இந்த பூமியை மூடிக் கொள்ளும் என்று நீங்கள் அறியலாம். நாம் அந்த இரவுக்குள் பிரவேசிக்கத்தக்கதாக இப்பொழுது மாலைப்பொழுதில் இருக்கிறோம். இந்த இராக்காலத்தில் பூமியின் மேல் பிரகாசிக்கவும், பூமிக்கு வெளிச்சம் கொடுத்து பூமியை ஆண்டு கொள்ளவும் மகத்தான சிறிய சுடராகிய சந்திரனை கர்த்தர் கட்டளையிட்டிருக்கிறார். இந்த சந்திரனுக்கு சுய ஒளி கிடையாது. இது சூரியனிடமிருந்து ஒளியைப் பெற்று பூமியின் மேல் பிரகாசித்து சூரியனுக்கு சாட்சியாயிருக்கிறது. 'சந்திரனைப்போல் அது என்றென்றைக்கும் உறுதியாயும் ஆகாய மண்டலத்து சாட்சியைப்போல் உண்மையாயும் இருக்கும் என்று விளம்பினார்' [சங் 89:37] என்று கூறுவதன் மூலம் இது விளங்கும்.

இவ்விதமாக, மகத்தான சிறிய சுடராகிய சந்திரன் இருளான காலத்தில் மகத்தான பெரிய சுடராகிய சூரியனுக்கு உண்மையும் உறுதியுமான சாட்சியாய் இருப்

பது போல யாரும் கிரியை செய்யக் கூடாத இராக்காலத்தில் நீதியின் சூரியனாகிய இயேசு கிறிஸ்துவுக்கு ஒருவர் உண்மையும், உறுதியுமான சாட்சியுமாயிருப்பார். சந்திரனைக் காலக் குறிப்புக்காகப் படைத்தார். சங். 104:19 என்று எழுதியிருக்கிறபடி சந்திரன் உதயமாவதிலிருந்து காலத்தை மிகவும் தெளிவாக நிதானித்து கொள்ளலாம்.

மகத்தான சிறிய சுடராகிய சந்திரனைப் போலவே நட்சத்திரங்களும் இரவிலே பிரகாசிக்கக் கூடியவையாயிருக்கின்றன. இந்த நட்சத்திரங்கள் ஊழியர்களாயிருக்கின்றனர் (தானி. 12:3). 'சூரியனுடைய மகிமை வேறே; சந்திரனுடைய மகிமை வேறே. மகிமையிலே நட்சத்திரத்திற்கு நட்சத்திரம் விசேஷித்ததாயிருக்கிறது (1 கொரி. 15:41) என்று எழுதியிருக்கிறபடி கிறிஸ்துவின் மகிமை வேறே; கடைசிக் காலத்தில் கிறிஸ்துவோடு உண்மையும், உறுதியுமான சாட்சியாய் எழும்பும் பரிசுத்தவானுடைய மகிமை வேறே. அதைப் போலவே ஊழியருடைய மகிமையும் ஊழியருக்கு ஊழியர் வித்தியாசமாயிருக்கும், விசேஷித்துமிருக்கும்.

இவ்விதமாக சூரிய, சந்திர, நட்சத்திரங்களைக் குறித்து அறிந்து கொள்ளவும் கர்த்தர் கிரியை செய்தார். நட்சத்திரங்கள் அநேகமாயிருந்தாலும், சூரியனும், சந்திரனும் ஒவ்வொன்றுகவே இருக்கின்றன. அப்படியே புதிய எருசலேமுக்கு தலையும் ஒருவரே. எனவே, நீங்களும் இருளான காலத்தில் இடறுதபடிக்கு நடக்க சந்திரனின் ஒளியில் நடவுங்கள். சந்திரனே உண்மையும் உறுதியுமான சாட்சியாயிருக்கிறது. சந்திரனைப் போன்ற ஒருவர் கடைசிகாலத்தில் எழும்புவார் என்று இந்த சாட்சிகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

(தொடரும்)



*டிசம்பர் மாத தொடர்ச்சி*

# புசிப்பும் குடிப்பும்

நாம் கர்த்தருடைய பந்தியை ஆசரிக்கிறோமல்லவா. இயேசுவின் சரீரத்திற்கு அடையாளமான அப்பத்தை புசிக்கிறவன் அவர் சரீரத்தோடே ஐக்கியமாகிறன், இரத்தத்திற்கடையாளமான பாத்திரத்தில் பானம் பண்ணுகிறவன் இயேசுவின் இரத்தத்தோடே ஐக்கியப்படுகிறன். ஒரே அப்பத்தில் நாமெல்லோரும் பங்கு பெறுகிறபடிபடியால் அநேகரான நாம் ஒரே அப்பமும் ஒரே சரீரமாயுமிருக்கிறோம்.

அதைப் போல் விக்கிரகங்களுக்கு [பேய்களுக்கு] படைக்கப்படுகிற எந்த ஒரு போஜனபதார்த்தங்களின் மீதும் பேயின் ஆவி பிரசன்னமாகும். அதை புசிக்கிறவன் பேயோடே ஐக்கியமாகிறன் [1 கொரி. 10: 14-23]. ஆகையால் எக்காரணத்தைக் கொண்டும், விக்கிரகங்களுக்கு படைக்கப்பட்டவைகளை புசிக்கக் கூடாது, அது மகா பெரிய பாவம்.

நம்மோடு பழகுகிற விக்கிரக ஆராதனைக்காரர்கள், அவர்களது பண்டிகை நாட்களில் தின் பண்டங்களை செய்து சிலவற்றைப் படைப்பார்கள். நம்முடைய கொள்

கையை அறிந்து, இதை விக்கிரகங்களுக்கு படைக்கவில்லை உங்களுக்காகத்தான் எடுத்துவைத்தோம் என்று அன்போடே தருவார்கள். அப்படிப்பட்டவைகளையும் தேவ ஜனங்கள் வாங்கி புசிக்கக் கூடாது ஏனெனில் அவர்களது தெய்வங்களின் பண்டிகையை முன்னிட்டு அவர்கள் சந்தோஷத்திற்கென்று செய்யப்பட்ட விருந்தில் நமக்கென்ன பங்கு? அவைகளை வாங்கி மற்றவர்களுக்கு கொடுக்கும் கள்ளத்தனமும் வேண்டாம் எங்களுடைய கொள்கைப்படி நாங்கள் இதைப் புசிக்கக் கூடாது. வருத்தப்படாதீர்கள் என்று சொல்லி வாங்க மறுத்துவிட வேண்டும்.

அதே சமயம் விக்கிரக ஆராதனைக்காரர்களாகிய நமது நண்பர்கள் விருந்துக்கு அழைக்கிறார்கள். போகலாம். கொடுக்கிறதை வாங்கி புசிக்கலாம். இது பாவமல்ல. ஆனால் அது விக்கிரகத்துத்திற்கு படைக்கப்பட்டதென தெரிந்தால் கண்டிப்பாக புசிக்கக் கூடாது. நமது நண்பர்கள், உறவினர்கள் வீட்டு திருமணத்திற்கோ, வேறு விஷேச வைபவங்களுக்கோ, அழைக்கப்பட்டால் போய் சாப்பிடலாம். ஆனால் அப்படிப்பட்ட வைபவங்கள் ஒரு விக்கிரக கோவிலில் நடந்தால், அங்கு போய் பந்தியில் உட்காரக் கூடாது. அதினால் மற்றவர்கள் இடற ஏது உண்டு.

கடையில் விற்கிற பொருட்கள் எதையும் வாங்கி சாப்பிடலாம். அது படைக்கப்பட்டிருந்தாலும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை, காரணம் நாம் காசு கொடுத்து வாங்குகிறபடியால் அது நம்முடையதே. இது பற்றிய விவரங்கள் 1 கொரி. 8,10 அதிகாரங்களில் விவரிக்கப்பட்டுள்ளது.

நமக்கு முன் வைக்கப்படும் உணவுப் பொருட்களை சாப்பிடுமுன் கர்த்தரை ஸ்தோத்தரித்து ஜெபம் பண்ண வேண்டும் அந்த ஆகாரத்தை பரிசுத்த ஆவியானவர் அங்கிகரித்தால் புசிக்க வேண்டும். அது தேவ வசனத்தினாலும், ஜெபத்தினாலும் பரிசுத்தமாக்கப்படும் (1 தீமோ 4:4,5). நாம் ஜெபம் பண்ணுகையில் ஆவியானவர் தடை செய்தால் அந்த ஆகாரத்தை நிராகரிக்க வேண்டும். ஒரு முறை ஒரு ஆர்.சி குடும்பத்தினர் வீட்டில் ஒருவருக்காக ஜெபிக்க சென்றோம். எங்கள் முன் சில பலகாரங்களை வைத்தார்கள். அதன் மேல் கை வைத்து ஜெபித்தபோது, ஆவியானவர் அதை புசிக்க தடுத்தார். டீயை மாத்திரம் அருந்தி விட்டு பலகாரத்தை தள்ளி வைத்தோம். பின்னர் தெரிந்தது, அந்த ஆர்.சி கிறிஸ்தவர்கள் தீபாவளி பண்டிகைக்காக செய்த பலகாரங்களை எங்கள் முன் வைத்தார்கள் என்று.

நீ என்னை வாருங்கள், உட்காருங்கள், புசியுங்கள் என்று சொல்லுகிறாய், ஆனாலும் உன் இருதயம் என்னோடு இல்லை என்று ஆவியானவர் எனக்கு அறிவிக்கிறார். ஆகையால் நீ கொடுக்கிற ருசியுள்ள பதார்த்தங்களை நான் இச்சியேன், புசிக்க மாட்டேன். நான் புசிப்பானேன், பின்பு வாந்தி பண்ணுவானேன், என் இனிய சொற்களை நான் இழப்பானேன் (நீதி. 23:6-8).

மேலும் தேவ ஜனங்கள் போஜன பிரியர்களாக இருந்து வெறிக்க சாப்பிடக் கூடாது. ஒரு வீட்டுக்கு போயிருக்கையில் ருசியாக இருக்கிறதென்று வைக்கப்பட்டதெல்லாவற்றையும் உள்ளே தள்ளிவிடக் கூடாது. வீட்டுக்காரர்களும் தேவையான அளவு சாப்பிட விட்டு வைக்க வேண்டும். பொதுவான பந்தியில் உட்கார்ந்திருக்கையில் கொட்டக் கொட்ட உள்ளே தள்ளிக் கொண்டே இருக்கக் கூடாது நீ எப்படி சாப்பிடுகிறாய் என்று பலகண்கள் உன்னை கவனிக்கும். நீ போஜன பிரியனாய் இருந்தால் தொண்டையில் கத்தியை வை.

உபவாசமிருக்க தீர்மானித்த பின் ருசியான பதார்த்தங்களைக் கண்டு உபவா

சத்தை ரத்து செய்யாதே அது பாவம். சாப்பிடு. திருப்தியாக சாப்பிடு, பெலனடைய ஏற்ற வேளையில் சாப்பிடு. ஆனால் வெறிக்க சாப்பிடாதே. சாப்பிடு ஆனால் போஜனப் பிரியனுயிராதே.

"..ஒரு வேளைப் போஜனத்திற்காக தன் சேஷ்ட புத்திர பாகத்தை விற்றுப் போட்ட ஏசாவைப் போலச் சீர்கெட்டவனாகவும், இராதபடிக்கும் எச்சரிக்கையாயிருங்கள்" [எபி. 12:16].



# நமக்கு போதுமானவை எவை? (கிறிஸ்தவர்களுக்கு)

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே, ஒரு ஆவிக்குரிய தேவனுடைய பிள்ளைக்கு போதுமானவை எவை? என்று வேதம் கூறுகிறது. போதும் என்கிற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம் [1 தீமோ. 6:6] என்று அப். பவுல் கூறுகிறார்.

இன்றைக்கு ஆவிக்குரிய கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்களும், இப்படிப்பட்ட, போதும் என்கிற மனதில்லாதவர்களாக இருக்கிறதை காணமுடிகிறது. இன்னும் வேண்டும், இன்னும் வேண்டும் என்று அளவுக்கு அதிகமாக ஆசைபடுகிறதை காணமுடிகிறது. வேதம் சொல்லுகிறது, உங்களுக்கு இருக்கிறவைகள் போதுமென்று எண்ணுங்கள் (எபி. 13:5).

இந்தியாவில் இருக்கிறவர்கள் வெளிநாட்டிற்கு போனால் அதிகமான பணம் சம்பாதிக்கலாம் என்று எண்ணுகிறார்கள். சைக்கிள் வைத்திருக்கிறவர்கள் ஸ்கூட்டர் வாங்கினால் நலமாயிருக்குமே என்று எண்ணுகிறார்கள். சின்ன வீட்டில் குடியிருக்கிறவர்கள் பெரிய வீட்டை எண்ணுகிறார்கள். இப்படி மனிதனுடைய வாழ்க்கையில் இருக்கிறது போதும் என்று எண்ணாதிருக்கிறான் (எபி. 13:5) போதும் என்கிற மனது அநேக கிறிஸ்தவர்களில், அது இல்லை. ஆகையால், கர்த்தருடைய வார்த்தை கூறுகிறது. போதும் என்கிற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம் 1 தீமோ. 6:6 என்று கூறுகிறது. எந்த எந்த காரியங்களில் போதும் என்கிற மனது வேண்டும் என்று வேதம் சுட்டிக்காட்டுவதை கவனிப்போமாக!

1. உண்ணவும், உடுக்கவும் நமக்கு உண்டாயிருந்தால் அது போதுமென்றிருக்கக்கடவோம் (1 தீமோ 6:8):-

உலகத்திலே நாம் ஒன்றும் கொண்டு வந்ததுமில்லை; இதிலிருந்து நாம் ஒன்றும் கொண்டு போவதுமில்லை என்பது நிச்சயம். உண்ணவும், உடுக்கவும் நமக்கு உண்டாயிருந்தால் அது போதுமென்றிருக்கக்கடவோம் (1 தீமோ. 6 6 8). வேதாகமத்தில் லாசரு, ஐசுவரியவான் சரித்திரத்தை நாம் வாசிக்கும்போது, லாசரு அவ்வப்போது ஐசுவரியவான் வீட்டில் இருந்து விழுகிற எச்சி இலைகளில் உள்ள ஆகாரத்தை மட்டும் புசித்து, தனக்கு கிடைத்த வஸ்திரத்தை தரித்துக் கொண்டு இருந்தான்.

அவனுடைய நோக்கம் கர்த்தரையும், கர்த்தர் தனக்காக வைத்திருக்கிற பரலோக ராஜ்யத்தை குறித்தும், எண்ணிக் கொண்டிருந்தான். அவன் ஆகாரத்தைப்பற்றியோ, வஸ்திரத்தைப் பற்றியோ கவலைப்பட்டதாக தெரியவில்லை. ஆனால் ஐசுவரியவானோ இரத்தாம்பரமும், விலையேறப் பெற்ற வஸ்திரமும் தரித்து, அநுதினமும் சம்பிரமமாய் வாழ்ந்து கொண்டிருந்தான்; உயர்ந்த வகை ஆகாரங்களை புசித்தான். ஆனால் அவன் கர்த்தரைப்பற்றியோ, தேவனுடைய இராஜ்யத்தைக் குறித்தோ கவலைப்பட்டதாக தெரியவில்லை. அவர்களுடைய முடிவை பார்க்கும்போது ஐசுவரியவான் தன் ஐசுவரியத்தில் கொஞ்சமாகிலும், தான் போகும்போது கொண்டுபோகவில்லை, லாசரு தேவாசீர்வாதத்தைக் கொண்டுபோனார் [லூக்.16: 19-31]. இவர்களுடைய வாழ்க்கையைப் பற்றி நாம் இவ்விதமாக அறிந்து கொள்கிறோம். ஆகையால் நமக்கு கர்த்தர் தந்த ஆகாரமும், வஸ்திரமும் போதுமென்றிருக்கக்கடவோம். அதிகமாய் ஒன்றும் விரும்ப வேண்டாம். மற்றப்படி சுகபோகமாய் வாழ்கிறவள் உயிரோடு செத்தவள் (1தீமோ. 5:6).

2. நீங்கள் பண ஆசை இல்லாதவர்களாய் நடந்து, உங்களுக்கு இருக்கிறவைகள் போதுமென்று எண்ணுங்கள் எபி.13:5:-

இன்றைக்கு உலகத்தில் எல்லா மனிதர்களும், இந்த பண ஆசைக்கு இடம் கொடுத்து பல தீமைகளை செய்கின்றார்கள். பணத்திற்கு ஆசைப்பட்டு கொலை செய்து விடுகிறார்கள். அப்படியே போலி கிறிஸ்தவர்களும் கூட இதற்கு விதி விலக்கு இல்லை. வேதம் சொல்லுகிறது, பண ஆசை எல்லா தீமைக்கும் வேராயிருக்கிறது; சிலர் அதை இச்சித்து, விசுவாசத்தை விட்டு வழுவி, அநேக வேதனைகளாலே தங்களை உருவக் குத்திக் கொண்டிருக்கிறார்கள். நீயோ தேவனுடைய மனுஷனே இவைகளை விட்டு ஒடு என்று கூறுகிறது (1 தீமோ, 6:10.11)

எடுத்துக்காட்டாக யூதாஸ் பண ஆசைக்கு இடம் கொடுத்து ஆண்டவரை விட்டு தூரமாய் விலகி, கடைசியாக நரகத்திற்கே போய் விட்டான் (யோ. 12:1-6; மத். 27:1-5; அப். 1:24) ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்கள் சோதனையிலும், கண்ணியிலும், மனுஷரைக் கேட்டிலும்

அழிவிலும், அமிழ்த்துகிற மதிகேடும், சேதமுமான பலவித இச்சைகளிலும் விழுகிறார்கள் (1 தீமோ. 6:9). அநேகர் பண ஆசைக்கு இடம் கொடுத்து திருச்சபையின் ஐக்கியத்தை விட்டு விட்டார்கள் [சங். 1:5; 2 தீமோ. 4:10].

ஒரு முறை நானும் நாங்குநேரி பாஸ்டரும் திருநெல்வேலி ஊழியத்திற்காக செல்லும் போது, ஒரு ஆவிக்குரிய சகோதரர் என்று சொல்லி கொள்ளுகிறவர் தன்னுடைய கடையில் ஜெபிக்கும்படியாக அழைத்தார்; நாங்கள் கடைக்கு போயிருந்தோம். அப்பொழுது அங்கு மேஜையில் இருந்த வேதாகமத்தை பார்த்தவுடன் சந்தோஷம். சகோதரர் ரொம்ப பக்திக்குரியவர் என்று எண்ணினோம். அந்த வேதாகமத்தை எடுத்து பார்க்க வேண்டும் என்று ஏவப்பட்டது. எடுத்து பக்கங்களை திருப்பி பார்க்கும்போது அதில் அன்றைய குலுக்கலில் உள்ள லாட்டரி டிக்கட் ஒன்று உள்ளே இருந்தது. சகோதரரிடத்தில் விசாரிக்கும் போது, பைபிளில் வைத்தால் கர்த்தர் என நிலையை பார்த்து என்னை ஆசீர்வதிக்கும்படியாக, லாட்டரி டிக்கட்டில் லட்சம் விழச் செய்யமாட்டாரா என்று எண்ணி வைத்தேன் என்றார்.

நாங்கள் அவருக்கு ஆலோசனைக் கொடுத்து இப்படி அடுத்தவர்கள் பணத்திற்கு ஆசைப்படக் கூடாது. அப்படியானால் இருக்கிறவைகளும் போய் விடும் என்று ஆலோசனை கொடுத்து விட்டு வந்தோம்.

3. என் கிருபை உனக்கு போதும் (2 கொரி. 12:9):-

அப். பவுல் தன்னுடைய சரீரத்தில் காணப்பட்ட பலவீனத்திற்காக கர்த்தருடைய சமுகத்தில் வேண்டிக் கொண்ட போது, கர்த்தர் இவ்விதமாக பதிலளித்தார். என் கிருபை உனக்கு போதும்; பலவீனத்திலே என் பலம் பூரணமாய் விளங்கும் என்றார் [2 கொரி. 12:7-9]. நமக்கு எவ்வளவு ஐசுவரியமும், ஞானமும், பெலமும் இருந்தாலும் அதனால் பிரயோஜனம் ஒன்றுமில்லை தேவனுடைய பிள்ளைகளுக்கு மிக அவசியம் தேவ கிருபை, தேவனுடைய தேவ கிருபையில்லா விட்டால் நாம் ஜீவனோடு இருக்க முடியாது.

நாம் நிர்மூலமாகதிருக்கிறது தேவ கிருபையே [புல. 3:22]. நான் இருக்கிறது தேவ கிருபையினாலேயே இருக்கிறேன் [1 கொரி. 15:10] என் கால் சறுக்குகிறது என்று நான் சொல்லும் போது, கர்த்தாவே, உமது கிருபை என்னை தாங்குகிறது [சங். 94:18]. சுவிசேஷம் அறிவிக்க தேவ கிருபை அவசியம் [எபே. 3:1-3]. கிறிஸ்துவுக்குள்ளாக எந்த காரியத்திற்கும் தேவ கிருபை அவசியம். இரட்சிக்கப்பட தேவ கிருபை தேவை (எபே.2:5). இந்த தேவ கிருபையை, கர்த்தரை அதிகமாக ஸ்தோத்தரிக்கிறதின் மூலமாய் பெற்றுக் கொள்ளலாம் (2 கொரி. 4:15). தாழ்மையுள்ளவர்களுக்கு கிருபை அளிக்கிறார் (யாக். 4:6; 1 பேது. 5:5). பூமிக்கு வானம் எவ்வளவு உயரமாயிருக்கிறதோ, அவருக்குப் பயப்படுகிறவர்கள் மேல் அவருடைய கிருபையும் அவ்வளவு பெரிதாயிருக்கிறது (சங். 103:11).

ஆகையால் கிறிஸ்தவர்களாகிய தேவ ஜனங்களுக்கு தேவ கிருபையே போதும் வேதம் மறுபடியுமாக நமக்கு நினைப்பூட்டுகிறது. 'என் கிருபை உனக்குப் போதும்' (2 கொரி. 12:9).

4. பிதாவை எங்களுக்கு காண்பியும், அது எங்களுக்குப் போதும் (யோ. 14:8):-

அப். பிலிப்பு நம்முடைய கர்த்தரை நோக்கி சொல்லும் போது ஆண்டவரே, பிதாவை எங்களுக்கு காண்பியும் அது எங்களுக்குப் போதும் என்றான் (யோ. 14:8)

இந்த பக்தனுடைய வாஞ்சை, விருப்பம் ஆண்டவரை பார்த்தாலே போதும் என்பது. நம்முடைய விருப்பம் எப்படி இருக்கிறது. சிலர், உலகத்திலே இருக்கிறவரை எல்லாவற்றையும் அனுபவிக்க வேண்டும். எல்லாவற்றையும் பார்த்து அனுபவிக்க வேண்டும் என்று T.V. சினிமா போன்றவற்றை பார்ப்பதற்காக அதிக கவனம் செலுத்துகிறார்கள். இன்றைக்கு உலகத்தில் உள்ள எல்லா மக்களையும் கெடுப்பதற்கு கேபிள் T.V வந்திருக்கிறது. 24 மணி நேரமும் சினிமா போடப்படுகிறது. அதைப் பார்த்து நாட்டிலுள்ள பெரியவர்களும் சிறியவர்களும் தன் வாழ்நாளை கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அதை பார்க்கதான் விருப்பமே தவிர ஆண்டவரை பார்க்க விருப்பமில்லை. சிலர் நாடக காட்சிகள், இன்னும் அலங்கோலமான நிகழ்ச்சிகளை பார்ப்பதற்கு ரொம்ப கவனம் செலுத்துகிறார்கள். இவர்கள் கண்களினால் காண்பதினால் திருப்தி அடைவதில்லை (பிர. 1:8). இன்றைக்கு கிறிஸ்தவர்களிலும் அநேகர் கேபிள் T.V - யில் தொடர்ந்து சினிமா பார்த்து தன் ஆத்துமாவையும் சரீரத்தையும் கெடுத்துக் கொண்டு இருக்கிறதை காண முடிகிறது.

இவர்களுக்கு கர்த்தரை பார்க்க வேண்டும் என்ற எண்ணம் இல்லை. இவர்கள் தான் எப்படி இருந்தால் என்ன? என்று நிர்விசாரமாய இருக்கிறதை அறிந்து கொள்ள முடிகிறது. இவர்கள் கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவார்களோ? எல்லாரும் கர்த்தரை பார்க்க முடியுமோ? வேதம் சொல்லுகிறது, பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே எபி. 12:14 என்று சொல்கிறது

ஆகையால் தேவ ஜனங்களே, மாம்சத்திலும், ஆவியிலும் உண்டான எல்லா அசுசியும் நீங்க, நம்மை சுத்திகரித்துக் கொண்டு, பரிசுத்தமாகுதலைத் தேவ பயத்தோடே பூரணப்படுத்தக்கடவோம் 2கொரி. 7:1. பாவத்தோடு எந்த ஒரு மனிதனும் கர்த்தரை தரிசிக்க முடியாது (எபி. 12:14). பிரியமானவர்களே, இப்பொழுது தேவனுடைய பிள்ளைகளாயிருக்கிறோம், இனி எவ்விதமாயிருப்போமென்று இன்னும் வெளிப்படவில்லை; ஆகிலும் அவர் வெளிப்படும் போது அவர் இருக்கிற வண்ணமாகவே நாம் அவரைத் தரிசிப்பதினால் அவருக்கு ஒப்பாயிருப்போமென்று அறிந்திருக்கிறோம். அவர் மேல் இப்படிப்பட்ட நம்பிக்கை வைத்திருக்கிறவனெவனும், அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது போல தன்னையும் சுத்திகரித்துக் கொள்ளுகிறான் [1 யோ. 3:2,3].

நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி, நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும், நீதியும் உள்ளவராயிருக்கிறார் [1 யோ. 1:9; மத். 3:5,6; மாற். 1:4,5; நீதி. 28:13]. நாமும் பிலிப்புவைப் போல, எங்களுக்கு உம்மை காண்பியும் அது போதும் என்று சொல்லி நம்மை பரிசுத்தமாக்கிக் கொண்டு அவரை சந்திக்க ஆயத்தப்படுவோமாக!

"உங்களுக்கு இருக்கிறவைகள் போதுமென்று எண்ணுங்கள்" (எபி. 13:5).



# வேதபாடம் (தொடர்ச்சி)

## யோசுவா

## யோசு. 1:1-5:15

1. யோசுவா பெற்ற கட்டளை - யோசு. 1:1-9 வேதத்திலுள்ள மகா சிறந்த அதிகாரங்களுள் இது ஒன்றாகும். தேவனால் தலைவனாக அமைக்கப்பட்ட எவரையும் கீழ்க்கண்ட வசனங்கள் மிகவும் உற்சாகப்படுத்தக் கூடியது - வசனம் 6,7,9,18. "பலங்கொண்டு திடமனதாயிரு" இது நான்கு தடவை அறிவிக்கப்படுகிறது. 'நான் உன்னை விட்டு விலகுவதும் இல்லை; உன்னைக் கைவிடுவதுமில்லை' வசன. 5. இந்த நியாயப்பிரமாண புஸ்தகம் உன் வாயைவிட்டுப் பிரியாதிருப்பதாக. இதில் எழுதியிருக்கிறவைகளின்படியெல்லாம் நீ செய்யக் கவனமாயிருக்கும்படி, இரவும், பகலும் அதைத் தியானித்துக் கொண்டிருப்பாயாக; அப்பொழுது நீ உன் வழியை வாய்க்கப்பண்ணுவாய், அப்பொழுது புத்திமானாயும் நடந்து கொள்ளுவாய் (வச. 8).

யோசுவா எப்பொழுதும் வெற்றியைக் கண்டடையும்படி எழுதப்பட்டிருக்கும் வேத வசனத்தை இடைவிடாமல் அவர் தியானித்து அதற்குக் கீழ்ப்படிய வேண்டும். இவ்விஷயத்தில் நம்முடைய ஆண்டவராகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சிறந்த முன் மாதிரியாய் இருந்தார்.

பழைய ஏற்பாட்டில் பல முறை வரும் ஒரு வேத வாக்கியம் 'கர்த்தர் யோசுவாவிடம் சொன்னார்' என்பதே. தேவனிடமிருந்தே யோசுவா வழிநடத்துதலையும், உத்தரவையும் பெற்றுக் கொண்டார். யோசுவாவின் ஆக்கிரமிப்பான படையெடுப்புகள் தேவனாலேயே கட்டளையிடப்பட்டவையாகும். தளகர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் உத்தரவுப்படி மாத்திரம் அவர் செய்கிறவராயிருந்தார்.

## ஞானஸ்நானம்

25-12-97 அன்று தலைமை சபை (பம்பாய்) யில் 9 பேர் ஞானஸ்நானம் பெற்று, திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

யோசுவாவின் புஸ்தகத்திற்கு யோசு. 1:1-9 ஏற்ற முகவுரையாக விளங்குகிறது தலைவரில் மாறுதல் ஏற்பட்டிருந்த போதிலும் தேவனுடைய திட்டத்தின்படியே அந்த ஜனத்தாரின் மத்தியில் தேவனுடைய வேலை நடந்தேற வேண்டும். என் தாசனாகிய மோசே மரித்துப் போனான் என்ற வார்த்தைகள் வசனம் 2. அந்த வேலையை செய்யும் படிக்கு யோசுவாவை தூண்டுகிறது. மோசே உயிரோடிருக்கும் வரை யோசுவாவுக்கு அந்தக் கட்டளையில்லை.

ஜனங்களின் தலைவர்களையும், யோர்தானுக்குக் கிழக்கே உள்ள கோத்திரத்தா ரையும், யுத்த வீரரையும் ஆயத்தப்படுத்துதல் [யோசு. 1:10-18].

இச்சமயத்தில் ஜனங்களுடைய மனப்பூர்வமான ஒத்துழைப்பை அறிந்து, யோசு வாவை மிகவும் தைரிய மூட்டுகிறதாயிருந்தது. அப்பொழுது அவர்கள் யோசுவாவிடம் நீர் எங்களுக்கு கட்டளையிட்டவையெல்லாம் செய்வோம். நீர் எங்களை அனுப்பும் இடத் துக்கெல்லாம் போவோம் என்றார்கள் வசனம் 16. நாமே கீழ்ப்படிந்து பின்பற்றுகிறவர் களாயிராவிட்டால், சிறந்த தலைவர்களாக நாம் விளங்க முடியாது. யோசுவா முதலாவது வசனத்துக்குக் கீழ்ப்படிந்து அதைப் பின்பற்றுகிறவராய் இருந்தாரென்றால் ஜனங்கள் கீழ்ப்படிந்தே நடப்பார்கள். அவர்கள் கீழ்ப்படிய தவறினால் தாங்கள் கொல்லப்பட

# தேவனுடைய அதிசயங்களும் அற்புதங்களும்

Bro. ராஜசேகர் (பள்ளங்கி கோம்பை கொடைக்கானல் தமிழ்நாடு இந்தியா)

கொலை செய்ய துன்மார்க்கர்கள் அடித்து, மண்டையை உடைத்து, இறந்து விட்டார் என்று போட்டு விட்டுப் போனபோதிலும், தேவன் அவருக்கு மறு உயிர் கொடுத்து பிழைக்கச் செய்தார்; ஆதலால் இறைவனை ஸ்தோத்தரிப்போமாக.

 

வும் சம்மதித்தனர். யுத்தத்துக்காய் செய்யப்பட்ட ஆயத்தங்களில் மூன்று காரியங்களை நாம் கவனிக்கிறோம்.

1. சிறந்த தைரியமான ஒரு விசுவாசம்

2. சிறந்த பயிற்சி

3. சிறந்த கீழ்ப்படிதல் என்பவைகளே.

கரைபுரண்டோடும் யோர்தானைக் கடக்கும் இப்புது அனுபவத்தில் துணிந்து செல்ல இம்மூன்று ஆவிக்குரிய முஸ்தீபு இன்றியமையாததாயிருந்தது (வச. 1:4). வாக்குத்தத்த தேசத்தின் எல்லை (ஆதி. 15:18; யாத். 23:31; 1:8). இந்த நியாயப்பிரமாண புத்தகம் எழுதப்பட்ட வார்த்தை உபா. 31:9; யாத் 20-23). ''அகல வேண்டாம்'' இடைவிடாமல் அவன் அதைக் குறித்து சம்பாஷித்து, தியானிக்க வேண்டும் (யோ 1:17). தேவனுடைய உண்மையான சமுகமே நமது வெற்றிக்கு இன்றியாமையாத தேவையாகும். கர்த்தர் நம்மோடு இருக்க வேண்டும். நமக்கு முன் செல்ல வேண்டும். வெற்றி நமக்கு நிச்சயம். நான் உனக்குக் கட்டளையிடவில்லையா? பலங்கொண்டு திடமனதாயிரு; திகையாதே, கலங்காதே. நீ போகும் இடமெல்லாம் உன் தேவனாகிய கர்த்தர் உன்னோடே இருக்கிறார் என்றார் வசனம் 9. நான் உனக்கு கட்டளையிடவில்லையா? பலங்கொண்டு திடமனதாயிரு. நான் உனக்கு கட்டளையிடவில்லையா? கடவுள் கட்டளையிட்டாரென்றால் அதை நிறைவேற்றுவதற்காக அவரே கூட இருந்து கிரியை நடப்பிக்கிறார்; பலப்படுத்துகிறார், எடுத்து உபயோக்கிறார், தேவனே எல்லாம்.

தேவனுடைய கட்டளையே மனிதனுக்குத் தேவை. தேவ சித்தம் இல்லாமல், தேவ கட்டளையில்லாமல் யாரும், எங்கும் எதையும் வெற்றியாய் செய்துவிட முடியாது. தேவனுடைய கட்டளை உண்டாயிருக்குமென்றால் பலவீனனும், பலவானாவான். அறிவீனனும் அறிவாளியாவான், முடியாதவனும் காரியத்தைச் சாதிக்க முடியும். தேவனாகிய கர்த்தர் நம்மோடு இருப்பாராக.

கர்த்தருடைய கட்டளைகளின்படி செய்கிறவனோடுகூட கர்த்தர் இருக்கிறார். ''நீங்கள் உலகமெங்கும் புறப்பட்டுப்போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி பிதா, குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக் கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள், இதோ உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார் [மத். 28:18-20]. இவ்விதமாய் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தினால் ஞானஸ்நானம் கொடுத்து, கர்த்தர் கட்டளையிட்ட யாவற்றையும் உபதேசிக்கிற அப்போஸ்தலரோடு கூட கர்த்தர் இருப்போம் என்று வாக்கருளினார்.

அரைகுறையாய் தங்கள் இஷ்டபிரகாரம் உபதேசித்து, தங்கள் இஷ்ட பிரகாரம் ஊழியம் செய்து, கிரியை செய்து, இஷ்டபிரகாரம் வியாக்கியானம் பண்ணுகிறவர்களோடு கூட கர்த்தர் இரார். அவர்கள் [அப்போஸ்தலர்கள்] புறப்பட்டுபோய் எங்கும் பிரசங்கம்பண்ணினார்கள். கர்த்தர் அவர்களோடு கூட இருந்து நடப்பித்து, அவர்களால் நடந்த அற்புதங்களினாலும், அடையாளங்களினாலும் வசனத்தை உறுதிபடுத்தினார். தம்முடைய வாக்கை உறுதிபடுத்தினார் (மாற். 16:20). யோசுவாவின் புஸ்தகம் யோசுவாவை மாத்திரமல்ல, நம்மையும் திடப்படுத்துகிறது.

(தொடரும்)

# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம்

(தொடர்ச்சி)

நான் உங்களுக்கு ஆஸ்தி ஒன்றும்
வைத்துப் போகிறதில்லை. ஆனால் காகங்
களையும் போஷிக்கும் தேவன் உங்களையும்
பாதுகாப்பார். அவர்தான் விதவைகளுக்கும்
ஆதரவற்ற பிள்ளைகளுக்கும் தகப்பன் ஓ,
ஆண்டவரே! என்னை நீர் எப்படிப் பாது
காத்துப் போதித்தீரோ அவ்விதமே இவர்
களையும் பாதுகாத்துப் போதியும் என்று
ஜெபித்தார். அவர் மனைவியின் காதில்,
"வெள்ளிக்கோப்பைகள் உன்னுடையவை
கள். வேறொனறும் நமக்கில்லை" என்று
காதில் ஒதினார்.

தம் விஷயம் இப்படியிருக்க, பவேரி
யாவில் ஷிரிங் என்னுமிடத்தில் சுவிசே
ஷதைப் பிரசங்கித்ததற்காக லேயோனார்ட்
கெய்சர் என்பவர் 1527-ம் வருஷம்
ஆகஸ்டு மாதம் 16-ம் தேதி பகிரங்கமாய்
அக்கினிக்கிரையாக்கப்பட்டார் என்ற துக்க
செய்தி லூத்தரைத் திடுக்கிடச் செய்தது.
லூத்தர் லேயோனார்ட் கெய்சருடைய ஜீவிய
சரித்திரமென்று பிரசுரம் செய்து, மைக்கெல்
ஸ்டைவெல் என்பவருக்கு எழுதிச் சொன்
னதாவது: 'நாமெல்லோரும் இந்த அருமை
சகோதரனுகிய லேயோனார்டின் அடிச்சுவ
டுகளை மெய்யாய்ப் பின்பற்றும்படி கர்த்த
ராகிய இயேசு கிறிஸ்து நமக்கு அருள்புரி
வாராக. உண்மையாகவே அவருடைய
பெயர் கெய்சர் (சக்கிரவர்த்தி) தான்.

உலகத்திலுள்ள எல்லோரையும் விடப்
பெரியவராகிய பாப்புவின் மேல் வெற்றி
சிறந்தபடியால் அவருக்குக் கெய்சர் என
னும் பெயர் பொருந்தியதே. அவர் தம்
முடைய சிரத்தை ஆண்டவருக்கு ஏற்ற
காணிக்கையாக உயிரோடே பலியிட்ட
படியால் அவர் ஒரு சாதாரண குருமட்டு
மல்ல, அவர் ஒரு அத்தியாசனர் ஆம், பாப்
புவும் தான். மேலும் லேயோனார்ட் அதா
வது சிங்க இருதயம் என்னும் பெயரும்
அவருக்குத் தக்கதே. ஏனென்றால் அவர்
வல்லமை தங்கிய அஞ்சா வீரசிங்கமாகவும்
விளங்கி இருக்கிறார்' என்பதே.

அதே வருஷத்தில் வித்தன்பூர்க்கில்
கொள்ளைநோய் பரம்பி உக்கிரமாய் இருந்
தது. சர்வகலாசாலை கொஞ்சக்காலத்திற்கு
ஏனு பட்டணத்திற்கு மாற்றப்பட்டது.
ஆனால் லூத்தர் தம் உத்தியோகத் துறையி
லேயே இருந்து, வியாதியஸ்தரைச் சந்
தித்து விசாரிக்கும் விஷயத்தில், ஸ்தல குரு
வாகிய பூகனுகன் சாஸ்திரியாருக்கு மெத்த
உதவியாயிருந்தார், அங்கேயே தங்கி
யிருந்த சில மாணுக்கருக்கும் விசேஷித்த பிர
சங்கங்கள் தொடர்ச்சியாக செய்தார்;
கொள்ளை நோய் அவர் வீட்டிலும் நுழைந்
தது.

அக்டோபர் மாதத்தின் பின் பாகத்தில்
அவர் அருமைக் குழந்தையாகிய ஆன்ஸ்
கொள்ளைநோயால் பிடிக்கப்பட்டான். அக்
குழந்தை பல நாட்களாய் மரணத்தருவா
யில் இருந்தது. தொண்ணூற்றைந்து நியா
யங்களை எழுதி ஒட்டிய பத்தாம் வருஷ
உற்சவமாகிய 1527ம் வருஷம் அக்டோபர்
மாதம் 31ம் தேதி சமீபித்தபோது தம் சிநே
கிதராகிய ஆர்ம்ஸ்டார்ப் என்பவருக்கு லூத்
தர் எழுதினதாவது: 'என் வீடு வைத்திய
சாலை ஆகிவிட்டது. அகுஸ்தீன் சாஸ்தரி
யாருடைய மனைவியாகிய அன்னாள் அம்
மாள் என் வீட்டிற்குத் தொற்றுவியாதி
கொண்டு வந்தார்கள் ஆனால் அவர்கள்
இப்போது சுகமாயிருக்கிறார்கள். மார்கெ
ரெட் மொக்கா என்பவளுக்குச் சந்தேகத்

துக்கிடமான ஒரு கட்டி புறப்பட்டு வேறு குறிகளும் காணப்பட்டது. எங்களெல்லோருக்கும் மெத்த பயமுண்டாக்கிற்று. அவளும் இப்போது சுகமாகிவிட்டாள். எனக்கிப்போது என் மனைவியைப்பற்றி அதிக கவலையாய் இருக்கிறது.

ஏனென்றால் அவர்களுக்குப் பேறு காலம் சமீபிக்கிறது. என் மகன் கடந்த மூன்று நாட்களாய்க் சுகவீனமாயிருக்கிறன். கொஞ்சங்கூட ஆகாரம் செல்லவில்லை. பல் முளைப்பதுதான் அதற்குக் காரணமென்று சொல்லுகிறார்கள், இரக்கமுள்ள ஆண்டவர் எங்களுக்கு உதவிபுரிவாராக. இவ்விதமாக எங்களுக்கு வீட்டில் கலக்கமும், கவலைகளும், வெளியில் போராட்டங்களுமிருக்கின்றன. விசுவாசிகளுடைய சரீரங்களைச் சாத்தான் பட்சித்த போதிலும், அவர்களுடைய ஆத்துமாக்களை இரட்சிக்கும்படி நமக்குத் தேவ வசனம் உண்டென்பதே ஆறுதல் அளிக்கிறது. இந்த ஆறுதல் தான் சாத்தானுடைய பகையையும், வன்மத்தையும் எதிர்த்து நிற்கத் திடனளிக்க வேண்டும்.

நாங்கள் ஆண்டவருடைய கரத்தைத் தைரியமாய் தாங்கிச் சகித்து, மரணமோ ஜீவனோ எவ்விதத்திலும் சாத்தானுடைய வல்லமையையும், தந்திரத்தையும் மேற்கொள்ளும்படி எங்களுக்காக ஜெபியுங்கள். ஆமேன். வித்தன்பூர்க் உத்தரிக்கும் ஆத்துமாக்களின் திருநாள்; பாவமன்னிப்புச் சீட்டுகளைப் பறக்கடித்த பத்தாம் வருஷ உற்சவம்; நன்றியுள்ள ஞாபகத்தோடு' என்று முடிக்கிறார்.

சீர்திருத்தலின் யுத்த கீதமாகிய 'கர்த்தர் தான் எங்கள் துர்க்கமும்' என்கிற ஞானப்பாட்டை லூத்தர் எழுதியது இச்சமயந்தானென்று அனுமானிக்கலாம் 1528-ம் வருஷ ஆரம்பத்தில் பிரசுரிக்கப்பட்ட லூத்தருடைய ஞானப்பாட்டுத் திரட்டில் இது ஒன்று.

1527-ம் வருஷம் டிசம்பர் மாதம் 15-ம் தேதி லூத்தர் தம் சிநேகிதர் ஒருவருக்கு, 'எங்கள் பிரிய மகன் ஆன்ஸ் சுகமாயிருக்கிறன்' என்று எழுதக் கூடியதாயிருந்தது. அதே நாள் மத்தியானம் அவர் மனைவியார் ஒரு பெண் குழந்தையைப் பெற்றார்கள். அக் குழந்தைக்கு எலிசபெத் என்று பெயரிடப்பட்டது. அந்தக் குழந்தை 7 மாதந்தான் உயிரோடிருந்தது.

1528-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 13-ம் தேதி இந்தச் சிறிய ரோஜா மொக்கை ஆண்டவர் தம்மண்டை அழைத்துக் கொண்டார். லூத்தர் ஒரு சிநேகிதருக்கு, 'எங்கள் பிரிய எலிசபெத் எங்களிடம் விடைப்பெற்றுக் கொண்டு போய்விட்டாள்' என்று எழுதினர்; வேறொருவருக்கு, 'அக் குழந்தையின் மரணம் என் மனதைப் புண்படுத்தி என்னைப் பெண்போலாக்கிற்று' என்று விசனத்தோடு எழுதினர். 1529-ம் வருஷம் மே மாதம் 4-ம் தேதி அவர்களுக்கு ஆண்டவர் வேறொரு பெண் குழந்தையைக் கொடுத்தார். இக் குழந்தைக்கு மகதலேனுள் என்று பெயரிட்டார்கள்.

அதி. 25. கர்மானியாவின் சங்கீத சிரோமணியாகிய லூத்தர் :-

பொது தேவாராதனையில் அவர் செய்த சீர்திருத்தங்களை படாடமாய்ச் செய்யாமல் மிகவும் பொறுத்தும், மிதமாகவும் செய்தார். குருமார் உடைகள், மெழுகுவர்த்திகள், கிறிஸ்து சிலுவையிலறையுண்ட உருவங்கள், படங்கள் இவைகளைப்பற்றி அவர் அதிக கவனம் செலுத்தாவிட்டாலும் இவைகள் அவசியமென்று சொல்லாமல், ஒவ்வொரு சபையும் தனக்கிஷ்டமானபடி இவைகளை வைக்கவோ அல்லது எடுத்துப் போடவோ சுவாதீனம் உண்டென்று சொன்னர்.

இம்மட்டும் தேவாராதனையில் சில கர்மானிய ஞானப்பாட்டுகள் தவிர மற்றெல்

லைப் பாடல்களும் லத்தீன் பாஷையிலிருந்தன. லூத்தர் இப்போது தேவாராதனையில் பாட வேண்டிய பிரார்த்தனைகள் எல்லாம் ஜெர்மானியா பாஷையில் பாடும்படி ஏற்பாடு செய்தார். யோவான் வால்த்தர் கொன்ருத் குப்பு ஆகிய இரண்டு சங்கீத வித்வான்கள் இவ்விஷயத்தில் அவருக்கு அரிய உதவி புரிந்தார்கள் (ஏசா. 6:1-4).

சில சங்கீதங்கள், பத்துக் கற்பனைகள், விசுவாசப் பிரமாணம் இவைகளுக்கு விருத்தி உரை செய்து, சில லத்தீன் ஞானப்பாட்டுகளையும் வித்தனி என்னும் சமுதாய விண்ணப்பப் பாட்டையும் ஜெர்மானியா பாஷையில் மொழிபெயர்த்துச் சிறப்பித்து எழுதினர். 'எங்களுடைய எல்லா உபத்திரவங்களிலும் எங்களுடைய சுகவாழ்விலும் கர்த்தாவே எங்களுக்கு ஒத்தாசை செய்தருளும்' என்கிற வார்த்தைகளைச் சமுதாய விண்ணப்பப் பாட்டோடு கூட்டி எழுதினர். லூத்தருடைய பிரார்த்தனைகள் எல்லாம் இடங்களிலும், தெருக்களிலும், வயல்களிலும், வேலைத் துறைகளிலும் அரண்மனைகளிலும், கோவில்களிலும் 'வீடுகளில் பிள்ளைகளாலும், தூக்கு மேடைகளில் இரத்த சாட்சிகளாலும்' பாடப்பட்டன.

கிறிஸ்தவர்களே, நாம் கர்த்தரின் மா ஆச்சரியமான. என்கிற ஞானப்பாட்டு அநேகரைக் குணப்படுத்திற்று என்று சொல்லுகிறார்கள். இதே ஞானப்பாட்டிலே ஒரு சமயம் பிராங்போர்ட்டிலுள்ள அத்தியஷ ஆலயச்சபையார் ஒரு ரோமை குருவின் வாயை அமர்த்தி மௌனமாக்கினார்கள்.

லூத்தர் அடிக்கடி நெடுநேரம் தம் பிள்ளைகளோடு பாடி மகிழ்ந்திருப்பார். அவர்கள் பாட இவர் வீணைவாசிப்பார். தேவனுடைய வரங்களில் முதன்மையானது வேத சாஸ்திரம், அதற்கடுத்து சங்கீதம் என்று மதித்தார்.

அதி. 26. சக்சோனியா சபைகளைச் சந்தித்து விசாரித்தல்:-

ஜெர்மானிய ஜனங்களுக்குள்ளே கிறிஸ்தவ அறிவு விருத்தியாகும்படி லூத்தர் அதிக முயற்சி எடுத்துக் கொண்டார். இதற்காக அவர் நியமகப் பிரபுவின் இராஜ்யத்திலுள்ள சபைகளை எல்லாம் சந்தித்துத் தீர ஆராய்ச்சி செய்து போதித்தார். புறம்பான அதிகாரந்தான் நியமகப் பிரபுவின் கையிலிருந்தது. லூத்தர் நியமகப் பிரபுவை அவசர அத்தியக்ஷர் என்று அழைத்தார். லூத்தர் புத்திக்கூர்மையால் வெகு காலத்திற்கு முந்தியே திட்டமாயறிந்து சபைக்கடுத்த எல்லா விஷயங்களிலும், குருவை அழைப்பதும், போதகரை ஆதரிப்பதும், தேவாராதனை ஒழுங்கைச் சீர்ப்படுத்துவதும் ஆகிய இவை எல்லாம் சபைகளுக்குரியதே என்று போதித்தார்.

ஆனல் சபைகளுடைய நிலைமை இக்கடமைகளையும், சிலாக்கியங்களையும் நிறைவேற்றவும், கையாடவும் கூடியதாக இருந்ததில்லை, அவர்கள் அறிவீனரும் மனமற்றவர்களுமாயிருந்ததால் இவ்விஷயங்களைப் பற்றி ஏனே தானேவென்று இருந்தார்கள் லூத்தர் மற்றெவரும் செய்ய இஷ்டப்படாதவைகளை நியமகப் பிரபு ஏற்றபடியும், பூகமாயும் செய்யும்படி தூண்டிவிட்டார்.

சக்சோனியா தேசம் நாலு மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒரு விசாரணைச் சங்கம் நியமிக்கப்பட்டது. நியமகப் பிரபுவின் சமஸ்தான மாகாண விசாரணைச் சங்கத்திற்கு லூத்தர் தலைமை வகித்தார். அக்டோபர் மாதத்தில் விசாரணைச் சங்கங்கள் தங்கள் வேலையை ஆரம்பித்தன. அந்தச் சபைகளில் குடும்பத் தலைவர்களை அழைத்துக் குருவினுடைய நடக்கை, பிரசங்கம், குரு ஆதரிப்பு விஷயம் ஆகிய இவைகளைப்

பற்றிச் சங்கத்தார் விசாரணை செய்தார்கள்.

குருவும், சபையாரும் அவர்களுடைய ஞான அறிவு எவ்வாறு இருந்ததென்று அறிய குருமாரும், சபையாரும் பரிசோதிக்கப்பட்டார்கள். அநேக பிரசங்கிகளுடையவும், சபையாருடையவும் அறிவீனம் எவ்வளவு பரிதாபமாயிருந்த தென்று இப்பரிசோதனையால் தெரிய வந்தது. தங்களுடைய பிரசங்கம் சபையாருக்கு மெய்யாய் பிரயோஜனப்பட வேண்டுமானால் மற்ற முன் மாதிரியான குருமாருடைய பிரசங்கங்களையே பின்பற்றுவது நலமென்று சில பிரசங்கிமாருக்கு சங்கத்தார் யோசனை சொன்னார்கள்.

குருமாருக்கு போதனையாக, பெரிய கத்தெகிஸ்முவையும், சாமானியா ஜனங்களுடைய நன்மைக்கும், போதனைக்கும் சின்ன கத்தெகிஸ்முவையும் லூத்தர் எழுதினார். இந்த அருமையான சின்ன புஸ்தகத்திற்கு அவர் எழுதிய முகவுரையில் சொல்லுகிறதாவது: 'நான் கொஞ்சகாலத்திற்கு முன் சபைகளை விசாரித்த சமயத்தில் அவர்களிடத்தில் கண்ட பரிதாபமான நிர்மூடத்தனம் இந்தக் கத்தெகிஸ்முவை அல்லது கிறிஸ்தவ போதகத்தை இவ்வளவு அதிசய

# புதிய எருசலேம் ஆலயப் பிரதிஷ்டை

பள்ளி கொண்டா, வட ஆற்காடு மாவட்டம் (தமிழ்நாடு) தேவாலயப் பிரதிஷ்டை.

1) தேவனுடைய கிருபையால் பள்ளிக் கொண்டாவில் கர்த்தருக்கென்று சிற்றாலயம் ஒன்று கட்டப்பட்டு 9-12-97 செவ்வாய்க் கிழமை அன்று திருச்சபையின் தலைமை அப்போஸ்தலர்: N. லாசர் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

2) தமிழ்நாடு மாநிலத்தில், திண்டுக்கல் மாவட்டத்தைச் சேர்ந்த [கோடைக்கானல்] பண்ணைக்காட்டில் புதிய எருசலேம் சபையின் கிளை 1-12-97 திங்களன்று திருச்சபையின் தலைமை அப்போஸ்தலர் N. லாசர் அவர்களால் எழுப்பப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அல்லேலூயா! கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக!!

Pastor: A. Vasan,
B.L.Shed.
S. India.

சுருக்கமும் தெளிவுமாய் எழுதும்படி என்னை நெருக்கி ஏவிற்று ஐயோ, எத்தனையோ நிர்ப்பந்தமான விஷயங்களை நான் கண்டேன்! சாமானிய ஜனங்களுக்கு, விசேஷமாய்க் கிராமங்களிலுள்ளவர்களுக்குக் கொஞ்சமென்கிலும் கிறிஸ்தவ மார்க்க அறிவில்லை. அநேக குருமார் போதிக்கத் திராணியற்றவர்களும், தகுதியற்றவர்களுமாயிருக்கிறார்கள். அவர்களுக்குக் கர்த்தருடைய ஜெபம், விசுவாசப்பிரமாணம், பத்துக் கற்பனைகள் ஒன்றும் தெரியாது. பரிதாபப்படத்தக்க மிருகங்களைப் போலவும், புத்தியில்லாத பன்றிகளைப் போலவும் ஜீவிக்கிறார்கள் என்றாலும் அவர்கள் எல்லோரும் கிறிஸ்தவர்களென்று சொல்லப்படுகிறார்கள். எல்லோரும் ஞானஸ்நானம் பெற்றிருக்கிறார்கள்; சாக்கிரமெந்துகளையும் அனுபவிக்கிறார்கள். இப்படியிருந்தும் அவர்கள் இப்போது சுவிசேஷத்தைப் பெற்று விடுதலை அடைந்திருக்கிறபடியால் இந்தச் சுவாதீனத்தை அவர்கள் மகா சாமர்த்தியமாய்த் துர்ப்பிரயோகம் பண்ணுகிறார்கள்.

ஓ, அத்தியக்ஷர்களே! நீங்கள் ஜனங்களை இவ்வளவு வெட்கக்கேடாய் அசட்டை பண்ணி, உங்கள் உத்தியோக உத்தியோக உத்தரவாதத்தைச் சற்றென்கிலும் உபயோகியாமல் போனதற்கு நீங்கள் கிறிஸ்துவுக்கு எப்படிக் கணக்குக் கொடுப்பீர்கள்? நியாயத்தீர்ப்பு உங்களுக்கு அசுப்பிலே வருவதாக. திருப்பந்தியில் நீங்கள் அப்பத்தை மாத்திரம் கொடுத்து, மனுஷக் கட்டளைகளால் ஜனங்களைப் பாரப்படுத்துகிறார்கள். ஆனால் ஜனங்களுக்குக் கர்த்தருடைய ஜெபம், விசுவாசப் பிரமாணம், பத்துக் கற்பனைகள் அல்லது சத்திய வேதத்தில் எந்தப் பாகமாவது தெரியுமோவென்று ஒருபொழுதும் கேட்கிறதில்லை. ஐயோ, உங்களுக்கு என்றென்றைக்கும் கேடாம்!

குருக்களும், பிரசங்கிமார்களுமாகிய என் பிரிய சகோதரரே, நீங்கள் ஆண்டவர் நிமித்தம் உங்கள் வேலையை மனப்பூர்வமாய்ச் செய்து, உங்கள் விசாரணைக்கும், பொறுப்புக்கும் ஒப்புவிக்கப்பட்ட ஜனங்கள் மேல் மன உருக்கமாயிருக்கும்படி கெஞ்சி கேட்டுக் கொள்ளுகிறேன். ஜனங்களுக்கு விசேஷமாய் இளைஞருக்கு ஞானோபதேசப் போதனை செய்வதற்கு எங்களுக்கு ஒத்தாசையாயிருங்கள். தாங்களே நன்றாய் செய்ய முடியாதென்று எவருக்குத் தோன்றுகிறதோ அவர்கள் கத்தெகிஸ்முவிலுள்ள கட்டளைகளையும், மாதிரி ஜெபங்களையும் ஜனங்களுக்கு வார்த்தை வார்த்தையாய்ச் சொல்லிக் கொடுக்கட்டும் என்பதே.

இந்தக் கத்தெகிஸ்முவில் பத்துக் கற்பனைகள், அப்போஸ்தல விசுவாசப் பிரமாணம், கர்த்தருடைய ஜெபம், ஞானஸ்நானக் கட்டளை, திறவுகோலின் அதிகாரம், இராப்போஜனக் கட்டளை ஆகிய இவைகள் பேதைகளும் அறிந்து கொள்ளக் கூடிய சுலபமான நடையில் வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கின்றன.

(தொடரும்)



# நீதியின் தீர்ப்புக்கு இடங்கொடு

"பிள்ளை மனத்தை" இழந்து விடாதவனே உலகில் பெரிய மனிதன் என்று சொன்னார் மென்ஸியஸ் என்னும் அறிஞர். தேவனுடைய ராஜ்யத்தை பூமியிலே கட்டும் இயேசு கிறிஸ்துவின் கிரியைகள் இந்த சிறுபிள்ளைகளைப் போன்றவர்களின் இருதயத்திலிருந்து வெளிப்படுகிறது. தேவனுடைய கரத்திலிருந்து இப்போதுதான் புதிதாய் பிறப்பிக்கப்பட்டிருப்பதால் தீமையான காரியங்களை அறியாமலும், தீமைக்கு தீமை செய்ய நினையாமலும், மனம் நன்மையிலே நிலைப்பட்டிருக்கும்.

அதனால்தான் சிறுபிள்ளைகள் சண்டையிட்டாலும், மறுகனமே அதை மறந்து கூடிக் கொள்வார்கள். இது விநோதமாகத் தோன்றினாலும், இதுவே இயற்கைக் குணம் இந்தக் குணமும், மனமும் இயேசு கிறிஸ்துவை சுதந்தரித்துக் கொள்ளும் பாக்கியம் கொண்டது. 'இப்படிப்பட்ட சிறுபிள்ளையை என் நாமத்தினிமித்தம் ஏற்றுக் கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக் கொள்ளுகிறான் என்றார்' இயேசு கிறிஸ்து (மத். 18:5).

இப்படிப்பட்ட தெய்வீக குணத்தை மனிதன் ஏன் இழந்து விடுகிறான்? இவைகளை இழந்து விடுவதுமட்டுமல்ல, மாறாக அநேக கேடுகளுக்கேதுவான வன்மம், வஞ்சகம், பொறாமை, பெருமை, பழிவாங்குதல் போன்ற பிசாசு குணங்களுக்கல்லவா அடிமையாகிறான். எல்லா மனிதர்களுக்கும் உணர்வுகளுக்குட்பட்ட வெளிமனம் உலகப் பிரகாரமான விழிப்புக்கும், உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட உள்மனம் அல்லது ஆழ் மனம் தெய்வீக விழிப்புக்கும் சொடுக்கப்பட்டிருக்கிறது

தேவ பக்தி, தயவு, சாந்தகுணம், அன்பு, சமாதானம், சந்தோஷம் போன்ற ஆவியின் கனிகளால் நிரப்பப்பட இந்த உள்மனம் என்னும் தெய்வீக இருப்பிடத்தை அருளிச் செய்து, மனிதன் வெளியுலகில் எப்போதும் மனோரம்மியமாயிருந்து ஜீவித்து தேவனை மகிமைப்படுத்துவதே கிறிஸ்தவ ஜீவியம். எந்த வழியில் நாம் வருகிறோமோ, அந்த சூழ்நிலையில் வளருகிறோம். எந்த சிந்தனைகளை கைக்கொள்ளுகிறோமோ அதின் மூலமே விரும்பவும் நோக்கிப் பார்க்கிறோம்.

ஆதிமுதல் உண்டான ஒருவரின் கீழ்ப்படியாமையின் பாவம்; முதல் கோணலே முற்றும் கோணலுக்கு காரணமாயிருக்கிறது. பின்பு முதாதையர்களின் வழி வந்த மூர்க்க குணங்கள் நாம் வளர, வளர நம்மை ஆட்கொள்ளுகிறது. உலகத்தை பார்க்கும்போது பழியும், பாவமுமாய் சுற்றி நம்மை சுழல் காற்றின் மையத்தில் விடுகிறது. இவையெல்லாம் சாத்தானின் ஆயுதங்களாக நம்மை தாக்கி, உள்மனதை கேடுள்ள குணங்களால் இருளடைய செய்து விடுகிறது. இவைகளின் முக்கியமாக பெருமை கொண்ட மனிதன், தனக்கு தலைகுனிவோ, சிறுமையோ உண்டாகும்போது, தீவிரித்து செயல்படும் பழிவாங்கும் காரியங்களே அதிக கேடுள்ளதாயிருக்கிறதை பார்க்கிறோம்.

மனிதன் எந்தவொரு சிறுமையையும் தாங்கி, சகித்துக் கொள்ள முடியாதவனாய் தன் பலத்தைக் காட்டி பழிக்கு பழி வாங்குகிறான். இது பலமல்ல பெரும் பலவீனம். இதற்கு அடிமையானவர்கள் தூக்கத்தை இழந்து, நோய்ப்பட்டு போகிறார்கள். பலங்கொண்டவன் பிறரை அழிக்கிறான், பல

Regd No. 040088/84
Postal Regd. No, MH BY NE-84/95
Tamil Monthly Magazine

மில்லாதவன் தன்னையே அழிக்கிறான். இந்த அழிவு சக்திக்கு இன்று உலகமே அடிமை. விளைவு. இன்று சிறைச்சாலைகள் நிரம்பிக் கிடக்கிறது. அகதிகள் முகாம் அளவின்றி பெருகிப் போகிறது. தற்கொலைகள் பெருகி வருவதும் இந்த பழி உணர்ச்சியின் மறு பக்கமான இயலாமையே காரணம். இந்த பேய்க் குணமானது இன்று சிறுவயதிலே பற்றிக் கொள்வது மிகவும் கவலைக்குரிய தான ஒன்று. பிசாசுக் குணமான இந்த அழிவிலிருந்து மக்களை தடுப்பதும், மீட்பதும் கிறிஸ்தவ மார்க்கம் ஒன்றே.

உண்மைக் கிறிஸ்தவன், பிறனால் தனக்கு நேரிடும் நிந்தை, அவமானம், நெருக்கம், உபத்திரவம், வேதனைகள் எல்லாவற்றையும் தேவ சமுகத்தில் வைத்து, தேவ நீதிக்கும், தேவனுடைய தீர்ப்புக்கும் விட்டுவிட்டு சமாதானத்தோடே அவன் தன் காரியங்களை செய்கிறான் 'ஒருவனும் மற்றொருவன் செய்யும் தீமைக்கு தீமை செய்யாதபடி பாருங்கள். உங்களுக்குள்ளும். மற்ற யாவருக்குள்ளும் எப்பொழுதும் நன்மை செய்ய நாடுங்கள் (1 தெச. 5:15). சத்தியத்தின்படி நாம் ஜீவிக்கும் போது, நம்மை விட்டு விலகாமல், நம்மில் நோக்கமாயிருந்து, நம்மைக் காத்து வருகிற தேவன் நம்மைத் தீமைக்கு விலக்கி காப்பது மட்டுமல்லாமல் தீமை செய்யும் துன்மார்க்கர்களை தமது தீர்ப்பின்படி தண்டிக்கிறார்.

"உங்களை உபத்திரப்படுத்துபவர்களுக்கு உபத்திரவத்தையும், உபத்திரப்படுகிற உங்களுக்கு எங்களோடுகூட இளைப்பாறுதலையும் பிரதிபலனாகக் கொடுப்பது தேவனுக்கு நீதியாயிருக்கிறதே" (2 தெச. 1:6) என்று அப். பவுல் தேவ நீதிக்கு இடங்கொடுங்கள் என்கிறார்.

(தொடரும்)



Edited and Published by: Chief Apostle N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 162 - FEP. 98'




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும். சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்த, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N.LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

"ஜாதிகள் கொந்தளித்து ஜனங்கள் விருதா காரியங்களை சிந்திப்பானேன்?"

"கர்த்தருக்கு விரோதமாகவும், அவர் அபிஷேகம் பண்ணினவருக்கு விரோதமாகவும், பூமியின் ராஜாக்கள் எழும்பி நின்று, அதிகாரிகள் ஏகமாய் ஆலோசனை பண்ணி",

என்று சங்கீத புஸ்தகத்தில் நாம் வாசிப்பதுபோல் இன்று ராஜ்யத்தின் நிலை காணப்படுகிறது. தேவ ஜனங்கள் விழித்தெழும்ப வேண்டும். அக்கிரம ஆட்சி தேசத்தில் ஏற்படாதபடி ஜெபிக்க வேண்டும்; செயல்பட வேண்டும். தாங்கள் மாத்திரம் தேசத்தில் இருக்க வேண்டுமென்று திட்டமிடுகிறார்கள், அதற்காக பொய்யைப் பேசி தந்திரத்தைக் கையாடுகிறார்கள். அவர்கள் உள்ளொன்று வைத்து புறம்பொன்று பேசுகிறார்கள்: ஜனங்களை மயக்குகிறார்கள். துஷ்ட அசிங்கமான ஸ்திரீகளும், துஷ்ட மனிதர்களும் ஒன்றாய்க் கூடுகிறதினால் தங்கள் சுயரூபத்தை காட்டிவிட்டார்கள்.

"தாங்கள் மாத்திரம் தேசத்தின் நடுவில் வாசமாயிருக்கும்படி மற்றவர்களுக்கு இடமில்லாமற் போகுமட்டும் வீட்டோடே வீட்டைச் சேர்த்து, வயலோடே வயலைக் கூட்டுகிறவர்களுக்கு ஐயோ!" இவர்கள் "தீமையை நன்மையென்றும், நன்மையை தீமையென்றும் சொல்லி, இருளை வெளிச்சமும், வெளிச்சத்தை இருளுமாகப் பாவித்து, கசப்பைத் தித்திப்பும், தித்திப்பைக் கசப்பென்றும் சாதிக்கிறவர்களுக்கு ஐயோ!"

"இதினிமித்தம் அக்கினி ஜுவாலை வைக்கோலைப் பட்சிப்பது போலவும், செத்தையானது நெருப்புக்கு இரையாகி எரிந்து போவது போலவும், அவர்கள் வேர் வாடி, அவர்கள் துளிர் தூசியைப் போல பறந்து போகும். அவர்கள் சேனைகளின் கர்த்தருடைய வேதத்தை வெறுத்து,

இஸ்ரவேலிலுள்ள பரிசுத்தருடைய வசனத்தை அசட்டை பண்ணினார்களே" என்று ஏசாயா தீர்க்கதரிசி நன்றாய் சொல்லியிருக்கிறாரே ஏசா. 5 ம் அதிகாரம்.

ஆனபடியினால் வெள்ளம் போல் சத்துரு தேசத்தை மூடவருகிறபடியால் அவனுக்கு விரோதமாய் கொடியேற்றுவோம்; ஜெபத்தினால் முறியடிப்போம். குறிகாரர்கள், மந்திரவாதிகள், ஜோதிடகாரர்களின் கூற்றுக்களை முறியடிப்போம்; தேசம் இரட்சிக்கப்படட்டும்.

கிறிஸ்துவுக்குள்,

CHIEF APOSTLE **N. LAZAR**



# திருச்சபை

(தொடர்ச்சி)

2) ஒரு நாள் நான் வேதத்தை தியானித்துக் கொண்டிருக்கும் போது, 'ஸ்திரீயானவள் புருஷனிலிருந்து தோன்றுகிறதுபோல, புருஷனும் ஸ்திரீயினால் தோன்றுகிறான்; சகலமும் தேவனால் உண்டாயிருக்கிறது' 1 கொரி. 11:11 என்ற வசனத்தை என் உள்ளத்தில் ஆழமாக ஆவியானவர் உணர்த்தினார். இந்த வசனத்தைக் குறித்து சிந்தித்துக் கொண்டிருக்கும் போது 'தேவனாகிய கர்த்தர் மனுஷனை பூமியின் மண்ணினாலே உருவாக்கி ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார்; மனுஷன் ஜீவாத்துமாவானான்' (ஆதி. 2:7) என்றும் பின்பு தேவனாகிய கர்த்தர் மனுஷன் தனிமையாயிருப்பது நல்லதல்ல ஏற்ற துணையை அவனுக்கு உண்டாக்குவேன் என்றார்' (ஆதி. 2:18) என்றும், அப்பொழுது தேவனாகிய கர்த்தர் ஆதாமுக்கு அயர்ந்த நித்திரையை வரப்பண்ணினார், அவன் நித்திரையடைந்தான். அவர் அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து, அந்த இடத்தை சதையால் அடைத்தார்.

தேவனாகிய கர்த்தர் மனுஷனிலிருந்து எடுத்த விலா எலும்பை மனுஷியாக உருவாக்கி அவளை மனுஷனிடத்தில் கொண்டு வந்தார்' (ஆதி. 2:21,22) என்றும், இந்த மனுஷி கர்ப்பவதியாகி ஒரு மனுஷனைப் பெற்றாள் [ஆதி. 4:1] என்றும், ஆதியில் நடந்த சம்பவத்தை அப்போஸ்தலன் நினைவு கூர்ந்து எழுதுகிறார் என்றும் நான் எண்ணிக் கொண்டிருந்த வேளையில், இந்த வார்த்தையிலுள் புதைந்திருந்த ஆவிக்குரிய மறை பொருளை கர்த்தர் விளக்கிக் கொடுக்க ஆரம்பித்தார்.

இதன் மூலமாக முந்தின மனுஷனாகிய ஆதாமின் விலா திறக்கப்பட்டு அதிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு எலும்பைக் கொண்டு ஆதாமுக்கு ஏற்ற துணையை கர்த்தர் உண்டாக்கினதுபோல பிந்தின ஆதாமாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் விலா திறக்கப்பட்டு அதிலிருந்து வெளிப்பட்ட இரத்தத்தினாலும், ஜலத்தினாலும் கர்த்தருக்கு ஏற்ற துணையாகிய, சபையாகிய ஸ்திரீயை கர்த்தர் உருவாக்கினார் என்றும் கண்டு கொள்ள முடிந்தது.

'இந்த இரகசியம் பெரிது; நான் கிறிஸ்துவைப் பற்றியும், சபையைப் பற்றியும் சொல்லுகிறேன்' (எபே. 5:32). அப்போஸ்தலன் புருஷனையும் ஸ்திரீயையும் கிறிஸ்துவுக்கும், சபைக்கும் ஒப்பிட்டுச் சொல்வதிலிருந்தும் இதை விளங்கிக் கொள்ளலாம். இவ்விதமாக ஸ்திரீயானவள் புருஷனிலிருந்து தோன்றுகிறது போல, என்ற வார்த்தையின் ஆவிக்குரிய இரகசியத்தை விளங்கிக் கொண்ட பின்பு 'புருஷனும் ஸ்திரீயினால் தோன்றுகிறான்' என்ற வார்த்தையின் ஆவிக்குரிய இரகசியத்தை தெரிந்து கொள்ள பிரயாசப்பட்டு ஸ்திரீயிலிருந்து புருஷன் தோன்றுவதுபோல, சபையாகிய ஸ்திரீயிலிருந்து எவ்விதமாக ஒரு ஆண் பிள்ளை பிறக்கும் என்று சிந்திக்கலானேன்.

இதன்படி 'அன்றியும் ஒரு பெரிய அடையாளம் வானத்தில் காணப்பட்டது ஒரு ஸ்திரீ சூரியனை அணிந்திருந்தாள். அவள் பாதங்களின் கீழே சந்திரனும், அவள் சிரசின் மேல் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடமும் இருந்தன. அவள் கர்ப்பவதியாயிருந்து, பிரசவவேதனையடைந்து பிள்ளை பெறும்படி வருத்தப்பட்டு அலறினாள்' (வெளி. 12:1,2).

சகல ஜாதிகளையும் இருப்புக் கோலால் ஆளுகை செய்யும் ஆண் பிள்ளையை

அவள் பெற்றாள்; அவளுடைய பிள்ளை தேவனிடத்திற்கும் எடுத்துக் கொள்ளப்பட்டது (வெளி. 12:5) என்று கண்டு சபையிலிருந்தும் ஒரு புருஷன் தோன்றுவார் என்றுணர்ந்து கொண்டேன். இதுவும் கிழக்கிலிருந்து நீதிமானை எழுப்பி தமது பாதபடியிலே வரவழைத்தவர் யார்?

ஜாதிகளை அவனுக்கு ஒப்புக் கொடுத்து, அவனை ராஜாக்களுக்கு ஆண்டவனாக்கி அவர்களை அவன் பட்டயத்துக்கு தூசியும், அவன் வில்லுக்கு சிதறடிக்கப்பட்ட தாளடியுமாக்கி, அவன் அவர்களை துரத்தவும் தன் கால்கள் நடவாதிருந்த பாதையிலே சமாதானத்தோடு நடக்கவும் பண்ணினவர் யார்? [ஏசா. 41:2,3] என்ற வார்த்தை மறுபடியும் நிறைவேறுதலாயிருக்கிறது என்று உணர்த்தப்பட்டேன்.

இங்கே சபையாகிய ஸ்திரீ பெற்ற ஆண் பிள்ளையானது 'சகல ஜாதிகளையும் இருப்புக் கோலால் ஆளுகை செய்யும் அதிகாரத்தைப் பெற்றதாயிருந்தது' என்று அறிய முடிகிறது. சகல ஜாதிகளையும் இருப்புக் கோலால் ஆளுகை செய்யும் அதிகாரமானது குமாரனுடையதாயிருக்கிறது என்று 'நீர் என்னுடைய குமாரன் இன்று நான் உம்மை ஜநிப்பித்தேன்; என்னைக் கேளும் அப்பொழுது ஜாதிகளை உமக்கு சுதந்திரமாகவும், பூமியின் எல்லைகளை உமக்கு சொந்தமாகவும் கொடுப்பேன்; இருப்புக் கோலால் அவர்களை நொறுக்கி குயக்கலத்தைப்போல் அவர்களை உடைத்துப்போடுவீர் என்று சொன்னார்' [சங். 2:7,9] என்ற வசனத்தின் மூலம் விளங்கும்.

இவ்விதமாக குமாரனுடைய அதிகாரம் சபையாகிய ஸ்திரீ பெற்ற ஆண் பிள்ளைக்கும் கொடுக்கப்படுகிறது. அதுவுமல்லாமல் 'ஜெயங்கொண்டு முடிவு பரியந்தம் என் கிரியைகளை கைக் கொள்ளுகிறவனெவனோ அவனுக்கு நான் அதிகாரம் பெற்றதுபோல ஜாதிகளின் மேல் அதிகாரம் கொடுப்பேன். அவன் இருப்புக் கோலால் அவர்களை ஆளுவான். அவர்கள் மண்பாண்டங்களைப் போல் நொறுக்கப்படுவார்கள்' [வெளி. 2: 26,27] என்றும், கர்த்தர் சொல்வதிலிருந்து சபையாகிய ஸ்திரீ பெற்ற ஆண் பிள்ளை ஜெயங்கொள்ளும், பரிசுத்தவானே என்று அறிந்து கொள்ளலாம்.

(தொடரும்)

 

## மார்த்தீன் லுத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம் (தொடர்ச்சி)

எவரும் குற்றங்குறை காணக்கூடாத விதமாய்க் கடந்த நானூறு வருஷங்களாக இந்தக் கத்தெகிஸ்மு மகாக் கிறிஸ்தவ போதன சிரோமணியாகத் துலங்கி நிலைநின்று வருகிறது. பெயர்போன சரித்திரக்காரராகிய லேயாப்போல்ட் வொன்ராங்கே இதைப்பற்றி: லுத்தர் 1529-ம் வருஷம் பிரசுரம் செய்த கத்தெகிஸ்மு எவ்வளவுக்கு

ஆழ்ந்த கருத்துள்ளதோ அவ்வளவுக்குச் சிறுவர்களுக்கேற்றதும், எவ்வளவுக்குக் கலப்பற்றதுக் கம்பீரமாயிருக்கிறதோ அவ்வளவுக்குத் தெளிவாயும் விளங்கக் கூடியதுமாயிருக்கிறது.

நான் வயது சென்ற ஒரு சாஸ்திரியாயிருந்தும் அவைகளைப் பாராயணம் செய்து பக்தியோடு சொல்லி வருகிறேன். எவனுடைய ஆத்துமா இதினால் போஷிக்கப்படுகிறதோ அந்த மனுஷன் பாக்கியவானே என்று சொல்லுகிறார். அமெரிக்க இந்தியருடைய சுய பாஷையில் முதல் முதல் மொழிபெயர்க்கப்பட்டுப் பிரசங்கிக்கப்பட்ட புத்தகம் இதுவே. இச்செய்தி இதை வாசிக்கிற எவருக்கும் சந்தோஷம் உண்டாக்குமென்பதற்குச் சந்தேகமில்லை.

## அதி. 27. ஸ்பயர் நகரத்தில் நடந்த உடன்படிக்கையும் இராஜ்ய சங்கமும்:-

1525-ம் வருஷம் டிசம்பர் மாதம் அகுஸ்தாபுரியில் ஒரு இராஜ்ய சங்கம் கூடிவர வேண்டுமென்று இராயன் செய்த விளம்பரத்தினால், வோர்ம்ஸ் சங்கத்தின் கட்டளைகளைக் கட்டாயமாய் நிறைவேற்றுவதற்காகக் கொடூர ஏற்பாடுகள் செய்யப் போகிறார்களென்று தெரிய வந்தது. சுவிசேஷப் பிரபுக்கள், சங்கடங்கள் வருமென்று முன்னறிந்து, அச்சங்கம் கூடிவராதபடி தடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சீர்தூக்கி ஆலோசித்தார்கள். இப்பொழுது கூடப்போகும் இராஜ்ய சங்கம் அவ்வளவு விசேஷமானதல்ல.

ஆகையால் அது நிறுத்தப்பட்டு வேறொரு சங்கம் 1526-ம் வருஷம் மே மாதம் 1ம் தேதியில் ஸ்பயர் நகரத்தில் கூடி வரும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. இந்தச் சங்கத்திலும் லூத்தருடைய போதகங்களை அடியோடே வேரறுக்கிறதற்காக மறுபடியும் பிரயத்தனம் செய்யப்படுமென்று அறிவிக்கப்பட்டது. இதற்கிடையில் பாப்பு மார்க்கப் பிரபுக்கள் ஒன்றுகூடி, இராயனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகச் சதியாலோசனை செய்தார்கள்.

மறுபட்சத்தில் சுவிசேஷப் பிரபுக்கள் ஒன்றுகூடிப் பகைவரை எதிர்க்கிறதற்கு எல்லா எத்தனங்களையும் ஜாக்கிரதையோடு செய்தார்கள். இராஜ்ய சங்கம் அகுஸ்தாபுரியில் கூடிவருமென்று விளம்பரமான காலத்திலிருந்து இவர்கள் இந்த ஆயத்தம் செய்து கொண்டு வந்தார்கள். இந்த ஆயத்தம் 1526-ம் வருஷம் மே மாதம் 2ம் தேதி தொர்கௌ என்ற இடத்தில் பூர்த்தியாயிற்று. ஆகையால் இதற்கு 'தொர்கௌ உடன்படிக்கை' என்று பெயர்.

புருன்ஸ்விக் பிரபு, மெகலன்புர்க் பிரபு, அனல்ட் அதிபதி, மான்ஸ்வெல்ட் அதிபதி, மார்க்டெபுர்க் பட்டணத்தார் ஆகிய இவர்கள் எல்லோரும் இதற்குத் தலைவர்களாகிய சக்சோனிய பிரபுவாகிய யோவான், எஸ்ஸே நாட்டதிபதியாகிய பிலிப்பு என்பவர்களோடு கூடிக்கொண்டார்கள். இந்தத் தொர்கௌ உடன்படிக்கைக்கு லூத்தர் சம்மதிக்கவில்லை. இதைப்பற்றி அவர், இராயனுக்கு விரோதமாக உடன்படிக்கை செய்யப்பட்டதென்று கேள்விப்படுவது எனக்குப் பிரியமில்லை. மனுஷ உபாயங்கள் அபத்தமாகுமென்று பயப்படுகிறேன் என்று எழுதினார். யுத்தவீரர் ஆண்டவருக்கு ஊழியஞ் செய்கிறவர்களா? என்ற பத்திரிக்கையில் லூத்தர், இலௌகீக அதிகாரிகள் எவ்வளவு கொடுமை செய்தாலும், பழிவாங்குவது என் காரியம், பதில் செய்வதும் நானே (ரோம. 12:19) என்கிற தேவ வாக்கு நிலைநிற்கும் என்று எழுதினார்.

மேற்சொன்ன பத்திரிக்கையில் எழுதியவருடைய பெயரும் பிரசுரம் செய்த இடமுமின்றி ஒரு பிரதி கேயோர்க் பிரபுவுக்கு அனுப்பப்பட்டது. கேயோர்க் பிரபு இதை வாசித்த போது சந்தோஷமடைந்து, லூக்காஸ் க்ரனக் என்பவரை நோக்கி, 'இதைப்

பாரும். இச்சிறு புத்தகம் லூத்தர் எழுதிய மற்றப் புத்தகங்களைவிட அதிக நலமான தாயில்லாத போதிலும், அவைகளைப் போலவே இருக்கிறது என்று சொன்னார்.

அப்போது அந்தச் சித்திரக்காரர் அது லூத்தர் எழுதிய புத்தகந்தானென்று சொல்லித் தன்னிடத்திலிருந்த லூத்தருடைய பெயருள்ள ஒரு பிரதியைப் பிரபுவுக்குக் காட்டினார். இதைப் பார்த்தபோது அவர், ஒரு அற்ப சந்நியாசி இவ்வளவு மேன்மையான புத்தகம் எழுதுவது முற்றிலும் தகுதியல்ல என்று உறுமிச் சொன்னார்.

என்றாலும் காரியங்கள் சுவிசேஷ அநுசாரிகளுக்கு அநுகூலமாகவே மாறிற்று. 1526-ம் வருஷம் ஸ்பயர் நகரத்தில் கூடி வந்த இராஜ்ய சங்கத்தில் செய்த தீர்மானமாவது: பொதுச் சங்கம் கூடும் வரையில் ஒவ்வொரு அரசும் தேவனுக்கும், இராயனுக்கும் கணக்கு ஒப்புவிக்கக்கூடும் விதமாய்ப் பிழைத்து ஆண்டு நடந்து வர வேண்டும் என்பதே. இது இரு கட்சியாருக்கும் திருப்தியாயிருந்தது.

வோர்ம்ஸ் சங்கத்தின் கட்டளைகளை நிறைவேற்றாமல், பின் ஒரு சங்கம் கூடும்வரையில் நிறுத்திவைக்கட்டும். மேலும், 1521-ம் வருஷம் வோர்ம்ஸ் நகரத்தில் அறிவிக்கப்பட்ட இராயனுடைய கட்டளைக் கூடப் போகும் இந்த சங்கத்தில் பிரபுக்கள், அதிபதிகள், தலைவர், நகரத்தார்கள் எல்லோரும் சேர்ந்து அக்கட்டளைகளில் சொல்லிய ஒவ்வொரு விஷயத்தையும் முழுவதும் நிறைவேற்றுவது அசாத்தியமென்று காட்டி எதிர்க்கப்போகிற விஷயத்தை உமக்கு ஒளித்து வைக்கமாட்டோம் என்று இராயனுக்குச் சொல்லும்படி ஒரு பிரதிநிதியை சங்கத்துக்குப் இராயனிடம் அனுப்பினார்கள்.

(தொடரும்)

ஜனுவரி மாத தொடர்ச்சி:

# நீதியின் தீர்ப்புக்கு இடங்கொடு

சபையின் விசுவாசி ஒருவர் இரவு பஸ்ஸில் தன் மனைவியுடன் தூரப்பயணம் வந்து கொண்டிருந்தார். பின்னுலிருந்தவர் புகைபிடித்துக் கொண்டிருந்தார். அவருடைய மனைவியிடம் மெதுவாக தான் ஒரு இருதய நோயாளி என்று கூறி புகை பிடிப்பதை நிறுத்தும்படி வேண்டிக் கொண்ட போது, அவர் [புகைபிடித்தவரின்] மனைவி தான் ஒரு மருத்துவர் என்றும், தன் கணவன் இனி பஸ்ஸில் புகை பிடிக்கமாட்டார் என்றும் கூற, இவர்கள் நிம்மதியானுர்கள்.

கொஞ்ச நேரம் சென்றபின் திரும்பவும் புகை வந்தது. திரும்பி பார்த்தார்கள். இப்போது அவருடைய மனைவி, அதாவது உத்தரவாதம் கொடுத்த அந்த மருத்துவர் பெண்மணியே புகை பிடித்துக் கொண்டிருந்தார். அதிர்ச்சியாகிப் போனவர்கள், இந்த அக்கிரமத்தை யார் தடுக்கக் கூடும் என்று அறிந்து, இருவரும் ஜெபம்பண்ணி, 'ஆண்டவரே நீரே பார்த்துக் கொள்ளும்' என்று முறையிட்டு பின் அதைப்பற்றி சிந்திக்கவில்லை. கொஞ்ச நேரம் சென்றபின் பஸ் திடீரென பிரேக்போட்டு அதிர்ந்த போது, கடைசி பின் சீட்டு இருக்கையில் இருந்த அவருடைய குண்டு பையன் விழுந்து, உருண்டு இவர்கள் காலடி பக்கமாய் நல்ல அடிப்பட்டு விழுந்தான். இவர்கள் தான் பையனுக்கு உதவி செய்து இருக்கையில் வைத்தார்கள். பையன் வேதனையில் அழுத போது இவர்கள் அவனுக்காக ஜெபித்தார்கள். மனதிலே குத்தப்பட்டார்களோ என்னவோ, அப்புறம் புகை வெளிவரவில்லை.

அது ஒரு ரோமன் கத்தோலிக்க குடும்பம். தேவ பயமில்லாமல் செய்த அக்கிரமத்துக்கு யாராயிருந்தாலும் பதில் சொல்லியாக வேண்டும். இது ஒரு உண்மையுள்ள சபை, விசுவாச குடும்பம், தீமைக்கு எதிர்த்து நிற்காமல், எதிர்ப்பேசாமல் தேவனிடம் முறையிட்டார்கள். தேவ நீதி தேவ சித்தப்படியிருக்கும். நாமோ, துன்மார்க்கனுக்கு அவர் நீதிக்கு சரிகட்டு தண்டிக்கும்போது, மகிழ்ந்து சந்தோஷப்படாமல் அவர் நீதிபரர் என்று சொல்லி அவருக்குள் சமாதானமாயிருக்க வேண்டும்.

அவர் நம் பிதா. அவர் கைக்குள் அடங்கி உத்தமமாய் ஜீவிக்கும் நாம், பழிவாங்கும் பாவ உணர்ச்சிகளாலும், பாவக் கிரியைகளாலும், மரணத்துக் கேதுவான கேடுகளுக்கு ஆளாகிவிடாமலும்; திராணியில்லாத எளியவன் சோர்ந்து போய் விசுவாசத்தில் விழுந்துவிடாது நிற்கவும், பதிலுக்கு பதில் செய்வதை தேவன்தாமே செய்கிறுர். பிரியமானவர்களே, பழிவாங்குதல் எனக்குரியது, நானே பதில் செய்வேன் என்று கர்த்தர் சொல்லுகிறுர் (உபா. 32:35; ரோம. 12:19). ஆகையால் நீங்கள் பழிவாங்காமல் கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள் என்று அப். பவுல் சொல்லுகிறுர்.

அகந்தை, பெருமை என்னும் குணங்களை நாம் அறுவருக்க வேண்டும். இவைகளால் உண்டாகும் கோபதாபங்கள், பழி உணர்ச்சி மரணத்துக்கேதுவான பாவங்களை தூண்டக் கூடியதாயிருக்கிறது. உலகமே இதற்கு அடிமைப்பட்டிருக்க தேவ ஜனங்களாகிய நாம் இதற்கு தப்புவது அரிதான காரியமல்ல. மனிதனால் கூடாதது தேவனால் கூடும். தேவ சபையிலும், தேவ சத்தியத்திலும் இதற்கு யார்க்குமுண்டு இரட்சிப்புக்குள் வந்தவர்கள் கூட தங்களது பக்தி, விசுவாசம், பக்திவைராக்கியம், நம்பிக்கை, ஜெப வல்லமை பலப்படாத

நிலையில் இந்தக் காரியங்களில் தேவனோடு பேசி விடுதலை பெற்றுக் கொள்வது சில நாளாகலாம், ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம்.

தேவன் தம் திருச்சபை அப்போஸ்தலர் மூலமாக இந்தக் காரியங்களை நடத்துகிறார். பரிசுத்தவான்கள் உலகத்தை நியாயம் தீர்ப்பார்கள் என்று சத்தியம் நமக்கு போதிக்கிறது (1 கொரி. 6:2). அவர்களுடைய தகுதி தேவனாலே உண்டாயிருக்கிறது [2 கொரி. 3:5]. அவர்களுடைய வல்லமை எல்லா தீய சக்திகளையும் முறியடிக்க வல்லது.

'எங்களுடைய போராயுதங்கள் மாம்சத்துக்கேற்றவைகளாயிராமல், அரண்களை நிர்மூலமாக்குகிறதற்கு தேவ பலமுள்ளவைகளாயிருக்கிறது' என்று அப். பவுல் வெளிப்படுத்துகிறார் [2 கொரி. 10:4]. இப்படிப்பட்டவைகள் தேவ நீதிக்கு உட்பட்ட காரியமாயிருப்பதால், தேவ சத்தியத்துக்கு கீழ்ப்படிந்திருக்கவும், நீங்கள் கோபங் கொண்டாலும் பாவம் செய்யாதிருங்கள் என்ற வசனத்தின்படி எபே. 4:26 பாவக்கிரியைகளுக்கு நீங்கி ஜீவிக்கவும், நாம் பழி உணர்ச்சியை முற்றிலுமாக நீக்கி, பதிலுக்கு பதில் செய்யும் எண்ணங்களை களைந்து போடுவோமாக.

'தீமைக்குத் தீமையையும், உதாசனத்துக்கு உதாசனத்தையும் சரிக்கட்டாமல் அதற்கு பதிலாக நீங்கள் ஆசீர்வாதத்தை சுதந்தரித்துக் கொள்ளும்படி அழைக்கப்பட்டிருக்கிறவர்களென்று அறிந்து ஆசீர்வதியுங்கள் [1 பேது. 3:9].

இந்த போதனைகளை கைக் கொள்ளும் போது, தேவன் நம்மை இன்னும் மேலான கிறிஸ்தவ ஜீவியத்துக்குள் கொண்டு செல்வார். இந்த அஸ்திபாரம் பலப்படும் போது இயேசு கிறிஸ்து, தமக்குண்டான தெய்விகக் குணங்களை நம்மிலிருந்து வெளிப்படுத்துவார். நிந்தித்தவர்களை நேசித்து, சத்துருக்களை சிநேகித்து, நன்மை செய்து நமது ஜீவ புத்தகம் நற்கிரியைகளால் நிரப்பப்பட அவர் தன்னையே சுவிசேஷமாக தந்துள்ளார். அவர், தன்னை அடித்து, காயப்படுத்தி, அவமானப்படுத்தி, சிலுவையில் அறைந்தவர்களை எண்ணி, 'பிதாவே இவர்களுக்கு மன்னியும்' என்றார் (லூக். 23:34).

ஞானஸ்நானம்

8-12-97 அன்று சென்னை கிளை சபையில் 9 பேரும்; 15-1-98 அன்று கோயம்புத்தூர் கிளை சபையில் 24 பேரும்; 16-1-98 அன்று பழனி கிளை சபையில் 9 பேரும்; 19-1-98 அன்று திருச்சி கிளை சபையில் 28 பேரும்; 21-1-98 அன்று பள்ளங்கி கோம்பை கிளை சபையில் 5 பேரும்; 1-1-98 அன்று நாகர்கோவில் கிளை சபையில் 21 பேரும் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இது தேவ குமாரனால் மட்டுமே செய்யக் கூடிய செயல் என்று நாம் பின்னிட்டு போய் விடக் கூடாது. தேவ மனுஷனாகிய ஸ்தேவான் கல்லெறியப்பட்டு சாகுமுன்பு ஆண்டவரே இவர்கள் மேல் இந்தப் பாவத்தை சுமத்தாதிரும் என்று மிகுந்த சத்தமிட்டு சொன்னார் (அப். 7:60). இந்தக் காரியமானது ஆத்துமாவைக் காத்து, ஆண்டவரை மகிமைப்படுத்துகிறதே. உங்களை துன்பப்படுத்துகிறவர்களை ஆசீர்வதியுங்கள், ஆசீர்வதிக்க வேண்டியதேயன்றி சபியாதிருங்கள் (ரோம. 12:14).

கிறிஸ்துவுக்குள்ளிருக்கும் ஒவ்வொருவரும், நாம் தேவனுடைய பிள்ளைகள் என்று சொல்லிக் கொள்ள இந்த போதனைகளை கடைப்பிடிப்பது அவசியம். இம்மையில் அழிவு, நாசம் உண்டுபண்ணி, மறுமையில் அக்கினியில் வெந்து, ஆத்துமாவை இழந்து போகாதிருக்க இந்த சத்தியம் போதிக்கப்பட வேண்டும். இது எல்லாராலும் சாதாரணமாக ஏற்றுக் கொள்வது கடினம். தேவையை உணர்ந்து மக்கள் தேவ சபை நோக்கிப் போக வேண்டும். அப்போஸ்தல ஊழியம் கொண்ட புதிய எருசலேம் சபையில், பரிசுத்தவான்கள், ஊழியர்கள், தாங்கள் பெற்ற ஆத்மீக பெலத்தாலும், வரத்தாலும் எடுக்கும் ஜெபத்தாலும், எடுத்துக் கொடுக்கும் போதனைகளாலும், எல்லா பழி உணர்ச்சிகளையும், களைந்து போட்ட புதிய இருதயத்தை தேவனிடமிருந்து பெற்று தருவார்கள். நாம் தேவனை மகிமைப்படுத்தி, இயேசு கிறிஸ்து வரும் நாளில் அவருக்கு மகிமை சேர்க்க அவரோடிருப்போம்.

'நீ தீமையினாலே வெல்லப்படாமல், தீமையை நன்மையினாலே வெல்லு'
(ரோம. 12:21).



# வேதபாடம் (தொடர்ச்சி)

## ராகாபும் வேவுகாரர்களும் யோசு. 2:1-24

இஸ்ரவேலர் எரிகோவின் சமீபமாய் வந்திருக்கிறதினால் எரிகோவில் திகில் பரவியிருக்கிறதா என்று அறிய யோசுவா விரும்பினார். அதற்காக அந்த பட்டணத்தை வேவு பார்க்கவும் இரண்டு வேவுகாரர்களை அனுப்பிவைத்தார். இஸ்ரவேலர் நிமித்தம் நடைபெற்ற அற்புதங்களைக் குறித்து ராகாப் கேள்விப்பட்டிருந்தபடியால் இஸ்ரவேலின் தேவனே மெய்யான தேவன் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். அவளுடைய விசுவாசம் எபி. 11:31 லும் யாக். 2:25 லும் புகழப்பட்டிருக்கிறது. அவளுடைய விசுவாசத்தினால் அவள் தாவீது, கிறிஸ்து என்பவர்களுடைய முப்பாட்டியானாள். பல குறைபாடுகளுடன் விளங்கிய இவ்விசுவாசமே அவளையும், அவளுடைய குடும்பத்தாரையும் இரட்சிக்கிறதாயிருந்தது.

வேவுகாரரை பாதுகாக்க உபயோகித்த சிவப்பு கயிறு, பிறகு அவளை பாதுகாக்க உதவிற்று - குறிப்பு (யோசு. 2:1). வேசி என்ற வார்த்தை போஜனம் விற்பவள், சத்திரக்காரி என்றும் பொருள்படும்.

யோசு. 2:5:- பொய் சொன்னது அவள் மெய் தேவனை பூரணமாய் அறியாததினலாகும். விக்கியானம் கூறமல் அது எழுதப்பட்டிருக்கிறது. அவளுடைய பொய்யையல்ல விசுவாசத்தையே புதிய ஏற்பாடு மெச்சி பேசுகிறது (எபி. 11:31; யாக். 2:25).

யோசு. 2:6:- சணல் தட்டை வீட்டின் மாடியில் காயப்போடப்படும் சணல் தாழ்கள் ஆகும்.

யோசு. 2:7:- இறங்கு துறை யோர்தான் நதியைக் கடக்க சில இடங்களில் படிகட்டுகள் கட்டி இறங்குகிறதற்கான ஒழுங்குகள் செய்யப்பட்டிருந்தன.

யோசு. 2:20:- இஸ்ரவேலின் தேவன் மேல் அவள் விசுவாசம் வைத்ததற்கு இதுவே காரணமாகும். இஸ்ரவேலின் தேவனே உயர வானத்திலும், கீழே பூமியிலும் தேவனுனவர் என்பதே அவளுடைய விசுவாசத்துக்குக் காரணமாக இருந்தது.

யோசு. 2:18:- பஸ்கா ஆசரிப்பில் வீட்டு வாசலின் மேல் இரத்தம் பூசப்பட்டிருந்த அதே கருத்து சிவப்பு கயிறுக்கும் உண்டு. கிறிஸ்துவின் இரத்தத்தினல் பாவி இரட்சிக்கப்படுவதை அது முன்னறிவிக்கிறது.

## 4. முன் ஆயத்தமும் யோர்தானைக் கடந்து போகுதல் யோசு. 3:1-4:18:-

இஸ்ரவேல் ஜனங்கள் தங்களை சுத்திகரித்துக் கொண்டு (வசனம் 5) லேவி கோத்திரத்தை சேர்ந்த ஆசாரியரால் சுமந்து செல்லப்படும் உடன்படிக்கை பெட்டகத்தைப் பின்பற்றிச் செல்ல வேண்டும் [யாத். 25:10; உபா. 31:9]. இவ்வித ஆயத்தமும் பெட்டகம் தங்கள் முன் செல்வதைக் காண்பதும் தேவ சமுகம் இடைவிடாமல் தங்களோடிருப்பதை அவர்களுக்கு நினைப்பூட்டியது. நமது விசுவாசக் கர்த்தாவும், விசுவாச சம்பூரணருமாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை எல்லா சந்தர்ப்பங்களிலும் நாம் பின்பற்ற வேண்டும். அவருடைய சமுகம் நமக்கு முன்பாகக் காணப்பட வேண்டும் (எபி. 12:1,2; பிலி. 3:10-14).

உடன்படிக்கை பெட்டியை சுமக்கும் ஆசாரியரின் கால்கள் தண்ணீரின் ஓரத்தில் பட்ட மாத்திரத்தில் [வச. 15] வடக்கே 16 மைல் தூரத்திலுள்ள ஆதாம் என்ற ஊரில் நதி ஒரு குவியலாக குவிந்தது. இஸ்ரவேலரெல்லாரும் வரண்ட வெளியாய் நடந்து சென்றார்கள். வாக்குத்தத்த தேசத்திற்குள் இப்பாதையே அவர்களின் பிரவேசமாக விளங்கிற்று. இது ஆச்சரியமான மகா பெரிய அற்புதமாய் விளங்கிற்று. எனவே அது ஏற்கனவே பயந்திருந்த கானனியரை திடுக்கிடச் செய்தது (யோசு. 5:1; குறிப்பு 3:1). அதிகாலையில் எழுந்திருக்கும் யோசுவாவின் இப்பழக்கத்தைக் கவனிக்கவும்.

தேவனுடைய பிள்ளைகள் அதிகாலையில் எழுந்திருந்து சிரமப் பரிகாரங்களைச் செய்து கொண்டு தேவனைத் தொழுது கொள்ள வேண்டும் ஜெபம் பண்ண வேண்டும்.
யோசு. 3:4:- இரண்டாயிரம் முழத்தூரம் என்பது (3000) மூவாயிரம் அடியாகும். ஒரு முழம் என்றால் 18 அங்குலமாகும்.

யோசு 3:15:- யோர்தான் கரை புரண்டுபோம் (எரே. 12:5; 49:19; 50:11).

## 5. கில்காலில் பாளயமிறங்குதல் யோசு. 4:19-5:12:-

ஞாபகர்த்தமாக இரண்டு கற்குவியல்கள் நாட்டப்பட்டன. யோசு. 4:9ல் ஒன்றும்
மற்றது யோசு. 4:20லும் விவரிக்கப்பட்டிருக்கின்றது. கானானை ஜெயிக்க கில்கால் யோசு
வாவின் தலைமை ஸ்தானமாயிற்று. வருங்கால சந்ததிக்கு இப்படிப்பட்ட ஞாபகச் சின்
னங்கள் மிகவும் ஊக்கமூட்டுபவைகளாக இருந்திருக்கும். தேவனுக்கு பயந்து அவரு
டைய சகல உருக்க இரக்கங்களுக்காக நமது பிள்ளைகள் நன்றி செலுத்தும்படி அறி
வூட்டப்பட வேண்டும். 40 வருஷங்களாகளாக வனாந்தர பிரயாணம் செய்கையில்
விருத்தசேதனம் பெறாமல் இஸ்ரவேலர்கள் இருந்தனர். வழியில் பிறந்த இஸ்ரவேல்
மக்களுக்கு விருத்தச்சேதனம் பண்ணப்படவில்லை. கானானுக்குள் பிரவேசித்த மாத்தி
ரத்தில் அவர்கள் உடன்படிக்கையின் முத்திரையை தங்கள் சரீரத்தில் பெற்றவர்களாக
இருக்க வேண்டும். எகிப்தின் நிந்தையை அவர் புரட்டி தள்ளினார்.

எல்லா கிறிஸ்தவர்களும் மனந்திரும்பி, முழுகி ஞானஸ்நானம் பெற்றிருக்க வேண்
டும். கர்த்தருடைய உடன்படிக்கையை தங்களுடைய சரீரத்திலே அவர்கள் அடைந்
திருக்க வேண்டும். இங்கே ஒரு பெரிய அற்புதமும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. கர்த்தர்
இஸ்ரவேலர்களை குணமாக்கினார். கிட்டத்தட்ட ஆறு லட்சத்துக்கு அதிகமான (வழியிலே
பிறந்த) மக்கள் விருத்தசேதனம் பண்ணப்பட்டார்கள். இஸ்ரவேலர்கள் முதலாம்
மாதம் 10-ம் தேதி யோர்தானிலிருந்து கரையேறி, எரிகோவுக்குக் கீழ்மெல்லையான கில்
காலிலே பாளயமிறங்கினார்கள் (யோசு. 4:19). அவர்கள் அன்றைய தினம்தானே
விருத்த சேதனம் செய்யப்பட்டார்கள். ஏனென்றால் வழியிலே அவர்கள் விருத்தசேதனம்
பண்ணப்படவில்லை. கர்த்தருடைய கட்டளையின் பிரகாரம் அன்றைய தினம் விருத்த
சேதனம் பெற்றார்கள். அற்புதமாக மூன்றே நாளில் கர்த்தர் தெய்வீக சுகம் அருளினார்.
அவ்வளவு பேரையும் சுகப்படுத்தினார் (யோசு. 5:8). அந்த மாதம் பதினாலாம் தேதி
மாலையிலே பஸ்காவை ஆசரித்தார்கள் [யோசு. 5:10].

இந்நாட்களிலே தெய்வீக சுகம் என்றால் என்ன என்று தெரியாமல் மாதக் கணக்
காக போட்டு, ஜெபித்து கடைசியில் மருத்துவமனைக்குக் கொண்டுபோய் அந்த ஆத்
துமா இறந்து போகிறது. ஜெபித்து, ஜெபித்து இறந்து போகிறதும் தவறு. மருந்து சாப்
பிட்டு, சாப்பிட்டு இறந்து போகிறதும் தவறு. கர்த்தர் மூன்று நாளில் இலட்சக்கணக்
கணக்கான விருத்தசேதனம் பண்ணப்பட்டவர்களைக் குணமாக்கினார்
என்று எழுதப்பட்டுள்ளது இது தான் தெய்வீக சுகம். விருத்த சேதனம் பண்ணப்பட்
டால் அந்த புண்கள் ஆற, ஓடி சாடி வேலை செய்ய, பணியிட, பல காரியங்களைச்
செய்ய 15 நாட்களிலிருந்து 30 நாட்கள் வரையாகும். ஆனால் அவர்கள் 4 வது நாளிலே
பஸ்காவை ஆசரித்தார்கள் என்றால் கர்த்தர் அவர்களைக் குணமாக்கினார். கர்த்தர் அவர்
களைக் குணமாக்கிறார் என்றால் அற்புதமாகக் குணமாக்குவார். குணமாக்குவேன் என்று
தேவன் சொன்னால் குணமாக்குவார். Treatment எடுக்க வேண்டுமென்றால், Teatment
எடுத்துக் கொள்ள வேண்டும். எதெதற்கு என்னென்ன பரிகாரம் செய்ய வேண்டுமோ
அந்தந்த பரிகாரம் செய்கிறது தவறில்லை; சுகமாக்குகிறது கர்த்தர்.

ஆனால் கர்த்தர் நமக்குக் கொடுத்திருக்கிற அறிவையும், அனுபவங்களையும்
நாம் உபயோகிக்க வேண்டும். அறிவை அடகு வைத்து விட்டு கடவுள் சுகமாக்குவார்
என்று மூடபக்தியாகவும், பிடிவாதமாகவும், இருக்கக் கூடாது. பிடிவாதத்தினால் அநேகர்

செத்துப் போகிறார்கள் அது விசுவாசமல்ல (யோசு. 5:10-12). பஸ்காவை ஆசரித்தார்கள். இப்பண்டிகையின் இது மூன்றாவது கொண்டாட்டமாகும் யாத். 12:6; எண். 3:5,9 இதற்குப் பிற்பாடு மேலும் மூன்று தடவை இதன் ஆசரிப்பு அறிவிக்கப்பட்டிருந்தது [2 இரா. 23:21-23; 2 நாளா. 30 அதி; எஸ். 6:10]. பாலும், தேனும் ஓடுகிற தேசத்தில் இனி அவசியமில்லாதபடியினால் மன்னா ஏற்ற சமயத்தில் நின்று விட்டது.

### 6. பரம சேனாதிபதியின் தரிசனம் யோசு. 5:13-15:-

இங்கே குறிப்பிடப்படும் சேனாபதி; திரியேகத்துவத்தின் இரண்டாம் ஆள் என்று நிச்சயமாக அறிகிறோம். ஏனென்றால் யோசுவா அவருக்கு தெய்வீக மகிமையைச் செலுத்தினார். கிறிஸ்து தமது ஜனத்தின் விசுவாசத்தை ஸ்திரப்படுத்த ஏற்றபடி தோன்றுவார். தேவ சித்தத்தை அறிய அவருக்கு இருந்த வாஞ்சையும், அதற்குக் கீழ்ப்படிய அவர் ஆயத்தமாக இருந்ததையும், யோசுவாவின் வினா வெளிப்படுத்துகிறது (குறிப்பு 4:3).

கற்கள் பிரதான காலத்திலிருந்து இது ஞாபகார்த்தமாக இவைகள் பிரயோகிக்கப் பட்டன. இந்நாள் மட்டும் (யோசு. 4:9) யோசுவாவின் புத்தகம் எழுதப்பட்ட காலம் வரைக்கும் (யோசு. 4:19) முதலாம் மாதம் 10-ம் தேதி ஏப்ரல் மாதம் ஆகும் (யோசு. 5:2). கல்லினால் கூர்மையாக செய்யப்பட்ட கத்திகள் (யோசு. 5:9): கில்கால் என்றால் நிந்தை புரட்டிப்போடப்பட்டது என்று அர்த்தம் [யோசு. 5:13]. உருவின பட்டயம், ஏனென்றால் கர்த்தரே கானானின் போருக்கு அனுமதி அளித்தார் என்று அறிகிறோம்.

(தொடரும்)



## சாட்சி

நான் ஒரு இந்து குடும்பத்தை சேர்ந்தவன் என்னுடைய பெற்றோர் பெயர் சங்கரவேல் (பவுல்), வடிவு, (ராகேல்) ஊர் தாழைகுளம், திருநெல்வேலி ஜில்லா, தமிழ்நாடு. என் பெயர் ஆனந்தராஜ். நாங்கள் தாராவியில் வசித்து வந்தோம். அப்பொழுது என்னுடைய அப்பாவிற்கு ஒரு பெரிய வியாதி வந்தது. பல தெய்வங்களாலும், வைத்தியர்களாலும் விடுதலை பெற முடியாமல் நாங்கள் குடும்பமாக புதிய எருசலேம் சபையில் சேர்ந்தோம். என்னுடைய அப்பா பூரண குணமானார்.

என் பெற்றோர் ஞானஸ்நானம் பெற்று, கிறிஸ்தவர்களாகி, கர்த்தருக்குள் விசுவாசமாக இருந்தார்கள். ஆனால் நான் என் அப்பாவுக்கு உடல் நலம் குணமானவுடன் பின்மாறி விட்டேன். அநேக ஊழியர், என்னிடம் வந்து சுவிசேஷம் சொன்னார்கள். ஆனால் நான் எதையும் கேட்கவில்லை. என் மனம் போல் திரிந்துகொண்டு, இருந்தேன். பாவங்களும், அக்கிரமங்களும் செய்து கொண்டு, உலகப்பிரகாரமாக அலைந்து கொண்டு இருந்தேன்.

அதே நேரத்தில் என் பெற்றோர்கள் எனக்கு திருமணம் முடித்து வைத்தனர். சிறிது காலம் சென்றபின், என் அப்பா காலமானர். நான் என் மனைவி, குழந்தை களுடன் பம்பாயில் வசித்து வருகிறேன். பீர்பாரில் வேலை பார்த்துக் கொண்டு இருந் தேன். நான் மேனேஜராக இருந்ததால் எனக்கு உலகப்பிரகாரமான மதிப்பும், மரியாதையும் அதிகமாகவே இருந்தது, நல்ல சம்பளம். நல்ல வருமானம். அதனுல் நான் குடித்து கொண்டும், சினிமா பார்த் துக் கொண்டும், பாவங்களைச் செய்து கொண்டும், என் மனம்போன போக்கில் வாழ்ந்து கொண்டு இருந்தேன்.

1997-ம் ஆண்டு கடைசியில் என் தங்கை புனிதாவை பிசாசானவன் பிடித் துக் கொண்டான். மூன்று (3) நாள் மருத் துவமனையில் சேர்த்தேன். எட்டாயிரம் [8000] ரூபாய் செலவு செய்தேன். பிரயோ ஜனம் இல்லை. கடைசியில் புதிய எருச லேம் சபையில் தலைமை ஐயாவிடம் கொண்டு வந்து ஜெபித்தோம். என் தங்கை பிசாசின் பிடியிலிருந்து விடுபட்டாள்; நல்ல பூரண குணத்தைப் பெற்ருள். தற்சமயம் மிகவும் ஆரோக்கியமாக உள்ளாள். கர்த் தருக்கு ஸ்தோத்திரம்.

ஆனாலும் நான் திருந்தவில்லை. மறுபடி யும் நான் என் இஷ்டம் போல் நடந்து கொண்டு இருந்தேன். 1998-ம் ஆண்டு புதுவருடம் ஜனுவரி மாதம் 2-ம் தேதி என் வாழ்க்கையில் திரும்பவும் புயல்வீசியது. எனக்கு திடீரென்று குளிர் சுரம் வந்தது. என் அம்மா என்னை அருகில் உள்ள சிறிய மருத்துவமனைக்கு கூட்டிச் சென்ருர்கள். மருத்துவர் என்னை பரிசித்துபார்த்து விட்டு என் வயிற்றிலே பெரிய கட்டி இருக்கிறது என்று கூறினர். நானும் என் வீட்டாரும் கதறினேம். உடனே என்னை ஸ்பெசலிஸ்ட் மருத்துவமனைக்கு அழைத்து சென்றனர். அங்கே எனக்கு ரத்தம், எக்ஸ்ரே, ஸ்கேன் ஆகிய மூன்று டெஸ்ட்டுகள் எடுக் கப்பட்டன.

அந்த டெஸ்ட்டுகளில் இருந்து எனக்கு கிடைத்த பதில் (பிளட் கேன்சர்) இரத்த புற்று நோய் அதை நம்பாமல் என் வீட்டார் வேறு ஒரு மருத்துவரிடம் அழைத்து சென்றனர். அங்கேயும் அதே பதில் மூன்று மருத்துவரிடம் விசாரித்தோம் எல்லோரிடமும் ஒரே பதில். என் வீட் டார் எல்லாரும் பதறினர்கள்; அழுதார்கள். மருத்துவர் ஆண்டவர் தான் காப்பாற்ற வேண்டும் என்று கூறிவிட்டார்கள். நான மறுபடியும் புதிய எருசலேம் சபையில் கால் எடுத்து வைத்தேன். அங்கே தலைமை அப்போஸ்தலர் ஐயா ஆலோசனைக்கு கீழ்ப் படிந்து, நாங்கள் குடும்பமாக ஆண்டவரி டம் ஒப்புக் கொடுத்தோம். நான் என் பாவங்களை அறிக்கை செய்தேன்.

அதன்பின் டாட்டா கேன்சர் மருத்துவ மனையில் சிகிச்சை பெற சென்றேன். அங்கேயும் மருத்துவர் என் அம்மாவை அழைத்து உன் மகன் 7 மாதம் தான் உயிருடன் இருப்பான், அவனுக்கு வியாதி முற்றிவிட்டது; எந்த சிகிச்சை செய்தாலும் தேறமாட்டான்; வீணே பணத்தை செல வழிக்காதீர்கள் என்று கூறினர். அடிக்கடி புதிய எருசலேம் சபை ஊழியக்காரரிடம் ஜெபித்து வந்தோம். நாங்களும் குடும்ப ஜெபத்தில் அழுது, விண்ணப்பித்தோம் எங்கள் ஜெபத்தை கடவுள் கேட்டார், எங்களுடைய கூக்குரலுக்கு கர்த்தர் செவி கொடுத்தார். தலைமை ஐயா கொடுத்த ஆசீர்வாத வாக்கு பலித்தது.

டாட்டா மருத்துவமனையில் ஒவ்வொரு ஊசிக்கும் 1000 ரூபாய் என்று சொன்னர் கள். ஏழு ஆண்டு ஊசிபோட வேண்டும் என்று சொன்னார்கள்.

கையில் பணம் இல்லாமல் வீட்டில் உள்ள பொருட்களை எல்லாம் விற்றோம். அந்த பணத்தை வைத்து கொண்டு, நாங் கள் மருத்துவமனைக்கு கடந்து சென்றோம்.

# தேவனுடைய அதிசயங்களும் அற்புதங்களும்

என் தகப்பனார் I. சவரியப்பன் (கருங்குளம், வையம்பட்டி [p o] திருச்சி (Dt) திடீரென்று வலது கை, வலது கால் பக்கவாதத்தினால் விளங்காமல் சுய நினைவின்றி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். திருச்சி புதிய எருசலேம் சபை (கிளை) ஊழியர்கள் ஜெபத்தினாலும், தலைமை அப்போஸ்தலர் ஐயா அவர்கள் ஜெபத்தினாலும் என் அப்பாவிற்கு சுய நினைவு வந்து, சுகமடைந்தார்கள். அல்லேலூயா! அப்பா, அம்மா இருவரும் திருமுழுக்குப் பெற்று திருச்சபையின் அங்கமாகி விட்டார்கள்.

Eld. Bro. S. யோவானந்தம்,
N.J.C. திருச்சி (கிளை).

கடந்த புதன் கிழமை 21ம் தேதி இரவு 9 மணிக்கு நான் டாட்டா மருத்துவமனையில் சேர்க்கப்பட்டேன். அங்கே நானும். என் அம்மாவும் இரவு 12 மணி அளவில், மருத் துவமனையில் முழங்கால் போட்டு, ஜெபத் தோடும், கண்ணீரோடும். அழுது ஜெபித் தோம். என்ன ஆச்சரியம்! மறுநாள் காலை என்னை மருத்துவர் வந்து. நான் உனக்கு ஒரு ஊசிபோடுவேன்; நீ அதோடு வீட் டுக்கு போ என்று கூறினர்.

நானும், என் அம்மாவும், ஊசிபோட்டு விட்டு, வீட்டுக்கு கடந்து வந்து விட்டு. மறுநாள் மறுபடியும் மருத்துவமனைக்கு சென்றோம். என் உடம்பில் இரத்தம் எடுத் தார்கள். பரிசோதிப்பதற்கு ஒரு ஊசிபோட்ட பின், உடம்பில் உள்ள நோய் எப்படி உள்ளது என்று பார்ப்பதற்காக நான் இரத்தத்தை கொடுத்துவிட்டு, வீட்டிற்கு கடந்து வந்து விட்டேன். அன்று மாலை 7 மணி அளவில் நாங்கள் குடும்ப ஜெபம் செய்து கொண்டு இருந்தோம். அப்பொழுது டாட்டா மருத்துவமனையில் இருந்து எனக்கு போன் வந்தது. நான் போனை எடுத்து பேசினேன். அப்பொழுது போனில், மறு முனையில் இருந்து, ஒரு தமிழ் ஆள் அங்கே வேலை செய்கிறார்; அவர் கூறினார்; உங்கள்

உடம்பில் உள்ள வியாதி குணமாகிவிட்டது. உங்கள் இரத்தம் மிகவும் மாறுதல் அடைந்து உள்ளது. மருத்துவரே ஆச்சரியப்படுகிறார் என்று என்னிடம் கூறினர்.

நான் இதுவரை இப்படி ஒரு நோயாளியை பார்த்ததே இல்லை. ஒரே ஊசியில் இவ்வளவு மாறுதலா என்று புற்று நோய் நிபுணர் ஆச்சரியப்படும் அளவிற்கு என் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து எனக்கு இவ்வளவு பெரிய அதிசயத்தையும், அற்புதத்தையும் நடத்தினார்; என் கண்ணீரைத் துடைத்தார்; என் ஜெபத்தைக் கேட்டார்; என் கூக்குரலுக்கு செவி கொடுத்தார்; கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

என் வயிற்றில் இருந்த கட்டி மாயமாக மறைந்து விட்டது. 7 ஆண்டு ஊசி போடும்படி கூறிய மருத்துவர் ஆச்சரியப்படுகிறார். இவ்வண்ணமாக இந்த வருடம் முதல் மாதத்திலே கர்த்தர் என்னை தெரிந்து கொண்டார். கர்த்தர் என்னை எடுத்து பிரயோஜனப்படுத்துவாராக. பெரிய வியாதியிலிருந்து எனக்கு விடுதலை கொடுத்தார். அதற்காக நான் கர்த்தருக்கு நன்றி செலுத்துகிறேன். இன்னும் அதிகமாக கர்த்தர் என்னை அவர் வழியில் நடத்துவாராக. அதற்காக சபையில் உள்ளோர் யாவரும் ஜெபிக்குமாறு கேட்டுக் கொண்டு என்னுடைய சாட்சியை இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் முடித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
S. ஆனந்தராஜ்,
புதிய எருசலேம் சபை,
சார்க்கோப் [கிளை], பம்பாய்.

---

# அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வாயாக!

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இவ்வுலகத்தில் வாசம் செய்த நாட்களில் பிசாசு அவரை சோதிக்கும்படியாய் மிகவும் உயர்ந்த மலையின்மேல் கொண்டு போய் உலகத்தின் சகல ராஜ்யங்களையும் அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து நீர் சாஷ்டாங்கமாய் விழுந்து என்னைப் பணிந்து கொண்டால் இவைகளையெல்லாம் உமக்குத் தருவேன் என்று சொன்னான். அப்பொழுது இயேசு: அப்பாலே போ சாத்தானே, உன் தேவனாகிய கர்த்தரைப் பணிந்து கொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வாயாக என்று எழுதியிருக்கிறதே (உபா. 6:13) என்றார் அப்பொழுது பிசாசானவன் அவரை விட்டு விலகிப்போனான் என்று வாசிக்கிறோம் (மத். 4:8–10).

இதிலிருந்து நாம் அறிகிற காரியம் என்னவென்றால் சாத்தான் இவ்வுலகத்தின் ஆசீர்வாதங்களை காண்பித்து மனுக்குலத்தை வஞ்சித்து மெய்தேவனை ஆராதிக்காதபடியும் தனக்கு ஆராதனை செய்யும்படியும் வஞ்சிக்கிறதை பார்க்கிறோம். சாத்தானின் தந்திரங்கள் நமக்கு தெரியாதவைகள் அல்லவே. இவ்வுலகத்தில் பல விதமாக தொழுகைகள் உண்டாயிருக்கின்றன. பலருக்கு ஆராதனைகள் செய்யப்படுகின்றன. மெய் தேவனை ஆராதிக்காமல் சிருஷ்டிகர்த்தாவை தொழுது கொள்ளாமல் சிருஷ்டியை தொழுது கொள்கிறார்கள்.

சூரியன், சந்திரன், கடல், தீ, நீர், புயல், பாம்பு, யானை, மாடு, எலி, மயில், மரித்துப்போன மனிதர்கள், அரசர்கள், பேய்,

தூதர்கள் என்று பலருக்கு ஆராதனை செய்கிறார்கள். அவர்கள் தேவனை அறிந்தும், அவரைத் தேவன் என்று மகிமைப்படுத்தாமலும், ஸ்தோத்தரியாமலுமிருந்து தங்கள் சிந்தனைகளினாலே வீணரானார்கள்; உணர்வில்லாத அவர்களுடைய இருதயம் இருளடைந்து, அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பயித்தியக்காரராகி, அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர்கள், பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள் ஆகிய இவைகளுடைய ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள். தேவனுடைய சத்தியத்தை அவர்கள் பொய்யாக மாற்றி, சிருஷ்டிகரைத் தொழுது சேவியாமல் சிருஷ்டியைத் தொழுது சேவித்தார்கள். அவரே என்றென்றைக்கும் ஸ்தோத்தரிக்கப்பட்டவர் ஆமென்! இதினிமித்தமே உலகத்தில் பாவமும், சாபமும், ரோகமும், அசுத்த வாழ்க்கையும் பெருகி உள்ளது (ரோம. 1:21-32).

இவ்வுலக அறிவை பெற்று இருக்கிற விஞ்ஞானிகளிலும் அநேகர் தேவனை அறிந்திருக்கிற விஷயத்திலே அஞ்ஞானிகளாய், அறியாதவர்களாய் இருக்கிறார்கள். தேவனைப்பற்றி அறிகிறதே மெய் ஞானம். 'ஒன்றான மெய் தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பினவராகிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன்' (யோ. 17:3). அநேகருடைய ஆராதனைகள் வீணாயிருக்கிறது. அதினால் பிரயோஜனம் ஒன்றுமில்லை. மனிதன் தன்னை சிருஷ்டித்த தேவனையே தொழுது கொள்ள வேண்டும். நம்மை உண்டாக்கின கர்த்தருக்கு முன்பாக நாம் பணிந்து, குனிந்து முழங்கால் படியிடக்கடவோம் வாருங்கள் (சங். 95:6). தேவன் யார்? வானத்தையும், பூமியையும் வார்த்தையினால் சிருஷ்டித்த சிருஷ்டி கர்த்தாவே தேவன் [ஆதி. 1:1].

உலகம் சிருஷ்டிக்கப்பட்ட விவரம் பரிசுத்த வேதாகமத்தில் மட்டுமேயல்லாமல், வேறு எந்த மதத்திலும், புத்தகத்திலும் எழுதப்படவில்லை. உலகம் தானாய் உண்டாகி விட்டது என்பதும் மனிதன் குரங்கிலிருந்து வந்தான் என்பதும் நிரூபிக்கப்படாத வெறும் கட்டுக் கதைகளேயாம். மனிதன் குரங்கிலிருந்து வந்தான் என்றால், குரங்கை உண்டாக்கினவர் யார்? அறிவுள்ள மனிதர்களே சிந்தியுங்கள், வானத்தையும், பூமியையும் உண்டாக்காத தெய்வங்கள், பூமியிலும், இந்த வானத்தின் கீழும் இராதபடிக்கு அழிந்து போகும் என்பதை அவர்களுக்குச் சொல்லுங்கள். கர்த்தரோ மெய்யான தெய்வம். அவர் ஜீவனுள்ள தேவன், நித்திய ராஜா, அவரே பூமியை தம்முடைய வல்லமையினால் உண்டாக்கி, பூச்சக்கரத்தை தம்முடைய ஞானத்தினால் படைத்து, வானத்தை தம்முடைய அறிவினால் பிரித்தார் (எரே. 10:10-12).

தேவன் ஒருவரே! அவருக்கு மட்டுமே ஆராதனை ஏறெடுக்கப்பட வேண்டும். பத்து கற்பனைகளிலே முதற் கற்பனையாக தேவன் இதைப்பற்றியே சொன்னார். 'என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம். மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும், யாதொரு விககிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம், நீ அவைகளை நமஸ்கரிக்கவும், சேவிக்கவும் வேண்டாம் [யாத். 20:3-5].

தேவன் மனிதனை சிருஷ்டித்திருக்கும்போது, மனிதன் தேவனை சிருஷ்டிக்கலாமா? சிருஷ்டிக்க முடியுமா? மனிதனால் உண்டாக்கப்பட்டது தேவனாக முடியுமா? அறிவுள்ள மனிதர்களே! சிந்தியுங்கள்.

'மனுஷன் தனக்குத் தேவர்களை உண்டு பண்ணலாமா? அவைகள் தேவர்கள் அல்லவே' (எரே. 16:20).

'நம்முடைய தேவன் பரலோகத்தில் இருக்கிறார். அவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளியும், பொன்னும், மனுஷனுடைய கை வேலையுமாயிருக்கிறது. அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது, அவைகளுக்கு கண்களிருந்தும் காணாது, அவைகளுக்கு காதுகளிருந்தும் கேளாது, அவைகளுக்கு மூக்கிருந்தும் முகராது, அவைகளுக்கு கைகளிலிருந்தும் தொடாது, அவைகளுக்கு கால்களிலிருந்தும் நடவாது; தங்கள் தொண்டையால் சத்தமிடவும் மாட்டாது; அவைகளை பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிறவர்கள் யாவரும் அவைகளைப் போலவே இருக்கிறார்கள்' (சங். 115:3-8; 135:15-18).

'மனுஷர் அனைவரும் அறிவில்லாமல் மிருக குணமானார்கள்; தட்டார் அனைவரும் சுருபங்களாலே வெட்கிப் போகிறார்கள். அவர்கள் வார்ப்பித்த விக்கிரகம் பால் குடிக்கிறது என்று சொல்லி இந்தியா தேசம் முழுவதும் பாலை வாங்கி ஊற்றி, கீழே வழிந்து ஓட எல்லோரும் ஏமார்ந்து வெட்கப்பட்டுப் போனார்கள். அவைகளில் சுவாசம் இல்லை, ஜீவன் இல்லை; உயிருள்ள மனிதன் உயிரில்லாத விக்கிரகத்தை வணங்கலாமா? கூடாதே. 'தங்கள் விக்கிரகமாகிய மரத்தைச் சுமந்து, இரட்சிக்கமாட்டாத தேவனைத் தொழுது கொள்ளுகிறவர்கள் அறிவில்லாதவர்கள்' (ஏசா. 45:20).

விக்கிரகாராதனைக்காரர்கள் மோட்சராஜ்யத்தை சுதந்தரிப்பதில்லை [1 கொரி.6:9,10]. அவர்கள் அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே (நரகம்) பங்கடைவார்கள் (வெளி. 21:8). 'ஜனங்களின் வழிபாடுகள் வீணாயிருக்கிறது காட்டில் ஒரு மரத்தை வெட்டுகிறார்கள். அது தச்சன் கையாடுகிற வாச்சியால் பணிப்படும் வெள்ளியினாலும், பொன்னினாலும் அதை அலங்கரித்து, அதை அசையாதபடிக்கு அதை ஆணிகளாலும், சுத்திகளாலும் உறுதியாக்குகிறார்கள். அவைகள் பனையைப்போல நெட்டையாய் நிற்கிறது. அவைகள் பேச மாட்டாதவைகள், அவைகள் நடக்க மாட்டாததினால் சுமக்கப்பட வேண்டும். அவைகளுக்குப் பயப்பட வேண்டாம். அவைகள் தீமை செய்யக்கூடாது. நன்மை செய்யவும், அவைகளுக்குச் சக்தி இல்லையென்று கர்த்தர் செலுத்துகிறார் (எரே. 10:3-5).

பிரியமானவர்களே! விக்கிரக ஆராதனை மெய்தேவனுக்கு விரோதமான மிகப்பெரிய பாவமாயிருக்கிறது. ''விக்கிரகங்களுக்கு விலகி ஓடுங்கள்'' (1 கொரி 10:14; 1 யோ. 5:21). கிறிஸ்தவர்கள் என்று பெயர் பெற்றிருக்கிறவர்களும் விக்கிரகங்களை உண்டாக்கி விழா கொண்டாடுகிறார்கள். இயேசுவைப் போன்றும் இன்னும் மரியாள், யோசேப்பு, சின்னப்பர், ராயப்பர், அந்தோனியார் என்று மரித்துப்போன பல பரிசுத்தவான்களுக்கும் சிலை செய்து வணங்குகிறார்கள். மரியாள் தெய்வம் அல்ல; மரித்துப் போனவர்களுக்கு ஆராதனை செய்வதும் பாவமாகும் தேவன் ஆவியாயிருக்கிறார், அவரைத் தொழுது கொள்ளுகிறவர்கள் ஆவியோடும், உண்மையோடும் தொழுது கொள்ள வேண்டும் (யோ. 4:24). ஆகையால் தேவனை உருவகப்படுத்தி சிலையோ, படமோ வைத்து வழிபடுவது பாவமாகும்.

சிலர் தேவ தூதர்களை ஆராதித்து வஞ்சிக்கப்படுகிறார்கள் (கொலோ. 2:19). சாத்தான் விழுந்துபோன தேவ தூதனாயிருக்கிறான். அவன் பெருமையினால் தேவனுக்கு ஒப்பாவேன் என்று எண்ணினபடியால் வானத்திலிருந்து தள்ளப்பட்டான் (ஏசா.

„தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd No. 040088/84
Postal Regd. No. MH BY NE-84/95
Tamil Monthly Magazine

14:12-15). தேவ தூதர்கள் பணிவிடை ஆவிகளாயிருக்கிறார்கள் [எபி. 1:14]. தேவ மனிதர்களுக்கு உதவி செய்ய (1 இராஜா. 19:5), பாதுகாக்க [தானி. 3:28: 6:22], செய்தி அறிவிக்க [லூக். 1:19,11], விடுவிக்க (அப். 12:11) தேவனால் அனுப்பப்படுகிறார்கள். தேவதூதர்களையும் நியாயந் தீர்ப்போமென்றறியீர்களா? (1 கொரி. 6:3). ஆகையால் தேவ தூதர்களை ஆராதிக்கக் கூடாது. தேவனையே ஆராதிக்க வேண்டும் என்று தேவன் கூறினார் [வெளி. 22:6,8,9].

இன்னும் சிலர் தேவன் இல்லை என்று சொல்லித் திரிகிறார்கள். 'தேவன் இல்லை என்று மதிகெட்டவன் தன் இருதயத்தில் சொல்லிக் கொள்ளுகிறான். அவர்கள் தங்களைக் கெடுத்து, அருவருப்பான கிரியைகளை செய்து வருகிறார்கள். நன்மை செய்கிறவன் ஒருவனும் இல்லை' சங். 14:1. 'துன்மார்க்கன் தன் உள்ளம் இச்சித்ததைப் பெற்றதினால் பெருமை பாராட்டி, பொருளை அபகரித்துத் தன்னைத்தான் போற்றி கர்த்தரை அசட்டைப் பண்ணுகிறான். துன்மார்க்கன் தன் கர்வத்தினால் தேவனைத் தேடான்; அவன் நினைவுகளெல்லாம் தேவன் இல்லையென்பதே (சங். 10:3,4) தான் விரும்பினதை பெற்றபடியினால் மனிதன் தேவனாக முடியுமா? முடியவே முடியாது. தேவன் ஒருவரே! அவர் வானத்தையும் பூமியையும் சகலத்தையும் மனிதனையும் சிருஷ்டித்தவர். அவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே! அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வோமாக!

"எல்லோருக்கும் கர்த்தராயிருக்கிற இயேசு கிறிஸ்து..." [அப் 10:36].

அறிவிப்புகள்

முழு இரவு விழிப்பு ஜெபம்

11 [புதன்] பிப்ரவரி 1998
13 [வெள்ளி] மார்ச் 1998
13 [திங்கள்] ஏப்ரல் 1998

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
ஆண்டு சந்தா Rs. 30-00
வெளிநாடு Rs. 400-00

அனுப்ப வேண்டிய முகவரி :
CHIEF APOSTLE N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR
DARGA CROSS ROAD, BHANDUP,
BOMBAY-400 078, INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. "புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிக்கையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited and Published by: Chief Apostle N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும். சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

*"நீங்கள் உங்களுக்கு விக்கிரகங்களையும், சுருபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்கு சிலையை நிறுத்தாமலும், சித்திரந்தீர்த்த கல்லை நமஸ்கரிக்கும்படிக்கு உங்கள் தேசத்தில் வைக்காமலும் இருப்பீர்களாக; நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்"*

இந்நாளில் தேசா தேசங்களின் சாபம் சிலை வணக்கமே. ஏற்கனவே தேசம் சிலைகளால் நிரம்பிக் கொண்டிருக்கிறது. தடுக்கி விழுந்தால் சிலையின் மேல் தான் விழ வேண்டும். சிலையை நிறுத்தி, பின் அதற்கு போலீஸ் காவல் போடுகிறார்கள். சில இடங்களில் கைதிகளைப் போல் கிராதியமைத்து காவல் போடுகிறார்கள். அவைகள் தப்பிப் போகாதபடிக்கா அல்லது அவைகளை யாரும் கடத்திக் கொண்டு போகாதபடிக்கா சாமிக்கும் காவல். இப்போ ஒரு கட்சி தங்கள் ஆளுகைக்கு வந்தால் சிலை ஸ்தாபிப்போம் என்கிறார்கள். அவர்கள் தேவனை அறிந்தும், அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பயித்தியக்காரராகி, அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர்கள், பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள் ஆகிய இவைகளுடைய ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள். இதினிமித்தம் பாவம், அசுத்தம், அக்கிரமம் பெருகிற்று என்று ரோம. 1:21-32 இல் சத்திய வேதம் நன்றாய்ச் சொல்லுகிறது.

*'ஆகாமியத்தின் கொடுங்கோல் நீதிமான்களுடைய சுதந்திரத்தின் மேல் நிலைத்திராது' (சங். 125:3). ஒரு அரசாட்சி என்றால் ராஜ்ய பரிபாலனம் செய்கிறவர்களுடைய கடமை (3) மூன்று.*

1. தன்னுடைய தேசத்தின் ஜனங்களுக்கு நீதி நியாயங்களைச் செய்தல்.
2. தேசத்தில் பஞ்சம் ஏற்பட்டால் எங்கேயிருந்தாவது கொண்டு வந்து தன்னுடைய தேச மக்களுக்கு ஆகாரம், தானிய தவசங்கள் சப்ளை செய்தல். பிரிட்டிஷார் காலத்தில் தேசத்தில் பஞ்சமுண்டாயிற்று; பர்மாவிலிருந்தும், பல தேசங்களிலுமிருந்தும் அரிசி, கோதுமை, மக்காச் சோளம் என்று வருவித்து சப்ளை செய்தார்கள்.
3. சத்துரு படையெடுத்து வந்தால் எதிர்த்துப் போய் யுத்தம் செய்து, அவனை முறியடித்து, குடிமக்களைப் பாதுகாப்பது.

இந்த மூன்று காரியங்களில் கவனமாயிருக்கிற அரசு நிலைக்கும். ஒரு மதத்தாருக்கு சார்பாக இருப்போம், சொந்த ஜாதியைப் பார்ப்போம், அடக்குமுறை செய்வோம் என்கிற கொடுங்கோலாசனம் நிலைக்காது; நீடிக்காது என்று வேதம் சொல்லுகிறது. இப்பொழுதே நீதிமான்கள் நெருக்கப்படுகிறார்கள்; ஏழை எளியவர்கள் கூப்பாடு எடுபடுவதில்லை. துஷ்டர்கள் ஆட்சிக்கு வராதபடி தேவ பலத்தால் எதிர்ப்போம், ஜெபிப்போம். தேசத்தில் நல்லாட்சி மலரட்டும்.

CHIEF APOSTLE N. LAZAR

(தொடர்ச்சி)

# திருச்சபை

பிதாவினிடத்திலிருந்து அதிகாரத்தை கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பெற்றுக் கொண்டார். இவர் தான் பெற்றுக் கொண்ட அதிகாரத்தை ஜெயங்கொள்ளும் பரிசுத்த வானுக்குக் கொடுக்கிறார். 'ஜெயங்கொள்ளுகிறவன் எல்லாவற்றையும் சுதந்தரித்துக் கொள்ளுவான்; நான் அவன் தேவனாயிருப்பேன், அவன் என் குமாரனாயிருப்பான்' (வெளி. 21:7) என்றும், கர்த்தர் கூறுகிறார். 'பந்தய சாலையில் ஓடுகிறவர்களெல்லாரும் ஓடுவார்கள். ஆகிலும் ஒருவனே பந்தயத்தை பெறுவானென்று அறியீர்களா? (1 கொரி. 9:24) என்று அப்போஸ்தலன் கூறியதும் இதைக் குறித்தே நீங்களும் பெற்றுக் கொள்ளத்தக்கதாக ஓடுங்கள்.

வலுசர்ப்பமானது தன் பலத்தையும் சிங்காசனத்தையும், மிகுந்த அதிகாரத்தையும் சமுத்திரத்திலிருந்து எழும்பி வரும் மிருகத்திற்கு [தன் வித்திற்கு] கொடுப்பது போல, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் தம்முடைய அதிகாரத்தையும், சிங்காசனத்தையும் ஜெயங்கொள்ளும் பரிசுத்தவானுக்கு (ஸ்திரீயின் வித்துக்கு) கொடுக்கிறார்.

இந்த அதிகாரத்தைப் பெற்றுக் கொள்வதற்கு ஜெயங்கொள்ளும் பரிசுத்தவான் தேவனுடைய சிங்காசனத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டியது அவசியமாயிருக்கிறது. இதற்கு முன்னடையாளமாகவே அப். பவுலும் பரதீசுக்குள் எடுத்துக் கொள்ளப்பட்ட நிகழ்ச்சியும் காணப்படுகிறது. 'அவன் சரீரத்திலிருந்தானோ, சரீரத்திற்கு புறம்பே இருந்தானோ அதை அறியேன், தேவன் அறிவார்' (2 கொரி. 12:3,4) என்றும் அப்போஸ்தலன் கூறுவதிலிருந்தும் இது ஒரு வித்தியாசமான அனுபவமாகக் காணப்படுகிறது என்று அறிந்து கொள்ளலாம். இவையாவும் இனி சம்பவிக்க வேண்டியவைகளாக இருக்கின்றன.

இவ்விதமாக புறஜாதியாருக்கு அப்போஸ்தலனாக ஏற்படுத்தப்பட்ட பவுல் விசேஷித்த அனுபவங்களைப் பெற்றுக் கொண்டது போல ஒருவர் தேவனுடையசிங்காசனத்தினிடத்திற்கும் எடுத்துக் கொள்ளப்பட்டு அதிகாரப்படுத்தப்படுகிறார். இதன் மூலம் அப்போஸ்தலனாகிய பவுலுடைய ஊழியம் வல்லமையால் நடந்தேறியது போல, இந்தக் கடைசிக்கால ஊழியம் வல்லமையாய் நடந்தேறும். அல்லேலூயா!

இவ்விதமாக ஸ்திரீயாகிய சபையிலிருந்து புருஷனாகிய ஆண்பிள்ளை தோன்றுமென்றும் கண்டு கொண்டேன். இதற்காக நான் கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறேன்.

எனவே, பிரியமானவர்களே! இந்த சாட்சிகள் மூலமாக கர்த்தர் ஒரு பரிசுத்தவானைக் கொண்டே இந்த ஊழியத்தை நிறைவேற்றி முடிக்கிறார் என்றறிந்து உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாமல் அவரோடு இணைந்து இந்த ஊழியத்தைச் செய்யுங்கள். இதற்காகவே உலகமெங்கும் கர்த்தருடைய நாமத்தில் ஊழியம் செய்யும் உங்களுக்குக் கர்த்தர் இந்தக் காரியங்களை வெளிப்படுத்திக் கொடுக்கிறார். 'என் ஆடுகள் என் சத்தத்திற்கு செவி கொடுக்கும்' என்ற வார்த்தையின்படி அவருடைய சத்தத்திற்கு செவி கொடுங்கள்.

'நான் நீதியின்படி அவனை எழுப்பினேன்; அவன் வழிகளையெல்லாம் செவ்வைப்படுத்துவேன்; அவன் என் நகரத்தைக் கட்டி, சிறைப்பட்டுப்போன என்னுடையவர்களை கிரயமில்லாமலும், பரிதானமில்லாமலும் விடுதலையாக்குவான் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்' (ஏசா. 45:13).

எனவே, தேவனுடைய பரிசுத்த நகரமாகிய புதிய எருசலேமைக் கட்டி

ஜெயங்கொள்ளும் பரிசுத்தவான்களுடைய கூட்டத்தை ஆயத்தப்படுத்தி, மரணம் சிறைப்பிடித்த மனுக்குலத்திற்கு விடுதலை அறிவிக்கத்தக்கதாக எக்காளத்தைப்போல சத்தமிட்டு, மீண்டும் அநேக ஜாதி ஜனங்களுக்கு சுத்த சுவிசேஷத்தை அறிவிக்க "நான் என் நீதியின்படி அவனை எழுப்பினேன் என்று கர்த்தர் கூறுகிறார். ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன்.

இதுவரையிலும் நீங்கள் வாசித்தவைகள் மூலமாக வெளிப்படுத்தின விசேஷமாகிய இந்த புத்தகமானது, உலகமெங்கும் சிதறியிருக்கிற தேவனுடைய ஊழியக்காரருக்கு என்று எழுதப்பட்டிருக்கிறதென்றும், இந்த கடைசிக் காலத்திலும் பல்வேறு போதனைகளால் சிதறுண்டு சிறு சிறு கூட்டங்களாகக் காணப்படும்.

சபையானது ஒரே உபதேசத்தின் கீழ் கூட்டிச் சேர்க்கப்படத்தக்கதாக ஒரு பரிசுத்தவானைக் கர்த்தர் எழுப்பி மீண்டும் தம்முடைய சபையை சீர்படுத்துவாரென்றும், இவ்விதமாக விழுந்துபோன தாவீதின் கூடாரம் அதனுடைய ஸ்தானத்தில் எடுப்பித்துக் கட்டப்படுமென்றும் கண்டீர்கள்; தொடர்ந்து எந்தெந்தக் காரியங்களில் சபை விழுந்து காணப்படும் என்று ஏழு சபைக்குரிய செய்திகள் மூலம் அறியமுடிகிறதென்றும் கவனியுங்கள்.

3. பரிசுத்த ஆராதனைக்குரிய செய்திக்காக ஒரு நாள் தேவ சமுகத்தில் காத்திருந்த போது, 'நோவாவின் காலத்தில் எப்படி நடந்ததோ, அப்படியே மனுஷகுமாரன் வரும் காலத்திலும் நடக்கும் (மத். 24:37) என்ற வசனத்தின் மூலமாகக் கர்த்தர் என்னோடு கூடே இடைப்பட்டார்.

இப்படி கர்த்தர் உணர்த்திய இந்த வசனத்தின் மூலமாக, கர்த்தருடைய வருகையை எதிர் நோக்கியிருக்கிறவர்கள் அவருடைய வருகையின் நாட்களை நிதானித்து அறிந்து கொள்ள வேண்டுமானால், நோவாவின் நாட்களில் நடந்த சம்பவங்கள் ஒவ்வொன்றையும் கூர்ந்து கவனிக்க வேண்டுமென்று உணர்ந்து கொண்டேன்.

நோவாவின் காலத்தில் நடந்த சம்பவங்கள் யாவும் கர்த்தருடைய வருகைக்கு நிழலாட்டமாக நடந்த சம்பவங்களாகவே இருக்கின்றன. ஆகவே, நோவாவின் காலத்தில் சம்பவங்கள் எவ்விதமாக நடந்து முடிந்தன என்று வேதத்தைக் கொண்டு ஆராய்ந்தறிய முற்பட்டேன். ஆவியானவரும் எனக்கு ஒத்தாசை செய்தார், அதன்படி நோவாவின் காலத்தில் 'மனுஷருடைய அக்கிரமம் பூமியிலே பெருகினது என்றும், அவன் இருதயத்து நினைவுகளின் தோற்றமெல்லாம் நித்தமும் பொல்லாததே என்றும் கர்த்தர் கண்டு தாம் பூமியிலே மனுஷனை உண்டாக்கினதற்காக கர்த்தர் மனஸ்தாபப்பட்டார். அது அவர் இருதயத்திற்கு விசனமாயிருந்தது. அப்பொழுது கர்த்தர் நான் சிருஷ்டித்த மனுஷனை பூமியின் மேல் வைக்காமல், மனுஷன் முதற்கொண்டு மிருகங்கள், ஊரும் பிராணிகள், ஆகாயப் பறவைகள் பரியந்தம் உண்டாயிருக்கிறவைகளை நிக்கிரகம் பண்ணுவேன். நான் அவர்களை உண்டாக்கினது எனக்கு மனஸ்தாபமாயிருக்கிறது' (ஆதி. 6:5,7) என்று கர்த்தர் சொன்னதாக வேதத்தில் எழுதியிருக்கக் கண்டேன்.

(தொடரும்)



# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம்

(தொடர்ச்சி)

இந்த அனுகூலமான ஒப்பந்தங்களுக்கு இணங்கினது ஒரளவாய் இராயனுக்கும் பாப்புவுக்கும் இருந்த விரோதத்தால் விளைந்த பலன். மேற்சொன்ன ஒப்பந்தங்களுக்குப் பிரதிபலனாக ரோமாபுரியோடு நடந்த சண்டையில் கர்மானியர் இராயனுடைய சேனைக்கு அதிக உதவி புரிந்தார்கள். அதிக விருத்தாப்பியரான தளகர்த்தர் கேயோர்க் வொன்புருன்புர்க் சேனையோடு சேர்ந்தார். ஆனால் கூலிக்காகச் சண்டை செய்த அவருடைய போர்வீரர்கள் கலகம் செய்த போது, அவர் பாரிசவாயுவால் கஷ்டப்பட்டு மரணமடைந்தார் என்ற போதிலும், சேனை ரோமாபுரிக்கு விரோதமாகச் சென்று, அதைத் தாக்கிச் சண்டை செய்து 1527-ம் வருஷம் மே மாதம் 6-ம் தேதி பட்டணத்தைப் பிடித்துக் கொண்டது.

போர்வீரர் ஆலயங்களையும், சந்நியாச மடங்களையும் நாசமாக்கிக் கொள்ளையிட்டு ஜனங்களை இம்சித்து, கார்டினல்கள், குருமாருடைய உடுப்புக்களையும் தரித்து, மாறுவேடம் பூண்டு, விளையாடிக் கழுதைகள் மேலேறித் தெருக்கள் தோறும் உலாவி, 'லூத்தர் பாப்புவாக்கப்படுவார்' என்று ஆர்ப்பரித்து ஜெய கோஷம் செய்தார்கள்.

கடைசியாக ஏரோதும், பிலாத்தும் கூடிக்குலாவி, இராயன் லூத்தர் மார்க்கத்தைத் தன் இராஜ்யத்திலிருந்து வேரோடு பிடுங்குவதாக வாக்களித்ததால் இருவருக்கும் சமாதானம் உண்டாயிற்று. ஒட்டொ வொன்பாக் என்பவனால் கள்ளக் கையெழுத்திடப்பட்ட சில இராஜ்யசாதனங்கள், எஸ்ஸே நாட்டதிபதியாகிய பிலிப்பு பிரபுவுக்கு நாலாயிரம் கில்டர்களுக்கு விற்கப்பட்டதினால், பாப்புமார்க்கத்தாருக்கும் சுவிசேஷ அனுசாரிகளுக்கும் ஏற்கனவே இருந்த பகை இப்போது அதிகரித்தது.

இந்தக் கள்ளச் சாதனங்கள், சுவிசேஷ அனுசாரிகளுடைய இராஜ்யங்களைப் பாப்புமார்க்கப் பிரபுக்கள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்ளும்படி சதியாலோசனை செய்ததாக உறுதியாய்க் கூறின. யாதொரு தாமதமுமின்றி யுத்தத்திற்கு வேண்டிய எல்லா ஆயத்தங்களும் ஆரம்பிக்கப் பெற்றன. கர்மானியா முழுதும் உள்நாட்டு யுத்தம் பயங்கரமாய் எழும்பும் போலிருந்தது. இந்த வஞ்சகன் செய்த சூதை லூத்தரும் நம்பி மோசம் போனபோதிலும், பயங்கரமான யுத்தம் நடவாதபடி தடுக்க மற்றெவரையும் பார்க்கிலும் அதிக முயற்சி எடுத்துக் கொண்டார். தற்காப்பு நியாயமானதே.

ஆனால் சுவிசேஷப் பிரபுக்கள் செய்ய உத்தேசித்த விஷயங்கள் தெளிவாய்த் தற்காப்பு அல்லவென்று எடுத்துக் காட்டினார். சத்துருக்கள் அவர்களைத் தாக்கும் வரையில் அவர்கள் பொறுத்திருக்க வேண்டுமென்றும், கள்ளச் சாதனங்களைப் பற்றிய விஷயங்களைப் பகிரங்கமாய்ப் பிரசித்தம் பண்ண வேண்டுமென்றும், சதிக்காரர்களை விசாரணைக்கு அழைக்க வேண்டுமென்றும் ஆலோசனை சொன்னார். இதன் முடிவு என்னவென்றால் யோவான் நியமகப்பிரபு சத்துருக்களை எதிர்த்துத் தாக்காதபடி அவருக்குப் புத்தி சொல்லி வசப்படுத்த வேண்டியதாயிருந்தது. மேலும் அதிபதியாகிய பிலிப்பு இப்போது தனிமையாய் விடப்பட்டபடியால் லூத்தருடைய ஆலோசனைப்படி நடப்பது மிக யுக்தம் என்று எண்ணினார்.

கள்ளச் சாதனங்கள் பிரசுரமானபோது அவைகள் கள்ளக் கையெழுத்து இடப் பட்டவைகளென்று நன்றாய் உடனே தெரிய வந்தது. விசனகரமான இக்கிளைக் கதை பாப்பு மார்க்கத்தாருக்கும் சுவிசேஷ அநுசாரிகளுக்கும் இருந்த பகையை அதிகரித்தது. இதினால் இராயன், லுத்தரையும் அவரைச் சார்ந்தவர்களையும் இராஜ்ய சாபத்திற்குட்படுத்திய வோர்ம்ஸ் நகர ஆக்கினை பிரமாணங்களை நிறைவேற்றத் தீர்மானஞ் செய்தான்.

அதி. 28. புரோட்டஸ்தாந்தர் - அதாவது எதிர்மறுக்கிறவர்கள்:-

ஸ்பயர் நகரத்தில் 1529-ம் வருஷம் ஆரம்பத்தில் கூடிவந்த இராஜ்ய சங்கத்தில் பெரும்பான்மையோர் பாப்பு மார்க்கத்தார்கள். அவர்கள் தங்கள் வல்லமையை உபயோகப்படுத்தினார்கள். அவர்கள் செய்த தீர்மானம் என்னவென்றால் 'வோர்ம்ஸ் சங்கத்தின் ஆக்கினை பாத்திரங்களுக்குச் சம்மதித்த இராஜ்யங்கள் அவைகளைத் தொடர்ந் தேற்றியாய் நிறைவேற்ற வேண்டும். அவைகளை நிறைவேற்ற மாட்டோமென்று எதிர்த்த மற்றவர்கள் வேறு நூதன ஏற்பாடுகளை உண்டுபண்ணக் கூடாது' என்பதே. இத்தீர்மானத்தின்படி பாப்புவின் அதிகாரத்தையும், பாப்பு மார்க்க வணக்கத்தையும் விட்டு ஒளித்திருந்தவர்கள் மறுபடியும் அவைகளுக்கு உட்பட நேரிட்டது. மேலே சொன்ன தீர்மானம் அங்கீகரிக்கப்பட்டதென்று பெர்டினண்ட் அரசன் இராயனுடைய நாமத்தில் அறிவித்தபோது சிறு தொகையோர் வெளியே போய்ச் சற்று ஆலோசித்து மறுபடியும் உள்ளே வந்து, இந்த அடாத நடபடிக்கைக்குத் தாங்கள் சம்மதிக்கமாட்டோம் என்று எதிர்த்தார்கள்.

ஆனால் பெர்டினண்ட் அரசன் அவர்களுக்குச் செவிகொடுக்க மனமற்றவனாய் இருந்தான். ஆகையால் அவர்கள் ஏப்ரல் மாதம் 19-ம் தேதி தேச சட்டப்பிரகாரம் மறுபடியும் எதிர் மறுத்தார்கள். இந்தச் சாதனத்தில் அவர்கள், 'தேவகனம் ஆத்துமாக்களின் இரட்சிப்பாகிய இவ்விஷயங்களில் ஒவ்வொருவனும் தனித்து நின்று தேவனுக்கு முன்பாக உத்தரவாதம் சொல்ல வேண்டும்' என்று அறிவித்தார்கள். இதினிமித்தம் அவர்கள் புரோட்டஸ்தாந்தர் அதாவது எதிர்மறுக்கிறவர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

இங்கே ஸ்பயர் நகரத்தில் சக்சோனிய எஸ்ஸே நாடுகளும், நியூரம்பர்க், உல்ம், ஸ்த்ராஸ்புர்க் பட்டணங்களும் ஒன்றுகூடி இரகசியமாய் ஒரு தற்காவல் உடன்படிக்கை செய்து அவர்கள் செய்ய வேண்டிய ஆயத்த ஏற்பாடுகளைப்பற்றித் தீர ஆலோசிப்பதற்கு ஜூன் மாதம் ரோட்டாக் என்னும் இடத்தில் கூடிவர வேண்டும் என்று ஒப்பந்தம் செய்தார்கள்.

(தொடரும்)

## ஞானஸ்நானம்

24-2-98 அன்று தலைமை சபை [பம்பாய்] யில் 7 பேர் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# யார், யாருக்கு, அடங்கியிருக்க வேண்டும்

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே! இன்றைக்கு எல்லா மனிதர்களுக்குமே என்ன எண்ணம்தெரியுமா? நாம் நல்லவனாக இருக்க வேண்டும்; யாருக்கும் அடங்கி இருக்கக் கூடாது. நாம் பெரியவர்களாயிருக்க வேண்டும்என்ற எண்ணம் அநேகருக்கு உண்டாகி இருக்கிறதை நாம் சில வேளைகளில் காண முடிகிறது (மத். 18:1-4; மாற். 9:33-37; லூக். 9:46-48; 14:7-11). வேதம் என்ன சொல்லுகிறது தெரியுமா? நியாயப்பிரமாணம் நீதிமானுக்கு விதிக்கப்படாமல் அக்கிரமக்காரருக்கும், அடங்காதவர்களுக்கும் விரோதமாக விதிக்கப்பட்டு இருக்கிறது (1 தீமோ. 1:9-11) என்று சொல்லுகிறது. ஆகையால் வேதத்தின் பிரகாரமாக நாம் யார், யாருக்கு அடங்கியிருக்க வேண்டும் என்பதை வேதத்தின் வெளிச்சத்தில் பார்ப்போமாக.

1. தேவனுக்கு அடங்கியிருக்க வேண்டும் (1 பேது. 5:6):-

ஆகையால் ஏற்ற காலத்தில் தேவன் உங்களை உயர்த்தும்படிக்கு, அவருடைய பலத்த கைக்குள் அடங்கியிருங்கள் [1 பேது. 5:6] என்று வேதம் சொல்லுகிறது. அநேகருக்கு உயர்வடைய வேண்டும், தேவ கிருபை மற்றும் தேவனுடைய வரங்கள், அதிகாரங்கள், எல்லாவற்றையும் பெற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆசை உண்டு. ஆனால், தேவனுக்கு அடங்கியிருக்கிற ஒரு தேவனுடைய பிள்ளை ஏற்ற காலத்திலே கண்டிப்பாக உயர்த்தப்படுவார்கள் (1 பேது. 5:6)

தேவனுக்கு அடங்கியிருத்தல் என்றால் என்ன? தேவனுடைய வார்த்தைக்கு அப்படியே கீழ்ப்படிவது மாறுத்தரம் சொல்லாமல் அப்படியல்ல ஆண்டவரே என்று சொல்லாதபடிக்கு (அப். 10:9-23; ஆதி. 19: 12-21). கர்த்தாவே சொல்லும் அடியேன் கேட்கிறேன் [1 சாமு. 3:3-10] என்று சொல்லி, அவர் சொல்லுகிறபடி செய்வதே தேவனுக்கு அடங்கியிருப்பது ஆகும்.

சில வேளைகளில் தேவன் இன்ன இடத்திற்கு போகாதே என்பார். அப்படியானால் தேவனுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்து கண்டிப்பாக போகக் கூடாது. பிலேயாமிடத்தில் தேவன் போகாதே என்றார். அவனுக்கு போக விரும்பம் (எண். 22:1-32) தேவனுடைய வார்த்தைக்கு அடங்கியிருக்க அவனுக்கு விருப்பமில்லை. ஆகையால் தேவனே பிலேயாமுக்கு எதிராளியாக வந்து நின்றார். யார் தேவனுக்கு அடங்கியிருக்கவில்லையோ அவர்களுக்கு தேவனே எதிராளி. ஆகையால் நாம் தேவனுக்கு அடங்கி இருக்க வேண்டும்.

ஒரு நாள் நான் ஆலயத்தில் ஜெபித்து விட்டு, ஒரு பேர் கிறிஸ்தவனுடைய வீட்டில் ஜெபிக்கும்படியாக சென்றுகொண்டு இருந்தேன். வழியில் கர்த்தருடைய ஆவியானவர் அங்கு போக வேண்டாம் என்பதற்கு அடையாளமாக நெருக்கி ஏவினார். உடனே வழியை மாற்றிக் கொண்டு திரும்பி வந்துவிட்டேன். ஆகையால் ஊழியங்களில் தேவ ஆவியானவருடைய நடத்துதல்படி நடந்து கொள்ள வேண்டும். நம்முடைய சுய விருப்பத்தின் பிரகாரமாக ஊழியம் செய்யக் கூடாது. கர்த்தருடைய ஆவியானவரின் விருப்பத்தின்படி அவருக்கு அடங்கி ஊழியம் செய்ய வேண்டும் (ரோம. 8:14,5,4).

கர்த்தருடைய ஆவியானவர், துன்மார்க்கரிடத்தில் ஆலோசனை கேட்காதே, கேட்டு அதன்படி நடவாதே என்றால் அப்படி செய்ய வேண்டும்; பாவிகளுடைய வழியில் நில்லாதே என்றால் அதன்படியே

செய்ய வேண்டும். பரியாசக்காரர் உட்காருமிடத்தில் உட்காராதே என்றால், அதன்படி செய்யவேண்டும். சபையைவிட்டு, பின் மாறினவர்களை சந்தித்து பேசாதே என்றால் பேசக்கூடாது. நாம் கர்த்தருக்கு அடங்கி நடக்க வேண்டும்; அவர் சொல்லுகிறபடியே செய்ய வேண்டும் (சங். 1:1-3; யோவா. 2:5; 1 கொரி. 5:9-13; 1 பேது. 5:6). ஆகையால் நாம் கர்த்தருடைய பலத்தகரத்திற்குள் அடங்கியிருந்து ஏற்ற காலத்தில் தேவனாலே உயர்த்தப்படுவோமாக! (1 பேது. 5:6).

2. சபையின் தலைவருக்கு (தலைமைக்கு) அடங்கி நடக்க வேண்டும் (எபே. 5: 23,24) :-

கர்த்தரால் அனுப்பட்டு இருக்கிற மோசேக்கு கண்டிப்பாக நாம் அடங்கி நடக்க வேண்டும். அவரை, ஜனங்களை மீட்கும்படியாக கர்த்தரல்லவா அனுப்பியிருக்கிறார் [யாத். 3:10; நியா. 6:6-16]. அதை விட்டு விட்டு ஆரோனையும், மிரியாமையும் போல, கர்த்தர் மோசேயைக் கொண்டு மாத்திரம் பேசினாரோ எங்களைக் கொண்டும் அவர் பேசினதில்லையோ என்று மாறுத்தரம் சொல்வது சரியோ? (எண். 12:2)

தேவன் யாத். 3:10-ல் மோசேயை அழைத்து, 'நீ இஸ்ரவேல் புத்திரராகிய என் ஜனத்தை எகிப்திலிருந்து அழைத்து வரும்படி, உன்னை பார்வோனிடத்திற்கு அனுப்புவேன் வா என்றார்'. ஆகையால் மோசேயை மாத்திரம் அழைத்து அனுப்பினார். அதற்கு மோசே சொன்ன மாறுத்தரத்திற்காக (யாத். 4:10-17) கர்த்தர் மோசேக்கு உதவியாகத் தான் ஆரோனை தெரிந்து கொண்டார் (யாத். 4:10-14). அப்படியிருக்க ஆரோனும், மிரியாமும் மோசேயை எதிர்த்து பேசினது எவ்வளவு பெரிய தவறு. மோசேக்கு விரோதமாக பேசினால் மட்டுமல்ல, சிந்தித்தாலே தவறு.

அதுபோல திருச்சபையின் தலைமைக்கு நாம் கண்டிப்பாக அடங்கி நடக்க வேண்டும். ஏனென்றால் இந்த கடைசி காலத்தில் பாவ எகிப்தில் காணப்பட்ட நம்மை மீட்கும்படியாக. கர்த்தருடைய வருகைக்கு





# தேவனுடைய அதிசயங்களும் அற்புதங்களும்

### தீமையை நன்மையாய் மாற்றினார்

என் பெயர் ஜார்ஜ் ஸ்டீபன். என் சொந்த ஊர் குமரிமாவட்டத்திலுள்ள கொல்லங்கோடு. இப்போது நான் சென்னையில் வசித்து வருகிறேன். என்னுடைய குடும்பத்தார்கள் C.S.I சபையை சேர்ந்தவர்கள். கடந்த வருடம் 1997 ஜூலை மாதத்தில் திடீரென்று என்னுடைய தகப்பனார் வியாதிப்பட்டு, மிகவும் முடியாத நிலையில் நாகர்கோவிலிலுள்ள ஜெயசேகரன் ஆஸ்பத்திரியில் வைத்திருந்தோம். அவரைப் பார்த்த தலைமை டாக்டர்கள் "அவர் உடம்பிலுள்ள இரத்தம் முழுவதும் கெட்டுவிட்டது. இனி பிழைக்க மாட்டார்" என்று கூறிவிட்டார்கள். இதைக் கேட்ட எனக்கு மிகுந்த துக்கமும், மனவேதனையும் உண்டாயிற்று. காரணம், அவர் மரித்தால் நரகத்திற்கு சென்றுவிடுவார் என்பதால் கலக்கமடைந்தேன். உடனே புதிய எருசலேம் சபையின் தலைமை அப்போஸ்தலருடன் தொடர்பு கொண்டு, செய்தியைக் கூறினேன். உடனே அவர்கள் ஜெபிப்பதாய் கூறினார்கள். தொடர்ந்து அருகிலிருந்த நாகர்கோவில் புதிய எருசலேம் சபையின் பரிசுத்தவான்கள் ஆஸ்பத்திரிக்கு வந்து ஜெபித்து சென்றார்கள். ஜெபித்தவுடன் மோசமான நிலையிலிருந்த அவரது உடல் நிலையில் சற்று முன்னேற்றம் காணப்பட்டது. தொடர்ந்து பத்து (10) நாட்கள் அவசரச் சிகிச்சை என்ற பிரிவில் வைத்திருந்த போதும், பரிசுத்தவான்கள் தொடர்ந்து வந்து ஜெபித்தார்கள். சுயநினைவே இல்லாமல் இருந்த அவரது உடல்நிலையில் நல்ல முன்னேற்றம் காணப்பட்டது. ஒரு நாள் இரவு என் தகப்பனாரிடம், 'கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை முழு மனதோடும் ஏற்றுக் கொண்டு புதிய எருசலேம் திருச்சபையோடு ஐக்கியமானால் நல்ல சுகம் கிடைக்கும் எனக் கூறினேன்; அவரும் அதற்கு ஒப்புக் கொடுத்தார். ஆஸ்பத்திரியில் அவசரச் சிகிச்சைப் பிரிவிலிருந்து சாதாரண அறைக்கு அவரை மாற்றிய பிறகு, அவர் தேவஊழியர் முன் பாவங்களை அறிக்கை செய்தவுடன், பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் பெற்றார் ஆஸ்பத்திரியிலிருந்து நல்ல சுகம் பெற்று வீட்டிற்கு திரும்பிச் செல்ல கர்த்தர் உதவி செய்தார் அங்குள்ள டாக்டர்கள் இவர் பிழைத்தது அதிசயம் தான்; கடவுள் தான் காப்பாற்றியிருக்கிறார் என்று கூறி ஆச்சரியப்பட்டார்கள் 1.1.98 அன்று அடியேனுடைய அப்பாவும், அம்மாவும் பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று புதிய எருசலேம திருச்சபையின் அங்கமானார்கள். சாத்தான் அவரைக் கொல்ல நினைத்தும, கர்த்தர் அவரைக் காத்துக் கொண்டார்; வரவிருந்த தீமையை நன்மையாய் மாற்றினார்; கர்த்தருடைய நாமத்திற்கு மகிமையுண்டாவதாக, ஆமென். அல்லேலூயா!

இப்படிக்கு,
Eld. Bro. ஜார்ஜ் ஸ்டீபன்,
N.J.C. Chennai.

நம்மை ஆயத்தப்படுத்தும்படியாக, தலைமை அப்போஸ்தலர் அவர்களை கர்த்தர் அனுப்பி யிருக்கிறார். அதற்கான அடையாளங்களும், வெளிப்படுத்தல்களும் உண்டு. அவர்களை ஒருமுறை சந்தித்து பாருங்கள் அல்லது கர்த்தரிடத்தில் ஜெபித்துக் கேளுங்கள். அவர்களைப் பற்றி கர்த்தர் உங்களுக்கு சொல்லுவார்; என் சாட்சி உண்மையா யிருக்கிறது என்று [கர்த்தர் கூறுகிறார் (யோவா. 8:14).

ஆகையால் பேர் கிறிஸ்தவர்களே, ஆவிக்குரிய கிறிஸ்தவர்களே, உலகெங் கிலும் உள்ள சகல ஜனங்களே, நீங்கள் எல்லோரும் கர்த்தரால் அனுப்பப்பட்ட தலைமையின் கீழ் வாருங்கள். இவரே கர்த் தரால் அனுப்பப்பட்ட கடைசிக்கால தேவ னுடைய மனுஷன் தானி. 12:1; மல். 4:5,6: ஏசா. 46:11. இவர் மூலமாகவே தேவன் வெளி. 12ம் அதிகாரத்தை நிறைவேற்றப் போகிறார். அவைகளில் பங்குகொள்ள உங் களை "புதிய எருசலேம் சபை" க்கு அன் புடன் அழைக்கிறோம். [வந்து] கர்த்தரால் அனுப்பப்பட்ட தலைமைக்கு அடங்கி யிருந்து உயர்வைப் பெற்றுக் கொள்ளுங் கள் (1 பேது. 5:6). நீ வந்து பார் [வெளி. 6:1,10:6,7].

### 3. நம்மை நடத்துகின்ற ஊழியருக்கு நாம் அடங்கியிருக்க வேண்டும் (எபி 13:17):-

உங்களை நடத்துகிறவர்கள், உங்கள் ஆத்துமாக்களுக்காக உத்தரவாதம் பண்ணு கிறவர்களாய் விழித்திருக்கிறவர்களானபடி யால், அவர்கள் துக்கத்தோடே அல்ல, சந்தோஷத்தோடே அதைச் செய்யும்படி அவர்களுக்கு கீழ்ப்படிந்து அடங்குங்கள். அவர்கள் துக்கத்தோடே அப்படிச் செய் தால் அது உங்களுக்குப் பிரயோஜனமா யிருக்கமாட்டாதே [எபி. 13:17] என்று வேதம் கூறுகிறது. நம்மை நடத்துகிற தேவனுடைய தாசர்களுக்கு [ஊழியருக்கு] நாம் கீழ்ப்படிந்து அடங்க வேண்டும் அவர் நம்மைவிட வயதில் குறைந்தவரா கவோ, அல்லது நமது [மாம்சத்தின்படி] சொந்தக்காரராகவோ இருக்கலாம். ஆனால் அவர் தேவனுடைய சேவையை செய்ய தேவனால் அழைக்கப்பட்டவர் (எபி. 5:4) ஆகையால் கண்டிப்பாக நாம் நம்மை நடத்துகின்ற தேவ ஊழியருக்கு கீழ்ப் படிந்து அடங்க வேண்டும்.

சில வேளைகளில் அவர் சொல்லுகிற ஆலோசனை நமக்கு கஷ்டமாக இருக்கலாம். இப்படித்தான் ஒரு நாள் எலிசா தீர்க்க தரிசி சீரிய தேசத்து படைத்தலைவனாகிய நாகமானுக்கு ஆலோசனை கொடுத்தார். அது நாகமானுக்கு வருத்தத்தை தந்தது. ஆனாலும் அந்த வார்த்தைக்கு கீழ்ப்படிந்து அடங்கினபோது, குஷ்ட வியாதி அவனை விட்டு போய் விட்டது [2 இராஜா. 5:1-14, எபி. 12:11].

இன்றைக்கு நம்மில் உள்ள வியாதி, மற்றும் கடன் பிரச்சனை மாறாததற்கு கார ணம் நாம் நம்மை நடத்துகின்ற ஊழியக் காரருக்கு கீழ்ப்படிந்து அடங்காதபடியால், அவருடைய ஆலோசனைக்கு கீழ்ப்படியாத படியால் அவை நம்மை விட்டு விலகா திருக்கிறது. ஆகையால் நம்மை நடத்துகிற தேவ ஊழியருக்கு கீழ்ப்படிந்து அடங்கு வோமாக. அப்பொழுது எல்லா நெருக்கங் களில் இருந்தும் விடுதலை பெற்றுக் கொள் வோம் [1 இராஜா. 17:8-16].

### 4. புருஷனுக்கு மனைவி அடங்கி நடக்க வேண்டும் (1 தீமோ. 2:11,12):-

ஸ்திரியானவள் எல்லாவற்றிலும் அடக்க முடையவளாயிருந்து, அமைதலோடு கற்று கொள்ளக்கடவள். உபதேசம் பண்ணவும் புருஷன் மேல் அதிகாரஞ்செலுத்தவும், ஸ்திரியானவளுக்கு நான் உத்தரவு கொடுக் கிறதில்லை. அவள் அமைதலாயிருக்கக்கட வள் [1 தீமோ. 2:11,12]. ஸ்திரிகள்

புருஷர்களை ஆளுகை செய்யக் கூடாது. வேதம் இப்படி சொல்லுகிறது [ஏசா. 3:12; 1 கொரி. 14:34,35].

இன்றைக்கு அநேக குடும்பங்களில் இந்திராகாந்தி, ஜெயலலிதா ஆட்சிதான் நடக்கிறது. புருஷர்கள் எல்லாவற்றிலும், ஸ்திரீகளுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்று எண்ணுகிறார்கள். இன்றைய நாகரீக உலகப் பெண்கள், ஆவிக்குரிய குடும்பங்களில் உள்ள சில பெண்கள் கூட புருஷனை வார்த்தையினால் அடக்க பார்க்கிறார்கள். நான் சொல்லுகிறபடிதான் நீங்கள் செய்ய வேண்டும் என்கிறார்கள். அடிக்க கையை கூட ஓங்குகிறார்கள், ஏவாளுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்த, ஆதாம் தோட்டத்தை விட்டே துரத்தப்பட்டான் (ஆதி. 3:1-24).

சப்பீராளின் வார்த்தைக்கு கீழ்படிந்த அனனியா உயிரைவிட நேர்ந்தது. அது மட்டுமல்லாமல் தேவ தண்டனையை பெற்றுக் கொள்ள நேர்ந்தது (அப். 5:1-11). மீகாளுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்திருந்தால், தாவீது தேவனுடைய தாசனாகவோ, தேவனுடைய இருதயத்துக்கு ஏற்றவனாகவோ மாறி இருக்க முடியாது [2 சாமு. 6:1-23; அப். 13:22].

ஆகையால் ஸ்திரீகள் ஒரு போதும் புருஷர்களை அடக்கக் கூடாது. புருஷர்கள் தனக்கு அடக்கி நடக்க வேண்டும் என்று எண்ணக்கூடாது (1 தீமோ. 2:11,12). ஸ்திரீகள்தான் புருஷருக்கு அடங்கி நடக்க வேண்டும். கர்த்தருடைய வார்த்தை இவ்விதமாக கூறுகிறது. மனைவிகளே, கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறதுபோல, உங்கள் சொந்த புருஷருக்குங் கீழ்ப்படியுங்கள் (எபேசி. 5:22). ஸ்திரீகள் புருஷருக்கு அடங்கி நடக்க வேண்டிய விதமாவது:

ஸ்திரீகள் தங்கள் புருஷன் வெளியே போய், வீட்டுக்கு வரும்போது, அவர்களை அன்பாய் உபசரிக்க வேண்டும். உட்கார்ந்திருந்தால், புருஷன் வரும்போது எழுந்திருக்க வேண்டும். புருஷன் கீழே உட்கார்ந்து இருந்தால், ஸ்திரீ உயரமான இடத்தில் உட்காரக் கூடாது. புருஷனுக்கு ஆகாரம் வைத்து விட்டு, வெளியே போய் கதை பேசிக் கொண்டு இருக்கக் கூடாது. பக்கத்தில் இருந்து அன்பாய் உபசரிக்க வேண்டும். சாப்பிட்டுக் கொண்டு இருக்கும் போது, கோபப்படும்படியான வார்த்தைகளை பேசக்கூடாது. சந்தோஷமான வார்த்தைகளை பேச வேண்டும். புருஷன் கோபப்படும்படியாக, ஒருபோதும் நடக்கக் கூடாது [கொலோ. 3:18].

புருஷனுடைய வார்த்தையை மீறி எந்தஇடத்திற்கும் செல்லக் கூடாது. குடும்பத்தினுடைய நிலைமை அறிந்து அதன்படிநடந்து கொள்ள வேண்டும். புருஷனுக்கு செய்ய வேண்டிய கடமையை ஸ்திரீகள் செய்ய வேண்டும் (1 கொரி. 7:3). காலையிலேயே எழுந்திருக்க வேண்டும். புருஷன் சோர்ந்து இருக்கும் போது உற்சாகப்படுத்த வேண்டும் [நீதி. 31:10-31]. புத்தியுள்ள ஸ்திரீயை போல் நடந்து கொள்ள வேண்டும் [நீதி. 14:1]. குணசாலியான ஸ்திரீயைப் போல் இருக்க வேண்டும் [நீதி. 12:4].

சில ஸ்திரீகளிடத்தில் அழகு பெருமை (நீதி. 11:22;31:30). சிலரிடத்தில் பணப் பெருமை, சிலரிடத்தில் படிப்பு பெருமை சிலரிடத்தில் அதிகாரப் பெருமை, நான் வேலை பார்க்கிறேன், ஆகையால் நீங்கள் எனக்கு அடங்கித்தான் நடக்க வேண்டும் என்பது இது சரியான ஒரு தேவ பக்தியுள்ள ஸ்திரீக்கு தகாது. நான் கலெக்டர், நீங்கள் பியூன் ஆகையால் நீங்கள் எனக்கு அடங்கி நடக்க வேண்டும் என்று ஸ்திரீகள் ஒருபோதும் சொல்லக் கூடாது.

கலெக்டராக இருந்தாலும் பியூனை புருஷனுக்கு ஸ்திரீ அடங்கிதான் நடக்க

வேண்டும். அழகுள்ள ஸ்திரீயாய் இருந்தாலும், அதிகம் படித்திருந்திருந்தாலும், அதிகம் சம்பளம் வாங்கினாலும் தனக்கு கொடுக்கப்பட்ட புருஷனுக்கு கீழ்ப்படிந்து அடங்க வேண்டும் என்றே வேதம் சொல்லுகிறது (1 தீமோ. 2:11,12).

**5. பிள்ளைகள், பெற்றோர்க்கு அடங்கி நடக்க வேண்டும் [எபி. 12:9].**

அன்றியும், நம்முடைய சரீரத்தின் தகப்பன்மார்கள் நம்மை சிட்சிக்கும்போது, அவர்களுக்கு நாம் அஞ்சி நடந்திருக்க, நாம் பிழைக்கத்தக்கதாக ஆவிகளின் பிதாவுக்கு வெகு அதிகமாய் அடங்கி நடக்க வேண்டுமல்லவா? (எபி. 12:9) என்று வேதம் சொல்லுகிறது. அதாவது சரீரத்தின் தகப்பன்மாருக்கு அடங்கி நடந்த நாம் ஆவிகளின் பிதாவுக்கு வெகு அதிகமாய் அடங்கி நடக்க வேண்டுமல்லவா என்று தெளிவாக விளங்குகிறது.

பெற்றோரை உடைய பிள்ளைகள், தன் பெற்றோருக்கு கண்டிப்பாக அடங்கி நடக்க வேண்டும். வேதம் சொல்லுகிறது. பிள்ளைகளே உங்களைப் பெற்றோருக்கு எல்லா காரியத்திலேயும் கீழ்ப்படியுங்கள். இது கர்த்தருக்குப் பிரியமானது [கொலோ. 3:20]. முக்கியமாக பெண் பிள்ளைகள் கண்ட வீடுகளுக்கெல்லாம் போகக் கூடாது [தீத்து 2:4,5], கண்ட புத்தகங்களைப் படிக்கக் கூடாது. திருமணம் செய்து கொடுக்கப்படுகிறவரை தன்னை மிகவும் கவனமாக காத்துக் கொள்ள வேண்டும்.

அடிக்கடி வேதம் வாசிக்க வேண்டும் (சங். 199:9; பிர. 11:9; 12:1-7). அதிகமாக ஜெபிக்க வேண்டும். அதிகமாக ஆண்டவரை நினைக்க வேண்டும் அப்படியானால், பிள்ளைகள் ஆத்துமாவை காத்துக் கொள்ளலாம். அவசியமில்லாமல், ஆண்கள் கூடியிருக்கிற கேளிக்கையான இடங்களுக்கு செல்லக் கூடாது. சினிமா பார்க்க, இன்னும் விளையாட, டி.வி. பார்க்க, இவைகள் நம்முடைய ஆத்துமாவை கெடுத்து கொள்வதற்கும், மற்றவர்களுடைய ஆத்துமா கெட்டுப் போவதற்கும் ஏற்ற இடங்களாக இருக்கின்றன. இப்படிப்பட்ட இடங்களுக்கு செல்லக் கூடாது என்று பெற்றோர் சொல்லும் போது அவைகளுக்கு கண்டிப்பாக அடங்கி நடக்க வேண்டும்.

அதுபோல, ஆண் பிள்ளைகளும் தன் வாலிப வயதை கவனமாக காத்துக் கொள்ள வேண்டும். கெட்ட நண்பர்களோடு ஐக்கியம் வைக்கக் கூடாது. இளைய குமாரன் கெட்டுப் போனவன் [லூக். 15:11-32], ஆகையால் ஆண் பிள்ளைகள் பரிசுத்தவான்களோடு ஐக்கியம் வைத்து பரிசுத்தவானாக மாற வேண்டும் (1 யோவா. 1:3,4). வாலிபர்கள் தேவ வசனத்தின்படி அடிக்கடி பாவ அறிக்கை செய்து, தன்னை கழுவிக் கொள்ள வேண்டும் (மத். 3:5,6; மாற். 1:4,5; நீதி. 28:13; 1 யோவா. 1:7-10). அநேக ஆவிக்குரிய குடும்பங்களிலும், பிள்ளைகள் பெற்றோர்க்கு கீழ்ப்படிந்து நடப்பது கிடையாது. அடங்கி நடக்காத பிள்ளைகள் மாண்டு போனார்கள் [1 சாமு. 2:12-17, 3:12-14].

பேர் கிறிஸ்தவர்களில், சில பெற்றோர்கள் இப்படி தன்னுடைய பிள்ளைகளை அடக்குவார்கள். ஆவிக்குரிய ஆராதனைக்கு போகாதே, முழுக்கு ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளாதே, பரிசுத்த ஆவி பெற்றுக் கொள்ளாதே, பாவ அறிக்கை செய்யாதே, எங்கே போனாலும் போ, புதிய எருசலேம் சபைக்கு போகாதே என்ற தப்பான போதனைக்குபிள்ளைகள் அடங்கி நடக்கக் கூடாது.

வேதம் சொல்லுகிறது. பிள்ளைகளே உங்கள் பெற்றாருக்கு கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள், இது நியாயம் (எபேசி. 6:1). சகல ஜனங்களே கேளுங்கள், கர்த்தர் எருசலேமை கட்டுகிறார்; துரத்துண்ட இஸ்ர

வேலைக் கூட்டி சேர்க்கிறார் (சங். 147:2). கர்த்தர் எருசலேமை எல்லா சபைகளை விட உயர்த்தப் போகிறார். உயர்த்திக் கொண்டு வருகிறார் (ஏசா. 2:2,3).

அநேக ஜனங்களும், பலத்த ஜாதிகளும் எருசலேமிலே சேனைகளின் கர்த்தரை தேடவும் வருவார்கள் (சகரி. 8:22,23); வந்து கொண்டு இருக்கிறார்கள். ஆகையால் நீயும் வா! கர்த்தர் உன்னை அழைக்கிறார். கர்த்தர் கட்டுகிற எருசலேமில் வந்து சேர்ந்து கொள் (சங். 147:2). நீ வந்து பார் (வெளி. 6:1). ஆகையால் பிள்ளைகளே, உங்கள் பெற்றோர்க்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படிந்து அடங்குங்கள், இது நியாயம் [எபே. 6:1].

**6. வேலைக்காரர்கள் தங்கள் எஜமான்களுக்கு அடங்கியிருக்க வேண்டும் [ஆதி. 16:3-9]:-**

ஆகாரை பார்த்து கர்த்தருடைய தூதனானவர் நீ உன் நாச்சியாரன்டைக்குத் திரும்பி போய், அவள் கையில் கீழ் அடங்கியிரு என்றார் [ஆதி. 16:9].

வேலைக்காரர்கள் கண்டிப்பாக எஜமான்களுக்கு அடங்கியிருக்க வேண்டும். அவர்கள் சொல்லுகிற வார்த்தைகளுக்கு கீழ்ப்படிய வேண்டும். ஆகாரை கர்த்தருடைய தூதனானவர் உன் எஜமாட்டியாகிய சாராய்க்கு அடங்கியிரு என்று கட்டளையிட்டார் (ஆதி. 16:9). வேலைக்காரரே, நீங்கள் கிறிஸ்துவுக்கு கீழ்ப்படிகிறதுபோல, சரீரத்தின்படி உங்கள் எஜமான்களாயிருக்கிறவர்களுக்கும் பயத்தோடும், நடுக்கத்தோடும், கபடற்ற மனதோடும் கீழ்ப்படிந்து, மனுஷருக்குப் பிரியமாயிருக்க விரும்புகிறவர்களாகப் பார்வைக்கு ஊழியம் செய்யாமல், கிறிஸ்துவின் ஊழியக்காரராக, மனப்பூர்வமாய்த் தேவனுடைய சித்தத்தின்படி செய்யுங்கள்.

அடிமையானவனானாலும், சுயாதீனமுள்ளவனானாலும் அவனவன் செய்கிற நன்மையின்படியே கர்த்தரிடத்தில் பலனை அடைவானென்று அறிந்து, மனுஷருக்கென்று ஊழியம் செய்யாமல், கர்த்தருக்கென்றே நல் மனதோடே ஊழியம் செய்யுங்கள் (எபேசி. 6:5-8; கொலோ. 3:22-24).

வேலைக்காரரே, அதிக பயத்துடனே உங்கள் எஜமான்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கள், நல்லவர்களுக்கும், சாந்தகுணமுள்ளவர்களுக்கும் மாத்திரமல்ல,முரட்டு குணமுள்ளவர்களுக்கும் கீழ்ப்படிந்திருங்கள் (1பேது.2:18).

எலிசாவுக்கு அடங்கி நடக்காத வேலைக்காரனாகிய கேயாசி குஷ்டரோகியாகி அவன் சமுகத்தை விட்டு புறப்பட்டுப் போனான் [2 இராஜா. 5:20-27]. ஆகையால் தேவாசீர்வாதம் பெற வேலைக்காரர்கள் கண்டிப்பாக தன் எஜமானுக்கு அடங்கி நடக்க வேண்டும் [ஆதி. 16:9]. ஆகையால் மேற் கண்டபடி யார், யாருக்கு அடங்கி நடக்க வேண்டுமோ, அப்படி அடங்கி நடந்து இறையாசீர் பெற்றுக் கொள்வோமாக!

**மேற் கண்டவற்றில் கொஞ்சம் மாறுதல் உண்டானால் பெரிய பிரச்சனை உண்டாகும்.**

1. தேவன் நமக்கு அடங்கி நடந்தால், நம்முடைய பரிசுத்த ஜீவியம் கெட்டுப் போகும். ஆகையால் தேவனுக்கு நாமே அடங்கி நடக்க வேண்டும் [1 பேது. 5:6]

2. திருச்சபையின் தலைமை ஒரு போதும் நமக்கு அடங்கி நடக்கக் கூடாது. அப்படி நடந்தால் சபையை சரியாய் கட்ட முடியாது. ஆகையால் நாமே தலைமைக்கு அடங்கி நடக்க வேண்டும் (எபே. 5:23,24).

3. நம்மை நடத்துகின்ற ஊழியருக்கு நாமே அடங்கி நடக்க வேண்டும். அவர் நமக்கு அடங்கி நடந்தால் சபையை எப்

படி நடத்த முடியும். ஊழியம் எப்படி செய்ய முடியும். ஊழியர்களுக்கு நாம் அடங்கி நடப்போமாக [எபி. 13:17].

4. புருஷன் மனைவிக்கு அடங்கி நடந்தால் குடும்பம் என்னவாகும். குடும்பம் சீர்கெட்டுப் போகும். கடன் பிரச்சனை உண்டாகும் ஆகையால் மனைவிதான் புருஷனுக்கு அடங்கி நடக்க வேண்டும் (1 தீமோ. 2: 11,12).

5. பிள்ளைகளுக்கு தாய் தகப்பன் அடங்கி நடந்தால் குடும்பம் தலை கீழாகிவிடும். பிள்ளைகள் சீர்பட முடியாது. பிள்ளைகள் கெட்டுப் போவார்கள். திருந்த முடியாது. ஆகையால் பிள்ளைகள் தான் பெற்றோர் களுக்கு அடங்கி நடக்க வேண்டும். அது தான் சரி (எபி. 12:9).

6. வேலைக்காரர்க்கு எஜமான் அடங்கி நடந்தால் அது சரியாகுமோ? அப்படியானால் அவர் எஜமானாக இருக்க முடியுமா? ஆகையால் வேதத்தின் பிரகாரம் வேலைக்காரர்கள் எஜமானுக்கு அடங்கியிருப்பது தான் சரி (அதி. 16:3-9).

ஆகையால் மேற்கண்டபடி தேவனுக்கு நாம் எல்லோரும் அடங்கியிருப்பதும் தலைமைக்கு முழு சபையும் அடங்கியிருப்பதும், சபையை நடத்துகின்ற ஊழியருக்கு சபை மக்கள் அடங்கியிருப்பதும், புருஷனுக்கு மனைவி அடங்கியிருப்பதும், பெற்றோர்க்கு பிள்ளைகள் அடங்கியிருப்பதும், வேலைக்காரர்கள் தங்கள் எஜமானுக்கு அடங்கியிருப்பதும் சரி என்று வேதம் திட்டவட்டமாக அறிவிக்கிறது. மேலும் யார் அடங்கி நடக்கிறார்களோ அவர்களுக்கு தேவன் தனக்குள் அடங்கியிருக்கிற ஞானம், அறிவு ஆகிய பொக்கிஷங்களை தந்தருள்வார் [கொலோ. 2:3] நாம் அடங்கியிருந்து இறையாசீர் பெற்றுக் கொள்வோமாக! கர்த்தர் நம் எல்லோரையும் ஆசீர்வதிப்பாராக!! ஆமென்.

"ஆகையால் ஏற்ற காலத்திலே தேவன் உங்களை உயர்த்தும்படிக்கு, அவருடைய பலத்த கைக்குள் அடங்கியிருங்கள்" [1 பேது. 5:6].

# வேதபாடம் (தொடர்ச்சி)

இஸ்ரவேலர்கள் கானானின் மேல் வெற்றி (யோசு. ~~1:6-27~~ 6:1-27). முதலாம் படையெடுப்பு எரிகோவின் மேல்:-

வெற்றியின் ஆரம்பத்திலேயே ஜனங்களுக்கு நம்பிக்கையை ஊட்டும்படியாக எரிகோ என்ற அரணான பட்டணம் தேவனுடைய நேரான சகாயத்தினால் கைப்பற்றப்பட்டது, முறியடிக்கப்பட்டது. அவர்கள் படையெடுத்த வகையானது இஸ்ரவேலருடைய விசுவாசம் தேவனை சார்ந்திருப்பதை பரிசோதிக்கும்படியாக இருந்தது. அவர்கள் மத்தியிலிருந்த உடன்படிக்கைப் பெட்டகம் தேவனுடைய பிரசன்னத்தின் அடையாளமாக இருந்தது. எக்காளங்களை ஊதும் ஆசாரியர்கள் பெட்டகத்துக்கு முன் செல்ல பெட்டகம் சுமக்கப்பட்டு தூக்கி செல்லப்பட்டது. பட்டணத்தைச் சுற்றி எக்காளம் ஊதின ஆசாரியருக்கு முன்னால் யுத்தசன்னத்தராகிய முன்தண்டு சென்றது. கர்த்தருடைய பெட்டகத்துக்குப் பின்னால் பின் தண்டு சென்றது. அவர்கள் அந்த எரிகோ மதிலை அந்தப்

பட்டணத்தை ஒருதரம் சுற்றி வந்து இளைப்பாறும் இடத்திற்கு வந்து இளைப்பாறினார்கள். மறுநாளும் அப்படியே அவர்கள் சுற்றி வந்தார்கள். எக்காளம் ஊதுகிற சத்தமே யொழிய வேறு ஒருவரும் ஒரு வார்த்தையும் பேசக் கூடாது என்று யோசுவா கட்டளை யிட்டிருந்தார். கொம்பு எக்காளங்கள் கொண்டுசெல்லப்பட்டதாகப் பார்க்கிறோம் (வச. 4).

மத விழாக்களில் இப்படிப்பட்ட கொம்பு எக்காளங்கள் ஊதி விழாக்கள் கொண் டாடப்பட்டன. அச்சமயம் அவைகளை உபயோகித்தார்கள். தாங்கள் இப்பொழுது செய் கிறதை அவர்கள் சமய சம்பந்தமாக பாவித்தார்கள் என்று இதன் மூலம் நாம் அறிகி றோம். இந்த அதிகாரத்தின் கடைசி வார்த்தையில் கர்த்தர் யோசுவாவோடு இருந்தார் என்று வாசிக்கிறோம். இப்படி ஆறுநாளும் அவர்கள் பட்டணத்தைச் சுற்றி வந்து ஏழாம் நாளில் ஏழுதரம் சுற்றி வந்து முழக்கமாய் எக்காளங்களை ஊதும் போது எல் லோரும் ஆர்ப்பரியுங்கள் என்று யோசுவா கட்டளையிட்டிருந்தார். அப்படியே அவர்கள் பட்டணத்தைச் சுற்றி வந்து ஏழாம் முறையாய் சுற்றி வந்தபோது எக்காளங்கள் பல மாக, முழக்கமாக, ஆரவாரமாக முழக்கமிட்டது. எக்காள சத்தத்தை ஜனங்கள் கேட்டு மகா ஆரவாரமாக ஆர்ப்பரித்த மாத்திரத்தில் எரிகோ பட்டணத்தின் மதில் இடிந்து விழுந்தது. உடனே ஜனங்கள் அவரவர்களுக்கு நேராக பட்டணத்துக்குள் சென்று அதை பிடித்தார்கள். பட்டணத்திலிருந்த புருஷரையும், ஸ்திரீகளையும், வாலி பரையும், வயோதிபரையும், ஆடுமாடுகள், கழுதைகள் எல்லாவற்றையும் சங்கரித்தார்கள்.

அந்த பட்டணத்திலிருந்த ராகாபையும் அவளுடைய வீட்டாரையும் அவர்கள் பத்திரமாக வெளியேற்றி பாளயத்தின் நடுவில் குடியிருக்கும்படியாக வெளியேற்றி விட்டு அந்தப் பட்டணத்தை கொள்ளையடித்தார்கள். அந்தப் பட்டணத்திலுள்ள வெள் ளியையும், பொன்னையும், வெண்கலத்தையும், இரும்பினால் செய்த பாத்திரங்களையும், மரப்பாத்திரங்களையும் கர்த்தருடைய ஆலயத்தின் பொக்கிஷ வைப்பாக கொண்டு வந்து சேர்த்தார்கள். அந்தப் பட்டணம் முற்றிலுமாக சுட்டெரிக்கப்பட்டது. இவ்விதமாக இஸ்ரவேலருடைய பலத்தினாலல்ல தேவனுடைய பலத்தினால் அவருடைய சகாயத்தினால் எரிகோ பட்டணம் பிடிக்கப்பட்டு அழிக்கப்பட்டது.

அந்தப் பட்டணத்தை திரும்ப எடுத்துக் கட்டுகிறவர்கள் மேல் யோசுவா சாபம் கூறினதாகப் பார்க்கிறோம். இவ்விதமாக எரிகோ பட்டணம் பிடிக்கப்பட்டது. இந்த பட்டணத்தின் பொக்கிஷங்களில் யாதொன்றையும் ஒருவரும் தங்களுக்கென்று கொள்ளை யடிக்கக் கூடாது, எடுத்துக்கொள்ளக் கூடாது, அவைகள் கர்த்தருக்கென்று பிரதிஷ்டை செய்யப்பட வேண்டுமென்று கட்டளையிடப்பட்டிருந்தது. ஆனால் அதிலே இஸ்ரவேலர் கள் மீறுதல் செய்தார்கள் என்று பார்க்கிறோம். ஏனென்றால் அந்தப் பட்டணத்திலுள்ள வைகளெல்லாம் சாபத்திற்குட்பட்டதென்றும், ஆகையால் அந்த பொக்கிஷங்களெல்லாம் கர்த்தருடைய பொக்கிஷசாலையில் சேர்க்கப்பட வேண்டுமென்றும் யோசுவா கட்டளை யிட்டிருந்தார்.

யோசு. 7:1-20

ஜனங்கள் இவ்விதமாய் கட்டளை பெற்றிருந்தும் அதிலே யூதா கோத்திரத்துச் சேராகுடைய குமாரனாகிய சப்தியின் மகன் கர்மீக்குப் பிறந்த ஆகான் என்பவன் சாபத்தீடானதிலே சிலவற்றை எடுத்து தன்னுடைய கூடாரத்தில் கொண்டுபோய் ஒளித்து வைத்தான். எரிகோவை ஜெயித்ததைத் தொடர்ந்து அவர்கள் ஆயி என்கிற

பட்டணத்துக்கு எதிராக யுத்தம் செய்ய புறப்பட்டார்கள். அந்த ஆயியிலுள்ள மக்கள் கொஞ்சப் பேர்களாக இருந்ததினிமித்தம் எல்லோரும் அங்கே போய் யுத்தம் செய்து ஜெயிக்க வேண்டிய அவசியமில்லை என்று கண்டார்கள். ஏனென்றால் ஆயி பட்டணத்திலே 12000 பேர்கள் மாத்திரம் குடியிருக்கிறார்கள் என்று கணக்கிடப்பட்டிருந்தது.

இஸ்ரவேலர்களில் யுத்தப் புருஷரோ ஆறு லட்சம் பேர். ஆனபடியினால் கொஞ்சம் பேர்கள் மாத்திரம் போய் ஆயியை ஜெயிக்க முடியும் என்று அவர்கள் தீர்மானித்து மூவாயிரம் பேர் ஆயியிக்கு விரோதமாய் யுத்தம் செய்யப்போனார்கள். ஆனால் ஆகான், (ஆகான் குடும்பம் முழுவதும் சாபத்தீடானதை எடுத்துக் கொண்டது சம்பந்தப்பட்டதாகத் தெரிகிறது). செய்த பாவத்தினிமித்தம் யுத்தத்திலே இஸ்ரவேலர்கள் தோல்வியடைந்தார்கள்.

(தொடர்ச்சி 16-ம் பக்கம் பார்க்க)

## கர்த்தருக்குள் நித்திரையானார்

தோற்றம் : 27.3.1936

மறைவு : 26.2.1998

நம்முடைய அருமையான மூத்த சகோதரரும், தேவனுடைய ஊழியருமான Pastor. John Pillai, New Jerusalem Church (Wattala, Colombo, Sri Lanka) அவர்கள் தன்னுடைய 62 வது வயதில் இப்பூவுலக வாழ்க்கையை முடித்துக் கொண்டு 26-2-1998 அன்று காலை 9 மணிக்கு கர்த்தருக்குள் நித்திரையானார். அவர் சில காலம் வியாதிப்பட்டிருந்து, நான் கர்த்தரிடம் மேலே போகிறேன் என்று கூறி, ஸ்தோத்திரம்! ஸ்தோத்திரம்!! ஸ்தோத்திரம்!!! என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே நித்திரையானார். அவருடைய பிரிவால் துக்கத்திலிருக்கிற குடும்பத்தாருக்கும், சபையாருக்கும் ஆறுதல் கூறுகிறோம். கர்த்தருடைய வருகையில் அவரை சந்திப்போம். சமாதானமாயிருப்பீர்களாக!

CHIEF APOSTLE **N. LAZAR.**
BOMBAY 78.

பாவம் செய்தது, ஒருவனுயிருந்த போதிலும் சபையார் முழுவதும் தோல்வியுற்று தண்டிக்கப்பட்டார்கள். பாவிகளோடு கூட்டுறவாக இருப்பது அவர்கள் குற்றத்திலும் தண்டனையிலும் பங்கு பெறுவதிலேயே முடிவடையும்.

யோசு. 7:21-26

சீட்டுப்போட்டு இன்னுன் என்று கண்டுபிடித்து, ஆகானும், அவனுடைய குடும்பமும் அவனுடைய பொருட்கள் எல்லாம் கல்லெறிந்து கொல்லப்பட்டார்கள். ஆகையால் அந்த இடத்துக்கு ஆகோர் பள்ளத்தாக்கு என்று பெயர். பாவ அறிக்கை செய்யும்படியாக ஆகான் நெருக்கப்பட்டான். பாவம் கண்டுபிடிக்கப்பட்டு அதற்கு பின்பாக அவன் இவ்வாறு பாவ அறிக்கை செய்ததாகப் பார்க்கிறோம். நான் கண்டு (கண்ணின் இச்சை) இச்சித்து (மனதின் இச்சை), நான் எடுத்துக் கொண்டு (குற்ற செய்கை) நான் புதைத்து வைத்து [கைகளின் கிரியை] என்று அறிக்கை செய்ததாகப் பார்க்கிறோம். [ஆதி. 3:6; 1 யோவா. 2:16 யும் கூட வாசிக்கவும்].

பாவம் செய்கிறவர்களோடு தொடர்பாயிருக்கிறவர்களும், சம்பந்தப்படுகிறவர்களும் இவ்விதமாகத் தண்டிக்கப்படுவார்கள். விலக்கப்பட்ட கொள்ளைப் பொருள்களை கண்டு பிடித்ததினிமித்தம் ஆகான் தன் ஜீவனையும், மற்றனைத்தையும் இழக்க நேரிட்டது. அவனும், அவனோடு சேர்ந்தவர்களும் அவன் கொள்ளையடித்த எல்லாவற்றையும் விலக்கும்படியாக ஏற்பட்டது. கடவுளுடைய கட்டளைக்கு விரைவாக கீழ்ப்படிகிறதினிமித்தம் ஆசீர்வாதம் பெறலாம். இல்லையென்றால் அவனவனுடைய அக்கிரமத்துக்குத் தக்கதாக தண்டனை உண்டாகும்.

ஆயியின் ராஜா தண்டிக்கப்பட்டான். நம்முடைய பாவங்களை நாம் பிரதிக்கினையோடு உண்மையாய் அறிக்கை செய்து விட்டுவிடுவோமானுல் மாத்திரமே நாம் அவரிடத்தில் (கர்த்தரிடத்தில்) உண்மையான வெற்றியை தேடலாம். பாவத்தை வைத்துக் கொண்டு வெற்றியையோ, ஆசீர்வாதத்தையோ, தேவ ஐக்கியத்தையோ, தேவனுடைய மெய்யான வெளிப்படுத்தலையோ ஒருவரும் பெற முடியாது. தன் பாவத்தில் இருந்து கொண்டு கருத்தவன் (சாத்தான்) சொன்னதை, கர்த்தர் சொன்னுர், கர்த்தர் சொன்னுர் என்று சொல்லிக் கொண்டு இருக்கக் கூடாது.

*யோசு. 8 - ம் அதிகாரம்*

ஆயியின்மேல் யுத்தத்திற்குப் போவதற்கு கர்த்தர் மறுபடியும் யோசுவாவை திடப்படுத்துகிறர். எரிகோவுக்கும், அந்த ராஜாவுக்கும் செய்ததுபோல ஆயியிக்கும் செய்யும்படியாக கட்டளையுண்டாயிற்று. இப்பொழுது 30 ஆயிரம் பேர் தெரிந்து கொள்ளப்பட்டு யுத்தத்துக்குப் போகிறார்கள். பின்னுல் பதிவிடை வைக்கப்பட்டிருக்கிறது; ஆயி பிடிக்கப்பட்டது. ஆயியின் ராஜாவும் உயிரோடு பிடிக்கப்பட்டு வாளுக்கு இரையானுன். ஆயி பட்டணம் முற்றிலுமாக இஸ்ரவேலர்களால் வெற்றி கொள்ளப்பட்டது. இங்கேயும் ஓர் அதிசயம் நடந்தது.

ஆயி பிடித்துத் திருமட்டும் யோசுவா ஈட்டியை நீட்டிக் கொண்டிருந்த தன் கையை மடக்கவில்லை என்று வாசிக்கிறோம் (வச. 26). அப்படியென்றும் தொடர்ந்து யுத்தம் செய்யும்படியாய் தேவ கட்டளை உண்டாயிருந்தது. ஆயியை ஜெயித்த பின்பு கர்த்தருக்கு ஒரு பலிபீடம் கட்டி கர்த்தருக்குப் பலியிட்டு தேவனை மகிமைப்படுத்தினதாகப் பார்க்கிறோம் (யோசு. 8:30-35). மோசேயின் நியாயப்பிரமாணத்தை கற்களில் யோசுவா மறுபடியும் எடுத்தெழுதியது. ஆசீர்வாதத்தைக் கூறும்படி பாதிபேர் கெரிசீம் மலைக்கு எதிர்புறமாகவும் பாதிபேர் ஏபால் மலைக்கு எதிர்புறமாகவும் நின்றார்கள். அதன் பின்பு யோசுவா நியாயப்பிரமாண புத்தகத்தில் எழுதியிருக்கிற பிரகாரமாய் ஆசீர்வாதம் சாபமுமாகிய சகல வார்த்தைகளையும் வாசித்து இஸ்ரவேலின் முழுச்

## FORM IV

(See Rule 8)

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | : Bombay |
| 2. | Periodicity of its publication | : Monthly |
| 3. | Printer's Name | : Chief Pastor: N. LAZAR |
| | (Whether citizen of India? | : YES |
| | (if foreigner, state the country of origin) | |
| | Address | : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 4. | Publisher's Name | : Chief Pastor: N. LAZAR |
| | (Whether citizen of India?) | : YES |
| | (if foreigner, state the country of origin) | |
| | Address | : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 5. | Editor's Name | : Chief Pastor: N. LAZAR |
| | (Whether citizen of India? | : YES |
| | (if foreigner state the country of origin) | |
| | Address | : Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | : New Jerusalem Church : Church Lane, Tilak Nagar, : Darga Road, Bhandup, Bombay-400 078. |

I, Chief Pastor: N. LAZAR hereby declare that the particulars givenabove are true to the best of my knowledge and belief.

Sd.
Chief Pastor: N. Lazar.
Editor / Printer / Publisher.

Dated : 21-2-98

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 164 - APR. 98



"புதிய எருசலேம் சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவார்(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்...
விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்
கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் ,எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்' சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

பாவம் ஒரு பயங்கரமான காரியம் மனிதனைப் பாவத்திலிருந்து விடுதலையர்க்கவே தேவ குமாரன் உலகத்தில் வந்து, பாடுபட்டு, மரித்து அடக்கம் பண்ணப்பட்டார். மூன்றும் நாளில் உயிரோடெழுந்தார். மனித மீட்புக்காக தேவன் செய்த செயல். மனுமக்களின் பாவத்தை தாம் ஏற்றுக் கொண்டு, மனுமக்களின் பிரதிநிதியாய் பாவத்தின் தண்டனையை தாம் ஏற்றுக் கொண்டு, பாடுபட்டு, மரித்து உயிர்த்தெழுந்ததுவே. இதை விசுவாசிப்பவனுக்கு மனந்திரும்புதலும் அதைத் தொடர்ந்து அவன் கீழ்ப்படிகிறதிற்குதக்க பாவத்திலிருந்து விடுதலையும் உண்டாகிறது. புதிய சுபாவம் அவனில் உருவாகிறது, அவன் புதுமனிதனாகிறான், கிறிஸ்து அவனில் செய்யும் பெரிய மாற்றமிதுவே. தேவ ஐக்கியமும் தொடர்ந்து அநேக ஆசீர்வாதங்களும், விசேஷமாக பரிசுத்த ஆவியும் அவனுக்கு அருளப்படுகிறது. இதன் மூலம் கிறிஸ்து உலக சரித்திரத்தில் வந்து, மனிதனுடைய பாவங்களுக்காக மரித்தார், உயிர்த்தார் என்று நிருபணமாகிறது. அன்று மரித்த கிறிஸ்துவில் இன்றைய மனிதன் பங்கு பெறுகிறான். கிறிஸ்தவம் வெறும் தத்துவங்களல்ல, உண்மை சம்பவமே. கிறிஸ்து வந்து மனிதனை தேவனோடு ஐக்கியப்படுத்தினார். இதுவே மனிதனுக்கு கிடைத்த மகா பெரிய பாக்கியம். இதில் நிலைத்திருப்பதினால் மனிதன் முழுமை அடைவான். (தேவன் மனிதனை சிருஷ்டித்த நோக்கம் நிறைவடையும்) அதற்கு அவன் சபையில் நிலைத்திருக்க வேண்டும். மெய்யான திருச்சபையே தேவனுடைய திட்டம். இத்தெய்வீக குடும்பமே பூமியில் (வரும் யுகத்திலும்) வாழ்வார்கள்; தேவனும் அவர்கள் மத்தியில் வாசமாயிருப்பார். அதற்குத் தான் இவ்வுலகத்தில் இயேசுவை விசுவாசித்து இரட்சிப்படையும்படி, நாம் எல்லோரையும் அழைப்போம்.

கிறிஸ்துவுக்குள்.

CHIEF APOSTLE N. LAZAR

# திருச்சபை

(தொடர்ச்சி)

''பூமியானது தேவனுக்கு முன்பாக சீர் கெட்டதாயிருந்தது. பூமி கொடுமையினால் நிறைந்திருக்கிறது. தேவன் பூமியை பார்த்தார். இதோ அது சீர் கெட்டதாயிருந்தது. மாம்சமான யாவரும் பூமியின் மேல் தங்கள் வழிகளைக் கெடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது தேவன் நோவாவை நோக்கி, மாம்சமான யாவரின் முடிவும் எனக்கு முன்பாக வந்தது. அவர்களாலே பூமி கொடுமையினால் நிறைந்தது. நான் அவர்களை பூமியோடு கூட அழித்துப் போடுவேன் [ஆதி. 6:11,13] என்று கர்த்தர் சொன்னார்.

மனுஷர் தங்கள் அக்கிரமத்தினாலும், கொடுமையினாலும் தங்கள் வழியை கெடுத்துக் கொண்டதினாலும் அவர்கள் மட்டுமல்ல, அவர்களோடு கூட சேர்த்து ஆகாயத்துப் பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள் யாவும் அழிக்கப்பட ஏதுவாயிற்று. நோவாவின் காலத்தில், மனுஷர் பூமியின் மேல் பெருகியிருந்தாலும், அவர்களுக்குள்ளே லாமேக்கின் குமாரனாகிய நோவா என்கின்ற ஒரு மனிதருக்கே கர்த்தர் தம்முடைய சித்தத்தை வெளிப்படுத்தி அறிவிக்கிறார். மாம்சமான யாவருடைய முடிவும் கர்த்தருக்கு முன்பாக வந்திருந்தாலும் அந்த சந்ததியிலேயிருந்த யாவருக்குள்ளும் நோவா என்ற ஒரு மனிதருக்கு கர்த்தருடைய கண்களில் கிருபை கிடைத்தது (ஆதி. 6:8).

மாம்சமான யாவருடைய முடிவும் கர்த்தருக்கு முன்பாக வந்திருந்தும் கர்த்தருடைய கண்களில் இவருக்கு மட்டும் கிருபை கிடைக்க காரணம் 'நோவா தன் காலத்தில் இருந்தவர்களுக்குள்ளே நீதிமானும் உத்தமனுமாயிருந்தான். நோவா தேவனோடே சஞ்சரித்துக் கொண்டிருந்தான்' (ஆதி. 6:9) என்பதினாலேயாகும். ஆதாமின் குமாரனாகிய சேத்தின் நாட்களிலிருந்தே மனுஷர் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொள்ள ஆரம்பித்து விட்டனர்.

இவ்விதமாக கர்த்தருடைய நாமத்தில் தொழுது கொள்ளுகிறவர்கள் பூமியெங்கும் பரம்பியிருந்தாலும், நோவாவின் காலத்தில் ஜீவித்திருந்தவர்களில் நோவா என்கின்ற ஒரு மனிதரே கர்த்தருக்கு முன்பாக நீதிமானும், உத்தமனுமாயிருந்தாரென்றும், மற்றவர்கள் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டாலும் அவர்கள் கர்த்தருக்கு முன்பாக நீதிமான்களும், உத்தமர்களுமாக காணப்படவில்லை என்று அறிய முடிகிறது.

இந்த நோவாவோ கர்த்தருக்கு முன்பாக நீதிமானும், உத்தமனுமாகக் காணப்பட்டதினாலே, கர்த்தருடைய தீர்மானத்தின்படி வரவிருக்கும் அழிவிலிருந்து இவரையும், இவரைச் சேர்ந்தவர்களையும் கர்த்தர் தப்புவிக்கச் சித்தம் கொண்டு இந்த நோவாவோடு கூட உடன்படிக்கை செய்கிறார் (ஆதி. 6:18). வரும் அழிவிலிருந்து இவர் தன்னையும், தன்னை சார்ந்தவர்களையும் தப்புவித்துக் கொள்ளும்படியாக செய்ய வேண்டிய காரியங்களையும் கர்த்தர் இவருக்கே சொல்லுகிறார். அதன்படி அழிவுக்குத் தப்பும்படியாக பேழையை இவர் ஆயத்தம் பண்ணுகிறார். ''விசுவாசத்தினாலே நோவா தற்காலத்திலே காணாதவைகளைக் குறித்துத் தேவ எச்சரிப்புப் பெற்று பயபக்தியுள்ளவனாகி, தன் குடும்பத்தை இரட்சிப்பதற்கு பேழையை உண்டுபண்ணினான்' (எபி. 11:7).

'தேவன் தனக்கு கட்டளையிட்டபடியெல்லாம் செய்து முடித்தான் என்றும் வேதத்தில் எழுதியிருக்கிறது (ஆதி 6:22)

நீதிமானும் உத்தமனுமாயி ருந்தான்

என் கட்டளைகளின்படி நடந்து, என் நியாயங்களைக் கைக்கொண்டு உண்மையாயிருப்பானாகில் அவனே நீதிமான், அவன் பிழைக்கவே பிழைப்பான் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார் (எசே. 18:9) என்று எழுதியிருக்கிறபடி இவர் கர்த்தர் தனக்குக் கட்டளையிட்டபடியெல்லாம் செய்து முடித்ததினாலே 'இந்த சந்ததியில் உன்னை எனக்கு முன்பாக நீதிமானாகக் கண்டேன்' [ஆதி. 7:1] என்று கர்த்தரும் இவரைக் குறித்து சாட்சி கொடுத்தார். அவர் பேழையை ஆயத்தம் பண்ணிக் கொண்டிருந்த நாட்களில் அமர்ந்திராமல் அந்நாட்களிலிருந்தவர்களுக்கு நீதியைப் பிரசங்கித்தவராகவுமிருந்தார்' (2 பேது. 2:5).

இவர் இவ்விதமாக நீதியைப் பிரசங்கித்த போதும் இவருடைய சத்தத்துக்கு ஒருவரும் செவி கொடுக்காமல் புசித்தும், குடித்தும், பெண் கொண்டும், பெண் கொடுத்தும் ஜலப்பிரளயம் வந்து அனைவரையும் வாரிக் கொண்டு போகுமட்டும் உணர்வற்றவர்களாகவே அந்நாட்களிலிருந்தவர்கள் இருந்தார்கள் (மத். 24:38,39).

நோவாவும் அவர் குடும்பமும் பேழைக்குள் பிரவேசித்தபோது அறிவற்ற மிருக ஜீவன்களும் பேழைக்குள் பிரவேசித்தன.

ஆனால் நன்மை, தீமை அறியக்கூடிய ஞானமுள்ள மனிதரில் ஒருவராகிலும் கூட அந்தப் பேழைக்குள் பிரவேசிக்கவில்லை. அவர்களுடைய ஞானமும், அறிவும் அவர்களை அழிவினின்று தப்புவிக்கும்படி அவர்களுக்கு பிரயோஜனமாயிருக்கவில்லை. அவர்கள் கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டாலும், நோவாவின் சத்தத்திற்கு செவிகொடுத்து, அவரிடம்கடந்துவர மனமற்றிருந்த படியினாலே அவர்கள் கர்த்தருடைய சத்தத்திற்கு கீழ்ப்படியாதவர்களானார்கள். உயிரோடிருக்கிறவைகள் அழிவினின்று காக்கப்படும்படி நோவாவிடத்தில் வரவேண்டுமென்பது தேவ நியமமாகும் [ஆதி. 6:20]. இவர்கள் நோவாவின் சத்தத்திற்கு கீழ்ப்படிந்து, நோவாவோடு சேர்ந்து கொள்ளாததினாலே அழிவைக் கண்டார்கள்.

(தொடரும்)

இதன் பொருள் அர்த்தம் · புதிய எருசலேம் ஸ்தோத்திரம்



# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம் (தொடர்ச்சி)

இராஜ்ய சங்கத்தின் தீர்மானங்கள் லூத்தரைப் பயமுறுத்தவில்லை, தற்காவலுக்காக இராயனுக்கு விரோதமாகச் செய்த உடன்படிக்கைக்கும் அவர் சம்மதிக்கவில்லை. சுவிசேஷத்தைப் பட்டய பலத்தால் நிலைநிறுத்துவது நியாயமில்லை எனறும சுவிசேஷப் பிரபுக்களுக்கு ஞாபகப்படுத்தினார். ஆரம்பத்திலிருந்து லூத்தர் சத்தியம் இரு திறத்தாரின் இணக்கமின்றிச் சாதிக்கப்பட்டால் முடிவில் ஜெயமடையுமென்று உறுதியாய் நம்பினார். அவர் மனுஷனையல்ல, தேவனையே முழுவதும் நம்ப மனமுள்ளவராய் இருந்தார். ஆகையால் திரு இராப்போஜனத்தில் கிறிஸ்துவின் சரீரமும் இரத்தமும் பிரசன்னமாய் இருக்கிறதில்லை என்று போதித்த ஸ்த்ராஸ்புர்க் சாக்கிர

மெந்தியரோடு சுவிசேஷப் பிரபுக்கள் ஐக்கியம்பண்ணின ஒப்பந்தம் பரிச்சேதம் கூடாதென்று சொன்னார்.

## அதி: 29. மார்புர்க்கில் நடந்த சம்பாஷணை:

நாம் மேலே கண்டபடி, கார்ல்ஸ்தாத் செய்த இடஞ்சலால் சீர்திருத்தம் சீக்கிரம் விருத்தியடையாமல் தாமதப்பட்டது. திரு இராப்போஜன விஷயமாக அவன், 'கிறிஸ்து, 'இது என் சரீரம்' என்று சொன்னபோது அவர் தன் விரலால் தன் சரீரத்தைச் சுட்டிக்காட்டிச் சொன்னார்' என்று போதித்தான். இது கிறிஸ்துவின் தெளிவான வார்த்தைகளுக்கு விரோதமாயிருக்கிறது. ஏனென்றால், வாங்கித் தின்னுங்கள், இது என் சரீரம் என்று கிறிஸ்து சொன்னபோது, இந்த வார்த்தைகள், நான் கொடுக்கிற இது என் சரீரம் என்று தெளிவாய் அர்த்தமாகிறது.

கார்ல்ஸ்தாத்தும், லுத்தரும் பல சமயங்களில் வெளிவேஷமாய் இராசியானார்கள் லுத்தர் எப்போதும் தயாளமாய், நியமகப் பிரபுக்களாகிய ப்ரெதரிக், யோவான் என்பவர்களோடு கார்ல்ஸ்தாத்துக்காகப் பரிந்து பேசினார். குடியானவர்களுடைய கலக முடிவில் அதிகாரிகள் கார்ல்ஸ்தாத்தும் ஒரு கலகக்காரனானபடியால் அவனை ஆக்கினைக்குள்ளாக்கத் தயாராயிருந்தபோது லுத்தர் கடைசி விசையாகப் பரிந்து பேசி வித்தன்புர்க்குக்கு சமீபத்தில் குடியிருக்க உத்தரவு வாங்கிக் கொடுத்தார்.

மேலும் 1526 – ம் வருஷம் பிப்ரவரி மாதம் லுத்தர் கார்ல்ஸ்தாத்தின் குழந்தைக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். அப்பொழுது மெலாங்தன் சாஸ்திரியாரும் லுத்தருடைய மனைவியும் ஞானத்தகப்பன் தாய்மாராக நின்றார்கள். ஆனால் இவ்வளவு நன்றிக்கு அருகன் அல்லாத விதமாய் அவன் எப்போதும் நடந்து கொண்டான் அவன் அக்காலத்தில் எல்லாப் பொதுஜன வேலையையும் விட்டு நீங்கி ஏகாந்தமாய் மறைந்திருந்தான். அவன் 1541 – ம் வருஷம் பாசல் பட்டணத்தில் மரணமடைந்தான். என்றாலும் கார்ல்ஸ்தாத் எடுத்திருந்த போராட்டத்தை மற்றவர்கள் தொடுத்துக் கொண்டார்கள். அவர்களில் எக்கோலாம்பாடியுசும் விசேஷித்தவர்கள். சுவிங்கிலியும் அனாவசியமான விஷயங்களில் அவர்கள் மிதமிஞ்சின எச்சரிக்கை காட்டினார்கள்.

அச்சமயத்தில் சூரிக் பட்டணத்தில் பிரசங்கியாயிருந்த சுவிங்கிலி, தேவாராதனையில் பாடுதல், கின்னரம் வாசித்தல், கோவில் மணி அடித்தல், ஆகியவைகளுங் கூடத் தகாதென்று வாதாடினான். ஆனால் திரு இராப்போஜன விஷயமாக, இராப்போஜன கட்டளையில் 'இது என் சரீரம்' என்கிற வார்த்தைகள் அடையாளம் என்று அர்த்தப்படுகிறதென்று சொன்னான். சுவிங்கிலியும் கார்ல்ஸ்தாத்தைப் போலவே தன் கொள்கையை ஸ்தாபிக்க யோவா. 6:63 அதாவது மாம்சம் ஒன்றுக்கும் உதவாது என்கிற வாக்கியத்தைத் தனக்கு ஆதாரமாக எடுத்துச் சொன்னான்.

ஆனால் இந்த வாக்கியம் கொஞ்சங் கூடப் பரிசுத்த இராப்போஜனத்தைப் பற்றிப் பேசுகிறதில்லை. அவன் 1525-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 13-ம் தேதி இரவு ஒரு மனுஷன் தன் படுக்கைப் பக்கத்தில் நின்று, 'நீ ஏன் உன் பிரதிவாதிக்கு யாத். 12:11 ஐ அதாவது: இது கர்த்தருடைய பஸ்கா என்னும் வாக்கியத்தை எடுத்துக் காட்டவில்லை என்று சொப்பனத்தில் தன்னைக் கேட்டதாகச் சொன்னான். அவன் தன் சொப்பனத்தை வெளிப்படுத்தும் தரிசனமாக, அதாவது தேவ போதனையாக நினைத்து, இந்த வாக்கியத்தில் காணப்படும் 'இருக்கிறது' என்கிற இணைமொழி தெளிவாக ஒப்பனையாயிருந்தது என்கிற அர்த்தம் கொடுக்கிறதென்று சொல்லி இந்த எதிர் மறுக்கக் கூடாத ருபகாரத்தைத் தான்

கண்டு கொண்டதாக மனேபாவனை செய்து கர்த்தருடைய இராப்போஜன கட்டளையில் 'இது என் சரீரமாயிருக்கிறது' என்னும் வாக்கியத்திலிருக்கும் 'இருக்கிறது' என்கிற பதமும் உவமையாய் வியாக்கியானம் செய்யப்பட வேண்டுமென்று சொன்னான்.

இதுவுமன்றி, ஒரு விசுவாசி கிறிஸ்துவின் சரீரத்தையும் இரத்தத்தையும் ஆவிக்கடுத்த விதமாய்ப் பெற்றுக் கொள்ளுகிறான் என்று போதித்து, ஆனால் லூத்தர் அப்பமும், இரசமும், சரீரமும் இரத்தமுமாக மாறிப்போகிறதென்கிற பாப்புமார்க்கப் போதகத்தைப் போதித்தாரென்று ஜாடையாகச் சொல்லி ஆகடியம் பண்ணினான்.

திரு இராப்போஜனத்தில் ஆசீர்வதிக்கப்பட்ட பிறகு அப்பமும், ரசமும், சரீர இரத்தமாக முற்றிலும் மாறி, பிறகு அப்பமும், ரசமும் அங்கே இருக்கிறதில்லை என்கிற பாப்பு மார்க்கப் போதகத்தை வெகுகாலத்திற்கு முன்னே லூத்தர் விட்டொழித்தார்.

அவர் இப்போது போதித்தது என்னவென்றால், திரு இராப்போஜனத்தில் அப்பத்திலும், ரசத்திலும், அப்பத்தோடும், ரசத்தோடும், அப்பத்திற்குள்ளும், ரசத்திற்குள்ளும் பிரசன்னமாயிருக்கிற கிறிஸ்துவின் மெய்யான சரீரத்தையும், இரத்தத்தை திரு விருந்தாளிகள் வாங்கிப் புசித்துக் குடிக்கிறார்கள் என்பதே.

[தொடரும்]



"இப்படியிருக்க, எவன் அபாத்திரமாய்க் கர்த்தருடைய அப்பத்தைப் புசித்து, அவருடைய பாத்திரத்தில் பானம்பண்ணுகிறானோ, அவன் கர்த்தருடைய சரீரத்தையும், இரத்தத்தையும் குறித்து குற்றமுள்ளவனாயிருப்பான்" (1 கொரி. 11:27).





# வேதபாடம் (தொடர்ச்சி)

## 2. இஸ்ரவேலின் இரண்டாம் படையெடுப்பு யோசு. 9:1-10,14:-

தென் திசையில் படையெடுப்பு தொடங்கு முன் கிபியோனியர் இஸ்ரவேலருக்குப் பயந்து தங்கள் பாதுகாப்புக்காக ஒரு தந்திரத்தைக் கையாண்டார்கள். எருசலேமுக்கு வடக்கே 6 மைல் தூரத்தில் கிபியோன் இருந்தும் (யோசு. 10:2) 'நாங்கள் தூர தேசத்திலிருந்து வந்தவர்கள்' என்று கூறி யோசுவாவையும் இஸ்ரவேல் ஜனங்களையும் ஏமாற்றி நம்பப் பண்ணினார்கள். இஸ்ரவேலருக்கு தங்களை அடிமைகளாக்கிக் கொண்டார்கள். அதைக் குறித்து தேவனிடம் விசாரியாமல் யோசுவாவும் பிரபுக்களும் கிபியோனியருடன் உடன்படிக்கை செய்து கொண்டார்கள். (யோசு. 9:14,15). இது நமக்கு ஒரு எச்சரிப்பு. நாம் சிறிய காரியங்களானாலும் தேவனிடம் விண்ணப்பம் பண்ண வேண்டும் என்று வேதம் எச்சரிக்கிறது.

யோசுவா, இஸ்ரவேலர்களின் தவறுதலினால் கிபியோனியர் விறகு வெட்டுகிறவர்களும், தண்ணீர் எடுக்கிறவர்களாகவும் நியமிக்கப்பட்டார்கள் (யோசு. 9:16-27). கிபி

யோனியர்களுக்கு தேவனுடைய நாமத்தில் இட்ட ஆணை மாறாதது. அதை மீறி செயல்படக் கூடாது. அப்படி சவுல் அரசன் செயல்பட்டதினால் சவுலின் குடும்பத்தாரின் மேல் சாபம் வந்தது, தேசத்திலும் பஞ்சம் வந்தது 2 சாமு 21-ம் அதிகாரம். தேவன் நீதியுள்ள நியாயாதிபதியாக இருக்கிறார்; அவரிடத்தில் அநீதியில்லை [சங். 48:10].

கிபியோனியர் இஸ்ரவேலரோடு உடன்படிக்கை செய்ததைக் கேள்விப்பட்ட கானானின் இராஜாக்கள் கிபியோனியருக்கு விரோதமாய் எழும்பினர். யுத்தத்தில் கிபியோனியருக்கு உதவி செய்ய யோசுவா சம்மதித்தார். வெற்றியளிப்பேன் என்று தேவனும் வாக்களித்தார் [யோசு. 10:8].

சர்வ வல்லமையுள்ள தேவனால் கூடாத காரியம் ஒன்றுமில்லை. எமோரியரின் ஐந்து இராஜாக்களை முறியடிக்கும்படி தமது தாசனாகிய யோசுவாவுக்காக தேவன் பகல் காலத்தை நீடிக்கச் செய்தார். சூரியனும், சந்திரனும் தன் தன் நிலையில் தரித்து நின்றன. எதிரிகள் முறியடிக்கப்பட்டார்கள். ஓடிப்போகிற எதிரிகள் மேல் வானத்திலிருந்து கற்கள் விழுந்தன. ஒரு மனிதனுடைய சொல்லைக் கேட்டு சூரியனும், சந்திரனும் நின்றது வேதாகமத்தில் காணப்படும் பகிரங்க அதிசயமாகும் (யோசு. 10:10-14). கிபியோனியர்களுக்கு இரட்சிப்பு கிடைத்தது.

அந்த ஐந்து இராஜாக்களையும் பிடித்து வந்து, அவர்கள் கழுத்துகளின் மேல் இஸ்ரவேலின் யுத்த மனுஷரின் அதிபதிகளின் கால்களை வைக்க யோசுவா கட்டளையிட்டார் [யோசு. 10:15-25]. இது சத்துருக்கள் கீழடக்கப்பட்டதற்கு அறிகுறியான செய்கையாகும்; அந்த இராஜாக்கள் அழிக்கப்பட்டார்கள்.

மேலும் ஏழு இராஜாக்களை யோசுவாவும் யுத்த ஜனங்களும் தேடி சென்று முறியடித்து சங்கரித்தார்கள் (யோசு. 10:28-43). கர்த்தர் இஸ்ரவேலுக்காக யுத்தம் பண்ணினார் [யோசு. 10:14,42]. அந்த தேசங்களெல்லாம் யோசுவாவினால் பிடிக்கப்பட்டது. அந்தகார சக்திகளின் மேல் கிறிஸ்துவின் வெற்றிகளையும் விசுவாசிகள் இயேசுகிறிஸ்துவின் மூலம் அடையும் வெற்றிகளையும் குறித்த ஒரு உருவகம் இதில் உண்டு. சிறந்த ஒரு வெற்றியைக் குறித்து நாம் திருப்தியடைந்து விடாதபடி சிதறிக் கிடக்கும் சத்துருக்களை பேய்களை நாம் தேடிப்போய் முறியடித்து வெற்றிகொள்ள வேண்டும்.

பாவத்தின் மீதான காரியங்களை நாம் ஆராய்ந்து பார்த்து தேடி, தேடி முறியடிக்க வேண்டும். பாவத்தின் மேல் பூரண வெற்றியடையுமட்டும் தேவன் நமக்கு வல்லமை தந்தருள்வார். சுதந்தரிக்க வேண்டிய எல்லா முழுவதையும் சுதந்தரிக்க வேண்டும். கர்த்தர் கட்டளையிட்டபடியே யோசுவா செய்தார் [யோசு. 10:40]. பின்பு யோசுவாவும் யுத்த ஜனங்களும் கில்காலிலிருக்கிற பாளையத்திற்குத் திரும்பினார்கள் (யோசு. 10:43). கர்த்தர் கட்டளையிட்டபடி வெற்றியடையும் வரை இளைப்பாறக் கூடாது. அசதியாயிருக்கக் கூடாது. கர்த்தருடைய வேதத்தின்படி நடக்கிற உத்தம மார்க்கத்தார் பாக்கியவான்கள் [சங் 119:1].

---

3. மூன்றும் படையெடுப்பு வடதிசை யோசுவா 11:1-23:-

---

வடக்கேயுள்ள ஒரு பெரிய இராணுவக் கூட்டத்தோடு, தெற்கே தோல்வியுற்ற சேனைகளில் மிஞ்சியிருந்தவர்கள் சேர்ந்து கொண்டனர். ஏக கூட்டமாய் இஸ்ரவேலரோடு

யுத்தம்பண்ண வந்து மேரோம் என்னும் ஏரியண்டை வந்து பாளயமிறங்கினார்கள் (யோசு. 11:1-5). திரும்பவும் தேவ வாக்கினால் யோசுவா தைரியமடைந்து அப்பெரிய கூட்டத்தை முற்றிலுமாய் முறியடித்து வெற்றி சிறந்தார் (யோசு. 11:6-9).

இந்த யுத்தத்தில் அற்புதம் ஒன்றும் செய்யப்படவில்லையென்று காண்கிறோம் கர்த்தர் மேல் தங்கள் முழு நம்பிக்கையும் வைக்க இஸ்ரவேலர்கள் பயிற்றுவிக்கப்பட்டனர். சுவிசேஷத்தை அறிவிக்கையில் ஆரம்ப காலத்தில் ஆண்டவர் அநேக அற்புதங்களை அனுமதித்தார். பின்பு விசுவாசத்தினால் முன்னேற வேண்டும். ஆரம்ப காலத்தில் நடந்ததுபோல் இல்லையே என்று சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. ஆவியின்பட்டயத்தை உபயோகிக்க வேண்டும். கர்த்தர் அற்புதங்களை நடப்பிப்பார்; வெற்றியைக் கட்டளையிடுவார். தேவனுடைய யுத்தமுறைகள் வெவ்வேறாக இருக்கிறது. ஒரே மாதிரி அல்ல. தேசம் முழுவதும் இப்பொழுது இஸ்ரவேலரின் ஆதீனத்துக்குள்ளானது. ஏனாக்கியர் போன்ற கொடிய சத்துருக்களும் முறியடிக்கப்பட்டனர் (யோசு. 11:22).

கட்டுப்பாடான எதிர்ப்புகள் யாவும் சிதறுண்டு போயின. தேசம் யுத்தமின்றி ஓய்ந்திருந்தது (யோசு. 11:23). சொந்தமாக்கிக் கொள்ள வேண்டிய பிரதேசம் இன்னும் அதிகமாயிருந்தது (யோசு. 13:1). இன்னும் குடியேறாமலிருக்கும் பகுதிகளைக் குறித்து நடவடிக்கை எடுப்பது தனித்த கோத்திரங்களின் கடமையாயிருந்தது. விசுவாசி எப்பொழுதும் விழிப்புள்ளவனாக இருக்க வேண்டும். ஏனென்றால் சத்துரு அடியோடு நிர்மூலமாகவில்லை.

[தொடரும்]



# தேவனுடைய அதிசயங்களும் அற்புதங்களும்

**கர்த்தருக்கு ஸ்தோத்திரம்**

நான் ஒரு ரோமன் கத்தோலிக்க குடும்பத்தைச் சேர்ந்தவன். எனக்கு சிறுவயதிலிருந்து ஆஸ்மா நோய் இருந்தது. புதிய எருசலேம் சபையைக் கண்டு கொண்டு, ஊழியத்திற்கு ஒப்புக் கொடுத்தேன். 1997 இல் கோயம்புத்தூரில் நடந்த ஊழியர் மாநாட்டில் தலைமை அப்போஸ்தலர் அவர்கள் என்னை அழைத்து அபிஷேகிக்கும் போது என்னிடத்திலுள்ள வியாதி குணமடைந்தது. இப்பொழுது நான் பூரண சுகத்துடன் தேவனை ஸ்துதிக்கிறேன்! கர்த்தருக்கே மகிமை!

இப்படிக்கு,
Eld. Bro. M. கிறிஸ்டி ஞானசௌந்தர்,
புதிய எருசலேம் சபை,
திருச்சி கிளை.

---

என்னுடைய பெயர் சண்முகநாதன். நான் இந்து குடும்பத்தைச் சேர்ந்தவன். எனக்கு செய்வினை வைத்து மூன்று மாதம் பைத்தியம் பிடித்து இறக்கும் தருவாயில் புதிய எருசலேம் சபை பரிசுத்தவான்கள் என்னை சந்தித்து, சபைக்கு அழைத்துச் சென்று ஜெபித்தார்கள். எனக்கு இயேசு கிறிஸ்து செய்வினையிலிருந்து விடுதலை கொடுத்தார். இப்பொழுது இரயில்வே வேலைக்குச் செல்கிறேன். குடும்பமாக இரட்சிக்கப்பட்டு புதிய எருசலேம் திருச்சபையில் ஓர் அங்கமாக இருக்கிறேன்.

இப்படிக்கு,
M. சண்முகநாதன் (எலியோசர்),
புதிய எருசலேம் சபை,
திருச்சி கிளை.

ஈஸ்டர் செய்தி:-

# இயேசுவின் மரணம் ஒரு பலி

பலி மனித வரலாறு உடையது. மனிதன் தோன்றியது முதல் பலியிடுதலும் ஆரம்பமாயிற்று. ஆதி மனிதர்களாகிய ஆபேல், நோவா, ஆபிரகாம் முதல் இஸ்ரவேலர்கள் சரித்திரத்தில் பலியிடுகிறதைக் காணலாம் (ஆதி. 4:4; 8:20; 15:9-21; யாத். 24:5-8). பலி தேவனால் ஆரம்பமாயிற்று என்று சொல்வாருமுண்டு. ஆதாம், ஏவாள் பாவம் செய்த போது, ஆதாம் ஏவாளுக்கு தேவன் தோலினால் உடைகளை உண்டாக்கி உடுத்தியது (ஆதி. 3:21) தேவன் அவர்களுக்காக ஒரு மிருகத்தை பலியிட்டார் என்பது.

பலி மனிதர்களால் ஆரம்பமாயிற்று என்று சொல்பவர்கள் ஆபேல் பலியிட்டதை குறிப்பிடுகிறார்கள் (ஆதி. 4:4). கர்த்தர் ஆபேலின் பலியை அங்கீகரித்தார். விசுவாசத்தினாலே ஆபேல் தேவனுக்குப் பிரியமான பலியை செலுத்தினார் எபி. 11:4. மனித இனம் வளர ஆரம்பித்ததும் தேவனண்டை சேரும் வழி பலியைத் தவிர வேறு இல்லை என்று மனிதர்கள் உணர ஆரம்பித்தார்கள். இஸ்ரவேலர்களுக்கு தேவனே பலியிடும் முறைகளைக் கட்டளையிட்டதினால் பலிமுறை தேவனாலே ஆரம்பமாயிற்று என்று அறிகிறோம்.

புற ஜாதிகளிலும் பலி இருந்தது (யாத். 18:12; எண். 23ம் அதி: யோபு 42:8). தேவனோடு ஒப்புரவாக பலி அவசியம் என்று மக்கள் உணர்ந்தனர். பழைய புதிய ஏற்பாட்டின் காலத்தில் பலிகள் செலுத்தப்பட்டு வந்தன.

1. சாலமோன் தேவாலயம்.

2. செருபாபேல் கட்டின தேவாலயம்.

3. ஏரோதின் தேவாலயங்களில் பலிகள் செலுத்தப்பட்டு வந்தன, அவைகள் அநேகமாயிருந்தது.

---

## பலிகள் இரண்டு வகைப்படும்:-

---

1. சுகந்தவாசனையான பலி:- சர்வாங்க தகனபலி (லேவி. 1:1,2,9,13,17), போஜன பலி லேவி. 2:9, சமாதான பலி லேவி. 3:1-5.

2. சுகந்தவாசனையற்றபலி:- பாவ நிவாரண பலி (லேவி. 4:20,26,31,35), குற்ற நிவாரண பலி (லேவி. 5:10,13,16 19); இன்னும் ஏறெடுத்துப் படைக்கும் பிரதிஷ்டைப் பலிகள், குழந்தை பிறப்பு, தீட்டு, பிரேதத்தை தொட்ட தீட்டு நீங்க, குஷ்டம் நீங்கி சொஸ்தமானவைகளுக்கும் பலிகள் செலுத்தப்பட்டன.

பலியின் நோக்கம் பாவ மன்னிப்பே பாவ உணர்வே பாவமன்னிப்பைக் கொண்டு வரும். பாவ உணர்வில்லாமல் வெறுமனே செய்யப்படும் பலிகளினால் எந்த பிரயோஜனமுமில்லை, பாவ மன்னிப்பு உலகில் தண்டனையை நீக்கும் என்று எண்ணக் கூடாது, பாவத்தின் தண்டனையை மனிதன் அநுபவிக்க வேண்டும். ஆனால் கடவுள் சமுகத்தில் பாவ உணர்வுடன் கீழ்ப்படிவதினால் பலி நீதியாகிறது. மனிதன் திரும்ப திரும்ப பாவம் செய்வதினால் திரும்ப திரும்ப பலி செலுத்திக் கொண்டிருந்தான் (எபி. 9:9; 10:1-4,11), பலியினால் நியாயப்பிரமாணத்தினால் மனிதனை நல் வழிப்படுத்த முடியவில்லை.

ஆகையால் இன்னொரு மார்க்கம் தேவையாயிருந்தது. பழைய ஏற்பாட்டின் பலிகள் வரப்போகிற மிகப் பெரிய பலியை எதிர் நோக்கி நின்றன. புதிய ஏற்பாட்டில்

இறைவன் இயேசுவாய் வந்து பழைய நியமத்தை அகற்றி பலியின் நோக்கம் இன்னதென்று உணர்த்தினர் (மத்.5:23,24; 9:13; 12:7). புதிய நியமத்தை ஸ்தாபித்தார் (மத். 26:28; மாற். 14:24; லூக். 22:20). தாம் மனுமக்களுக்காக சிலுவையில் மரிப்பது பலி என்று அறிவித்தார்.

ஆம். இயேசு கிறிஸ்துவின் மரணம் ஒரு பலி (ரோம. 3:25,26; 1 யோவா. 2:2; 4:10). இந்நாளிலே (மார்ச், ஏப்ரல் மாதத்தில்) இயேசு கிறிஸ்துவின் மரணப்பாடுகளை தியானித்தோம் நல்லதே. பலியிடுகிறவன் பலியோடு கூட இணைய வேண்டும். தனக்குப் பதிலாக இந்த ஜீவன் (பலி) பலியிடப்படுகிறது. என்னுடைய பாவத்துக்குத் தண்டனை மரணமே. நான் மரிப்பதற்குப் பதிலாக இந்த மிருகம் மரிக்கிறது (பலியிடப்படுகிறது) நான் மரித்தேன் என்று அர்த்தம், இனி அந்த பாவத்தைச் செய்யமாட்டேன் என்று பாவ உணர்வோடு மனந்திரும்பும் போது பலி அங்கீகரிக்கப்பட்டு பலியினால் உண்டாகும் ஆசி இவன் மேல் இறங்கி வரும்.

1. கிறிஸ்துவின் மரணம் ஒரு பலி: (மத்: 26:28; மாற். 14:24; 1 கொரி. 11:25; எபி. 9: 11-14,26). இரட்சிக்கும் வல்லமையுள்ளது (ரோம. 3;25; 5:9,10). பாவியில் மனந்திரும்புதலைக் கொண்டு வருகிறது.

2 அதிலிருந்து (பலியிலிருந்து) எழும் ஆசி: பாவ மன்னிப்பைக் கொண்டு வரும் பாவமன்னிப்பின் மூலம் நீதிமானாகுதல் பாவமன்னிப்பின் மூலம் பரிசுத்த ஆவியையும் பரிசுத்தாவின் வரங்களையும், கனிகளையும் கொண்டு வரும் (அப். 10:43; லூக். 24:47; அப். 13:38,39; 2:38,39; கலா. 5:22,23).

3. இவ்வாசியை பெறுவதற்கு தகுதி:-

பாவ உணர்வும், இயேசுவானவர் மேலுள்ள விசுவாசமும் தேவை. புதிய ஏற்பாட்டு போதனையாவும் இதனையே சார்ந்துள்ளது (அப். 16:21; யோவா. 1:12; அப். 2:28,29).

4. பலியின் தன்மை:- ஈடேற்றம் (மாற். 10:42-45; மத். 20:28), பழைய உடன்படிக்கை இரத்தத்தினால் நிறைவேறினது போலவே புதிய உடன்படிக்கையும் இரத்தத்தின் மூலம் நிறைவேறிற்று.

5. பலி நிறைவேறின வகை: இயேசுவானவரின் வாழ்க்கையே ஒரு பலியாக இருந்தது (எபே.5:2). இறைவன் மாம்சத்தில் வெளிப்பட்டதே பெரிய தியாகமாகும். அவருடைய வாழ்க்கை மனுமக்களுக்காக ஒழுக்கமான பரிசுத்த வாழ்க்கையாகும். பலியின் உச்சக்கட்டமே அவருடைய சிலுவை மரணம், அவருடைய உயிர்த்தெழுதலே கடவுள் அவருடைய பலியை அங்கீகரித்தார் என்பதற்கு அடையாளமாயிருக்கிறது [அப். 3:26; 1 பேது. 1:4,18-21].

இயேசுவே மெய்யான பலி; கர்த்தராகிய இயேசு கிறிஸ்து எனக்காக மரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிக்கிற எவன் மேலும் அப்பலியின் ஆசி வந்திறங்கும். சந்தேகமே இல்லை. என்னே ஆச்சரியம்! வேறு எந்த மதமும், பலிகளும், சீர்திருத்தங்களும், சன்மார்க்கப் போதனைகளும், கல்வியும், கொள்கைகளும், தத்துவங்களும் அளிக்க முடியாத மனந்திரும்புதலையும், பாவ மன்னிப்பையும், விடுதலையையும், சுகத்தையும், ஆறுதலையும், தேவ ஐக்கியத்தையும், ஜீவனையும், ஆசீரையும் கிறிஸ்துவின் பலி கொண்டு வருகிறது. நீங்கள் இயேசுவை விசுவாசிக்கிறீர்களா? இல்லை என்றால் இன்றே அவரை விசுவாசித்து அருள் பெறுவீராக!



# சாட்சி

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். நான் ஒரு C.S.I கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்து, பக்தியுடன் வளர்க்கப்பட்டேன். ஆனால் C.S.I சபைக்கு செல்வதை விரும்பாமல் பக்தியுள்ள C.P.M சபைக்குச் சென்றேன். அங்கு பாடிய பாடல் ஒன்று என் உள்ளத்தை தொட என்னை முழுவதுமாக கர்த்தருக்கு ஒப்புக்கொடுத்தேன். கர்த்தர் என்னை பரிசுத்த ஆவியினால் அபிஷேகித்தார். இதை அறிந்த பெற்றோர், இவளுக்கு அசுத்தஆவி பிடித்து விட்டது என்று தூஷித்தார்கள். அவர்களும் இவ்வனுபவத்திற்குள்வர நான் ஜெபித்தேன். தேவன் கிரியை செய்ய ஆரம்பித்தார்.

ஒரு நாள் என் கடைசி சகோதரன் திடீரென்று வாயில் நுரை தள்ளி வெகு நேரம் அலைக்கழிக்கப்பட்டான். வியாதி என நினைத்து, பல ஆயிரங்கள் செலவழித்தோம். Assembly of God சபைக்கு சென்றோம். மற்றும் பெயர் பிரஸ்தாபமுள்ள பெரிய பெரிய ஊழியக்காரரிடத்தில் அழைத்துச் சென்றோம். இதனால் ஒரு பிரயோஜனம் இல்லாமல் மேலும் பல ஆவிகள் சேர்ந்து கொண்டு அவனையும் குடும்பத்தையும் நாசப்படுத்த ஆரம்பித்தது.

நான் அவனுக்காக கர்த்தரிடத்தில் போராடி ஜெபித்து வரும் நாட்களில் கர்த்தர் 1975 ஜனவரி மாதம் ஒரு சொப்பனம் தந்தார். தேவ தூதன் ஒருவர் என் வீட்டு மேல் மாடியில் பறந்து கொண்டிருக்கிறார். அவரின் கால்களைப்பற்றி பிடித்து கீழே இழுக்கப் பிரயாசப்படுகிறேன். அவர் தனனை விடுவித்துக் கொண்டு மேலே சென்று ஒரு லட்டர் கவர் ஒன்றை கீழே போடுவதைக் காண்கின்றேன். அதை எடுத்துப் பார்த்த போது நான் அறியாத பாஷையில் இருந்தபடியால் ஏமாற்றம் அடைந்தேன். ஆனால் ஏற்ற காலத்தில் இச்செய்தியை அறிந்து கொள்ள தேவன் கிருபை செய்தார்.

இந்நாட்களில் சபைக்குரிய காரியங்களில் உற்சாகமாக இருந்த போதிலும் சரியான போதனையும், வழி நடத்துதலும் இல்லாமையால் சாத்தான் வேறு விதமாய் என்னை உபயோகித்துக் கொண்டிருந்தான். வாலிப சங்கத்தில் செய்தி கொடுக்கவும், கன்வென்ஷன்களிலும், சபைகளிலும் பாடல்கள் ஆரம்பிக்கவும் போன்ற காரியங்களில் உற்சாகமாக இருந்தேன். ஆனால் என் ஜீவியத்தில் எந்த வித மாற்றமும் இல்லை; பழைய மனுஷியாகவே இருந்தேன் நான் இப்படி இருப்பது தவறு, ஒரு வெற்றியுள்ள கிறிஸ்தவ வாழ்க்கை வாழ வேண்டும் என உள்ளத்தில் வாஞ்சித்து ஜெபித்துக் கொண்டிருந்தேன்.

இச்சமயத்தில் எனக்கு திருமணம் நடந்தது. என் கணவன் ஒரு இந்து குடும்பத்தைச் சேர்ந்தவர். ஆனால் சிறுவயதில் பள்ளி ஆசிரியர் மூலம் கிறிஸ்து இயேசுவை ஏற்றுக் கொண்டதினிமித்தம் வீட்டை விட்டு விரட்டியதோடு பல ஏவல் வேலைகளைச் செய்திருக்கிறார்கள். என் கணவருக்கு இயேசுவின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை இருந்த போதிலும், பாவத்தைக் குறித்தும், மனந்திரும்புதலைக் குறித்தும் தெளிவாகக் கூறி, வழி நடத்த சரியான போதகர்கள் இல்லாதபடியால் சாத்தானால் தாக்கப்பட்டு, சரீரத்தில் பல உபாதிகளை அநுபவித்துக் கொண்டிருந்தார்.

இந்நிலையில் திருமணமாகி வேலை பார்க்க திருச்சி சென்று அங்கே தங்கினோம். அப்பொழுது தினமும் 4 மணிக்கு ஜெபிப்

போம். ஒரு நாள் என் கணவர் ஜெபத்தில் அந்நிய பாஷை பேசினர். அது எனக்கு எரிச்சலை உண்டாக்கிற்று. அசுத்தாவி பேச தொடங்கிற்று. இதற்காக ஜெபித்த பொழுது என் மேல் அவருக்கு வெறுப்பு உண்டாயிற்று. இதனால் தொல்லைகள் ஏற்பட்டது. என் வாழ்க்கை கசப்பாயிற்று.

நாங்கள் இருவரும் C.P.M சபைக்கு சென்று கொண்டிருந்தோம். அவர்களால் இப்பிரச்சனைக்கு வழி காட்ட முடியவில்லை. அங்கு செல்வதை நிறுத்தி விட்டு, இனி எந்த சபைக்கும் செல்வதில்லை என்ற முடிவுக்கு வந்தேன். ஒரு நாள் வெகுநேரம் ஜெபித்துவிட்டு படுக்கைக்கு சென்றேன். அதிகாலையில் அசரீரியாக ஒரு குரல் கேட்டு விழித்தேன். அது 'அவன் என் மேல் வாஞ்சையாய் இருக்கிறபடியால் அவனை விடுவிப்பேன்' இந்த வார்த்தை எனக்கு மிகுந்த ஆறுதலளித்தது. பின் உண்மையான சபையை, உண்மையான ஊழியர்களை எனக்கு காண்பியும் என்று ஜெபித்தேன். அழுது ஜெபித்த போது வெண் வஸ்திரம் தரித்த இரண்டு ஊழியர்கள் காணப்பட்டார்கள்; இவர்கள் எந்த சபை ஊழியர்கள் என்று திகைத்துக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் என் கணவருக்கு தெரிந்த நண்பர் எங்களைப் பார்க்க வந்திருந்தார். அவரிடம் பிரச்சினைகளை பகிர்ந்து கொண்டோம். அவர், நான் புதிய எருசலேம் சபைக்கு செல்கிறேன். நீங்களும் வாருங்கள், விடுதலை கிடைக்கும் என்று கூறவே நாங்களும் வருவதாக ஒப்புக் கொண்டோம். ஒரு நாள் பஸ்சில் பயணம் செய்யும் போது திருச்சி புதிய எருசலேம் சபை ஊழியர் பவுல் ஐயாவை சந்திக்க நேர்ந்தது. அவர் சபையைப் பற்றி கூறி பள்ளப்பட்டியில் இருக்கும் சபைக்கு போங்கள் என்று அனுப்பினர்.

ஒரு ஆராதனையில் கலந்து கொண்டோம். அந்த நாள் எங்கள் வாழ்வில் ஒரு திருப்புமுனையாக, பொன்னான நாளாக காணப்பட்டது. பாஸ்டர் ஐசக் ஞானையாவை சந்தித்து எங்கள் பிரச்சனைகளை கூறினோம், அவர்கள் எங்களுக்கு ஆலோசனை கொடுத்து, நம்மிடத்தில் பாவம் இருக்கும் வரைக்கும் சாத்தானுக்கு இடமுண்டு.

# ஈரோட்டில் புதிய கிளை

9-1-1998 வெள்ளிக் கிழமையன்று மாலையில் "புதிய எருசலேம் சபையின்" கிளை ஈரோட்டில் திறக்கப்பட்டு, பரிசுத்த ஆராதனை ஸ்தாபிக்கப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

CHIEF APOSTLE **N. LAZAR.**
BOMBAY 78.

நாம் பாவத்தை அதிகாரம் பெற்ற ஒரு தேவ ஊழியரிடத்தில் அறிக்கை செய்து அவர்கள் மூலம் பாவ மன்னிப்பையும், தேவ ஆலோசனையும் பெற்றுக் கொள்ள வேண்டும். தேவன் தம்முடைய ஊழியர்களுக்கு பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் கொடுத்திருக்கிறார் [யோவா. 20:23] என்றார்.

அப்படி வேதத்தில் ஆதாரமிருந்தால் ஏற்றுக் கொள்கிறேன் என்று சொன்னேன். அவர்கள் இந்த வசன ஆதாரங்களை கூறினார்கள் [நீதி. 28:13; 1 யோவா. 1:9; மத். 3:5,6; யோவா. 20:23; ரோம. 10:10; எண். 5:6,7]. உடனே கீழ்ப்படிந்து அறிக்கை செய்தோம். என் கணவர் அறிக்கை செய்யும் போது பலவருடங்களாக கட்டி வைத்திருந்த பொல்லாத ஆவிகள் அலறிக் கொண்டு ஓடியது. பெரிய சமாதானம், விடுதலை உண்டாயிற்று. நாங்கள் பெற்ற இந்த அனுபவத்தை என் குடும்பத்தாரும் பெற்றுக் கொள்ள வேண்டும் என வாஞ்சித்து அறிமுகப்படுத்தினோம்.

ஆனால் அவர்கள் எதிர்த்து, அதைப் பற்றி எழுதாதே என்றும், அது துர் உபதேசம் என்றும் கூறி, சமாதானமிழந்து, என் தந்தை கடைசியில் சமாதானத்தை பெற வாஞ்சித்தும் பெற முடியாமல் மரித்துப் போய் விட்டார்கள். என் சகோதரனும் கேளாமல் சபையைப் பற்றி சொல்லியும், சத்தியத்தை குறித்து சொல்லியும் எங்களை பரியாசம் பண்ணி, துர் சாட்சியை பரப்பினார்கள். துன்மார்க்கரில் ஒருவனும் உணரான், ஞானவான்களோ உணர்ந்து கொள்வார்கள் என்று சத்திய வேதம் கூறுகிறது. முடிவு காலத்திற்காய் முத்தரிக்கப்பட்டும் மறைக்கப்பட்டுமிருந்த இவ்வுபதேசத்திற்கு (பாவ மன்னிப்பின்) கீழ்ப்படிந்தோம். தேவன் எங்களுக்கு இரக்கம் செய்தார்.

சத்தியத்தையும் அறிவீர்கள்; சத்தியம் உங்களை விடுதலையாக்கும் (யோ. 8:32). வசனத்தின்படி பாவ அறிக்கை என்னும் சத்தியமே எங்களை பாவத்திலிருந்தும், சாபத்திலிருந்தும், பிசாசின் கட்டிலிருந்தும் விடுதலையாக்கி, புதிய வாழ்வை அளித்தது. இப்பொழுது நாங்கள் சமாதானத்தோடும், சந்தோஷத்தோடும் வாழ்கிறோம். புதிய எருசலேம் சபையை அறியவும், அப்போஸ்தலர், தீர்க்கதரிசிகளை நேரில் காணவும் கிருபை செய்த தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்துகிறேன்.

...எங்களுடைய ஐக்கியம் பிதாவோடும் அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவோடும் இருக்கிறது நீங்களும் பரிசுத்தவான்களோடும், சபையோடும் ஐக்கியப்பட்டு, பிரச்சினைகள் நீங்கி, வெற்றியுள்ள கிறிஸ்தவ வாழ்க்கை வாழவேண்டுமென்றும், உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கும்] இதை உங்களுக்கு அறிவிக்கிறேன். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக!

இப்படிக்கு,
S/S ஷாண்ட்டி இஸபெல்லா,
C/o புதிய எருசலேம் சபை,
திண்டுக்கல் கிளை.



# அநேகர் அவசியம்

கோணலும், மாறுபாடுமுள்ள இந்த சந்ததிகளின் நடுவே சுவிசேஷ வேலையை செய்யவும், சத்தியத்தை ஸ்தாபிக்கவும், இறைவனுடைய திருப்பணியை நிறைவேற்றவும், ஆவிக்குரிய தலைவனோடே தோளோடு, தோள் சேர்ந்து நின்று இறைப் பணியில் பங்கேற்பது தேவ ஜனங்களின் கடமையாகும். தேவன் ஒருவராய் அதிசயங்களைச் செய்கிறவர். நாமோ ஒன்று பட்டு கிரியை செய்வது அவசியமாகும். தேவ சேவையிலே அநேகர் பங்கேற்க வேண்டியது அவசியம் என வேத வெளிச்சத்தால் விளங்கலாம்.

இந்த லோகத்தில் ஜீவிக்கிற நாம் பற்பல அதிகாரங்களுக்கு உட்பட்டவர்களாக இருக்கிறோம். ஆகையால் பற்பல சமயங்களில் அதிகார பிரபுக்களை நேரில் சந்திக்க வேண்டிய சூழ் நிலைகள் வரும். இச்சமயங்களில் ஒருவராய் சென்று பார்க்காமல் பலரும் உடன் செல்ல வேண்டுவது அவசியம். பாருங்கள் மோசேக்கு தேவனாகிய கர்த்தர் கட்டளை கொடுத்து அனுப்பும் போது, எகிப்தின் ராஜாவை சந்தித்து, தங்கள் கோரிக்கையை தெரிவிக்க, நீயும் இஸ்ரவேலின் மூப்பரும் போக வேண்டும் என்று கர்த்தர் சொன்னார் (யாத். 3:18). தலைவனை தனியே தத்தளிக்க விட்டு தன் தன் காரியங்களை கவனிக்க செய்வது. தகுதியானதல்ல.

ஒவ்வொரு வரும் தனிப்பட்ட நிலையில் மணிக்கணக்காய் தேவ சமுகத்தில் காத்திருந்து ஜெபிக்கலாம், தேவ தரிசனம் காணலாம். ஆனாலும் கூடி ஜெபிக்க வேண்டிய சூழ்நிலைகளில் கூடி ஜெபிக்க வேண்டும். தானியேல் தீர்க்கர், பரலோகத்தின் தேவன் மறை பொருளை வெளிப்படுத்த வேண்டிய அவசியத்தைக் கண்டபோது, இறைவனிடம் இரக்கம் கேட்க, தன் தோழருக்கு காரியத்தை அறிவித்து, ஜெப உதவியைத் தேடினார். கர்த்தர் இரக்கம் செய்து மறை பொருளை தானியேலுக்கு வெளிப்படுத்தினார் (தானி. 2:17,18).

அழிவினின்று தப்பும்படி தேசத்தின் சட்டம் மாற்றப்படும்படியாக, எஸ்தர் ராஜாத்தி ஜனத்தார் கூடி உபவாசித்து ஜெபிக்க வேண்டுகோள் விடுவித்தாள். அநேகருடைய ஜெபத்தால் சட்டம் தலைகீழானது (எஸ். 4:16). நம்முடைய கர்த்தரும் மரணத்தின் வேளை வந்தபோது, தனது சீஷரிடம் ஜெப உதவியைத் தேடினாரே (மத். 26:38-41). சபையார் கூடி ஜெபம் பண்ணியபோது அவர்கள் கூடியிருந்த இடம் அசைந்ததே (அப். 4:31).

விருந்து என்றால் ஏகமாய் கூடுவதும், உபவாச ஜெபம் என்றால் ஓடிப்போவதும் சரியோ? சபையார் உபவாச ஆராதனையையும், விசேஷ ஜெப ஆராதனைகளையும் ஒரு போதும் அசட்டை செய்யக் கூடாது. கூடி ஜெபிப்பதால் அதிக பலனுண்டு.

பெதஸ்தா குளத்தருகே முப்பத்தெட்டு வருஷம் வியாதியாக இருந்தவனை இயேசு குணமாக்கினார். ஆனால் தன்னை இன்னார் என்று காண்பிக்கவில்லை. அவனுக்கு கொடுக்க வேண்டிய உபதேசத்தைக் கொடுக்கவில்லை, காரணம் அவ்விடத்தில் ஜனங்கள் கூட்டமாயிருந்தபடியால் இயேசு விலகியிருந்தார் (யோவா. 5:13).

ஆனால் நாயீன் ஊரின் வாசலருகே மரித்துப்போன ஒருவனை அடக்கம்பண்ண ஊராரில் வெகு ஜனங்கள் போய்க் கொண்டிருக்கையிலே இயேசு அவர்களை சந்தித்தார், பாடையைத் தொட்டார், சுமந்தவர்கள்

நின்றார்கள். அப்பொழுது அவர் 'வாலிபனே எழுந்திரு' என்று சொல்லி மரித்தவனை உயிரோடே எழுப்பினர்.

இந்த இடத்தில் வெகு ஜனம் இருந்த போதிலும் இயேசு மறைந்திருக்கவில்லை. ஏனெனில் அவரோடே அநேக சீஷர்களும், திரளான ஜனங்களும் இருந்தார்கள். கர்த்தர் நாமம் பிரஸ்தாபமடைந்தது. தேவன் மகிமைப்பட்டார் (லூக். 7:11-16). பொது ஜனங்கள் மத்தியிலே உதாரணமாக கன்வென்ஷன் கூட்டங்கள் நடக்கையிலே ஊழியர்கள், திரள் விசுவாசிகள் கூட்டம் எவ்வளவு அவசியம் என்பதை அறியலாம்.

சுவிசேஷ பிரசங்கம் ஒருவர் தான் செய்யப் போகிறார். ஆனால் ஒருவர் மாத்திரம் நின்று பிரசங்கித்தால் எடுபடாது. பாருங்கள் பவுல் கொரிந்து பட்டணத்தில் ஓய்வு நாட்களில் தேவாலயத்தில் போய் ஜனங்களைக் கண்டு, பேசி புத்தி சொல்லி வந்தார். மக்கதோனியாவிலிருந்து சீலாவும், தீமோத்தேயும் பவுலிடம் வந்தபோது, பவுல் ஆவியிலே வைராக்கியம் கொண்டு இயேசுவே கிறிஸ்து என்று யூதருக்கு திருஷ்டாந்தப்படுத்தினர் (அப். 18:4,5). ஒரு வீட்டில் ஸ்தோத்திரக் கூட்டமா, ஜெபக் கூட்டமா, ஆராதனை ஆசீர்வாதமாயிருக்க, பேசுகிறவன் ஆவியில் அனலாய் சத்தியத்தை அறிவிக்க, வைராக்கிய மூட்ட அநேகர் அவசியம்.

கொர்நேலியு என்ற ஒரு சுனவான் தேவ தரிசனம் பெற்று, பேதுருவை அழைப்பித்தார். கொர்நேலியு ஒரு கூட்டத்தைக் கூட்டி பேதுருவுக்காக காத்திருந்தார். அந்த சுனம் பொருந்திய மனிதன் வீட்டுக்கு பேதுருமட்டும் தனியே போய் நின்றால் நன்றாக இருக்குமா? பேதுருவோடே யோப்பா பட்டணத்தாராகிய சகோதரரில் 6 பேர் கூடப் போனார்கள் (அப். 10:23).

இதை வாசிக்கிற தேவ ஜனங்களே கவனிக்க: தேசத்து தலைவர்களை சந்திக்க போகையில், கன்வென்ஷன் கூட்டங்கள் நடத்துகையில், ஜெபக் கூட்டங்கள் ஏற்பாடு செய்கையில், வீடுகளில் கூட்டங்கள் வைக்கையில் சுவிசேஷ ஊழியங்கள் நிகழ்த்துகையில், விசேஷமானவர்களிடம் சத்தியத்தை எடுத்துரைக்கையில் உங்களுடைய பிரசன்னமும், சேவையும் அவசியம் என உணர்ந்து, ஐயா கவனித்துக் கொள்வார், நான் வீட்டில் உட்கார்ந்தே ஜெபிக்கிறேன் என்று சொல்லாதபடி, தேவனுடைய சேவையிலே பங்கேற்று, பலனடையுங்கள்.

## வருந்துகிறோம்

புதுக்கோட்டை கிளை சபையைச் சேர்ந்த பெரியவர் A. ரத்தினம் தமது 77வது வயதில் 11-2 1998 அன்று காலை 4 30 மணியளவில் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். அவரது பிரிவால் வருத்தத்திலிருக்கும் குடும்பத்தாருக்கும், ஊழியர், உறவினருக்கும் ஆறுதல் கூறுகிறோம்.



*சிறுவர் பகுதி:*

# நம்முடைய தாழ்வில் நம்மை நினைத்தவரை துதியுங்கள் சங். 136:23

ராஜா ஒருவர் தனது சேனைகளுடன் ஒரு நாள் வேட்டையாட புறப்பட்டு சென்றார். காட்டின் ஒரு மையத்தில் ஒரு மானை கண்டு, அதை துரத்திச் சென்ற ராஜா வழி தவறி மானைக் காணமல் வழியும் தெரியாமல் திகைத்து, அரண்மனைக்கு எப்படி செல்வது என்ற கலக்கத்தில் இருக்கையில் இருட்டவும் ஆரம்பித்து, குளிரும் தனது வேலையை காண்பிக்க, இவர் தனது குதிரையுடன் அப்படியே நின்று கொண்டிருந்தார்.

தூரத்தில் வெளிச்சம் தெரியவே அங்கே போக முற்பட்டபோது எதிரே ஒரு கரடி தன்னை நோக்கி வரக்கண்டார். கரடியைக் கண்ட குதிரை ராஜாவை விட்டு விட்டு ஒடிப்போய் விட்டது. இவரே கரடிக்கு பாவலா காட்டியபடியே ஒடி வெளிச்சம் தெரிந்த இடம் மட்டும் வந்து சேர்ந்தார். அங்கு விறகு வெட்டி ஒருவர் விறகுகளை போட்டு எரித்து குளிர்காய்ந்து கொண்டிருக்கக் கண்டு, தன்னை காப்பாற்றும்படி விறகு வெட்டியிடம் கூறிவிட்டு அவர் பின்னே நின்று கொண்டார். ஒடிவந்த கரடி எகிறி ராஜா மீது பாய தனது வாயை திறந்த போது புத்திசாலியான விறகு வெட்டி ஒரு எரியும் கொள்ளிக் கட்டையை எடுத்து கரடியின் வாயில் திணிக்க, கரடி திமிற, விடாமல் கொள்ளிக் கட்டையை வைத்து இவர் இறுக்க, கரடியும் தன்னால் இயன்ற மட்டும் போராடி போராடி தொண்டையில் தடேறி அப்படியே கீழே சாய்ந்து மரித்து போனது. இதனை கவனித்துக் கொண்டே இருந்த ராஜா விறகு வெட்டியின் சமயோசித புத்தியினைக் கண்டு ஆச்சரியப்பட்டார். இரவு அவனோடு தங்கி மறுநாள் அதிகாலையில் விறகு வெட்டியின் துணையோடு அரண்மனை வந்து சேர்ந்தார்.

இராஜா திரும்பி வந்ததைக் கண்டு அரண்மனையினர் யாவரும் ஆனந்தங் கொண்டாடினர். ராஜா தன்னுடைய எல்லா மந்திரிகளையும் அழைப்பித்து, தன்னை காப்பாற்றி நடத்திக் கொண்டு வந்த விறகு வெட்டிக்கு ராஜ அரண்மனையிலேயே மந்திரி பதவி கொடுத்து, அவனை மந்திரியாக்கி உண்மையுடன் தனக்கு சேவை புரிய பணித்தார். விறகு வெட்டியும் உண்மையுடன் நடந்து ராஜாவின் அன்பை சம்பாதித்துக் கொண்டார்.

ஒரு நாள் திடீரென ராஜா அந்த விறகு வெட்டியை அழைத்து இந்த ஒரு வருட காலமும் நீ எனக்கு உண்மையாய் சேவை புரிந்ததினிமித்தம் இன்று நான் உன்னை உயர்த்தப் போகிறேன். என் பொக்கிஷ சாலையின் சாவியை நான் உன்னிடம் தருகின்றேன். இதனை நீ காவல் காக்க வேண்டும். என்னையும் உன்னையும் தவிர வேறெவரும் இந்த அறையின் கதவை திறக்க முடியாது. நீ உண்மையாய் இதை காவல் காக்க வேண்டும். இந்த அறையிலுள்ள ஏதாவது பொன்னோ, வெள்ளியோ காணமற்போனால் நான் உன்னை தூக்கிலேற்றி விடுவேன் என்று கண்டிப்பாக ஆணையிட்டார். மறுநாளிலிருந்து விறகு வெட்டி பொக்கிஷகாரனுக்குரிய புதிய வஸ்திரத்தை தரித்தவனாய் அந்த அறையின் முன் காவல் காத்து வந்தான். மற்ற மந்திரிகளுக்கோ இவன் மீது கடும் பொறாமை. இவனை எப்படியாவது இங்கிருந்து அகற்ற வேண்டும். நாம் ஏதாவது இவனிடம குற்றம் கண்டு பிடிக்க வேண்டும் என்று கங்கணங்கட்டிக் கொண்டிருந்தனர்.

தினமும் காலையில் தனது பணியை ஆரம்பிக்கும் முன் இந்த விறகுவெட்டி அந்த பொக்கிஷ அறையை திறந்து உள்ளே சென்று தாழிட்டு பின்பு அரை மணி நேரங் கழித்து வெளியே வருவதை தனது வழக்கமாக கொண்டிருந்தார். இதனை மற்ற மந்திரிகள் கவனித்து ராஜாவுக்கு அறிவித்தனர். ராஜாவுக்கு கோபம் தலைக்கேறியது. இவன் உள்ளே சென்று தினமும் சிறிது சிறிதாக எனது பொக்கிஷங்களை திருடுகிறானோ? என்று ராஜா தனக்குள்ளே சொல்லிக் கொண்டு, ஆகிலும் அவன் உண்மையுள்ளவனோ என்று நான் நேரடியாக கண்டறிவேன். பிறர் சொல்வதை வைத்து நான் அவனை நியாயந்தீர்த்தால் நான் குற்றவாளியாவேன் என்று தனது மனதிற்குள் எண்ணியவராய் முதல்நாள் இரவிலேயே ராஜா போய் அந்த பொக்கிஷ அறையில் ஒளிந்து உட்கார்ந்து கொண்டார். மறுநாள் காலை கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டு ராஜா கவனிக்க ஆரம்பித்தார். அங்கு அந்த விறகு வெட்டி கதவை பூட்டிக் கொண்டு தனது பொக்கிஷகாரனுக்குரிய வஸ்திரத்தை கழற்றி விட்டு, பழைய விறகு வெட்டியின் வஸ்திரத்தை அணிந்துக் கொண்டு 20 நிமிஷம் முழங்காற்படியிட்டு, ஜெபித்து விட்டு பின்பு தனது பொக்கிஷக்காரனுக்குரிய வஸ்திரத்தை தரித்துக் கொண்டு வெளியே போக முற்பட்ட போது ஒளிந்து கொண்டிருந்த ராஜா எழுந்து ஏன் இப்படி செய்தாய்? என்று வினவ - அதற்கு விறகு வெட்டி ராஜாவே நான் தினமும் எனது பழைய வஸ்திரங்களை ஏன் போடுகிறேன் என்றால் - ஒரு காலம் நான் விறகுவெட்டியாக இருந்தேன் என்பதையும், தேவன் என்னை இவ்வளவாய் உயர்த்திருக்கிறார் என்பதையும் நினைவு கூறவும், அவர் என்னை உயர்த்தியுள்ள இந்த நிலைக்காக நான் தினமும் அவரை துதிக்கிறேன் என்றானாம்.

இதனை கேட்ட ராஜா அவனை கட்டி அணைத்து 'உண்மையுள்ள உன்னைபோல் ஒருவனையும் நான் எங்கும் இதுவரை காணவில்லை' என்று சொல்லி அவனை முத்தமிட்டார். குட்டிப்பிள்ளைகளே நீங்களும் தேவன் உங்களுக்குரிய உயர்வுகளை நினைத்து தினமும் அவரை துதியுங்கள். துதித்தலே இன்பமும் ஏற்றதுமாயிருக்கிறது.

## ஆலயப் பிரதிஷ்டை

தேவனுடைய கிருபையால் திருச்சி, பொன்மலைப்பட்டியில் இருந்த ஜெப வீட்டை சிற்றாலயமாக மாற்றி 18-1-98 ஞாயிற்றுகிழமை அன்று திருசபையின் தலைமை அப்போஸ்தலர் N. லாசர் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 165 - MAY. 98'

1998

"புதிய எருசலேம் சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்...
விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்
கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்' சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது·

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்த, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

அருமையான தேவனுடைய பிள்ளைகளே நம்முடைய பிதாவாகிய அன்பி னால் அவர் நம்மை இரட்சிக்கும்படி தம்முடைய ஒரே பேறான குமாரனை இவ்வுலகத்திற்கு அனுப்பினார். அவர் வந்து நம்மை இரட்சிக்கும்படி எல்லாப்பாடும் பட்டார். நமக்காக அவர் தம்மைப் பலியாக சிலுவையில் ஒப்புக் கொடுத்தார். மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மூன்றும் நாள் வெற்றி வேந்தராக உயிரோ டெழுந்தார். வாக்கருளி பரலோகத்திற்குப் போயுள்ளார். அவருடைய வாக்குத் தத்தத்தின்படி பரிசுத்த ஆவியானவர் கூடியிருந்த சீஷர் மேல் இறங்கினார். திருச் சபை ஆரம்பமாயிற்று. யூதர்களுக்குப் பயந்து ஒடுங்கி ஒளிந்திருந்த சீஷர்கள் உயிர்த்தெழுந்த கர்த்தரைக் கண்டதினாலும், பரிசுத்தாவியின் வருகையினால் இயேசுவிலிருந்த அதே ஆவி தங்களில் வந்ததைக் கண்டார்கள். இயேசுவான வரைப்போல் வல்லமையாய் அவரைப் பிரசங்கிக்கவும், அவர் நாமத்தில் அற்புத அடையாளங்களைச் செய்யவும், சபையைக் கட்டவும். இயேசுவானவர் மொழிந்த படி வெற்றி வாழ்வு வாழவும் ஆரம்பித்தார்கள். இயேசு அவர்களிலிருந்து ஜீவிக்க ஆரம்பித்தார். அவர்கள் ஒன்றாயிருந்தார்கள். உலகம் இயேசுவானவரை விசுவாசித்தது, நாமும் சபையாய் தேவனை மகிமைபடுத்துவோமாக, சேவிப்போமாக. அவர் நமக்காக சம்பாதித்த விடுதலையைப் பூரணமாய் அநுபவித்து அவரைக் காண்பிப்போமாக இதுவே இவ்வுலகத்துக்கு இப்பொழுது அவசர தேவை. தேவ கிருபை உங்களெல்லோருங்கூட இருப்பதாக.

கிறிஸ்துவுக்குள்

CHIEF APOSTLE N. LAZAR

(தொடர்ச்சி)

# திருச்சபை

"அந்த ஆவிகள், பூர்வத்திலே நோவா பேழையை ஆயத்தம் பண்ணும் நாட்களிலே, தேவன் நீடிய பொறுமையோடு காத்திருந்தபோது கீழ்ப்படியாமல் போனவைகள்; அந்த பேழையிலே சிலராகிய எட்டுபேர் மாத்திரம் பிரவேசித்து ஜலத்தினாலே காக்கப்பட்டார்கள்" 1 பேது. 3:20 என்று எழுதியிருப்பது இதைக் குறித்தே. அவ்விசுவாசத்தினாலே ஒரு சந்ததியில் எட்டுபேரைத் தவிர மற்ற எல்லாரும் அழிவைக் கண்டார்கள்.

கர்த்தருடைய சத்தத்திற்கு கீழ்ப்படிந்த நோவாவும் அவனோடு சேர்ந்த சிலராகிய எட்டுபேர் மாத்திரம் காக்கப்பட்டார்கள். அந்நாட்களிலிருந்தவர்கள் கர்த்தருடைய நாமத்தை தொழுது கொண்டாலும், கர்த்தர் உடன்படிக்கை செய்த நோவாவின் சத்தத்திற்கு செவி கொடுக்காதபடியினாலே அவர்கள் அழிவைக் கண்டார்கள். நாம் தான் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டிருக்கிறோமே பின் ஏன் ஒருவனுடைய சத்தத்திற்குச் செவி கொடுக்க வேண்டும் என்று அவர்கள் எண்ணியிருந்திருக்க வேண்டும்.

கவனியுங்கள்! நோவாவின் காலத்தில் அநேகர் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டிருந்தாலும், கர்த்தர் அவர்களுக்குள் நீதிமானாயிருந்த நோவா என்கிற ஒரு மனிதனைத் தெரிந்து கொண்டு அந்த மனிதனோடு உடன்படிக்கை பண்ணி தம்முடைய தீர்மானத்தை அந்த மனிதனுக்கு அறிவித்து, அவனை அழிவினின்று காக்கும்படி பேழையை உண்டுபண்ணும்படியான ஆலோசனையைக் கொடுத்து, அவனைக் கொண்டு அந்நாட்களிலிருந்தவர்களுக்கு நீதியைப் பிரசங்கிக்கும்படிச் செய்து, அவனோடு கூட சேர்ந்து கொள்ளும் ஜீவன்களை ஜலப்பிரளயத்திற்கு தப்புவித்துக் காக்கும்படி கர்த்தர் சித்தம் கொண்டார். ஆனால் ஜனங்களோ அவனுடைய சத்தத்திற்குச் செவி கொடாமல் பெண் கொண்டும், பெண் கொடுத்தும், புசித்தும், குடித்தும் நிர்விசாரிகளாயிருந்தவர்களை ஜலப்பிரளயமானது சடுதியில் உண்டாகி அழிந்து போகும்படிச் செய்தது போலவே மனுஷ குமாரன் வரும் நாட்களில் நடக்கும்.

கர்த்தருடைய வருகையை எதிர் நோக்கியிருக்கும் இந்தக் கடைசி காலத்திலும் அநேகர் கர்த்தருடைய நாமத்தை தொழுது கொண்டாலும், அவர்களுக்குள், அவருடைய கட்டளைகளின்படியும், நியமங்களின்படியும் நடந்து, உண்மையும், உத்தமுமாயிருக்கிற ஒரு மனிதரை கர்த்தர் தெரிந்து கொண்டு, அந்த மனிதரோடு உடன்படிக்கைப் பண்ணி, தம்முடைய சித்தத்தை அந்த மனிதனுக்கு வெளிப்படுத்திக் காண்பித்து, பாவத்தினிமித்தம் உலகமும் அக்கிரமத்தினிமித்தம் துன்மார்க்கரும் அழிக்கப்படும்போது, அழிவினின்று தன்னையும் தன்னைச் சார்ந்தவர்களையும் அந்த மனிதர் தப்புவித்துக் கொள்ளும்படியான ஆலோசனையை அந்த மனிதருக்கு கொடுத்து, அந்த மனிதரைக் கொண்டு கடைசிக் கால சந்ததிக்கு நீதியை பிரசங்கித்து, அவருடைய வார்த்தையை விசுவாசித்து, அவருக்கு கீழ்ப்படிகிறவர்களை அழிவினின்று காக்கும்படியாக கர்த்தர் வருவார். மற்றவர்களோ கர்த்தர் தெரிந்து கொள்ளும் மனிதனை விசுவாசியாமல் போனபடியினாலே ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவார்கள். நோவாவின் காலத்திலிருந்தவர்கள் கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டிருந்தாலும் கர்த்தர் உடன்படிக்கை செய்த நோவாவை விசுவாசிக்கவில்லை. அப்படியே இந்தக் கடைசிக் காலத்திலும்

கர்த்தர் தெரிந்து கொண்டு உடன்படிக்கை செய்யும் மனிதரை விசுவாசிக்க மாட்டார்கள். ஆகவே தான் 'ஆகிலும் மனுஷ குமாரன் வரும்போது பூமியிலே விசுவாசத்தைக் காண்பாரோ' (லூக். 18:8) என்று கர்த்தர் கூறினார்.

## புதிய ஏற்பாட்டின் சபை எதற்கு? புதிய எருசலேம் சபை ஏன்?

இரண்டு மூன்று பேர்கள் என் நாமத்தினால் எங்கே கூடி வருகிறார்களோ அங்கே அவர்கள் நடுவில் நான் இருக்கிறேன் என்று இயேசு சொல்லியுள்ளார் (மத். 18:20). ஆதலால் நாங்கள் கூடி வருகிறோம். அனபடியால் நாங்களும் சபை தான் என்று அநேகர் சொல்லிக் கொண்டு பிரிந்து, பிரிந்து போய் கூட்டம் அமைக்கிறார்கள். அங்கே அந்த வேதபாகத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று கவனிக்கவும்.

மத். 18:18–20ல் கட்டவும் கட்டவிழ்க்கவும் அதிகாரம் பெற்ற அப்போஸ்தலர்கள், சீஷர்கள் இரண்டு மூன்றுபேர்கள் கூடி வந்து, ஒருமைப்பட்டு ஜெபிக்கும் போது பரலோகத்திலிருக்கிற என் பராபிதாவினால் அது அவர்களுக்கு உண்டாகும் என்றும்; ஏனென்றால் அங்கே இயேசு இருக்கிறாரென்றும் இயேசுவானவர் கூறினாரேயொழிய மற்ற யாராவது கூடி வரும் பொழுது தான் அங்கேயிருந்து கிரியை செய்கிறதாக இயேசுவானவர் கூறவில்லை.

இப்படி அதிகாரம் பெற்ற, கட்டளை பெற்ற சீஷர்கள், அப்போஸ்தலர்கள் புறப்பட்டுப்போய் எங்கும் பிரசங்கம் பண்ணினார்கள். கர்த்தர் அவர்களோடேகூட இருந்து கிரியை நடப்பித்து, அவர்களால் நடந்த அடையாளங்களினால் தாம் சொன்ன தம்முடைய வார்த்தையை நிறைவேற்றி காண்பித்தார் (மாற். 16:16–20; அப். 5:2; 2:43; 5:15,16; 14:1–4; 1 கொரி. 2:4,5; எபி. 2:4) ஆனபடியால் இயேசுவின் பெயரைச் சொல்லி கூடி வருகிறதெல்லாம் புதிய ஏற்பாட்டின் சபை என்றோ, திருச்சபை என்றோ அனுமானித்துக் கொள்ள அவசியமில்லை. கர்த்தர் அப்போஸ்தலர்களோடு கூட இருந்து, கிரியை நடப்பித்து, அவர்களால் நடக்கும் அடையாளங்களினாலும், அவர்களால் நடக்கும் அற்புதங்களினாலும், தம்முடைய வசனத்தை உறுதிபடுத்துகிறார்.

(தொடரும்)



# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம் (தொடர்ச்சி)

லூத்தர் மனசாட்சியின் நிமித்தம் தாம் கற்பித்த போதகத்தை விட்டு பின் வாங்க முடியாது; சுவிங்கிலி தன் போதகத்தை விட்டுப் பின்னிட மனமற்றவனாயிருந்தான். ஜெர்மானியாவிலும் சுவிங்கிலிக்கு அனுசாரிகள் இருந்தார்கள். சுவிங்கிலியின் கள்ளப் போதகம் விருத்தியடைந்திருந்த ஸ்த்ராஸ்புர்க், உல்ம் ஆகிய இரண்டு பட்டணங்களும் சுவிசேஷப் பிரபுக்களுடைய ஐக்கியத்தை நாடினபோது லூத்தர் அதற்கு

ஆட்சேபனை செய்தார். சுவிசேஷப் பிரபுக்களுக்குள் எஸ்ஸே நாட்டதிபதியாகிய பிலிப்பு என்பவர் இராஜ தந்திரியானபடியால் இராஜாங்க முறைக்காரணங்களின் நிமித்தம், கூட்டு உடன்படிக்கைக்கும், வேலைக்கும் இடஞ்சலாயிருந்த இந்தத் தடையை ஒழிக்கும்படி வெகு ஆவலாயிருந்தார்.

இவ்விவாதம் நடந்த விஷயங்களில் அவர்களுக்குள்ளே நல்லறிவு உண்டாக்கும்படி அவர் முயற்சி எடுத்துக் கொண்டார். ஆகையால் அவர்களுக்குள்ளிந்த பேதாபேதமும், கோப தாபமும் தணியும்படி இரு கட்சிகளின் தலைவர்கள் மார்புர்க் பட்டணத்தில் கூடிவந்து ஆலோசனை செய்யும்படி அவர்களை அழைத்தார். இது சித்தி பெறாது என்று லுத்தர் முன்னறிந்தார். என்றபோதிலும் மெலாங்தன், யுஸ்துஸ், யோனஸ், காஸ்பர், க்ருசிகர், ப்ரெதரிக் மிக்கோனியுஸ், அந்திரேயாஸ், ஒசியாந்தர், ஸ்தேவான், அக்ரிக்கோலா, யோவான் பிரென்ஸ் என்பவர்களோடு லுத்தரும் மார்புர்க் பட்டணம் போனார்.

எதிர்க்கட்சியிலிருந்து சுவிங்கிலி ஒயக் கோலாம்பாடியுஸ், பூஸர், எடியோ என்பவர்கள் ஆஜரானார்கள். அவர்கள் எல்லோரும் அரண்மனையில் தங்கினார்கள். பிலிப்பு பிரபு அவர்கள் எல்லோருக்கும் இராஜ சாப்பாடு கொடுத்து அரசர்களைப் போல் நடத்தினார்.

முதலில் லுத்தரும் எக்கோலாம்பாடியுசும், மெலாங்தனும், சுவிங்கிலியும் தனித்துச் சம்பாஷித்தார்கள். பிறகு 1525-ம் வருஷம் அக்டோபர் மாதம் 2-ம் தேதி தெரிந்து கொள்ளப்பட்ட மதப்புக்குரிய ஐம்பது கனவான்கள் சமுகத்தில். ஒரு பெரிய மண்டபத்தில் பொது தர்க்கம் ஆரம்பித்தது. துவக்கத்திலேயே தாம் நின்ற நிலையிலிருந்து பின்வாங்க முடியாது என்கிற தம் தீர்மானத்தை லுத்தர் எல்லோருக்கும் அறிவித்தார். தம் எதிரில் இருந்த ஒரு மேஜை மேல், 'இது என் சரீரம்' என்கிற தம் ஆண்டவராகிய கிறிஸ்துவின் வார்த்தைகளைப் பெரிய எழுத்துக்களில் சீமைச்சுண்ணாம்பால் எழுதி வைத்துக் கொண்டார்.

தேவனுக்கே எல்லாக் கனத்தையும் செலுத்தி, கிறிஸ்துவின் தெளிவும் சுலபமுமான வார்த்தைகளை நம்பவேண்டுமென்று நியாயஞ்சொல்லித் தம் எதிராளிகளோடு வழக்காடினார். எதிர்கட்சியின் தலைவர்களாகிய சுவிங்கிலியும், எக்கோலாம்பாடியுசும் 'மாம்சம் ஒன்றுக்கும் உதவாது' யோ. 6:63 என்னும் பழைய நியாயத்தையே மறுபடியும் சொன்னார்கள்.

சுவிங்கிலி யோ. 6:63, அதாவது 'மாம்சம் ஒன்றுக்கும் உதவாது' என்கிற வார்த்தைகளை மறுபடியும் எடுத்துச் சொன்னபோது லுதர் அதற்குப் பதிலாக, 'கிறிஸ்து, என் மாம்சம் ஒன்றுக்கும் உதவாது என்று சொல்லுகிறதில்லை. கிறிஸ்துவின் மாம்சம் ஒன்றுக்கும் உதவாது' என்று சொல்லுவது தேவ தூஷணம் என்றார். மெய்யான சரீரம் ஒரே சமயத்தில் இரண்டு இடங்களில் இருக்க முடியாதென்று எதிராளிகள் சொன்ன நியாயத்திற்கு எதிர் நியாயமாக அவர், அவர்கள் கணித சாஸ்திரத்தைப் பற்றித் தர்க்கம் செய்யாமல் வெளிப்படுத்தப்பட்ட வேத சாஸ்திரத்தைப்பற்றித் தர்க்கித்தாரென்று சொன்னார். இதே மாதிரியாக தர்க்கம் நடந்து முடிந்தது.

ஆனால் மகா விசேஷித்த விஷயத்தில் அவர்கள் முடிவில் ஒரு ஒப்பந்தத்திற்கு வரவில்லை. என்ற போதிலும் சுவிங்கிலி கடைசியில் தங்களைக் குறைந்த பட்சம் சகோதரராகவாவது அங்கீகரிக்க வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக் கை குலுக்க வந்தபோது லுத்தர் அதற்குச் சம்மதியாமல் சொன்ன மறுமொழியாவது: 'உங்களுடைய ஆவி வேறு, எங்களுடைய ஆவி வேறு. நான் உங்களுடைய போதகம் தப்பென்று இடித்துரைத்துக் குற்றஞ்சாட்டும்

போது நீர் என்னை ஒரு சகோதரனுக அங்கீகரிக்க விரும்புவது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. நீர் உம்முடைய போதகங்களைப்பற்றி மேன்மையாக எண்ணக் கூடாது' என்பதே.

1529 –ம் வருஷம் அக்டோபர் மாதம் 4–ம் தேதி லுத்தர் தம் மனைவிக்கு மார்க்புர்க் சம்பாஷணையின் தீர்மானங்களைப் பற்றித் தெரிவிக்கிறதாவது: 'என் பிரிய கத்தெரினுளே, மார்புர்க்கில் நடந்த எங்களுடைய தோழமைவான சம்பாஷணை முடிவுக்கு வந்தது. நாங்கள் ஏறக்குறைய எல்லா விஷயங்களிலும் ஒருமனப்பட்டிருக்கிறோம். ஆனல் எங்கள் எதிராளிகள் திரு இராப்போஜனத்தில் வெறும் அப்பம் மட்டும் இருக்கிறதென்று சாதித்து, கிறிஸ்து ஆவியின் பிரகாரம் பிரசன்னமாயிருக்கிறுரென்று சொல்லுகிறுர்கள்.

இப்போது பிலிப்பு பிரபு எங்களுக்குள் ஒற்றுமையுண்டுபண்ணப் பிரயாசப்படுகிறுர்; நாங்கள் ஒற்றுமைக்கு வராவிட்டால் எங்களைச் சகோதரராகவும், கிறிஸ்துவின் அவயவங்களாகவும் கட்டுப்படுத்தப் பிரயாசப்பட்டுக் கொண்டிருக்கிறுர். இந்த விஷயமாக அவர் வெகு ஆவலாய் முயற்சி செய்து கொண்டிருக்கிறுர்' என்பதே.

(தொடரும்)



# சாட்சி

பிரியமானவர்களே இறைவன் என்னை தெரிந்து கொண்டதை உங்களுக்கு சாட்சியாக அறிவிக்கும்படி இறைவன் அளித்த மேலான கிருபைக்காய் அவருக்கு அதிகமான ஸ்தோத்திரங்களைச் செலுத்துகிறேன்.

பூர்வீக இந்து குடும்பத்தில் பிறந்த நான் எனது சிறு வயதிலே தாயை இழந்தேன். உடன் பிறந்த சகோதர, சகோதரிகள் ஆறுபேரும் என் தந்தையிடமே வளர்ந்தோம். என் தகப்பனுரோ தாய் இல்லை என்ற குறையே இல்லாமல் வளர்த்தார். எந்த விதத்திலும் குறைவில்லாவர்களாய் வாழ்ந்தோம்.

நான் எனது சிறு வயது முதலே தெய்வ பக்தி உள்ளவனுகவும், கட்டுப்பாட்டுடன் ஒழுக்கமுள்ளவனுகவும் வாழ்ந்தேன். எனது ஊரிலும் தனிப்பட்ட மரியாதையும், அன்பும் எனக்கு உண்டு. நான் எனது நண்பர்களுடன் சேர்ந்து ஊரிலுள்ள கோயிலை சுத்திகரிப்பதும், பராமரிப்பதும் தினந்தோறும் சமயம் கிடைக்கும் போது விளக்கு ஏற்றுவதுமாக இருந்தேன். கார்த்திகை தீபத்தன்று எல்லா வீடுகளிலும், ஏற்றும் விளக்குகளை அணைத்து எடுத்து வந்து கோயிலை அலங்கரிப்போம்.

தெய்வங்களின் தோற்றம், வரலாறு உறவு இவைகளை பெரியோர்களிடம் கற்றுக் கொள்வேன். இப்படி உள்ள சமயத்தில் கிறிஸ்தவர்களிடம் வாதம் செய்வதும், பரியாசம் செய்வதும், சுவிசேஷ கூட்டங்களுக்கு இடையூறு செய்வதுமான காரியங்களில் ஈடுபட்டேன். எனது தெய்வங்களுக்கும் வல்லமை உண்டு என்று சாதிப்பேன்.

எனது உறவினர் குடும்பம் ஒன்று இயேசுவை ஏற்றுக் கொண்டவர்கள். ஆத

லால் அவர்களிடம் செல்லும் போது அங்கு வரும் கிறிஸ்தவ போதகர்களிடம் தர்க்கம் செய்வேன். ஆனால் அவர்கள் எல்லாவற்றிற்கும் மிகுந்த சாந்தத்தோடும், பொறுமையோடும் கூறும் தேவ வார்த்தைகள் என் உள்ளத்தில் மாற்றத்தை உண்டுபண்ணிற்று. அவர்களின் விளக்கங்களை நிதானித்து, ஏற்றுக் கொண்டு, சரி இயேசுவையும் தெரிந்து கொள்வோம் என்று வேதத்தைப் படித்தேன்; படித்து முடித்தேன். ஆனால் விளங்கவில்லை. ஒரு தீர்மானம் எடுத்தேன். வேதத்திலுள்ள பரிசுத்தவான்களைப் போல வாழ வேண்டுமென்று.

எனக்கு ஒரு தூய வாழ்வு வாழ ஆசை. என் ஆத்துமா ஒரு மேலான நிலையை வாஞ்சிக்கிறதை உணர்ந்தேன். அதை கிறிஸ்துவில் கண்டேன்; பற்றிக் கொண்டேன். முன்பு நான் இருந்த மார்க்கத்திலோ இது வழி, இப்படி நட, என்னைப் பார் என்று என்னை நடத்தவோ, வழி காட்டவோ ஒருவரும் எனக்கு கிடைக்கவில்லை. இந்த நிலையில் என் ஊரில் உள்ள கிறிஸ்தவ தேவாலயத்திற்கு சென்றேன். என் வாழ்வில் ஒரு மாற்றமும் இல்லை. எனது நண்பன் ஒருவன் மூலமாக வேறு ஆவிக்குரிய சபை என்று கூறி பக்கத்து நகரில் இருக்கும் கிறிஸ்தவ தேவ ஆலயத்திற்கு அழைத்துச் சென்றான். ஆனால் அங்கோ போட்டி, பொறாமை, மாம்ச சண்டைகள்; பரிசுத்த ஆவியின் ஆளுகை இல்லை.

என்னுடைய 20 ஆம் வயதில் என் எண்ணத்திற்கும், மாம்சத்திற்கும் போராட்டம். எனக்குள் இருந்த பாவம் வெளிப்பட, போராட ஆரம்பித்தது. நான் விரும்பிய தூய வாழ்வு வாழ முடியவில்லை. தீமையே செய்தேன். பாவம் என்னை மேற்கொண்டது. பாவத்திற்கு அடிமையானேன். சரி; இப்படித்தான் மனித வாழ்வு என்று தேற்றிக் கொண்டேன். மனிதர்களின் பார்வையில் ஒரு நல்லவனாக காணப்பட்டேன்.

ஆனால் தேவ பார்வையிலோ நரகத்திற்கு பாத்திரவானாக இருந்தேன். பரிசுத்தமாய் வாழ எனக்கு விருப்பம் உண்டு. ஆனால் பெலன் இல்லை. யார் எனக்கு உதவி செய்வார் என்று தவித்தேன்.

1986 ஆம் ஆண்டு தேவன் எனக்கு இரங்கி, புதிய எருசலேம் சபையின் நெய்வேலி சபை போதகரை சந்திக்கும் கிருபையைக் கொடுத்தார். எப்போதாவது ஆலயத்திற்கு செல்வேன். பாஸ்டர் S. சுந்தர் ராஜ் ஐயா அங்கு வரும்போது இறைவன் இயேசு கிறிஸ்துவின் அன்பைப் பற்றிக் கூறும்போது என் உள்ளம் உடைந்தது. எனக்காக, என் பாவங்களுக்காக இயேசு கிறிஸ்து பட்ட பாடுகளை நினைத்து கண்ணீர் வடித்தேன். உபதேசத்திற்குக் கீழ்ப்படிந்து, என்பாவங்களை அதிகாரம் பெற்ற தேவ மனிதரிடம் அறிக்கை செய்தேன் (மத். 3:5,6) என்ற வசனத்தின்படி இறைவன் என் பாவங்களை மன்னித்தார். என்னைப் பாவத்திலிருந்து விடுதலை செய்தார் என்னே ஆனந்தம்! மட்டுமல்ல தேவன் தமது ஆவியை எனக்கு அருளினார். பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட்டேன். உலகம் தரக் கூடாத சந்தோஷம், சமாதானம் என் உள்ளத்தை நிரப்பிற்று.

இறைவன் என்னை அவர் தங்கும் ஆலயமாக மாற்றினார். 1 கொரி. 3:16 என்ற வசனத்தின் படி இதுவரை நான் ஏங்கின தூய வாழ்வு வாழ எனக்கு பெலன் கிடைத்தது. தொடர்ந்து தலைமை ஐயா மூலம் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் அங்கமாக்கினார். ஒரு சில எனது உறவினர்கள் என்னை அன்பாய் தங்கள் பிள்ளைகளைப் போல் நேசித்தார்கள். ஆனால் அது சுயநலத்திற்காக என்று பிறகு உணர்ந்து கொண்டேன். மாயமற்ற அன்பு எல்லாவற்றிற்கும் மேலான தேவ அன்பு என்னுடைய வேலையிலும் எனக்கு மிகுந்த போராட்டம் ஏற்பட்ட போது தேவ ஆலோசனைக்குக் கீழ்ப்படிந்து காக்கப்பட்டேன். என்னுடைய சகோதரி பிசாசின் தாக்குதலால் மிகவும் பலவீனப்பட்டு இருந்தாள். என் தகப்பனார் செய்யாத வைத்தியமும், மந்திரமும் இல்லை. எனக்கோ திருச்சபையே இவைகளுக்கு முடிவு என்று விசுவாசித்தேன். பாஸ்டர் சுந்தர் ராஜ் ஐயா அவளைப் பார்த்ததுமே ஏதோ பிசாசினால் தாக்கப்பட்டிருப்பாள் போல் தெரிகிறதே என்றார். ஆமாம் என்று கூறினேன். ஜெபம் செய்கிறேன். இறைவன் விடுவிப்பார் என்று அவளுக்காக ஜெபம் செய்தார்கள். அன்று தானே அவளும் விடுதலையாகி சுகம் பெற்றாள். என் தகப்பனாரும் இறைவனை ஏற்றுக் கொண்டு இரட்சிக்கப்பட்டார்.

இப்படி இறைவன் குடும்பத்திலும் இரட்சிப்பை நிறைவேற்றி வருகிறார். இப்போது நான் இறைவன் நடத்துகிறபடி நடக்க எனக்கு பெலன் இறைவன் தருகிறார்

12-4-1998 அன்று B L. Shed (கொடைக்கானல்) புதிய எருசலேம் சபை கிளையில் 4 பேர்கள் திருமுழுக்கு பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

தவறும்போதும் தண்டிக்கிறதை உணர்ந்து அநேக வேளைகளில் சந்தோஷப்படுவதுண்டு. தகப்பன் தான் நேசிக்கிற எந்தப் பிள்ளையையும் இரட்சிக்கிறார். நல்ல ஓட்டம் ஓடி விசுவாசத்தைக் காத்துக் கொள்ள இறைவன் எனக்கும் அருள் செய்வாராக! என் ஆத்தும இரட்சிப்பைத் தேடினேன், கண்டடைந்தேன், கேட்டேன் பெற்றுக் கொண்டேன்.

இதை வாசிக்கும் சகோதர சகோதரிகளே உங்களுக்கும் இந்த மேலான இன்பத்தை, தூய வாழ்வை இறைவன் தந்தருள்வாராக! இத்துடன் என் சாட்சியை முடித்து விசுவாச ஓட்டத்தைத் தொடர்கிறேன்.

இப்படிக்கு,
Eld. Bro. ராஜசேகரன் நேகேமியா,
புதிய எருசலேம் சபை,
சென்னை.



## வேதபாடம் (தொடர்ச்சி)

*யோசு. 12:1-24*

மோசே, யோசுவா இவர்களுடைய வெற்றியின் விமர்சனம் இங்கே காணப்படுகிறது. 33 (முப்பத்து மூன்று) இராஜாக்கள் முறியடிக்கப்பட்டார்கள்.

இங்குள்ள அட்டவணைப் பிரகாரமாக கானானின் இராஜாக்கள் முறியடிக்கப்பட்டார்கள். பொதுவாக அநேக இராஜாக்கள் முறியடிக்கப்பட்டு தேசம் இஸ்ரவேலர்கள் வசமான போதிலும் சிறு பிரிவார்கள் ஆங்காங்கு மீதியாக இருந்தார்கள் (யோசு. 13:2-7; 15:63; 23:4; நியா. 1:2,21,27,29,30,31,35). மேலும் பெலிஸ்தியர், சீதோனியர், லீபனோன் தேசம் இவை இன்னும் மேற் கொள்ளப்படாமல் விடப்பட்டிருந்தன. தலைவராகிய யோசுவாவின் மரணத்துக்குப் பின்னால் இந்த புறஜாதிகளால் இஸ்ரவேலர்கள் உபத்திரவமடைந்தார்கள். சகல பொல்லாத ஜனத்தார் மேலும் நீதியுள்ள தேவனின் கோபாக்கினை வந்ததானது பாவத்தைக் குறித்து நம்மைப் பயப்படுத்தி அதை வெறுக்கச் செய்ய வேண்டும் (யோசு. 13:1-22:34). கானான் தேசம் இஸ்ரவேலர்களுக்குக் பங்கிடப்படுதல்.

1) யோசு. 13:1-33 யோர்தானுக்கு கிழக்கேயுள்ள தேசம்:- கானானிய ஜாதியாரின் உத்தேசமான தேசமெல்லாம் இஸ்ரவேலருக்குப் பங்கிடப்பட்டது. ரூபன், காத், மனாசேயின் பாதிக் கோத்திரத்தாருக்கு பகிர்ந்து கொடுக்கப்பட்ட தேசம் இங்கு விவரிக்கப்பட்டிருக்கிறது (எண். 32:1-42). தேவனே அவர்கள் பங்கைப் பிரித்துக் கொடுத்ததால் அவர்கள் திருப்தியும் நன்றியறிதலுள்ளவர்களுமாயிருக்க வேண்டும்.

சகல விசுவாசிகளுக்காகவும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நித்திய சுதந்திரத்தைக் கிரயம் கொடுத்து வாங்கியிருக்கிறார். அதில் பூரணசுதந்தரம் நமக்கருள்வார். யோசு. 13:14,33 லேவியருக்கு சுதந்திரம் கொடுக்கவில்லை. கர்த்தரே அவர்களுடைய

# தேவனுடைய அதிசயங்களும் அற்புதங்களும்

எனது இரண்டாவது குழந்தை பிறந்த 4 வது நாளில் சரீரத்தில் ஒரு தடிப்பு போன்ற புண் காணப்பட்டது. வர, வர அந்த புண் அதிகமாகி பிள்ளை மிக வேதனைப்பட்டாள்; டாக்டரிடம் கொண்டு சென்றோம். டாக்டர் இதை ஆபரேசன் பண்ணினால்தான் பிள்ளை பிழைக்கும் என்றார். அதினால் நானும் என் மனைவியும் அழுதோம், கண்ணீர் வடித்தோம், தேவனை நோக்கிக் கூப்பிட்டோம். கடைசியில் கோவில்பட்டி புதிய எருசலேம் சபைக்குக் கொண்டு செல்ல ஆலோசனை செய்து, பிள்ளையைக் கர்த்தர் எடுத்துக் கொண்டால் எடுத்துக் கொள்ளட்டும் என்ற முடிவுக்கு வந்தோம். புதிய எருசலேம் சபை பாஸ்டர் P. ஜோசப் ஐயா குழந்தைக்காக எண்ணெய் பூசி ஜெபித்தார்கள். என்ன ஆச்சரியம், ஆண்டவர் என் மகளுக்கு சுகம் தந்தார். எங்கள் ஊரில் உள்ள யாவரும் குழந்தை இறந்து விடும் என்று நினைத்தோம், ஆனால் குழந்தை நல்ல சுகமாகிப் பிழைத்துவிட்டதே என்று ஆச்சரியப்பட்டு, இவர்கள் வணங்கும் தேவன் தான் உண்மையான கடவுள் என்று சாட்சி கொடுக்கிறார்கள். என் பிள்ளை மரியாள் இப்பொழுது 6 ஆம் வகுப்பு படிக்கிறாள். தேவனுக்கே மகிமையுண்டாவதாக!

இப்படிக்கு,<br>
M. பீட்டர்,<br>
சுப்ரமணியபுரம்<br>
கயத்தார்.



சுதந்திரம், அவருடைய தகனபலிகளே அவர்களுடைய சுதந்திரம். ஆனால் அவர்களுக்கு குடியிருக்க பட்டணங்களையும், அவர்களுடைய ஆடுமாடுகளுக்கு சுற்றிலுமுள்ள நிலங்களையும் கொடுத்தார்கள் (யோசு. 14:3,4; எண். 35:1-8).

2) யோசு. 14:1-15:63 காலேப் யூதாவின் பிரதேசம்:-

காலேப் தன் பங்கைக் குறித்து தேவனுடைய வாக்கை நினைவு கூர்ந்தார். 'என் பங்கைத் தாரும்' இந்த மலை நாட்டை எனக்குத் தாரும் (யோசு. 14:12). தேவன் வாக்களித்ததைப் பெற்றுக் கொள்ள யோசுவாவுக்கு இருந்த விசுவாசத்தையும், தீவிரத்தையும், சாட்சியையும் பார்க்கிறோம் (உபா. 1:36; எண். 14:24,30). காலேப்புடைய சொந் வேண்டுதலின்படியே எப்ரோனைச் சுதந்தரித்தார்.

ஏனைய கோத்திரங்களைக் காட்டிலும் யூதாவின் கோத்திரம் ஜனம் பெருத்ததாயிருந்தது. எனவே அவர்கள் பிரதேசமும் அதிக விஸ்தாரமாயிருந்தது. யூதாவினுடைய சுதந்தரத்தின் எல்லைகள் மிகவும் விளக்கமாய் விவரிக்கப்பட்டிருக்கிறது.

யோசு. 15:13-19 காலேப்பின் சுதந்திரத்திலுள்ள கீரியாத்சேப்பேர்:

நியாயாதிபதிகளின் காலத்தில் முதல் நியாயாதிபதியாயிருந்த காலேப்பின் மருமகனாகிய ஒத்தினியேலுக்கு தன் மகளுடைய ஸ்திரீதனமாக இது கொடுக்கப்பட்டது. யோசு. 14:6ல் கேனேசியனான காலேப் என்றிருப்பதால் கெனிசியர் (ஏனாக்கியர்) மேல் காலேப் வெற்றி பெற்றதால் இந்த பெயர் வழங்கப்பட்டதென்று தெரிகிறது யோசு.14:14, எபூசியரை மேற் கொள்வது கடினமாயிருந்தது (யோசு. 14:63). யூதா புத்திரர் எபூசியரை அடக்காமல் விட்டுவிட்டனர். தாவீது ராஜா அரசனானதும் எபூசியரை அடக்கி மேற் கொண்டார் [2 சாமு. 5:6,8].

3). யோசு. 16:1-17:18 எப்பிராயீம் மனாசேயின் பிரதேசம்:-

சீகேம் மனாசே எல்லைக்கு வடக்கேயும், தெற்கேயும் உள்ள செழிப்பான நாடு எப்பிராயீமுக்கு கிடைத்தது. எப்பிராயீம் ஜனம் பெருத்தவர்களாயிருந்தபடியால தங்கள் எல்லையை விஸ்தீரணப்படுத்திக் கொள்ளும்படி யோசுவா சொன்னார். அதி. 16,17ல்

பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro P. ஜோசுவா | M ருத் | முலைக்கரைப்பட்டி | 16-4-98 |
| Eld. Bro C. டைட்டஸ் | M. அமலோற்பவமேரி | திண்டுக்கல் | 22-4-98 |

யோசேப்பின் புத்திரருடைய சுதந்திரத்தின் முழு விவரங்கள் அறிவிக்கப்படுகின்றன
(யோசு. 17:14,15). யோசேப்பின் புத்திரர்: எப்பிராயீம், மனாசே கோத்திரத்தார்.
செலோப்பியாத்தின் குமாரத்திகள் (யோசு. 17:3-6) கர்த்தர் மோசேக்கு வாக்களித்த பிர
காரம் ஒரு பங்கை சுதந்தரித்தனர் [எண். 27:1-11; யோசு. 16:10; 17:13]. கானானியரை
துரத்திவிடாமல் ஏவாலாட்களாக்கி கொண்டது. தேவ சித்தமல்லே. கானானியர் துரத்தி
விடப்பட வேண்டும் (நியா. 1:28,33,35).

நம்முடைய ஆவிக்குரிய யோசுவாவாகிய கர்த்தர் நம்முடைய பெரிய எதிரிகளான கொலே, களவு, விபச்சாரம் போன்றவற்றை துரத்திவிடுகிறார். சின்ன சின்ன எதிரிகளான கோபம், பொய், தூஷணம், பெருமை, பொறாமை, வம்பு வார்த்தைகள், பரியாசம் போன்றவைகளைத் துரத்திவிட்டு சுதந்திரத்தை நமக்கு வாக்களுளியிருக்கிற பரிசுத்த ஜீவியத்தின் எல்லே முழுவதையும் நாமே சுதந்தரிக்கும்படி தேவன் கட்டளையிட்டுள்ளார். சமயத்துக்கு உதவும் என்று சொல்லி அந்த கானானியரை (சின்ன சின்ன பாவங்கள்) விட்டு வைத்தோமானல் அவைகளால் நமக்கு ஆபத்து வரும்.

(தொடரும்)



# வேதத்தில் உள்ள 'பாருங்கள்' (யாக். 3:3)

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே சிலர் பார்க்காத ஒன்றை பார்க்கும்போது ஆச்சரியமாக அங்கே 'பாருங்கள்' இதை பாருங்கள் என்று சொல்வதை நாம் பார்க்கிறோம். அதுபோல வேதமும் நம்மை, 'பாருங்கள், கவனித்துப் பாருங்கள், சோதித்து பாருங்கள், நோக்கி பாருங்கள், ஆராய்ந்து பாருங்கள்' என்று ஆச்சரியமாக நம்மைப் பார்த்து சொல்லுகிறது.

நாம் அடிக்கடி பார்த்த ஒன்றை ஆச்சரியமாக பார்க்கிறதில்லே. ஆனல் வேதம் அப்படியல்ல, ஒருமுறை நாம் பார்க்கும் போது ஒரு கருத்தை கொண்டு பேசும், இன்னொரு முறை நாம் பார்க்கும் போது வேறொரு கருத்தை கொண்டு பேசும். ஆகையால் வேதம் நமக்கு ஆச்சரியமானதே. ஆகையால் தான் தாவீது சங்கீத புஸ்தகத்தில் சொல்லும் போது, உமது வேதத்தில் உள்ள அதிசயங்களை நான் பார்க்கும்படிக்கு, என் கண்களை திறந்தருளும் (சங் 199:18) என்று வேண்டிக் கொள்ளுகிறார். 'நாமும் வேதத்தில் உள்ள பாருங்கள்' என்ற வார்த்தையில் உள்ள அதிசயத்தை பார்ப்போமாக. 'பாருங்கள்' என்று கர்த்தருடைய வார்த்தை நம்மை பார்த்து சொல்லுகிறது (யாக். 3:3).

## 1. குதிரையை பாருங்கள் - [யாக். 3:3]:-

'குதிரையை பாருங்கள்' என்றவுடன் நமக்கு இப்படி எண்ணந்தோன்றும், நாம் எப்போதும் பார்த்த ஒன்றை ஏன் வேதம் 'பாருங்கள்' என்று சொல்லுகிறது என்று எண்ணலாம். நாம் குதிரையை பார்க்கலாம் ஆனல் அதின் வாயில் போட்டிருக்கிற கடிவாளத்தை கவனிக்கிறதுமில்லே, பார்க்கிறது

மில்லை. ஆகையால் தான் வேதம் நம்மை பார்த்து சொல்லுகிறது. 'பாருங்கள்' குதிரைகள் நமக்கு கீழ்ப்படியும்படிக்கு அவைகளின் வாய்களில் கடிவாளம் போட்டு, அவைகளுடைய முழு சரீரத்தையும் திருப்பி நடத்துகிறோம் (யாக். 3:3) என்று சொல்லுகிறது.

இன்றைக்கு அ நே க தேவனுடைய பிள்ளைகளை சரியாக நடத்துவதற்காக அல்லது கீழ்ப்படிய பண்ணுவதற்காக, கடிவாளமாகிய சிட்சையை கர்த்தர் உபயோகிக்கிறார். அப்படியிருந்தும் அந்த சிட்சையை எதற்காக கர்த்தர் தந்திருக்கிறார் என்பதை உணராமல், கீழ்ப்படியாமல் தன்னுடைய இஷ்ட பிரகாரம் நடக்கிறார்கள். ஆகையால் குதிரையை நன்றாக உற்று பார்த்து உணர்வடைவோமாக! (எபி. 12:5-11; 2 கொரி. 12: 7-10).

2. கப்பல்களை பாருங்கள் - (யாக். 3:4):-

கப்பல்களையும் பாருங்கள் என்று வேதம் சொல்வதை பார்த்தவுடன் கேட்கிறவர்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். என்னடா இது! நான் பார்க்காத கப்பல் உண்டோ! நான் எவ்வளவு பெரிய கப்பலை எல்லாம் பார்த்து இருக்கிறேன். இதை போய் ஆச்சரியமாக 'பாருங்கள்' என்று வேதம் சொல்லுகிறதே என்று எண்ணலாம். அன்பானவர்களே! வேதம் சொல்லுகிறது கப்பல்களையும் பாருங்கள், அவைகள் மகா பெரியவைகளாயிருந்தாலும் கடும் காற்றுகளால் அடிபட்டாலும் அவைகளை நடத்துகிறவன் போகும்படி யோசிக்கும் இடம் எதுவோ அவ்விடத்திற்கு நேராக மிகவும் சிறிதான சுக்கானாலே திருப்பப்படும். அப்படியே நாவானதும் சிறிய அவயமாயிருந்தும் பெருமையானவைகளைப் பேசும் 'பாருங்கள்' சிறிய நெருப்பு எவ்வளவு பெரிய காட்டைக் கொளுத்தி விடுகிறது!

நாவும் நெருப்புத்தான். அது அநீதி நிறைந்த உலகம் நம்முடைய அவயங்களில் நாவானது முழு சரீரத்தையும் கறைப்படுத்தி ஆயுள் சக்கரத்தை கொளுத்தி விடுகிறதாயும், நரக அக்கினியினால் கொளுத்தப்படுகிறதாயும் இருக்கிறது (யாக். 3:4-6). ஆகையால், தேவ ஜனங்கள் கப்பலை பார்த்து உணர்வடைந்து நம் நாவை மிகவும் கவனமாக அடக்கி ஆண்டு காத்துக் கொள்வோமாக!

தொடர்ச்சி 13 ஆம் பக்கம் பார்க்க.

# அடக்க ஆராதனை

திரு I.F ஜோசப் அவர்களின் தகப்பனும், சகோதரர் S ஞானராஜ் அவர்களின் தாத்தாவும் திருச்சி வையம்பட்டி - கிளை சபையின் விசுவாசியுமான I இன்னாசிமுத்து (வயது 77) அவர்கள் 26-1-1998 அன்று கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். திருச்சபையின் மூலமாக 27-1-1998 அன்று நல்லடக்கம் செய்யப்பட்டது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

3. காகங்களையும், காட்டு புஷ்பங்களையும் கவனித்துப் 'பாருங்கள்' (லூக். 12:24 27):-

காகங்களை கவனித்து 'பாருங்கள்' என்று வேதம் சொன்ன உடனே அநேகருக்கு ஆச்சரியம். நான் தினமும் பார்க்காத காகம் உண்டோ என்று எண்ணலாம். அன்பானவர்களே! நாம் தினமும் காகங்களை பார்க்கலாம். ஆனால் அதை கவனித்து பார்த்து உணர்வடைந்து இருக்கிறோமா? என்பதை நாம் எண்ணி பார்க்க வேண்டும்.

வேதம் சொல்லுகிறது, காகங்களை கவனித்து பாருங்கள் அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, அவைகளுக்கு பண்டசாலையும், களஞ்சியமுமில்லை. இல்லாவிட்டாலும் அவைகளையும் தேவன் பிழைப்பூட்டுகிறார்; பறவைகளைப் பார்க்கிலும் நீங்கள் எவ்வளவோ விசேஷித்தவர்களாயிருக்கிறீர்கள் என்று சொல்லுகிறது மத். 6:25-34; லூக். 12:22-29. வேதம் இப்படி சொன்ன பிறகுதான் நமக்கு யோசனை வருகிறது. ஆமா! காகம் எப்படி சாப்பிடுகிறது. அது வேலையே செய்கிறதில்லை. ஆனாலும் அதையும் தேவன் பிழைப்பூட்டுகிறார். ஆகையால் அன்பானவர்களே! நாம் காகங்களை கவனித்து பார்த்து உணர்வடைவோமாக! (லூக். 12:24).

காட்டு புஷ்பங்களை கவனித்துப் பாருங்கள் என்று வேதம் சொன்ன உடனே, அநேகருக்கு எண்ணம் நான் கொடைக்கானல் மலர் கண்காட்சியில் ஏராளமான வண்ண, வண்ண கலரில் உள்ள மலர்களை ரோஜாக்களை பார்த்து இருக்கிறேன். இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது. இது இறைவனுடைய சிருஷ்டி என்று முடித்து கொள்வார்கள். அன்பானவர்களே! வேதம் சொல்லுகிறது. காட்டு புஷ்பங்கள் எப்படி வளருகிறதென்று கவனித்துப் பாருங்கள்; அவைகள் உழைக்கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை, என்றாலும் சாலோமோன் முதலாய்த்தன் சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப்போலாகிலும் உடுத்தியிருந்ததில்லை என்று சொல்லுகிறது.

இப்படியிருக்க, அற்ப விசுவாசிகளே இன்றைக்குக் காட்டிலிருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படுகிற புல்லுக்குத் தேவன் இவ்விதமாக உடுத்துவித்தால், உங்களுக்கு உடுத்துவிப்பது அதிக நிச்சயமல்லவா? ஆகையால், என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம் என்று நீங்கள் கேளாமலும், சந்தேகப்படாமலும் இருங்கள் என்றும் சொல்லுகிறது (லூக். 12:27-29; மத். 6:28-34). ஆகையால் வேதம் சொல்லுகிறபடி காகங்களையும், காட்டு புஷ்பங்களையும் கவனித்துப் பார்த்த போது, நமக்கு இருந்த ஆகாரத்தை குறித்த கவலை வஸ்திரத்தை குறித்த கவலை, நம்மை விட்டு பறந்துபோய் விடுகிறது ஆகையால் வேதம் சொல்லுகிறது, காகங்களையும், காட்டு புஷ்பங்களையும் கவனித்து பாருங்கள் என்று சொல்கிறது (மத் 6:25-34; லூக். 12:22-29) நாமும் அவைகளை கவனித்து பார்த்து உணர்வடைவோமாக!

4) சோதித்து பாருங்கள். (மல். 3:10):-

சோதித்து பாருங்கள் என்ற உடனே அநேகருக்கு ஆச்சரியம். அதுவும் கர்த்தரை சோதிக்க முடியுமா? உன் தேவனாகிய கர்த்தரை பரிட்சை பாராதிருப்பாயாக, (மத். 4:7; உபா 6:6) என்று எண்ணலாம். பிரியமானவர்களே, மேற்கண்ட வசனத்தை (மல். 3:10) வாசித்து பார்க்கும்போது இவ்விதமாக பார்க்கிறோம் என் ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்கும்படித் தசமபாகங்களையெல்லாம் பண்டசாலையிலே கொண்டு வாருங்கள், அப்பொழுது நான் வானத்தின் பலகணிகளைத் திறந்து, இடங்கொள்ளாமற்போகுமட்டும உங்கள் மேல் ஆசீர்வாதத்தை வருஷிக்க மாட்டேனோவென்று

அதினால் என்னை சோதித்து பாருங்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் (மல். 3:10). ஆனால் தேவ ஜனங்களில் அநேகர் மற்ற எல்லா காரியங்களிலும் கர்த்தரை சோதித்து பார்ப்பார்கள் (1 கொரி. 10:9) கர்த்தரை பரீட்சை பார்ப்பார்கள். ஆனால், ஆண்டவர் சொன்ன காரியத்தில் மட்டும் அவரை சோதித்து பார்க்க மாட்டார்கள்.

அநேகருக்கு கொஞ்சம் கூடுதலாக வருமானம் வந்துவிட்டால் இதில் எப்படி கர்த்தருக்கு தசமபாகம் கொடுக்க முடியும் என்று எண்ணுகிறார்கள். ஐந்து ரூபாய், பத்து ரூபாயில் தசமபாகம் கொடுக்க ஓடி, ஓடி வருவார்கள். ஆனால், பத்தாயிரம், லட்சம் என்று வருமானம் வந்தால் இதில் எல்லாம் தசமபாகம் கொடுக்க முடியுமா? 50 கோட்டை நெல், நிலத்தில் விளைந்தால் 5 கோட்டை நெல் கர்த்தருக்கு கொடுக்க முடியுமா? இது நடக்கக்கூடிய காரியமா? என்று எண்ணுகிறார்கள். சகோதரனே, சகோதரியே, நீ கர்த்தருக்கு சரியாக 10 ல் 1 பாகம் (தசமபாகம்) கொடுக்காதவரை உனக்கு வானத்தின் பலகணிகள் (ஜன்னல்) திறக்கப்படாது, உனக்கு ஆசீர்வாதம் இல்லை. அநேகருக்கு ஆஸ்பத்திரியில் கொண்டு ஆயிரம், ஆயிரமாக கொடுத்தாலும் கர்த்தருக்கு கொடுக்க மனமில்லை. ஆகையால் அவர்களுடைய வாழ்க்கையில் தரித்திரம் அவர்களை விட்டு விலகாதிருக்கிறது (மல் 3:10; நீதி 20:25; லேவி. 27, 30-32; உபா. 14:22, மத். 23:23, லூக் 18: 11,12, நீதி. 3:9,10, ஆதி. 14:18-20). ஆகையால், கொடுங்கள் அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும் (லூக். 6:38). மேற்கண்ட வசனத்தின்படி (மல் 3:10) கர்த்தருக்காக கொடுத்து கர்த்தருடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொள்வோமாக!

5) நோக்கி பாருங்கள் – (ஏசா. 51:2):-

நோக்கி பாருங்கள் என்றவுடனே எல்லாரும் கர்த்தரைத்தான் நோக்கி பாருங்கள் என்று எழுதி இருப்பார்கள் என்று எண்ணுவார்கள். எல்லா மனிதர்களும் வேதத்தின் பிரகாரம் அப்படித்தான் செய்ய வேண்டும் (சங். 50:14,15). ஆனால் ஆச்சரியமாக வேதம் இப்படி சொல்லுகிறது. உங்கள் தகப்பனாகிய ஆபிரகாமையும் உங்களைப் பெற்ற சாராளையும் நோக்கி பாருங்கள் (ஏசா. 51:2) என்று சொல்லுகிறது. ஆம் நமக்கு முன் சென்ற பரிசுத்தவான்களுடைய வாழ்க்கையை நாம் நோக்கி பார்க்க வேண்டும். அது மட்டுமல்லாமல், நம்மை நடத்துகிறவர்களையும் நோக்கி பார்க்க வேண்டும் [எபி. 13:7).

இன்றைக்கு அநேகர் வீழ்ச்சி அடைந்தவர்களை நோக்கி பார்க்கிறார்கள். விசுவாசத்தில் நிற்கிறவர்களையே நோக்கி பார்க்க வேண்டும். விழுந்து போனவர்களை, பின்னடைந்தவர்களை, பரிசுத்த ஜீவியம் இல்லாதவர்களை, பொய்யர்களை, பொய் போதகர்களை, பொய் தீர்க்கதரிசனம் சொல்லுகிறவர்களை, பொய்யான வெளிப்படுத்தல் சொல்லுகிறவர்களை நம்பாதே! அவர்களை நோக்கி பார்க்காதே! அப்படியானால் நீயும் விழுந்து விடுவாய்.

புதிய எருசலேம் சபையின் தலைமையை பாருங்கள். அவர்களுடைய பரிசுத்த ஜீவியத்தை பாருங்கள். அவர்கள் நேர்த்தியாய் எருசலேமை கட்டுவதை பாருங்கள். எந்த சூழ்நிலையிலும், மனம் சோர்ந்து போகாதபடி தீவிரமாய் தேவனுடைய வேலையை செய்வதை பாருங்கள். இப்படி பட்ட பரிசுத்தவான்களை மட்டும் நாம் நோக்கி பார்த்தால் கிறிஸ்துவுக்குள் நிலை நிற்கமுடியும். அப்படியானால் எந்த சக்திகளும் நம்மை அசைக்க முடியாது (ரோம. 8:35 39). யூதாசை, தேமாவை, சிம்சோனை, நாம் நோக்கி பார்த்தால் நம்முடைய ஆவிக்

குரிய வாழ்க்கையில் விழ்ச்சி உண்டாகும். ஆகையால் நாம் கிறிஸ்துவுக்குள்ளாய் உறுதியாய் இருக்கின்ற பரிசுத்தவான்களை நோக்கி பார்த்து உணர்வடைவோமாக (ஏசா. 51:2).

6) ஆராய்ந்து பாருங்கள் யோ. 5:39:-

ஆராய்ந்து பாருங்கள் என்றவுடனே சிலர் ஆச்சரியமாக இப்படி எண்ணுகிறார்கள். நானும் தான் தினமும் வேதம் வாசிக்கிறேன். தினமும் 10 அதிகாரம் வாசிக்கிறேன் என்பார்கள். சிலர் வேதத்தை கதை புஸ்தகத்தை போல் வாசித்து கொண்டே இருப்பார்கள். சகோதரனே, சகோதரியே நீ வேதத்தை வாசிக்கும்போது ஜெபத்தோடு வாசி. தாவீது பக்தன் வேத வசனங்களை வாசிப்பதற்கு முன்பாக இப்படி ஜெபம்பண்ணுகிறார். உமது வேதத்தில் உள்ள அதிசயங்களை நான் பார்க்கும்படிக்கு என் கண்களை திறந்தருளும் [சங். 119:18]. என்று வேண்டிக் கொள்கிறார். அது மட்டும் அல்ல, தியானித்து வாசிக்க வேண்டும் [சங். 119:97]. வேதம் இவ்விதமாக சொல்கிறது. வேத வாக்கியங்களை ஆராய்ந்து பாருங்கள் அவைகளால் உங்களுக்கு நித்திய ஜீவன் உண்டு [யோ. 5:39] என்று சொல்கிறது.

இன்றைக்கு அநேக கிறிஸ்தவர்களின் வீடுகளில் ராணி, குமுதம், கல்கண்டு, ராணிமுத்து, இன்னும் அநேக ஆபாச புஸ்தகங்களை விரும்பி படிக்கிறதை, ஆவிக்குரிய கிறிஸ்தவர்களில் அநேகர் கூட இப்படிப்பட்ட ஆபாச புஸ்தகங்களை படிக்கிறதை, தியானிக்கிறதை, ஆராய்கிறதை பார்க்க முடிகிறது. இதன் முடிவு ஆத்துமா கெட்டுப்போகும் இவைகளை ஆராய்ந்து பார்க்கிறதினால் என்ன லாபம். ஆனால் வேத வாக்கியங்களை ஆராய்ந்து பார்த்தால், அந்த வேத வசனங்களினால் பரலோகம் மிக சமீபம் [யோ. 5:39].

சாது சுந்தர் சிங் சிறுவயதில் பகவத் கீதையையும், குர்ஆனையும் ஆராய்ந்து தியானித்தாராம். ஆனால் அவைகளினால் அவருடைய உள்ளத்தில் சமாதானம் கிடைக்கவில்லை. ஒரு நாள் வேதாகமத்தை வாசித்து தியானித்த போது அவருக்கு உள்ளத்தில் சமாதானம் கிடைத்தது என்று அவர் தம்முடைய புஸ்தகத்தில் எழுதி உள்ளார்.

சமாதானம் வேண்டியவர்கள் அதிகமாக வேதத்தை வாசிக்க வேண்டும் (சங் 119:165). மகிழ்ச்சி (சந்தோஷம்) வேண்டியவர்களும் [சங் 119:92] காரியம் வாய்க்காதவர்களும் [சங். 1:1-3] ஆத்துமாவில் உயிரில்லாதவர்களும், ஞானியாக வேண்டும் என்று விரும்புகிறவர்களும் (சங். 19:7) ஆவிக்குரிய பாதையில் வளர விரும்புகிறவர்களும் [1 பேது 2:1-3] நித்திய ஜீவனை பெற்றுக் கொள்ள விரும்புகிறவர்களும் [யோ 5:39]. நற்குணசாலிகளாக விரும்புகிறவர்களும் (அப் 17:11) அதிகமாக வேத வாக்கியங்களை ஆராய்ந்து பார்க்கவேண்டும் ஆகையால் அவைகளின்படி செய்து நடக்குரிய ஆசீர்வாதங்களைப் பெற்றுகொள்வோமாக! [சங். 19:7-11; ஏசா. 26:2; வெளி. 1:3]

இதை வாசிக்கின்ற அன்பான தேவ பிள்ளையே, கர்த்தர் உன்னை புதிய எருசலேம் சபைக்கு அழைக்கிறார். நான் [கர்த்தர்] கட்டுகிற எருசலேமை (சங். 147:2) நீ வந்து பார். (வெளி. 6:1) இசைவிணைப்பான நகரமாய் அதைக் கட்டுகின்றேன்' (சங். 122:3) என்கிறார். ஆகையால் நீயும் வந்து சேர்ந்து கொள் என்கிறார் (அப். 8:29) கர்த்தர் உன்னை அதிகாரத்தோடு 'நீ வந்து பார்' (வெளி. 6:1) என்று அழைக்கிறார்.

புதிய எருசலேம் சபையின் தலைமை அப்போஸ்தலர் அவர்களும், ஊழியக்காரராகிய நாங்களும், உங்களை அன்போடு

'நீங்கள் வந்து பாருங்கள்' என்று அழைக்கிறோம். கர்த்தர் கட்டுகிற எருசலேமை வந்து பாருங்கள் (சங். 147:2).

இந்த கடைசி காலத்திலே, தேவன் தம்முடைய சரீரமாகிய சபையை [ஏசா.2: 2,3] கட்டும்படியாக புதிய எருசலேம் சபையின் தலைமை அப்போஸ்தலர் N. லாசர் அவர்களை இந்த பூமியிலே அனுப்பியிருக்கிறார். அவர்களை தேவனே அனுப்பியிருக்கிறார். இதை வாசிக்கின்ற அன்பானவர்களே, நீங்கள் எந்த சபையை சார்ந்தவர்களாயிருந்தாலும் அல்லது சபைகளுடைய தலைவர்களாயிருந்தாலும் கர்த்தரிடத்தில் கேளுங்கள் ஆண்டவரே கடைசி காலத்திலே நீர் எழுப்புகிற உம்முடைய சபையின் பெயர் என்ன? அதை கட்டும்படியாக யாரை அனுப்பியிருக்கிறீர்? அவருடைய பெயர் என்ன? என்று விசாரித்துக் கேளுங்கள் உங்களுக்கு கர்த்தர் பதிலளிப்பார்.

நாங்கள் சொன்னால், அல்லது எழுதினால், அவர்கள் அவருடைய சபையை பற்றி மேன்மையாகத்தான் சொல்லுவார்கள் என்று எண்ணலாம். ஆகையால் நீங்கள் ஜெபித்து கேளுங்கள். கர்த்தர் உங்களோடு பேசுவார். நான் பிடித்த முயலுக்கு மூன்று கால் என்று சொல்லிக் கொண்டு இருக்காதீர்கள், நாங்கள் முயலுக்கு நான்கு கால் என்று சொல்வதை நம்புங்கள். நான் இருக்கிற இடம் தான் சரி. இது தான் கடைசிகால சபை என்று சொல்லிக் கொண்டு இருக்காதீர்கள் நாங்கள் சொல்வதை கொஞ்சம் கேளுங்கள் (வெளி. 2:7,11,17,29; 3:6,13,22).

இன்றைக்கு அநேக பொய் போதகர்கள், நாம்தான் மணவாட்டி என்று போதகம் பண்ணுகிறார்கள். பொய் போதகம் பண்ணுகிற தீர்க்கதரிசியே வால் ஏசா. 9:15 என்று ஏசாயா சொல்கிறார். இந்த வாலினாலேயே மூன்றிலொரு பங்கு நட்சத்திரம் போன்ற பரிசுத்தவான்களை சாத்தான் வீழ்ச்சியடைய செய்வான் என்பதை [வெளி. 12:4] மறந்து விட வேண்டாம். ஆகையால் கவனமாய் இருந்து உங்கள் ஆத்துமாக்களை காத்துக் கொள்ளுங்கள். புதிய எருசலேம் சபையின் தலைமை அப்போஸ்தலர் அவர்கள் எந்தக் கூட்டத்தில் பேசினாலும், கர்த்தர் என்னை அனுப்பியிருக்கிறார் என்று சவால் விட்டு பேசுவதைக் பார்க்கலாம்.

ஆகையால் இன்று எந்த ஒரு சபையின் தலைவரும் அப்படி சொல்ல முடியுமா? அனுப்பினால் தானே சொல்ல முடியும் ஆகையால் நீங்கள் எல்லோரும் கர்த்தரால் அனுப்பப்பட்ட தலைமையின் கீழ் வாருங்கள் வந்து பாருங்கள். மோசே இவ்விதமாய் சொல்கிறார். 'கர்த்தருடைய பட்சத்தில் இருக்கிறவர்கள் யார்? அவர்கள் என்னிடத்தில் சேரக்கடவர்கள் என்றான். அப்பொழுது லேவியின் புத்திரர் எல்லோரும் அவனிடத்தில் கூடிவந்தவர்கள் (யாத்:32:26) புதிய எருசலேம் சபையின் தலைமையும், உங்களை அழைக்கிறார்கள். தேவனுடைய பிள்ளைகளே, கர்த்தரால் தெரிந்து கொள்ள பட்டவர்களே நீங்கள் எல்லோரும் என்னோடு சேர்ந்து கொள்ளுங்கள் என்று அழைக்கிறார்கள், வந்து கர்த்தருடைய ஆசீர்வாதத்தை பெற்றுக் கொள்ளுங்கள். எருசலேமின் வாழ்வை காணும்படியாக அன்பாக அழைக்கிறோம் (சங். 128:5).

இன்றைக்கு அநேகர் கர்த்தரை ஆராதிக்கலாம். 'புதிய எருசலேம் சபையின் ஆராதனையை வந்து பாருங்கள். சகலமும், ஒழுங்கும் கிரமமாயும் செய்யப்படுகிறது (1 கொரி. 14:40). இந்த ஆராதனை பரலோக ஆராதனைக்கு ஒத்திருக்கிறது (எபி. 8:5). இங்கு ஒவ்வொரு ஆராதனைகளிலும் எல்லோரும் தேவ பிரசன்னத்தை காண்கிறார்கள். படிப்பறிவு இல்லாதவர்களும், சகல ஜனங்களும், சாட்சி கொடுக்கும் போது கர்த்தர் சொன்னார், கர்த்தர் வெளிப்படுத்தினார், கர்த்தர் காண்பித்தார் என்று ஒவ்

வொருவரும் சாட்சி கொடுக்கிறதை காண முடிகிறது. அது மட்டுமல்லாதபடிக்கு ஒவ்வொரு பரிசுத்த ஆராதனையிலும் கர்த்தர் கொடுக்கிற செய்தி வித்தியாசம் ஆனது.

கடைந்த கீரையையே திரும்ப திரும்ப கடையாதபடிக்கு எங்கள் பிள்ளைகளுக்கு நாங்கள் ஒவ்வொரு வாரமும் புதிய, புதிய விதவிதமான ஆத்மீக ஆகாரங்களை கொடுக்கும்படியாக தேவன் செய்தி தருகிறார். பரிசுத்த ஆராதனையில் கலந்து கொள்ளும் போது, பரலோகத்தில் இருந்து தேவனை ஆராதிப்பது போலவே இருக்கிறது. ஆகையால், இதை வாசிக்கின்ற அன்பானவர்களே, எப்படியாகிலும், புதிய எருசலேம் சபையின் ஒரு பரிசுத்த ஆராதனையில் கலந்து கொண்டு பாருங்கள்

சபையின் தலைவர்களே! நீங்கள் எல்லோரும் வந்து புதிய எருசலேம் சபையின் தலைமை அப்போஸ்தலரோடு சேர்ந்து கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுங்கள். அநேகரை ஆயத்தப்படுத்துங்கள்.

வேதம் உங்களை 'பாருங்கள்' யாக். 3:3 என்கிறது. நாங்களும் புதிய எருசலேம் சபைக்கு, நீங்களும் வந்து 'பாருங்கள்' என்கிறோம். உங்களை அன்புடன் அழைக்கிறோம். ஆமென்!

"நீ வந்து பார்" (வெளி. 6:1).

## பரிசுத்த ஸ்திரீகளுக்கு (மனைவிகள்) பரி. பேதுருவின் பத்துகட்டளைகள் (1 பேதுரு 3:1-6)

1) உங்கள் சொந்த புருஷர்களுக்கு கீழ்ப்படிந்திருங்கள்.

2) தேவையில்லாமல் புருஷர்களுக்கு போதனை செய்யாதிருங்கள்.

3) கற்பை காத்துக் கொள்ளுங்கள்.

4) புருஷனிடம் பயபக்தியாயிருங்கள்.

5) மற்றவர்களும் ரசிக்கதக்கதாக மயிரைப் பின்னி, பொன் ஆபரணங்களை அணிந்து, உயர்ந்த வஸ்திரங்களை உடுத்தி உங்களை அலங்கரியாதேயுங்கள்.

6) சாந்தமும், அமைதலான ஆவியுமுடைய நற்குணசாலிகளாக இருங்கள்

7) தேவனிடம் நம்பிக்கையாக இருங்கள்.

8) புருஷனை எஜமான் என்று எண்ணி கீழ்ப்படியுங்கள்.

9) புருஷனுக்கு நன்மை செய்யுங்கள்.

10) ஒரு ஆபத்துக்கும் பயப்படாமல், புருஷனை நம்பி சார்ந்து ஜீவியுங்கள்.

"தேவனைத் தேடு"
**"SEEK GOD"**

**Regd No. 040088/84**
**Postal Regd. No. MH BY NE-84/95**
**Tamil Monthly Magazine**

# புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு

தேவனுக்கு மகிமை உண்டாவதாக! 11-5-98 முதல் 14-5-98 முடிய புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு கொடைக்கானல் B.L.Shed - ஆலயத்தில் நடைபெற இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். யாவரும் ஜெபிக்கவும், உதவி செய்யவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கேட்டுக் கொள்ளுகிறோம்.

கிறிஸ்துவுக்குள்,

CHIEF APOSTLE **N. LAZAR.**

அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

*11 [திங்கள்] மே 1998*
*10 [புதன்] ஜூன் 1998*
*9 [வியாழன்] ஜூலை 1998*

*புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை*
*ஆண்டு சந்தா Rs. 30-00*
*வெளிநாடு Rs. 400-00*
*அனுப்ப வேண்டிய முகவரி :*

**CHIEF APOSTLE N. LAZAR**
**"NEW JERUSALEM CHURCH"**
**CHURCH LANE, TILAK NAGAR**
**DARGA CROSS ROAD, BHANDUP,**
**BOMBAY-400 078, INDIA.**

3. *மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.*

4. *பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்*

5. *"புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிக்கையை பெறறுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.*

Edited and Published by: Chief Apostle N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078, Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 166 - JUNE/JULY. 98

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

— மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திப்பார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

அருமையான தேவனுடைய பிள்ளைகளே தேசத்தில் தீமை பெருகி வருகிறது. தவறான மதம் பரவி வருவதால் தேசம் கேடுபாடுகளால் நிரம்புகிறது. மனித நேயம் மறைந்து வருகிறது. கிறிஸ்தவத்தை தவிர மற்ற மதங்கள் மனித ஜீவனின் அருமையை மறுக்கின்றன. மனித ஜீவன் மகா விலையேறப் பெற்ற பொருள். மனிதனுடைய ஜீவனுக்காக பழி வாங்குவேன் என்று தேவன் தமது வேதத்தில் எழுதியிருக்கிறார். மற்ற மதங்கள் நாயும், நரியும், கழுதையும், மரமும், செடியும், பறவையும் ஒன்றிலிருந்தே தோன்றின. அவையெல்லாம் சமம் என்று போதிப்பதினால் மனிதனை மனிதன் கொலை செய்கிறான். மாம்ச இச்சைக்காக ஸ்திரிகளை அனுபவித்து விட்டு கொலை செய்து விடுகிற கொடுமையை தினசரி பத்திரிக்கைகளில் ஏராளம் படிக்கிறோம். மனிதனின் மனச்சாட்சி கெட்டுப்போயிருக்கிறது, செத்து போய் விட்டது. அவர்களின் கண்களுக்கு முன் தெய்வ பயமில்லை. காரணம் தவறான மதத்தின் தீய எழுச்சியே. வேத மதத்தை மறைக்க, அடக்க, அமுக்க தீய மனிதர்கள் முயற்சிக்கிறார்கள். சத்தியத்தை அநியாயத்தினால் அடக்கி வைப்பவர்களுக்கு விரோதமாய் தேவ கோபம் வானத்திலிருந்து வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. தேவ தண்டனை ஜாதிகள் மேலும், ஜனத்தின் மேலும் வரப்போகிறது.

கிறிஸ்தவர்களாகிய நாம் அன்பினால் நிறைந்தவர்களாய் தேவனிலும் தேவனுடைய பிள்ளைகளின் மேலும் அன்புள்ளவர்களாக விளங்குவோமாக. பிறர் மேல் அன்பு கொண்டு அவர்களின் அவசர தேவைகளுக்கு கை கொடுப்போமாக. உயிருள்ள மனச்சாட்சியை உடையவர்களாகி நாம் தெளிவுடன் நடந்து தீமையை விட்டு விலகுவோமாக, மற்றவர்களோடு வாரிக் கொள்ளப்படாதபடி தேவ தயவை நாடி எப்பொழுதும் ஜீவிப்போமாக, தீமை தன் வாயை மூடும். சத்தியமே ஜெயிக்கும், நாம் களி கூர்ந்து மகிழும் நாள் வெகுதூரமில்லை

கிறிஸ்துவுக்குள்.

CHIEF APOSTLE N. LAZAR

(தொடர்ச்சி)

# திருச்சபை

ஏனென்றால் கர்த்தர் சபை கட்டும்படியாக யாரைத் தெரிந்து கொண்டாரோ அவர்களுக்குத் தரிசனமாகி அவர்களுக்குத் தரிசனமாகி அவர்களுக்கு, தேவனுடைய ராஜ்யத்திற்கு குரியவைகளை சபைக்குரிய சகல சட்டத்திட்டங்களைக் காண்பித்து அவர்களுக்கே கட்டளை கொடுத்தார் (அப். 1:1-3; 10:40-42; மத். 28:18-20; மாற். 16: 16-20; யோ. 20,21 அதி. லூக். 24:36-53). இத்தனை சபைகள் இருக்கிறதே புதிய எருசலேம் சபை எதற்கு என்று நீர் கேட்கலாம்.

1) யூதரும், புறஜாதிகளும் சேர்ந்தது புதிய ஏற்பாட்டின் சபை. விசுவாச மார்க்கத்தார் எவர்களோ அவர்கள் ஆபிரகாமின் பிள்ளைகள். அவர்கள் ஆபிரகாமோடு ஆசீர்வதிக்கப்படுகிறார்கள் (ஆதி. 12:1-3; கலா.3:7; எபே.3;1-9). ஒரு ஜாதிக்கோ, ஜனத்திறகோ, பாஷைக்காரருக்கோ, நாட்டாருக்கோ புதிய ஏற்பாட்டின் சபை சொந்தமல்ல. இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிற எல்லோருக்கும் அந்த சபை சொந்தம். அதில் ஐக்கியமாகிறதினால் அவர்கள் புதிய ஏற்பாட்டின் சபையாகலாம். இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிற எல்லாரையும் நேசிக்கும் சபை அவசியம்.

2) மனிதர் இரட்சிக்கப்பட, தேவ சாயல் அடைய, பூரணப்பட, ஆசீர்வதிக்கப்பட சபை அவசியம். மெய்யான சபையின்றேல் நித்திய இரட்சிப்பு இல்லை. மனிதன் பூரணப்பட முடியாது (அப். 2:47; 2: 41,42; எபே. 5:26,27; 4:11-13; அப். 2:38-42). மனிதர்கள் கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து, சபையை ஏற்றுக் கொள்ள வேண்டும், சபைக்கு ஒப்புக் கொடுக்க வேண்டும், கீழ்ப்படிய வேண்டும் (2 கொரி. 8:5). சபைக்கு ஒப்புக் கொடுக்க வேண்டும். சபைக்கு கீழ்ப்படிய வேண்டுமென்றால் சபைக்கு, அப்போஸ்தலர்களுக்கு ஒப்புக் கொடுக்க வேண்டும் என்று அர்த்தமாம். அடங்கியிருக்க வேண்டும் (1 பேதுரு 5:6).

பரிசுத்தவான்களை, வெற்றியடைந்தவர்களை மாதிரியாக நோக்க வேண்டும், பின்பற்ற வேண்டும். விழுந்து போனவர்களையோ, வாயில் வந்தவைகளை பேசிநடக்கிறவர்களையோ, தன்னிடத்தில் இல்லாததை இருக்கிறது போல் காண்பிக்கிறவர்களையோ பின்பற்றக் கூடாது. ஒவ்வொரு விசுவாசியும், ஊழியர்களும் மாதிரியைப் பின்பற்ற வேண்டும். தன் தன் போக்கிலே போகக் கூடாது. நடத்திப்புக் காரர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டும் (பிலி. 4:9;3:17; 1 தெச. 1:6; 1கொரி. 4:14-16; எபி. 13:7,17, 6:1).

மனிதனுடைய கீழ்ப்படியாமையே மனிதன் பூரணமடைய முடியாமல், தேவனுடைய சித்தத்தை பூரணமாய் செய்து முடிக்க முடியாமல் அவனை விழச் செய்கிறது. மனிதன் பாவத்தில் விழும் பொழுது அவன் சுய விருப்பம் செய்ய விரும்புகிறான். ஆகையால் கர்த்தர் பரிசுத்தவான்களை அபிஷேகம் பண்ணுவதும், அவர்களுடைய சுய சித்தத்தை உடைத்து கீழ்ப்படியாமையை நீக்க வேண்டியதும் அவசியமாகும் அவர்களை சுத்திகரிக்க வேண்டியது அவசியமாகும். அதனால் ஒரு பரிசுத்தவானை இன்னொரு பரிசுத்தவானைக் கொண்டு கர்த்தர் கீழ்ப்படுத்துகிறார். கீழ்ப்படிய கட்டளையிடுகிறார். அப்பொழுது கீழ்ப்படிய வேண்டியதும் அவசியம்.

நாம் நம்முடைய விருப்பப் பிரகாரம் ஊழியம் செய்ய விரும்பி ஊழியம் செய்வதென்றால் அது சுய சித்தத்தை நிறைவேற்று

வதாகும். பொதுவாக வைரத்தை வெட்ட இன்னொரு வைரத்தை உபயோகிப்பது போல பரிசுத்தவான்கள் ஒன்றாகக் கூட்டப்பட ஒரு பரிசுத்தவானைக் கொண்டு இன்னொரு பரிசுத்தவானை தேவன் வெட்டுகிறார், சுத்திகரிக்கிறார். அதற்கு கீழ்ப்படிய ஒப்புக் கொடுக்கும் பொழுது சுயசித்தம் நொறுக்கப்பட்டு அவர்கள் தெய்வ சித்தம் செய்ய தகுதியுள்ள ஒரு பரிசுத்தவானாக ஆகமுடியும், அவர்கள் சேர்ந்து ஐக்கியமாக இருக்க முடியும். சுயம் உடைக்கப்பட வேண்டியது அவசியம். நடத்திப்புக்காரர்களுக்கு கீழ்ப்படிவது அவசியம்.

கர்த்தர் இஸ்ரவேலர்களை நடத்தும் பொழுது மோசே, ஆரோனுக்கு கீழாகவும், பின்பு கானானுக்குள் பிரவேசிக்கும் போது யோசுவாவின் மூலமாகவும் அவர்களை நடத்தினார். யோசுவாவும் பிரதான ஆசாரியன் மூலமாக தேவ செய்தியை அறிந்து ஜனங்களுக்கு வெளிப்படுத்தினார். அவருடைய கட்டளைக்கு அவர்கள்கள் முற்றிலுமாகக் கீழ்ப்படிந்தார்கள் கீழ்ப்படிவோம் என்று வாக்கும் கொடுத்தார்கள் யோசு.1:16. ஆனபடியினால் ஊழியர்கள் நடத்திப்புக்காரருக்குக் கீழ்ப்படிய வேண்டும். சுயசித்தத்திற்கு அடிமைப்பட்டு, சொந்த வெளிப்படுத்தலை நம்பிக் கொண்டு பரிசுத்தவான்களுடைய ஐக்கியத்தை இழந்தார்களென்றால் அவர்கள் முழுவதுமாக நஷ்டப்பட்டுப் போவார்கள்.

கர்த்தர் எங்களைக் கொண்டும் பேசவில்லையோ என்று போராட்டம் நடத்தி ஆக்கினைக்குள்ளான கோராகு கூட்டத்தாரும், தாத்தான் அபிராம் போன்றவர்களையும் எண்ணிப்பார்க்கவும், மோசேக்கு விரோதமாக கலகம் பண்ணின மிரியாமையும், ஆரோனையும் எண்ணிப் பார்க்கவும் அவர்களுடைய முடிவையும் கவனிக்கவும்.

ஆனபடியால் கர்த்தருக்கு கீழ்ப்படிகிறதுபோல் பரிசுத்தவான்களுக்கும் கீழ்ப்படிகிறதின் மூலமாய் சுயாதீன ஆவிக்கு இடம் கொடுக்காமல், மாம்சத்தின்படி நடக்காமல் தேவ சித்தம் செய்து ஒரே சபையாக இணைந்து ப ரி சு த் த ஆலயமாக எழும்ப முடியும் அதற்கு சபை தேவை சபை இல்லாத இடத்தில் எச்சரிப்பாரோ, கண்டிப்பாரோ, சீர்திருத்துவாரோ, பரிசுத்தப்படுத்துவாரோ இல்லை. அவரவர்கள் தங்கள் இஷ்டப்பிரகாரம் நடக்கிறார்கள்; நடந்து தங்களுக்கும் தங்களைப் பின்பற்றுகிற மக்களுக்கும் சேதத்தை உண்டுபண்ணுகிறார்கள்.

[தொடரும்]

"மேலும் நாங்கள் நினைத்தபடி யாத்திரம் கொடாமல், தேவனுடைய சித்தத்தினாலே முன்பு தங்களைத் தாமே கர்த்தருக்கும், பின்பு எங்களுக்கும் ஒப்புக் கொடுத்தார்கள்" (2 கொரி. 8:5).

பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| T. ஜெயக்குமார் | J. ஜான்ஸிராணி | வள்ளியூர் | 21-5-98 |

லூத்தர் எழுதிய பதினைந்து பிரிவுகளுக்குச் சம்பாஷணையில் பங்குபெற்ற எல்லோரும் ச ம் ம தி த் து க் கையொப்பமிட்டார்கள். கடைசிப் பிரிவோடு பின் வரும் பிரதிக்கினை சேர்க்கப்பட்டது. அதாவது: திரு இராப்போஜனத்தில் அப்பத்திலும், இரத்திலும் கிறிஸ்துவின் சரீரமும், இரத்தமும் சரீரப்படி பிரசன்னமாயிருக்கிறதென்பதைப்பற்றி இச்சமயத்தில் நாங்கள் எல்லோரும் ஒத்துக் கொள்ளாவிட்டாலும், மனசாட்சி எம்மட்டும் இடங்கொடுக்குமோ அம்மட்டும் இரு திறத்தாரும் ஒருவருக்கொருவர் கி றி ஸ் த வ சிநேகம் காட்ட வேண்டும். சத்தியத்தை சரியாய் அறிந்து கொள்ளத் தேவன் தம்முடைய ஆவியானவரால் நம்மை உறுதிப்படுத்தும்படி சர்வ வல்லமையுள்ள தேவனையே நோ க் கி நாமெல்லோரும் மன உருக்கமும், ஊக்கமுமாய் ஜெபிப்போமாக என்பதே.

லூத்தரைச் சார்ந்தவர்கள், 'மனச்சாட்சி எம்மட்டும் இடங்கொடுக்குமோ அம்மட்டும் என்னும் வார்த்தைகளைச் சேர்த்தெழுத வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ஏனென்றால் கிறிஸ்தவ சிநேகமென்பது கிறிஸ்தவ ஐக்கியம் அல்ல; அது எல்லோருக்கும், ஆம் சத்துருக்களுக்கும் காட்ட வேண்டிய பொது சிநேகந்தானே.

வியர்த்து வடியும் நோய் என்று சொல்லப்பட்ட ஒரு வித தொற்றுப் பெருவாரி நோய், பட்டணத்தில் பரவினபடியால் எல்லோரும் அவரவர் ஊருக்குத் துரிதமாய்ப் புறப்பட்டார்கள். லூத்தர் வித்தன்பூர்க் பட்டணம் திரும்பினபோது ஒரு பிரசங்கத்தில் மார்க்பூர்க்கில் கூடின கூட்டத்தின் நடபடிக்கைகளை விசாரித்துச் சிநேக அடைவான இந்த உறவு, நாளடைவில் சகோதர ஐக்கியமாக மாறும் என்கிற நம்பிக்கை உண்டு என்றார்.

லூத்தர், அப்பத்திலும், இரசத்திலும் கிறிஸ்துவின் சரீரமும் இரத்தமும் மெய்யாய்ப் பிரசன்னமாயிருக்கிறது என்ற தம் போதகத்தை மாற்றிவிட்டார் என்னும் பேச்சு அடிக்கடி நடந்தபடியால், அவர் தம் மரணத்திற்குக் கொஞ்சக் காலத்திற்கு முன் பிரதிக்கினையோடு எச்சரித்து உரைத்ததாவது: "மார்க்க பேதங்களும், தப்புப் போதகங்களும் இடைவிடாமல் அதிகரிப்பதை நான் காண்கிறபடியால், இதற்குப் பின் என் ஜீவிய காலத்திலோ அல்லது என் மரணத்திற்குப் பிறகோ, தற்சமயம் சாக்கிரமெந்தியரும் அநபாப்தியஸ்தரும் செய்கிறது போல், எவனும் தன் கள்ளப் போதகத்தை ஸ்திரப்படுத்தும்படி என் பிரபந்தங்களுக்கு அபயமிடவாவது அல்லது என் பிரபந்தங்களிலிருந்து பொய்யாய் எடுத்துக்காட்டவாவது இடமிராதபடிக்கு நான் முழு உலகமும் அறியும்படி இத்துடன் என் விசுவாசத்தைப் பங்கு பங்காக எடுத்து அறிக்கை இடுகிறேன்.

இந்த அறிக்கையில் நான் என் மரண பரியந்தம் நிலைத்திருக்கவும், தேவ கிருபையால் இவ்வுலகத்தை விடவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நியாயாசனத்திற்கு முன் நிற்கவும் நான் எண்ணங்கொள்ளுகிறேன். என் மரணத்திற்குப் பிறகு எவனாவது, 'லூத்தர் உயிரோடிருந்திருந்தால் அவர் இப்போது இந்த விசுவாச அறிக்கையை வேறு விதமாகப் போதித்துப் பற்றி நிற்பார்; ஏனென்றால் அவர் இதைப் போந்தபடி ஆராய்ந்து பரீட்சிக்கவில்லை என்றால் அதற்கு மறுமொழியாக, நான் இம்மட்டும் பீடசாக்கிரமெந்தைப் பற்றிய என் விசுவா

சத்தை ஆதரித்து அதில் நின்றிருக்கிறது போல், தற்காலத்திற்காகவும் பின்வரும் எக்காலத்திற்காகவும் என் விசுவாச அறிக்கைகள் எல்லாவற்றையும் சத்திய வேதத்திற்கொத்தபடி மகா விழிப்பாய் பரிசோதித்திருக்கிறேன்; இப்போதும் அவைகளை மகா தைரியமாயும், திடமாயும் ஆதரிக்க ஆயத்தமாயிருக்கிறேன் என்று சொல்லுகிறேன்.

நான் குடித்து வெறித்திருக்கிறதில்லை; நினையாமல் பதட்டமாய்ப் பேசவுமில்லை. ஆனால் நான் சொல்லுகிறதை அறிந்து உணர்ந்து சொல்லுகிறேன். நியாயத்தீர்ப்பின் நாளில் ஆண்டவராகிய இயேசு இரட்சகருக்கு நான் கணக்குக் கொடுக்க வேண்டுமென்றும் நன்றாய் அறிந்திருக்கிறேன். ஆகையால் எவனும் இதை அற்பமாக அல்லது பரிகாசமாக எண்ணாதிருக்கட்டும். ஏனென்றால் நான் மனதார உண்மையைப் பேசுகிறேன் என்பதே.

மார்க்புர்க் சம்பாஷணை ஒத்திவைக்கப்பட்ட அதே மாதத்திலே, சுவிசேஷ அநுசாரிகள் எல்லோரும் ஷுவாபாக் என்னுமிடத்தில் கூடிவந்தார்கள். இந்த இடத்தில் கையெப்பமிடப்பட்டுச் சாதாரணமாய் ஷுவாபாக் அறிக்கைகள் என்று சொல்லப்படும் பதினேழு விசுவாச அறிக்கைகளும், மார்க்புர்க்கிலிருந்து வித்தன்புர்க் பட்டணத்திற்குப் பிரயாணம் செய்தபோது வழியில் லூத்தரால் எழுதப்பட்டன. அதில் பத்தாவது பாகம், திரு இராப்போஜனத்தில் கிறிஸ்துவின் சரீரமும், இரத்தமும் மெய்யாய்ப் பிரசன்னமாயிருக்கிறது என்பதைப் பற்றிய உறுதியான அறிக்கை. லூத்தரைச் சார்ந்த நாடுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து கூட்டுறவு செய்தன. இராயனுக்கு விரோதமாக ஆயுதம் தரித்து யுத்தம் செய்ய அவர்கள் எண்ணங்கொண்டது சரியல்லவென்று லூத்தர் திட்டமாய் எச்சரித்துத் தடைசெய்து தம்மைச் சார்ந்தவர்கள் எல்லாவற்றையும் பொறுமையாய் சகிக்க வேண்டுமென்று புத்தி சொன்னார். மேலும் துருக்கியர் கர்மானியாவுக்கு விரோதமாய்ப் படையெடுப்பதாகப் பயமுறுத்திய போது, 'துருக்கியரைக் கண்டனம் செய்யும் யுத்தப் பிரசங்கம்' என்னும் ஒரு பத்திரிக்கையை லூத்தர் பிரசுரம் செய்து, இராயனை ஆதரித்துப் பொது சத்துருக்களாகிய துருக்கியரோடு, தம்மைச் சார்ந்தவர்களனைவரும் சண்டைசெய்வது அவர்களுடைய கடமை என்று புத்தி புகட்டினார்.

(தொடரும்)

"ஆகையால் தேவனுக்கு கீழ்ப்படிந்திருங்கள்; பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள், அப்பொழுது அவன் உங்களை விட்டு ஓடிப் போவான்" [யாக். 4:7].

## வேதபாடம் (தொடர்ச்சி)

யோசு. 18: 1-9, 51

ஏழு கோத்திரங்களுடையதும யோசுவாவினுடையதுமான பங்கு:-

முந்தின தேசப் பிரிவுகள் கில்காலில் செய்யப்பட்டன. ஆனால் எப்ரேயரின் பூர்வீக தொழுகை ஸ்தலம் ஸ்தாபிக்கப்பட்ட இடமாகிய சீலோவுக்கு இப்பொழுது தலைமை ஸ்தானம் மாற்றப்பட்டது. இங்கே தரிசனக் கூடாரம் நிறுவப்பட்டது. தேசத்தை

பகிர்ந்து கொடுப்பதற்கு முறையாக அதை எழுதிக் கொண்டு வரும்படியாக யோசுவா கட்டளையிடுகிறார் வச. 1-10.

நியாயாதிபதிகள் 1-ம் அதி. பென்யமீது பங்குவீதம் யோசு. 18:10-28 முடிய விவரிக்கப்பட்டுள்ளது. தேசத்தை அளந்து இன்ன இன்ன கோத்திரத்தாருக்கு இன்ன பங்குகள் என்று ஒழுங்குப்படுத்தப்பட்டது.

பங்கு விதங்கள்:-

சிமியோனின் பங்கு [யோசு. 19:1-9.
செபுலோனின் பங்கு (வச. 10-16).
இசக்காரின் பங்கு (வச. 17-33).
ஆசேரின் பங்கு (வச. 24-31)
நப்தலியின் பங்கு (வச. 32-39).
தாணின் பங்கு (வச. 40-48).
யோசுவாவின் பங்கு (வச. 49:51) மகா சிறந்த பங்கை தேவன் நமக்கு அருளுகிறார்.

நம்முடைய வாழ்வு ஆசீர்வாதமாக, சமாதானமாக இருக்க தேவன் அனுக்கிரகம் செய்கிறார். அவர் அருளுகிற பங்கில் திருப்தியாக இருக்க வேண்டும். இஸ்ரவேலின் ஒவ்வொரு கோத்திரத்திற்குமாக பிரிக்கப்படுகையில் தேவ வாக்கு நிறைவேறுதலாயிற்று

எல்லோருக்கும் கடைசியாய் யோசுவா சுதந்திரத்தை அடைந்து காட்டினர். இம்மாதிரி யானது மெச்சப்படத் தகுந்தது.

எல்லோரும் சுதந்திரம் பெற்ற பின்பு யோசுவாவுக்கு சுதந்திரம் ஒதுக்கப்பட்டது. நாம் ஐசுவரியவானாகும்படி கிறிஸ்துவும் தரித்திரரானார். கர்த்தருடைய சொற்படி யோசுவா தன் பங்கு வீதத்தை பெற்றுக் கொண்டார் [வச. 50]. இவ்விதமாக அவர்கள் தேசத்தைப் பங்கிட்டு முடித்தார்கள் [வச. 51]. தேசத்தை வகுத்துக் கொடுப்பதில் ஒர் பாக்கியமான முடிவு, தேவ சித்தப்படி ஒவ்வொரு பகுதியும் பகிர்ந்து கொடுக்கப்பட்டது என்பதாம் சீட்டுப் போட்டு அவர் தேசத்தை பங்கிட்டார்.

யோசு. 18-ம் அதிகாரம் 1-வின் மூலமாக 300 வருடம் தரிசனக் கூடாரம் சீலோவாவில் இருந்ததாக அறிகிறோம். யோசு. 19:47 லேசேம் என்ற ஊர் யோர்தான் நதி உற்பத்தியாகும் இடத்தில் இருந்தது. யோசு. 19:51 இவைகளை கவனமாய் பகிர்ந்து கொடுத்த பங்கு விதமானது பல்வேறு குடும்பங்கள், கோத்திரங்கள் வித்தியாசங்களை அறிமுகப்படுத்துகிறது. வாக்குப்பண்ணப்பட்ட மேசியாவின் தலைமுறையையும், வம்சத்தையும் இதனால் எளிதில் ஆராய்ந்து கண்டு பிடிக்கக் கூடியதாய் அமைந்தது.

*யோசு. 20:1-9 அடைக்கலப் பட்டணம் ஏற்படுத்தப்படல்:-*

இவ் அடைக்கலப் பட்டணங்கள் துணிகரமான கொலை பாதகருக்கு அல்ல, கை பிசகாய் ஒருவனை கொன்றவன் தப்பித்துக் கொள்வதற்காகவேயாம். அவனுடைய காரியம் விசாரிக்கப்படும் வரை, வேறும் என்று கொலை செய்தவனும் அதில் அடைக்கலம் பெறலாம். நமது அடைக்கலமாயிருக்கிற கிறிஸ்துவை நினைப்பூட்டுகிறது எபி. 6:18.

அடைக்கலப் பட்டணத்திற்கு ஓடி வருகிற மனிதன் தன் காரியத்தை மூப்பர்கள் காது கேட்க சொல்ல வேண்டும் (யோசு 20:4)). இந்த அடைக்கலப் பட்டணங்கள் நமக்கு அடைக்கலமாயிருக்கிற கிறிஸ்துவை நினைப்பூட்டுகிறது [எபி. 6:18]. யோசு 20:2-ம் வசனத்தில் அடைக்கலப் பட்டணங்களை அனைத்தும் லேவியருடைய பட்டணங்களாக இருந்தது. உயர்ந்த இடங்களில் மனிதர்கள் செல்வதற்கு தடைகளின்றி ஸ்தாபிக்கப்பட்டிருந்தன (உபா 19:3).

வேறு வழிகள் குறுக்கிடுகையில் அடைக்கலம், அடைக்கலம் என்று குறியிடப்பட்டிருந்தது. அடைக்கலப் பட்டணத்திற்கு போகும் வழி மிகவும் தெளிவாக அமைக்கப்பட்டன (யோசு. 20:7-9). ஆறு அடைக்கலப் பட்டணங்கள் இருந்தன (உபா. 19).

*அடைக்கலப் பட்டணங்கள் ஆறு:-*

1) கேதேஸ்
2) சீகேம்
3) எப்ரோன்
4) பேசேர்
5) ராமோத்
6) கோலான்

இந்தப் பட்டணங்களின் பெயர்கள் ஞான அர்த்தமாக சொல்லப்பட்டன. இந்தப் பட்டணங்களின் பெயர்கள், இதன் விளக்கங்கள்.

*விளக்கம்:-*

1996-வது வருஷம் புதிய எருசலேம் செய்தி ஆகஸ்டு மாத பத்திரிக்கையில் 12-வது பக்கத்திலுள்ள வேதபாடத்தில் எண்ணாகமம் புஸ்தகத்திற்கு வியாக்கியானம் எழுதும் பொழுது எழுதப்பட்டுள்ளது. வாசித்து விளக்கம் அறிந்து கொள்க.

(தொடரும்)

"தேவனே, உம்முடைய கிருபை எவ்வளவு அருமையானது! அதினால் மனுபுத்திரர் உமது செட்டைகளின் நிழலிலே வந்தடைகிறார்கள்" (சங். 36:7).

# ஒபதியாவின் உபதேசம்

ஆபிரகாமின் குமாரனாகிய ஈசாக்குக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். மூத்தவன் ஏசா, இளையவன் யாக்கோபு. இருவரும் ஐசுவரியத்தில் பெருகி இருந்தமையால் சேர்ந்து வாழ முடியாமலிருந்தது. அவர்களது மந்தைகளை, அவர்கள் தங்கி இருந்த பூமி தாங்கக் கூடாததாயிருந்தது. ஆதலால் ஏசா சேயீர் மலையில் குடியேறினான். ஏசாவுக்கு ஏதோம் என்ற பெயரும் இருந்தமையால் அவன் சந்ததி ஏதோமியர்கள் என்றழைக்கப்பட்டனர்.

ஏசா தன் தம்பி யாக்கோபை பகைத்து முற்றிலும் ஒழிக்க திட்டமிட்டு வந்தபோது யாக்கோபு பாதுகாப்பு தேடி முதலாவது முழு இரவு ஜெபத்தை ஆரம்பித்து, விழித்திருந்து, விடாப்பிடியாக ஜெபித்து, தேவ பாதுகாப்பை பெற்றுக் கொண்டார். ஏசா தம்பியை கண்டபோது, கட்டிப்பிடித்து அழுது முத்தம் செய்த போதிலும், உள் பகைமை இருந்தது. ஏசாவின் சந்ததியாகிய ஏதோமியரிடத்திலும் இந்த உள் பகை இருந்தது.

யாக்கோபின் வம்சத்தாராகிய இஸ்ரவேலர் எகிப்திலிருந்து கானான் தேசம் நோக்கி பிரயாணப்பட்டு போகும் போது, ஏதோம் தேசம் வழியாக கடந்து செல்ல அனுமதி கேட்டபோது, ஏதோமியர் அனுமதி கொடுக்காததிலிருந்து, தங்கள் உள் பகையை வெளிப்படுத்தினார்கள் (எண் 20:17-21). ஆகவே இஸ்ரவேலர் ஏதோம் தேசத்தின் எல்லையை சுற்றிப்போக வேண்டியதாயிருந்தது. யாக்கோபு ஏதோமுக்கு சகோதரன் அல்லவா. இருவருக்குள்ளும் வெளிப்படையான கை கலப்பு இல்லாதிருந்தும், உள்ளே பகையும், வெறுப்பும், போட்டியும், அவனை விட நானே மேலானவன் என்கிற பெருமையும், அகங்காரமும் ஏதோமியரிடத்தில் இருந்தது. [எண் 20:20].

தேவனால் நேசிக்கப்படுகிற யாக்கோபுக்கு ஏசா செய்ததை கர்த்தர் கவனித்துக் கொண்டே இருந்தார். தேவனால் பிறந்தவன், தேவனால் பிறப்பிக்கப்பட்டவனுக்கு ஒருவன் செய்கிறதையும் கர்த்தர் கவனிக்கிறார் (1 யோ. 5:1). ஏசாவின் இருதயத்தின் அகங்காரத்தையும், யாக்கோபுக்கு செய்த கொடுமையையும் கர்த்தர் கண்டு, ஏதோமின் மேல் வரும் ஆக்கினைத்தீர்ப்பை தமது ஊழியனாகிய ஒபதியாவுக்கு வெளிப்படுத்த ஒபதியா தீர்க்கதரிசனம் உரைத்தார். அத்தீர்ப்பு ஏதோமுக்கு மாத்திரமல்ல, தேவனால் பிறந்த தன் சகோதரனை பகைக்கிற கொடுமை செய்கிற யாவர் மேலும் வரும் தீர்ப்பாக இருக்கும்படி திருஷ்டாந்தமாக

# தேவனுடைய அதிசயங்களும், அற்புதங்களும்

என் பெயர் A.இம்மானுவேல். எனது ஊர், பள்ளிகொண்டா, வேலூர் மாவட்டம். கடந்த சுமார் 2 மாதங்களுக்கு மேலாக என் உடலில் Chest Pain, Gas Trouble ஆகியவற்றால் நான் மிகவும் தாக்கப்பட்டும், பெலவீனப்பட்டும் என் குடும்பமே வேதனை அடைந்தனர். கை, கால் எரிச்சலால் தாங்க முடியால் மிக துயரமும், கண்ணீர் கவலையுடனிருந்து வந்த என் ஜெபத்தைக் கர்த்தர் கேட்டருளினர். சென்ற மார்ச் மாதம் முதல் வாரத்தில் சென்னை பாஸ்டர் சாம் இஸ்ரேல் அவர்களும், ஊழியர் தமிழ்ச் செல்வன் அவர்களும், பள்ளிகொண்டா ஊழியர் பிலிப் அவர்களும் என்னிடம் கடந்து வந்து என் தலையின் மீது எண்ணெய் பூசி மூவரும் ஜெபிக்க, என்னிலிருந்து ஏதோ பிரிந்து செல்வதாக உணர்ந்தேன். மரண நிலையில் இருந்த என்னை அற்புதமாக குணமாக்கிய என் தேவனுக்கே மகிமை உண்டாவதாக! அல்லேலூயா!

இப்படிக்கு,
உண்மையுள்ள விசுவாசி,
A. இம்மானுவேல்,
பள்ளிகொண்டா.



எழுதியும் வைத்தார். இதோ, ஒபதியா உரைக்கிறார் கேளுங்கள்:

அழிவுக்கு முன்னானது அகந்தை. விழுதலுக்கு முன்னானது மன மேட்டிமை என்று ஞானி சொல்லியிருக்கிறார். பூமியின் அஸ்திபாரங்கள் கர்த்தருடையது (1 சாமு. 2:8). ஒரு கூடாரம் தூண்களின் மேல் நிற்கிறது. தூண்களை எடுத்து விட்டால் எவ்வளவு அலங்காரமான கூடாரமானாலும் படுத்து விடும். தூண்களை நிறுத்தி அதன் மேல் கூடாரத்தை விரித்தால் அது கம்பீரமாய் இருக்கும்.

தரித்திரம் அடையச் செய்கிறவரும், ஐசுவரியம் அடையப் பண்ணுகிறவரும் கர்த்தரே. ஒருவனை தாழ்த்துகிறவரும் அவரே. அவர் சிறியவனை புழுதியிலிருந்து எடுத்து, எளியவனை குப்பையிலிருந்து உயர்த்துகிறார், அவர்களை பிரபுக்களோடே உட்காரவும் மகிமை உள்ள சிங்காசனத்தை சுதந்தரிக்கவும் பண்ணுகிறார். அஸ்திபாரங்கள் அவருடையவைகள்.

உலக வாழ்வானாலும், ஆவிக்குரிய வாழ்வானாலும், தேவனால் உண்டாயிருக்கிறது என்கிற அறிவு இருக்க வேண்டும். என் சாமர்த்தியமும், என் கைப் பெலனும் இந்த ஐசுவரியத்தை எனக்குச் சம்பாதித்தது

என்று உன் இருதயத்தில் சொல்லிக் கொள் ளாமலும் இருக்க எச்சரிக்கையாக இருந்து, இந்த ஐசுவரியத்தை சம்பாதிக்கிறதற்கான பெலனை கர்த்தரே தந்தார் என்ற உணர்வு வேண்டும் (உபா. 8:17,18).

இப்படி அறிவும், உணர்வும் அற்றுப் போகையில் மனிதன் மன மேட்டிமை கொள்கிறான், தேவனை மறக்கிறான். அவர் யார் என்கிறான். மனத்தாழ்மையினால் ஒருவரையொருவர் தங்களிலும் மேன்மையானவர்களாக எண்ணக்கடவீர்கள் என்று ஆவியானவரின் ஆலோசனை இருக்க (பிலி. 2:3). நான் உன்னைவிட பெரியவன் என்று வாயினால் சொல்லா விட்டாலும், இருதயத்தில் எண்ணங்கொண்டு ஏசாவைப் போல் அகங்காரியாகிறான்.

வந்தது மோசம், கர்த்தர் தமது தூண்களை எடுத்து விடுகிறார். கூடாரம் படுத்து விடுகிறது [ஒப. 3]. இருதயத்தின் அகங்காரத்தால் வரும் ஆபத்து.

1] பல ஜனங்கள் மத்தியில் சின்னவனாக நேரிடும்.

2] மதிப்பு, மரியாதை போய், மற்றவர்களால் மிகவும் அசட்டை பண்ணப்படுவார்கள்.

3] மறைவாய் இருந்த ஆவிக்குரிய வரங்கள், வல்லமைகள், உலக ஆஸ்தி, ஐசுவரியம் தேடி எடுத்துக் கொள்ளப்பட்ட கொள்ளைப் பொருளைப் போல் பறிபோகும்.

4] அன்பாய் இருந்தவர்கள் அருவருப்பார்கள்.

5] தோழர்களாய் இருந்தவர்கள் துரோகிகளாகி கீழே தள்ளி மேலே வருவார்கள்.

6) நன்மை பெற்றவர்கள் நய வஞ்சகர்களாவார்கள்

7] என்ன நடக்கிறது, ஏன் இப்படி சம்பவித்தது, எது சரி, எது தப்பு என்று கண்டுபிடிக்க முடியாதபடி ஞானேந்திரியத்தை கர்த்தர் அழித்து விடுவார்.

8) இனம்புரியா கலக்கம் இருதயத்தை ஆட்கொள்ளும்.

9) முடிவிலே சங்காரம், அதாவது ஆத்மீக வாழ்வும், ஒட்டியிருக்கிற உயிரும் எடுபட்டு போகும். மனிதனே, தேவனுக்குமுன் தாழ்மைப்படு. தேவ மனிதரை மதித்து நட (ஒப. 2:5-9).

ஏதோம் பெருமையாக இருந்தது மட்டுமல்ல கொடுமையாகவும் இருந்தான், சகோதரனை உள்ளத்தில் பகைக்காயாக என்பது கர்த்தரின்கட்டளை, சகோதரன் பேரில் பட்சமாயிருக்க வேண்டும். ஒருவர் பாரத்தை ஒருவர் சுமக்க வேண்டும். சகோதர சிநேகத்தில் நாளுக்கு நாள் பெருக வேண்டும். சகோதரனுக்காக ஜீவனையே கொடுக்க கடனாளிகளாக இருக்கிறோம், இப்படி பரிசுத்தர்கள் பலரும் கற்பனைகளை கொடுத்துள்ளார்கள் (11-ம் பக்கம் பார்க்க)

## கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்

21-2-1998 அன்று கோவை கிளை சபையைச் சேர்ந்த காளியம்மாள் என்ற எலிசபெத் அம்மா (வயது 60) அவர்கள் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறோம். அம்மாவுடைய பிரிவால் வருத்தத்திலிருக்கும் குடும்பத்தாருக்கும், உற்றார், உறவினருக்கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் ஆறுதல் கூறிக் கொள்ளுகிறோம்.

அப்படியிருந்தும் ஏசா, தன் சகோதர னுக்கு செய்த கொடுமைகள் கொஞ்சமல்ல. இதோ ஆவியானவர் அறிவிக்கும் ஏசாவின் கொடுமைகள்.

1) அந்நியன் (சாத்தான்) புகுந்து சகோதரனோடு போராடி அவனை மேற்கொண்டு [பாவத்தில் விழப்பண்ணி] அவன் பலத்தை [வல்லமையை] எடுத்துக் கொண்டு போகையில், சகோதரனுக்கு துணையாக வரவில்லை. அவன் ஜீவனடையும்படி அவனுக்காக நீ ஜெபிக்கவில்லை. மறுதேசத்து மனிதர்கள் [புறஜாதிகள்] அவன் வாசலுக்குள் புகுந்து அவனுடைய சம்பத்தை (பரிசுத்த ஜீவியத்தை) கொள்ளையாடுகையில் பலனற்ற சகோதரனை தாங்காமல் நீ மறு பக்கத்தில் அந்நியனைப்போல் நின்றாயே என்று ஆவியானவர் குற்றம் சாட்டுகிறார் (வச. 11).

2) சகோதரனின் வீழ்ச்சியில் பிரியப்பட்டான் ஏசா.

3) சகோதரன் கெட்டுப் போனதில் சந்தோஷப்பட்டான்.

4) சகோதரன் பற்பல விதங்களில் நெருக்கப்பட்டு ஒடுங்கிப் போகையில், அவனை மட்டந்தட்டி தன்னை உயர்த்தி பெருமையாக பேசிக் கொண்டான்.

5) சகோதரன் ஆபத்தில் இருக்கும் போது நல்லவன் போல் உள்ளே நுழைந்து ஒற்றறிந்தான்.

6) சகோதரன் தீங்கனுபவிப்பதை கண்டு களித்தான்.

7) சகோதரன் கெட்டதால் தனக்கு ஆதாயத்தை தேடினான்.

8] சகோதரனின் காரியங்களை ஒற்றறிந்து வழிகளிலே நின்று வருகிற, போகிறவர்களிடம் குறை சொல்லி, தூற்றி காட்டிக் கொடுத்தான். இப்படியெல்லாம் சகோதரனுக்கு தீங்கிழைத்த உனக்கு வரும் தண்டனை யாதெனில்:

1] வெட்கம் உன்னை மூடும்.

2] நீ என்ன செய்தாயோ அதுவே உனக்கு செய்யப்படும்.

3] நீ செய்த தீங்கின் அளவுக்கு தக்கதாக உனக்கு தீங்குண்டாகும்.

4] உன் சகோதரன் ஆபத்தைக் கண்டு கொண்டாடி மகிழ்ந்தது போல், உன் ஆபத்தை பல ஜாதிகளும் கண்டு ஆகடியம் பண்ணுவார்கள்.

5] தேவன் தன் மகனை சிட்சித்து சீர்படுத்தி நிலை நிறுத்தி அக்கினி ஜுவாலையாக்கி விடுவார். நீயோ வைக்கோல் துரும்பாயிருப்பாய்.

6] நீயோ சுதந்திரத்தை இழந்து பாவியாய் போவாய்.

7] கர்த்தர் தனது நியாயாதிபதிகளைக் கொண்டு உன்னை நியாயந்தீர்ப்பார்.

8] நீயோ முற்றிலும் சங்கரிப்பட்டுப் போவாய் [ஒப. 10-12].

சகோதரனே, உங்களில் ஒருவன் கொடுமைக்கார ஏசாவைப் போலிருந்து சுதந்திரத்தை இழந்து போகாதிருப்பீர்களாக.



# ஒரு யூதன்

"அந்நாட்களில் பலவித பாஷைக்காரரில் பத்து மனுஷர் ஒரு யூதனுடைய வஸ்திரத் தொங்கலைப் பிடித்துக் கொண்டு, தேவன் உங்களோடேயிருக்கிறுர் என்று கேள்விப்பட்டோம். ஆகையால் உங்களோடே கூடப் போவோம் என்று சொல்லி அவனைப் பற்றிக் கொள்வார்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறுர் என்றுர்" (சக. 8:23).

அந்நாட்கள் என்று சொல்லும்பொழுது அது கடைசி நாட்களைக் குறிப்பிடுகிறது. நாம் வாழ்கின்ற இந்நாட்களைக் குறிப்பிடுகிறது. இந்நாட்களுக்கு அடையாளமாக ஏசாயா கூறும் பொழுது, 'அந்நாட்களில் ஏழு ஸ்திரீகள் ஒரே புருஷனைப் பிடித்து, நாங்கள் எங்கள் சொந்த ஆகாரத்தைப் புசித்து, எங்கள் சொந்த வஸ்திரத்தை உடுப்போம். எங்கள் நிந்தை நீங்கும்படிக்கு உன் பேர் மாத்திரம் எங்கள் மேல் விளங்கட்டும் என்பார்கள் (ஏசா. 4;1) என்று ஏசாயா கூறுகிறுர்.

'சேனைகளின் கர்த்தர் உரைக்கிறது என்னவென்றுல் இதோ 'ஒரு புருஷன்' அவருடைய நாமம் 'கிளை' எனப்படும். அவர் தம்முடைய ஸ்தானத்திலிருந்து முளைத்தெழும்பிக் கர்த்தருடைய ஆலயத்தைக் கட்டுவார்' (சகரி. 6:12) என்று சகரியா தீர்க்கதரிசி, 'புருஷன்' ஒருவரைக் கூறுகிறுர் இவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. ஸ்திரீகள் என்று அழைக்கப்படுவது சபைகளே. அந்நாட்களில் ஏழு ஸ்திரீகள் ஒரு புருஷனை பிடித்து நாங்கள் எங்கள் சொந்த ஆகாரத்தைப் புசிதது. எங்கள் சொந்த வஸ்திரத்தை உடுப்போம் என்பார்கள் (ஏசா. 4:1)

இவர்கள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை, அந்த புருஷனை மணவாளனுக்ப் பிடித்துக் கொண்டு எங்களுடைய சொந்த உபதேசத்தைக் கைக்கொள்வோம், உம்முடைய இரட்சிப்பின் வஸ்திரம் எங்களுக்கு வேண்டியதில்லை, நாங்கள் எங்களுடைய சுயநீதியான, அழுக்கான வஸ்திரங்களை உடுத்திக் கொள்வோம் [ஏசா. 64:6], எங்களுடைய நிந்தை நீங்கும்படிக்கு உன் பேர் மாத்திரம் எங்கள் மேல் விளங்கட்டும் என்பார்கள். நாங்கள் உம்முடைய பெயரைத் தரித்துக் கொண்டு பெயர் கிறிஸ்தவர்களாக இருப்போம் என்று கூறுவார்கள் என்று ஏசாயா கூறியது போல், இந்நாட்களில் கிறிஸ்தவ மார்க்கம் ஒரு மதமாக இயேசு கிறிஸ்துவின் பெயரை மாத்திரம் தரித்துக் கொண்ட கூட்டமாக செயல்படுகிறதைக் காண்கிறேம்.

இந்நாட்களில் தான் 'ஒரு யூதனுடைய வஸ்திரத் தொங்கலைப் புறஜாதியாரில், பலவித பாஷைக்காரராகிய பத்து மனிதர்கள் பிடித்துக் கொண்டு தேவன் உங்களோடே இருக்கிறுர் என்று கேள்விப்பட்டோம், ஆகையால் உங்களோடே கூடப் போவோம் என்று சொல்லி அவனைப்பற்றிக் கொள்வார்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறுர் (சகரி. 8:23) என்று சகரியா கூறுகிறுர்.

*யார் இந்த யூதன்?*

யாக்கோபின் புத்திரர்களில் ஒருவருக்குப் பெயர் யூதா என்றும், இந்த யூதாவின் புத்திரர்கள் யூதர்கள் என்றும் (மத். 1:2), காலப்போக்கில் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தாரையும் யூதர்கள் என்று அழைப்பதாகக் காண்கிறேம்.

இங்கே சகரியா காணுகின்ற ஒரு யூதன் பலவித பாஷைக்காரராகிய புறஜாதிகளில் பத்து மனுஷர் இவருடைய வஸ்திரத் தொங்கலைப் பிடித்துக் கொண்டு இவரோடு கர்த்தர் இருக்கிறுர் என்று அறிந்து இவர்

மூலம் கர்த்தரிடம் சேர்ந்து கொள்வார்கள் (சக. 8:23) என்பதாக கூறுகிறார்.

பவுல் கூறும் பொழுது புறம்பாக யூதனானவன் யூதனல்ல, புறம்பாக மாம்சத்தில் செய்யப்படும் விருத்த சேதனமும் விருத்த சேதனமல்ல, உள்ளத்திலே யூதனானவனே யூதன். எழுத்தின்படி உண்டாகாமல் ஆவியின்படி இருதயத்தில் உண்டாகும் விருத்த சேதனமே விருத்தசேதனம், இப்படிப்பட்டவனுக்குரிய புகழ்ச்சி மனுஷராலே அல்ல தேவனாலே உண்டாயிருக்கிறது (ரோம. 2: 28,29) என்று கூறுகிறார். ஆகையால் இந்த யூதன் இருதயத்தில் விருத்தசேதனம் பெற்றவர், இவர் தேவனால் புகழப்படுபவர். இப்படி ஒருவரை, ஒரு யூதனை கடைசி நாட்களில் எழுப்பி, அவர் மூலமாய் மக்களைத் தம்மண்டையில் சேர்த்துக் கொள்வது தேவனுடைய திட்டமாயிருக்கிறது என்று பார்க்கிறோம்.

மேலும் எரேமியா கூறும்பொழுது "சீர் கெட்டுப்போன குமாரத்தியே, எந்த மட்டும் விலகித் திரிவாய்? கர்த்தர் பூமியிலே ஒரு புதுமையை சிருஷ்டிப்பார், ஸ்திரீயானவள் புருஷனை சூழ்ந்து கொள்வாள்" (எரே.31:22) என்று கூறுகிறார். இங்கே எரேமியா அவரைப் புருஷன் என்று கூறுகிறார். புருஷன் என்று சொல்லும் பொழுது, 'நான் குழந்தையாய் இருந்த போது குழந்தையைப் போல பேசினேன், குழந்தையைப் போல சிந்தித்தேன், குழந்தையைப் போல யோசித்தேன், நான் புருஷனானபோதோ குழந்தைக் கேற்றவைகளை ஒழித்துவிட்டேன்' (1 கொரி. 13:11) என்பதாக பரிசுத்த பவுல் கூறுகிறார். ஆகையால் புருஷன் என்பது குழந்தை அனுபவங்களை விட்டு வளர்ந்த ஒரு அனுபவத்தைக் காட்டுகிறது. இவர் [பவுல்] புருஷனாக வளர்ந்து விட்டபடியால் கொரிந்து சபை மக்களையும்; விழித்திருங்கள், விசுவாசத்திலே நிலைத்திருங்கள், புருஷராயிருங்கள் (1 கொரி 16:13) என்று கூறுகிறார்.

ஆனால் இந்நாட்களிலே 'பிள்ளைகள் என் ஜனங்களை ஒடுக்குகிறார்கள், ஸ்திரீகள் அவர்களை ஆளுகிறார்கள். என் ஜனமே உன்னை நடத்துகிறவர்கள் உன்னை மோசம் போக்கி நீ நடக்க வேண்டிய வழியை அழித்துப் போடுகிறார்கள்' (ஏசா. 3:12) என்று ஏசாயா கூறுகிறார். பிள்ளைகள் என் ஜனங்களை ஒடுக்குகிறார்கள். ஆவிக்குரிய ஜீவியத்திலே, தெய்வீகத்திலே வளர்ச்சியடையாதவர்கள், புருஷர்களாக ஆகாத குழந்தை அனுபவமுடையவர்கள், தேவ ஜனங்களை வளர்ச்சியடையவிடாதபடி ஒடுக்குகிறார்கள்; காலமெல்லாம் குழந்தைகளாகவே காணப்பட வைக்கிறார்கள். 'பாலுண்கிறவன் குழந்தையாயிருக்கிறபடியினாலே நீதியின் வசனத்தில் பழக்கமில்லாதவனாயிருக்கிறான்' எபி 5:13 என்று வேதம் கூறுகிறது. 'அவர் யாருக்கு அறிவைப் போதிப்பார்? யாருக்கு உபதேசத்தை உணர்த்துவார்? பால் மறந்தவர்களுக்கும் முலை மறக்கப்பண்ணப்பட்டவர்களுக்குமே' ஏசா. 28:9 என்று ஏசாயா கூறுகிறார்.

ஆகையால் குழந்தை அனுபவத்தில் இருப்பவர்கள்தான் வெளியே ஊழியம் செய்கிறார்கள். ஆதலால் மக்கள் வளர்ச்சியடைய முடியவில்லை. என்று காண்கிறோம்.

பின்னும் ஏசாயா கூறும்பொழுது ஸ்திரீகள் அவர்களை ஆளுகிறார்கள்; என்று கூறுகிறார். இது பெண்களால் நடத்தப்படும் ஊழியங்களைக் குறிப்பிடுகிறது. இந்த நாட்களில் எங்கு பார்த்தாலும் ஊழியக்காரிகளும் தீர்க்கதரிசினிகளும் தோன்றின காலமாயிருக்கிறது. இவர்களெல்லோரும்

தேவ ஜனங்களை மோசம் போக்கி, அவர்கள் தேவனை நோக்கிச் செல்ல வேண்டிய வழியை அழித்துப் போடுகிறார்கள் (ஏசா. 3:12) என்று ஏசாயா கூறுகிறார்.

ஆகையால் தேவனாகிய கர்த்தர் கடைசி நாட்களில் ஏசாயா சொல்வது போல் இருதயத்தில் விருத்த சேதனம் பெற்ற ஒரு யூதனை எழுப்பி, எரேமியா சொல்வது போல ஆவிக்குரிய ஜீவியத்தில் வளர்ச்சியடைந்த ஒரு தெய்வீக புருஷனை எழுப்பி தம்முடைய ஜனங்களை சகல ஜாதிகளிலும் பாளைக்காரரிலுமிருந்து தம்மண்டையில் கூட்டிச் சேர்க்கிறார், அவர், அவர்களைத் தம்மைப் போல, இருதயத்தில் விருத்த சேதனம் பெற்ற யூதர்களாகவும், ஆவிக்குரிய ஜீவியத்தில் வளர்ச்சியடைந்த புருஷர்களாகவும் மாற்றுகிறார் என்றும் கர்த்தர் (வெளிப்படுத்தினதற்காக கர்த்தரை ஸ்தோத்தரிக்கிறேன்) வெளிப்படுத்துகிறார். இதுவே புதிய எருசலேமின் மேன்மை.



# குற்றம் நம் மேல் சுமரும்

எலிசா தீர்க்கதரிசியின் காலத்திலே சீரியாவின் ராஜாவாகிய பெனாதாத் தன் இராணுவத்தையெல்லாம் கூட்டிக் கொண்டு வந்து சமாரியாவை முற்றிகை போட்டான் அதினாலே சமாரியாவிலே கொடிய பஞ்சமுண்டாயிற்று. ஒருவர் பிள்ளைகளை ஒருவர் வெட்டி தின்னும் அளவிற்கு பஞ்சம் கொடியதாயிருந்தது. அந்த பட்டணத்தின் ஒலிமுக வாசலிலே நான்கு குஷ்டரோகிகள் இருந்தார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கி நாம் இங்கே இருந்து சாக வேண்டியது என்ன? பட்டணத்தில் பஞ்சம் உண்டாயிருக்கிறதினால் அங்கே போனாலும் சாவோம், நாம் இங்கே இருந்தாலும் சாவோம். ஆகையால் சீரியருடைய இராணுவத்திற்குள் போவோம் வாருங்கள் என்று எதிரிகளின் இராணுவத்திற்கு தைரியமாய் போனார்கள்.

அங்கே கர்த்தரின் வல்லமையால் சீரியருடைய இராணுவம் இருட்டோடே எழுந்திருந்து தங்கள் கூடாரங்களையும், தங்கள் குதிரைகளையும், தங்கள் பாளயத்தையும் இருந்த வண்ணமாக விட்டு ஓடிப் போனதை கண்டார்கள். அந்த குஷ்டரோகிகள் பாளயத்தின் முன்னனி மட்டும் வந்தபோது ஒரு கூடாரத்திற்குள் பிரவேசித்து புசித்துக் குடித்து, அதிலிருந்து வெள்ளியையும், பொன்னையும், வஸ்திரங்களையும் எடுத்துக் கொண்டுப் போய் ஒளித்து வைத்து திரும்பி வந்து வேறொரு கூடாரத்திற்குள் பிரவேசித்து அதிலிருந்தும் அப்படியே எடுத்துக் கொண்டுபோய் ஒளித்து வைத்து, பின்பு அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கி 'நாம் செய்கிறது நியாயமல்ல இந்நாள் நற்செய்தி அறிவிக்கும் நாள், நாம் மவுனமாயிருந்து, பொழுது விடியும் மட்டும் காத்திருந்தால் குற்றம் நம்மேல் சுமரும்; இப்பொழுது நாம் போய் ராஜாவின் அரமனையாருக்கு இதை அறிவிப்போம் வாருங்கள்' என்று அறிவித்தார்கள் பட்டணத்து மக்கள் அனைவரும் புறப்பட்டு சீரியரின் பாளயத்தை கொள்ளையிட்டு பசி, பட்டினியிலிருந்து விடுவிக்கப் பட்டார்கள் என்று வேதத்தில் வாசிக்கி

றோம் (2 இராஜா. 6:24-7:16).

அதேபோல இந்த கடைசி காலத்திலே உலக முழுவதும் மக்கள் பாவத்திலும், சாபத்திலும் சத்துருவான சாத்தானின் பிடியிலும் சிக்கி மாண்டு கொண்டிருக்கிறார்கள். கர்த்தருடைய வல்லமையால் இரட்சிப்பு உண்டு, மீட்பு உண்டு, விடுதலை உண்டு என்பதை மக்கள் அறியாமல் இருக்கிறார்கள். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காக சிலுவையிலே மரித்து, சாத்தானை ஜெயித்து மீட்பை ஏற்கனவே உண்டுபண்ணி விட்டார்.

அதை விசுவாசித்து நாம் இரட்சிப்பை சுதந்தரித்து கொண்டிருக்கிறோம். பாவத்திலிருந்து விடுதலை பெற்று இருக்கிறோம். பசி, பட்டினியிலிருந்தும், சாபத்திலிருந்தும், நோயிலிருந்தும், பிசாசின் பிடியிலிருந்தும் விடுதலை பெற்று இருக்கிறோம். இந்த நற்செய்தியை அந்த நாலு குஷ்டரோகிகளைப் போல பிரசித்தப்படுத்த வேண்டியது நம் ஒவ்வொருவருடைய கடமையல்லவா! தேவனால் இரட்சிக்கப்பட்ட சகோதரனே, சகோதரியே, ஊழியர்களே, நாம் இரட்சிக்கப்பட்ட செய்தியை தீவிரமாய் பஞ்சத்தில் (பாவத்தில்) இருக்கிறவர்களுக்கு அறிவிக்கிறோமா?

"இதோ, நான் தேசத்தின் மேல் பஞ்சத்தை அனுப்பும், நாட்கள் வரும்; ஆகாரக் குறைவினால் உண்டாகிய பஞ்சமல்ல; ஜலக் குறைவினால் உண்டாகிய தாகமுமல்ல, கர்த்தருடைய வசனம் கேட்கக் கிடையாத பஞ்சத்தை அனுப்புவேன் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். அப்பொழுது அவர்கள் கர்த்தருடைய வசனத்தைத் தேட ஒரு சமுத்திரந்தொடங்கி மறு சமுத்திரமட்டும் வடதிசை தொடங்கிக் கீழ்த்திசை மட்டும் அலைந்து திரிந்தும் அதைக் கண்டடையாமற் போவார்கள்" (ஆமோ. 8:11,12).

ஒவ்வொரு நாளும் கோடிக்கணக்கான மக்கள் இரட்சிக்கப்படாமல் மரித்துப்போய் கொண்டிருக்கிறார்கள். நாம் பெற்ற இரட்சிப்பைக் குறித்து அசதியாக இருந்தால் நாம் சுயநலவாதிகள் அல்லவா? 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று மற்றவர்களின் இரட்சிப்புக்காக நாம் அக்கறைக் கொள்கிறோமா? எல்லோரும் இரட்சிக்கப்படவும் சத்தியத்தை [தேவனை] அறிகிற அறிவை அடையவும் தேவன் சித்தமுள்ளவராயிருக்கிறார் (1 தீமோ. 2:4).

இன்று அநேகர் இரட்சிப்பின் சுவிசேஷத்தை அறிவிக்க வெட்கப்படுகிறார்கள். 'சுவிசேஷத்தை நான் பிரசங்கித்து வந்தும் மேன்மைபாராட்ட எனக்கு இடமில்லை. அது என்மேல் விழுந்த கடமையாயிருக்கிறது. சுவிசேஷத்தை நான் பிரசங்கியாதிருந்தால் எனக்கு ஐயோ! என்று அப். பவுல் கூறுகிறார் (1 கொரி. 9:16).

இரட்சிப்பு மனிதனின் முயற்சியால் உண்டாகிறதல்ல. கர்த்தருடைய வல்லமையால் கிருபையால் உண்டாகிறது. அது தேவனுடைய ஈவு [எபே. 2:8]. இரட்சிப்பு கர்த்தருடையது [சங். 3:8]. ஒவ்வொரு ஆத்துமாவும் விலையேறப் பெற்ற ஆத்தும இரட்சிப்பு அருமையானது. 'பலத்தினாலும் அல்ல, பராக்கிரமத்தினாலுமல்ல என்னுடைய ஆவியினாலே எல்லாம் ஆகும்' என்று கர்த்தர் சொல்லுகிறார் [சகரி. 4:6]. 'மனந்திரும்புகிற (இரட்சிக்கப்படுகிற) ஒரு பாவியினிமித்தம் பரலோகத்தில் மிகுந்த சந்தோஷமுண்டாகும்' [லூக். 15:10].

முதலில் நீ இரட்சிக்கப்பட வேண்டும். பின்பு மற்றவர்களுக்கு அந்த அனுபவத்தை அறிவிக்க வேண்டும். இரட்சிக்கப்படாதவர்களின் ஊழியம் பலனைத்தராது. வெற்றி பெறாது. 'நீ குணப்பட்டபின் உன் சகோதரனை ஸ்திரப்படுத்து' என்று கர்த்தர் அப். பேதுருவினிடத்தில் கூறினார் (லூக். 22:32)

ஆகவே நம் குடும்பத்தாருக்கு, நண்பர்கள், அறிமுகமானவர்கள் யாவருக்கும் சுவிசேஷத்தை அறிவிக்க வேண்டும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று வேதத்தில் வாசிக்கிறோம் (அப். 16:31).

இயேசு கிறிஸ்துவைக் குறித்து கேள்விப்படாதவர்கள் எப்படி விசுவாசிப்பார்கள். பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால் எப்படி கேள்விப்படுவார்கள்? (ரோம. 10: 13-15). ஒவ்வொரு இரட்சிக்கப்பட்ட பிள்ளைகளின் சாட்சியும் ஜீவியமும் வல்லமையான பிரசங்கமாக இருக்கிறது. அநேகர் சாட்சி சொல்ல வெட்கப்படுகிறார்கள், எனக்கு தகுதியில்லை என்கிறார்கள். இரட்சிப்பின் நற்செய்தியை அறிவிக்க படிப்போ, பட்டமோ தேவையில்லை.

நான்கு குஷ்டரோகிகள் மூலமாக முழு பட்டணமும் இரட்சிக்கப்பட்டது அல்லவா? இயேசு மீன் பிடித்துக் கொண்டிருந்தவர்களை அழைத்து அப்போஸ்தலர்களாக மாற்றினார். அவர்கள் உலகமெங்கும் இந்த நற்செய்தியை பரப்பினார்களே! நாம் குஷ்டரோகிகளைப் போல, உலக மக்களால் புறக்கணிக்கப்பட்டவர்களாக இருந்தாலும், பேதைகளைக் கொண்டு ஞானிகளை வெட்கப்படுத்த தேவன் சித்தம் கொண்டுள்ளார்.

சிறிய வேலைக்கார பெண் மூலமாக சீரியாவின் படைத்தலைவனாகிய நாகமான் குஷ்டரோகம் மாறி இரட்சிக்கப்பட்டானல்லவா? (2 இராஜா. 5:2-4,17).

'சகல ஜாதிகளுக்கும் சுவிசேஷம் முந்திப் பிரசங்கிக்கப்பட வேண்டும்.. நீங்கள் என்ன பேசுவோமென்று முன்னதாகக் கவலைப்படாமலும், சிந்தியாமலும் இருங்கள். அந்நாழிகையிலே உங்களுக்கு எது அருள் செய்யப்படுமோ அதையே பேசுங்கள் ஏனெனில் பேசுகிறவர்கள் நீங்களல்ல, பரிசுத்த ஆவியே பேசுகிறவர்' (மாற்.13:10.11).

'உனக்கு இருக்கிற இந்தப் பலத்தோடே போ; உன்னை அனுப்புகிறவர் நான் அல்லவா? என்று கர்த்தர் கிதியோனிடம் கூறினார் அல்லவா?' (நியா. 6:14). நித்திய ஜீவனை (இரட்சிப்பை) பெற்றவர்கள் பாவத்தில் மரித்திருக்கிறவர்களுக்கு ஜீவன் கொடுக்க வேண்டும். பொழுது விடியப்போகிறது. கர்த்தருடைய வருகையின் நாள் சமீபமாகி விட்டது. கர்த்தருடைய வருகைக்குப் பின் வழியும் இல்லை. இன்றே இரட்சணிய நாள். இன்றே அநுக்கிரக காலம். [2 கொரி. 6:2]. ஆகவே காலம் தாழ்த்தாமல் கர்த்தருடைய இரட்சிப்பின் செய்தியை தீவிரமாய் அறிவிப்போமாக! நாம் மவுனமாயிருந்தால் குற்றம் நம் மேல் சுமரும்.

# ஆசீர்வதிக்கப்பட்ட இஸ்ரவேல்

ஆதி. 22:18-ன் படி சகல ஜாதிகளுக்குள்ளும் ஆசீர்வதிக்கப்பட்ட இஸ்ரவேலர் இன்று வரை உலகத்திற்கு ஆசீர்வாதமாக இருக்கின்றார்கள். பௌதிக விஞ்ஞானியான ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் ஆபிரகாம் வழிவந்த இஸ்ரவேல் வம்சத்தை சேர்ந்தவர். தத்துவ ஞானி ஹென்ட்ரி பெர்க்ஸன், மனோதத்துவ நிபுணர் சிக்மண்ட் பிராய்டை இவர்களும் இஸ்ரவேலர்களே, வங்கி முறையை உலகிற்கு அறிமுகப்படுத்தியதும் யூதர்களே. இங்கிலாந்தின் இருப்புப் பாதைக்கு வழி வகுத்த நாத்தான் மேயர் ரோத்சைல்டு, ரஷ்யாவின் இருப்புப் பாதைக்கு வழி

வகுத்த சாமுவேல் சலமோலிக்ஸ் போலியாக்கப்பும் யூதரே. அமெரிக்கக் கண்டத்தைக் கண்டு பிடித்த கொலம்பஸ் பயணத்திற்கு ஸ்பெயின் தேசத்து யூதர்களே காரணம். யூரேனஸ் கிரகணத்தையும், சூரியனுடைய சுழற்சியையும் வில்லியம் ஹெர்ஷெல் என்ற யூதர் கண்டுபிடித்தார். வில்லியம் பீர் என்ற யூதர் சந்திரனில் மலைகள் உள்ளது என்று கண்டறிந்தார். ஆல்பர்ட் மைக்கேல்சன் என்ற யூதர் ஒளியின் வேகத்தை கண்டறிந்தார்.

ஆபிரகாம் ஜேக்கப் என்ற யூதர் தொண்டையை பரிசோதிக்கும் லேரிங் கோஸ்கோப்பைக் கண்டுபிடித்தார். ஓ எம்ஸ்தலாஸ் அலர்ஜிக்கான சிகிச்சையையும், சைமன் ப்ளக்ஸ்னர் என்ற யூதர் பிளக்ஸ்னர் பிசன்ட்ரி என்ற வியாதியையும், லியோ பர்க்கர் என்ற யூதர், பர்க்கன் என்ற வியாதியையும், பிராங்க்ஷாம் பர்க் என்ற யூதர் டெர்மட்டைடிஸ் ஷாம்பர்கை என்ற வியாதியையும், இம்மானுவேல் லிக்மேன் என்ற யூதன், லிக்மேன் என்ற வியாதியையும், ஜோனஸ் சால்க் என்ற யூதர் போலியோ தடுப்பு மருந்தையும், செல்மேன் ஆபிரகாம் என்ற யூதர் காச நோய்க்கான ஸ்செப்ட்ரோமைசினையும், ஷைமன் பாருக் என்ற யூதர் அப்பெண்டிசைடீஸ் அறுவை சிகிச்சையையும், வாசர்மேன் என்ற யூதர் சிஃபிலிஸ் கண்டறியும் முறையையும், பால் ஓர்லிக் என்ற யூதர் சிஃபிலிஸ்க்கான சிகிச்சையையும், ஒட்லிக் டிராபே என்ற யூதர் இதய நோய்க்கான டிஜிட்டாலிஸ் என்ற மருந்தையும், கார்கோலர் என்ற யூதர் அறுவை சிகிச்சைக்கு முன் மயக்கமூட்டும் நோவோகேன் என்ற மருந்தையும், மின்கோவ்ஸ்கி என்றயூதர் சர்க்கரை வியாதிக்கான இன்சுலினையும், வைபால் என்ற யூதர் டைபாஸ்டு நோயை கணடு அறியும் முறையையும் கண்டு பிடித்தனர் எமிலி பெரிலினர் என்ற யூதன் மைக்ரோபோன், கிராமபோன், ஆபிரகாம் ஸ்டெர்ன் என்ற யூதர் கணக்குப் போடும் எந்திரத்தையும், ஹெர்மன் ஜோன்ஸ் என்ற யூதர் செயற்கை ரப்பரையும், ஆபிரகாம் ஸ்கேரய்னர் என்ற யூதர் பெட்ரோலியம் தயாரிக்கும் முறையையும் கண்டறிந்தனர். ஐன்ஸ்டீன், மைக்கேல்சன் என்ற யூதர்கள் அணு ஆராய்ச்சிக்கு வழி வகுத்தனர். ஆகாய விமானத்தைக் கண்டு பிடித்த ரைட் சகோதரர்களுக்கு முன்னால் பறப்பதை கிளைசர் முறையில் முதலில் கண்டு பிடித்தவர் ஒட்டோ வில்லியன் தால் என்ற யூதரே. மார்கோனிக்கு முன்னதாகவே ஹெயின்ரிக் ஹெர்ட்ஸ் என்ற யூதர் ரேடியோ அலைகளைக் கண்டறிந்து, ரேடியோ கண்டு பிடிக்க உதவினர். கிரகாம் பெல் என்பவர்க்கு முன்னாலே ஜோஹன் ரீஸ் என்ற யூதர் டெலபோனை இயக்கி காண்பித்தார். யூதர்களின் அனபளிப்புகளை அடுக்கிக் கொண்டே போகலாம். இவ்வாறு உலகத்தின் பல நிலைமைகளுக்கும் ஆசீர்வாதமாய் இருக்கும் யூதர்கள் தான் விலையேறப் பெற்றதும், உயர்ந்த பொக்கிஷமுமாகிய பரிசுத்த வேதாகமத்தை அளித்தனர். ஆரம்ப காலத்திலிருந்தே உலகத்தின் வரைபடங்களெல்லாம் யூதர்களாலேயே வரையப்பட்டிருந்தன. வான சாஸ்திர கணக்குகளுக்கு வழி வகுத்தவர்கள் யூதர்களே. எல்லாவற்றிற்கும் மேலாக உலகை மீட்கும் பொருளாக வந்த ஆண்டவராகிய "இயேசு கிறிஸ்து" யூத குலத்தில் தோன்றியவரே. யூத வம்சத்திற்குள்ளாக பூமியின் வம்சங்கள் எல்லாம் ஆசீர்வதிக்கப்படும் என்ற தேவனுடைய வார்த்தை உண்மையாக இருக்கிறது. உலகத்திற்கு ஆசீர்வாதமாய் இருக்கும் யூதர்கள் 1948-ம் ஆண்டிலிருந்து தங்கள் தாயகம் திரும்பிக் கொண்டிருப்பது ஆண்டவராகிய 'இயேசு கிறிஸ்து' வின் 2-ம் வருகைக்கு முன் நிறைவேற வேண்டிய தீர்க்கதரிசனம் ஆகும்.

ஸ்தானபதி

---

தலைமை அப்போஸ்தலர் ஐயா அவர்கள் ஊழியர் மாநாட்டிற்கு சென்றுவிட்டபடியால் ஜூன் - ஜூலை மாத பத்திரிக்கை சேர்த்து வெளியிடப்படுகிறது.

---

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd No. 040038/84
Postal Regd. No. MH BY NE-84/95
Tamil Monthly Magazine

# புதிய எருசலேம் சபையின் 30வது ஆண்டு விழா (8.8.1968-8.8.1998)

நம் திருச்சபையின் 30வது ஆண்டு விழாவை வருகின்ற 8-8-1998 சனிக்கிழமையன்று வெகு விமரிசையாகக் கொண்டாடி தேவனை மகிமைப்படுத்துமாறு திருச்சபையார் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர். "கர்த்தர் எருசலேமைக் கட்டுகிறார்" (சங். 147:2). புதிய எருசலேமை ஒரே சரீரமாய் உலகமெங்கும் கட்டுகிறார்.

Chief Apostle N. Lazar

# 12 வது ஊழியர் மாநாடு

11-5-1998 முதல் 15-5-98 முடிய புதிய எருசலேம் சபையின் 12வது ஊழியர் மாநாடு கொடைக்கானல் B.L. Shed ஆலயத்தில் மிகவும் வெற்றிகரமாகவும், ஆசீர்வாதமாகவும் நடந்தேறியது. கலந்து கொண்ட எல்லா பரிசுத்தவான்களையும், தேவன் ஆசீர்வதித்தார். தேவனுக்கே மகிமை. ஜெபித்த, உதவின கரங்களைத் தேவன் ஆசீர்வதிப்பாராக நன்றி!

CHIEF APOSTLE **N. LAZAR.**

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

9 [வியாழன்] ஜூலை 1998
10 [திங்கள்] ஆகஸ்டு 1998
7 [திங்கள்] செப்டம்பர் 1998

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
ஆண்டு சந்தா Rs. 30-00
வெளிநாடு Rs. 400-00
அனுப்ப வேண்டிய முகவரி:
**CHIEF APOSTLE N. LAZAR**
**"NEW JERUSALEM CHURCH"**
**CHURCH LANE, TILAK NAGAR,**
**DARGA CROSS ROAD, BHANDUP,**
**BOMBAY-400 078, INDIA.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. "புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிக்கையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited and Published by: Chief Apostle N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 167 - AUG. 98'



"புதிய எருசலேம் சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே. 4:11–16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1–3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் –மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்–மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்–மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்–யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்–யோவா. 21:15–17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5–8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்–1 கொரி. 11:23–26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1–6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும்: இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40–43).

CHIEF APOSTLE N.LAZAR

## இதழின் உள்ளே . . .

## ஆசிரியர் உரை

தேவனுடைய செயல்களை வந்து பாருங்கள். தேவன் அற்பமானவை களைத் தெரிந்து கொண்டு தம்முடைய வல்லமையினால், பலத்தினால் செய்யும் கிரியைகளை வந்து பாருங்கள். தேவனுக்கென்று கிரியை செய்கிறதென்றால், நம்முடைய சிறந்த நற்கிரியைகளல்ல. நம்மைக் கொண்டு தேவன் செய்யும் கிரி யைகளே தேவனுக்கு வேண்டும். நம்முடைய நீதிகளல்ல, தேவன் நம்மை ஏவி, நம்மைக் கொண்டு செய்யும் கிரியைகளே கிறிஸ்தவ வாழ்க்கை, தெய்வ ஊழிய மாகும். நான் கிறிஸ்துவுக்காக இதைச் செய்தேன் என்பதல்ல, கிறிஸ்துவானவர் என்னைக் கொண்டு நடப்பித்த கிரியைகள் என்கிறார் அப்போஸ்தலனாகிய பவுல் ரோம. 15:18. நாங்கள் தேவனுக்கு உடன் வேலையாட்களாயிருக்கிறோம் என்கி றார் (1 கொரி. 3:9). ஆம் கிறிஸ்தவ ஜீவியமாக இருக்கட்டும், ஆத்தும ஆதாய மாக இருக்கட்டும், தான தருமம் தியாகங்களாயிருக்கட்டும் தேவன் தந்த பெலத் தின்படியே செய்கிறோம் (1 பேது. 4:11). நான் செய்தேன், நான் தேவனுக்கு கொடுத்தேன் என்று சொல்வதற்கு ஒன்றுமில்லை. நான் செய்தேன் என்று சொல் லுகிறவர்களுக்கு ஒன்றுமில்லை. தேவன் என்னைக் கொண்டு செய்தார் என்று சொல்லி அமர்ந்திருப்போமாக (அப். 15:4). கிறிஸ்துவின் ஜீவன் நம்மூலம் வெளிப்பட இடங்கொடுப்போமாக (2 கொரி. 4:7-10). இப்படி செய்தால் நாமும் தேவனுடைய கிரியையை நமக்கு நியமித்த கிரியைகளைச் செய்து முடிப்போம் [1 கொரி. 16:10, எபே. 2:10]. தேவன் தம்முடைய கிரியைகளில் நமக்குப் பங்கு கொடுக்கிறார். வேகமாய்ச் செய்வோமாக [2 கொரி. 6:1, அப். 20:24]. நன்றாய், சுறுசுறுப்பாய் பிரயாசப்படுவோமாக, நற்கிரியை செய்வோமாக, உங்கள் கிரியை களுக்குப் பலனுண்டு (1 கொரி. 15:58).

கிறிஸ்துவுக்குள்,

CHIEF APOSTLE N. LAZAR

# திருச்சபை

(தொடர்ச்சி)

சபையானது தேவனுடைய திட்டம். உலகத் தோற்றத்திற்கு முன்னதாகவே தேவன் அவ்வாறு திட்டமிட்டுள்ளார். ஆனபடியினால் தேவன் சபையை, மக்களை பரிசுத்தவான்களின் கையில் ஒப்புக் கொடுக்கிறார். பரிசுத்தவான்களும் தேவனுடைய திட்டத்தை நிறைவேற்ற அதில் தீவிரமாய் ஈடுபடுவார்களாக! அவர்களும் தங்களுடைய சுயசித்தத்தை நிறைவேற்றாமல் தேவனுடைய சித்தத்தையும், திட்டத்தையும் நிறைவேற்றுவதில் கவனமாய் இருப்பார்கள். ஆனபடியினால் இயேசுவைப் பின்பற்ற வேண்டுமென்றால் மாதிரி தேவை, மாதிரி அப்போஸ்தலனே. மாதிரி இல்லாவிட்டால் நீ எப்படி இயேசுவை பின் பற்றுவாய்? ஆகையால் சபை தேவை.

### 3) தேவன் வாசமாயிருக்க சபை தேவை:-

பாவத்தை உங்கள் நடுவிலிருந்து நிக்கிரகம் பண்ணுதவரை நான் உங்கள் மத்தியிலே வாசம் பண்ணேன் என்று தேவன் சொன்னார். ஆனபடியால் தேவன் அசுத்தமான இடத்தில் வாசம் பண்ணுவது இல்லை (உபா. 23:14; யோசு. 7:12). தேவன் வாசமாயிருக்கிற இடம், தேவனுடைய பரிசுத்த ஜனங்கள் மத்தியிலே, சபை மத்தியிலே வாசமாயிருக்க விரும்புகிறார். ஆனபடியால் சபை தேவன் வெளிப்படுகிற இடமாக இருக்கிறது. தேவன் மக்களை சந்திக்கும் இடமாகிறது. தேவன் மக்களுக்கு ஆலோசனை கொடுக்கிற இடமாகிறது. தேவன் மக்களை ஆசீர்வதிக்கிற இடமாயிருக்கிறது. தேவன் மக்களை எச்சரிக்கிற இடமாகிறது. தேவன் மக்களை பாதுகாக்கிற இடமாயிருக்கிறது. சபையில் தேவன் வாசம் பண்ண வேண்டும்.

பெட்டி வெள்ளிப் பெட்டியாயிருந்தாலும் அதற்கு உள்ளே தனம் இல்லையென்றால் அந்த பெட்டிக்கு மதிப்பும் இல்லை. சபைக்கு பெரிய பெயர் இருந்தாலும் தேவன் அங்கே வாசம் பண்ணவில்லையென்றால் பிரயோஜனம் இல்லை. அங்கே அசுத்தம் காணப்படுகிறது என்று அர்த்தம். அங்கு பக்தி முயற்சி இல்லை. தேவ பக்தி வளர்ச்சி இல்லை. பரிசுத்தமில்லை, கீழ்ப்படிதல் இல்லை. அசட்டை இருக்கிறது என்பதன் மூலமாக நாம் கண்டு கொள்ளலாம்.

தேவன் வாசமாயிருக்க திருச்சபை தேவை. பழைய ஏற்பாட்டிலே தாம் வாசமாயிருக்க ஆசரிப்பு கூடாரத்தை உண்டாக்கும்படி கட்டளையிட்ட தேவன் யாத். 25:8, 21,22 மெய்யான சபையில் தேவன் பிரசன்னமாகிறார். அங்கே வருகிற மக்கள் மெய்யாகவே தேவன் இங்கே இருக்கிறார் என்று கண்டு முகங்குப்புற விழுந்து வணங்குகிறார்கள் (1 கொரி. 14:24,25). மக்கள் இரட்சிக்கப்படுகிறார்கள், சுகமாகிறார்கள், ஆசீர்வதிக்கப்படுகிறார்கள்.

இந்நாட்களிலே கூட்டம், கூட்டமாய் கூடுகிற சபைகளினால் மக்கள் இரட்சிக்கப்படுகிறதில்லை. தேவ பிரசன்னம் இல்லை. ஆனபடியினால் தேவ பயம் இல்லை. புதிய எருசலேம் சபை, தேவன் வாசமாயிருக்கத் தேவை.

### 4) தேவன் தன்னை உலகத்திற்கு காண்பிக்க சபை தேவை:-

சபையானது World Teacher. தூதர்களுக்கும் தேவன் சபையின் மூலமாக தன்னை வெளிப்படுத்துகிறார் (எபே. 3:9,10). தேவன் சபையில் ஜரங்களையும், கனிகளை

யும், வல்லமைகளையும், பரிசுத்தத்தையும் வெளிப்படுத்துகிறார். சபையின் மூலமாய் தேவனுடைய நானாவிதமான ஞானம் வெளிப்படுகிறது. சபையின் மூலமாகவே தேவன் தன்னை காண்பிக்க முடியும். பூரணமான சபையின் மூலமாய் தேவன் தன்னை காண்பிக்கிறார். பற்பல துறைகளைச் சார்ந்த இரகசியங்களை தேவன் சபையின் மூலமாய் ஏராளமாய் வெளிப்படுத்துகிறார். மக்களுடைய காரியங்களுக்கு பதில் கொடுக்கிறார்; விளக்கம் கொடுக்கிறார். சபையின் மூலமாகவே தேவன் உலகத்திற்கு போதிக்கிறார். ஆனபடியினால் சபை World Teacher ஆக இருக்கிறது. எனவே புதிய ஏற்பாட்டின் சபை தேவை.

5) தேவ தூதர்கள் மகிழ்ந்து களிகூற சபை தேவை:-

சபை கூடுகிறதென்றால் தேவன் அங்கே பிரசன்னமாகிறார். தேவ தூதர்கள் பிரசன்னமாகிறார்கள். அங்கே நடக்கும் காரியங்களில் தேவ தூதர்கள் மகிழுகிறார்கள். வரப்போகிற காரியங்கள் வெளிப்படுத்தப்படுகின்றன. தேவ தூதர்கள் அங்கே பிரசன்னமாகி ஜனங்களோடு சேர்ந்து தேவனை ஆராதிக்கிறார்கள். மனிதர்கள் தேவனை பாடுகிறதும், தேவனை தொழுது கொள்ளுகிறதும், தேவனைக் குறித்து சாட்சி கொடுக்கிறதும் அவர்களுக்கு மிகவும் ஆச்சரியம். இவைகளை பார்க்க தேவ தூதர்களும் பிரியமாயிருக்கிறார்கள். (1 பேது. 1:12).

6) உலகத்தை ஆளுகை செய்ய சபை தேவை:-

சபை என்று சொல்லப்படுகிறது. தேவன் தம்முடைய அநாதி திட்டத்தை நிறைவேற்றுவதாகும். ஆதாம், ஏவாளை தேவன் சிருஷ்டித்து உலகை ஆளுகை செய்யும்படியாக ஆளுகையளித்தார். சாத்தானுடைய வஞ்சனைக்கு அவர்கள் உட்பட்டு ஆளுகையை இழந்து போனார்கள். சபையின் மூலமாக தேவன் திரும்பவும் உலகத்தை அவர்கள் ஆளுகை செய்யும்படியாக சபையை எழுப்புகிறார். சபை கிறிஸ்துவோடு கூட மணவாட்டியாக இந்த உலகத்தை ஆளுகை செய்யும். ஆயிரவருஷ அரசாட்சியிலும், நித்தியத்திலும் சபையானது நித்தியமான ஸ்தானத்தை வகிக்கப்போகிறது. பரலோக ஆலயத்திலே பிரகாரம், பரிசுத்த ஸ்தலம், மகா பரிசுத்த ஸ்தலம் என்று மூன்று பிரிவுகள் காணப்படுகின்றன. மகா பரிசுத்த ஸ்தலத்தில் தேவனும், தேவனுடைய பக்கத்தில் மணவாட்டியும் அமர்ந்திருக்கிறார்கள்.

யோசேப்பு சிங்காசனத்தில் இருக்கும் பொழுது யோசேப்பின் பக்கத்தில் அவனுடைய மணவாட்டியும் அமர்ந்திருந்தாள். பரிசுத்த ஸ்தலத்தில் பரிசுத்தவான்கள் இருப்பார்கள். பிரகாரத்தில் இரட்சிக்கப்பட்ட ஜனங்கள் இருப்பார்கள். பரிசுத்தவான்களும், இரட்சிக்கப்பட்ட ஜனங்களும் இறைவனை தொழுது கொள்ளும் பொழுது மணவாட்டியையும் சேர்த்தே தொழுது கொள்ளுகிறதாகக் காணப்படும்.

ஆதலால் திருச்சபை என்று சொல்லப்படுகிறது "Body of Christ" மணவாட்டி. இது மகா பரிசுத்த ஸ்தலத்தில் காணப்படுகிறது. அதுவே புதிய எருசலேம் என்பது. பரலோக ஆலயத்தினுடைய இரகசியங்களை தேவன் வெளிப்படுத்தி காண்பித்திருக்கிறார். ஆனபடியினால் தேவன் திருச்சபையிலே பூரண பரிசுத்தத்தையும், ஒழுங்கையும், அழகையும், மகிமையையும் எதிர்பார்க்கிறது சரியே (எபே. 5:26,27).

(தொடரும்)



# மார்த்தீன் லுத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம் (தொடர்ச்சி)

அதி. 30. கோபுர்க்கில் நடந்த சம்பவங்கள்:-

மார்க்கத்திலும், விசுவாசக் கோட்பாட்டிலும் ஏற்பட்ட பிரிவினைகளைப்பற்றி மேலும் ஆலோசித்து, வாதாடும் கட்சிகளுடைய அபிப்பிராயங்களையும் கருத்துக்களையும் எப்படி அந்நியோன்னியமாயும் பட்சமாயும் விசாரித்து அறிந்து யோசனை செய்யலாமென்று இராயன் 1530-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 8-ம் தேதி அகுஸ்தாபுரியில் வேறொரு இராஜ்ய சங்கம் கூட்டி அழைத்தார். பார்சிலோனா உடன்படிக்கைப்படி, சமய விரோதிகளைக் கூடுமானால் சாந்தமாக அல்லது வேண்டுமானால் பலாத்காரமாக ஒப்புரவாக்க வேண்டுமென்பது இராயனுடைய எண்ணமென்று தெளிவாய்த் தெரிய வந்தது. அநேகர் ஆச்சரியப்படத்தக்கதாக இராயனுடைய விளம்பரம் மகா சாந்தமான நடையில் எழுதப்பட்டிருந்தது.

தன் பிரதான மந்திரியாகிய ப்ரிக் சாஸ்திரியாரின் ஆலோசனையின் பேரில், நியமகப்பிரபு, வித்தன்புர்க்கிலுள்ள தம் வேத சாஸ்திரிகள் தங்கள் போதகங்களுக்கு மூலாதாரமான நியாயங்களைத் தீர எழுதி, இராயனுடைய கட்டளையில் அவர்கள் அழைக்கப்படாவிட்டாலும், தம்முடன் அவர்கள் அகுஸ்தாபுரிக்குப் போகத் தயாராயிருக்க வேண்டுமென்று கட்டளையனுப்பினர்.

ஏப்ரல் மாதம் 30-ம் தேதி தொர்கௌ பட்டணத்தில் அவருடைய வேத சாஸ்திரிகள் தங்களுடைய பிரதான போதகங்களை எழுதி நியமகப் பிரபுவுக்கு ஒப்புவித்தார்கள். ஆகையால் அவைகள் தொர்கௌ விசுவாச அறிக்கை என்று சொல்லப்படுகின்றன. அதே தேதியில் நியமகப் பிரபுவும் அவருடைய பரிவாரங்களும் அகுஸ்தாபுரிக்குப் பிரயாணம்பண்ணப் புறப்பட்டார்கள். 15-ம் தேதி கோபுர்க் பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள்.

கோபுர்க் அகுஸ்தாபுரிக்கும் வித்தன்புர்க்குக்கும் ஏறக்குறைய மத்தியிலிருக்கிறது. அங்கே மெலாங்தன் சாஸ்திரியார் மேற்சொன்ன ஷ்வாபாக், தொர்கௌ அறிக்கைகளை ஆதாரமாக வைத்து ஒரு சுருக்கமும், திட்டமும் தெளிவுமான விசுவாச அறிக்கையை வெகு முயற்சியாய் எழுதிக்கொண்டிருந்தார். அங்கிருந்து எல்லோரும் ஏப்ரல் மாதம் 23-ம் தேதி அகுஸ்தாபுரிக்குப் போக புறப்பட்டார்கள். சீர்திருத்தலின் வீரராகிய லுத்தர் தம்மோடு அகுஸ்தாபுரியில் இருக்க வேண்டுமென்று நியமகப்பிரபு அதிகமாய் விரும்பின போதிலும், லுத்தருக்குள்ளும் அகுஸ்தாபுரி போக வேண்டுமென்ற வாஞ்சைப்பற்றி எரிந்த போதிலும், வோர்ம்ஸ் சங்கத்தின் கட்டளைகள் இன்னும் ரத்து செய்யப்படாதபடியால், லுத்தர் அரணை கோபுர்க் கோட்டைக்குள் பத்திரமாய் இருப்பது மெத்த உத்தமமென்று எண்ணினார்கள். லுத்தருக்கு எவ்வித ஆபத்தும் நேரிடாமல் எவ்வளவு சமீபத்திலிருக்கக் கூடுமோ அவ்வளவு சமீபத்திலிருந்தபடியால், சங்கத்திலிருந்த தம் சிநேகிதர்களுக்குத் தம் யோசனைகளையும் அபிப்பிராயங்களையும் அனுப்புவதற்கும், அவர்களிடமிருந்து சங்கத்தின் நடபடிக்கைகளை அறிந்துகொள்வதற்கும் கூடியதாயிருந்தது.

லுத்தருடைய சகோதரி மகன் சீரியாகுஸ் கல்மன் என்பவரும் வியட்டீட்ரிச் என்னும் ஒரு வாலிப வேத சாஸ்திரியும் அங்கே அவருக்குத் தோழர்களாயிருந்தார்கள். நியமகப்பிரபு எல்லாவிதத்திலும் அவருக்குத்

தேவையான சுகானுபவங்களை எல்லாம் தாராளமாய்த் திட்டம்பண்ணியிருந்தார். அவருடைய புஸ்தகங்கள் அவரிடம் வந்த பின் அவர் சத்திய வேதத்தை மொழி பெயர்க்கவும், சங்கீதங்களுக்கு வியாக்கியானம் எழுதவும் துவக்கினார். பொழுது போக்குக்காகவும், இளைப்பாறுதலுக்காகவும் அவர் ஈசாப் கதைகளை மொழி பெயர்த்தார். சரீரப்பிரகாரமாக அகுஸ்தாபுரியிலிருந்த தம் சிநேகிதர்களோடு இல்லாத போதிலும் ஆவியிலே அவர்களோடிருந்த லூத்தர், 'அகுஸ்தாபுரி இராஜ்ய சங்கத்தில் கூடியிருந்த குருமாருக்கு ஓர் எச்சரிப்பு' என்னும் ஒரு பிரபந்தமெழுதினார்.

அதுவுமன்றி, 'பரிசுத்தவான்களின் மத்தியஸ்தம்' பெற்றோர் பிள்ளைகளைப் பள்ளிக் கூடம் அனுப்ப வேண்டும்' 'உத்தரிக்கும் ஸ்தலத்தைப்பற்றிய பரிகரிப்பு' என்னும் பத்திரிகைகளையும் லூத்தர் கோபுர்க் கோட்டையிலிருந்தபோது எழுதினார். அவர் எப்போதும் போலும் எல்லாம் தம் முயற்சியில் பொறுத்திருக்குமாப் போல் இப்போதும் பரபரப்பாய் வேலை செய்தார் என்ற போதிலும் எல்லாப் பாரத்தையும் ஜெபத்தின் மூலமாய் ஆண்டவர் மேல் போட்டார். நேரில் கேட்ட சாட்சியாகிய வைட்டீரிச் லூத்தர் தினந்தோறும் குறைந்த பட்சம் மூன்று மணி நேரம் உருக்கமாய் ஜெபித்தாரென்றும், அவருடைய ஜெபங்களை பிள்ளை தன் தகப்பனோடு சம்பாஷிப்பதுபோல் இருந்தனவென்றுஞ் சொல்லுகிறார்.

லூத்தருடைய தகப்பனார் முதிர்ந்த வயதில் 1530-ம் வருஷம் மே மாதம் 29-ம் தேதி மான்ஸ்வெல்ட் பட்டணத்தில் கிறிஸ்துவின் பேரில் உறுதியான விசுவாசத்தோடு சந்தோஷமாய்க் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். இச்செய்தியை கேட்டபோது, லூத்தர் மிகவும் கலங்கிக் குமும்பிச் சங்கீத புத்தகத்தை எடுத்துக் கொண்டு தம் அறைக்குள் போய்க் கண்ணீர் விட்டார்.

இதைப்பற்றி அவர் தம் பிராண சிநேகிதராகிய மெலாங்தன சாஸ்திரியாருக்கு 'நான் வெகுவாய் நேசித்த என் தகப்பனுடைய மரணத்திற்காக நான் புலம்பி அலறுவது இயற்கையே. அவர் இவ்வுலகத்தின் குரூர மக்கள் கைக்குத் தப்பி, சமாதானமாயும், சந்தோஷமாயும் கிறிஸ்துவினிடம் போய் நித்திய சமாதானத்தோடே இளைப்பாறிக் கொண்டிருந்த போதிலும், பரம தகப்பனுடைய கிருபையால் எனக்கு ஜீவனைக் கொடுத்து, தம் முகத்தின் வேர்வையால் என்னைப் போஷித்துக் காப்பாற்றின என் அருமைத் தகப்பனார் என்னை விட்டுப் போய் விட்டாரென்று நினைக்கும் போது எனக்கு வியாகுலமும் என் மனதிற்குப் புண்ணுமாயிருக்கிறது' என்று எழுதினார்.

(தொடரும்)

## ஞானஸ்நானம்

3-5-98 அன்று B.L.Shed (கொடைக்கானல்) கிளை சபையில் 4 பேர்களும், 7-5-98 அன்று 2 பேர்களும்; பம்பாய் தலைமை சபையில் 17-6-98 அன்று 5 பேர்களும் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# வேதபாடம் (தொடர்ச்சி)

*யோசுவா*

லேவியரின் பட்டணங்களை நியமிக்கப்படுதலைக் குறித்து வாசிக்கிறோம் யோசு. 21:1-45. லேவியரின் பட்டணங்களில் நியமிக்கப்படுதல்; ஊழியரின் பராமரிப்பு மிகவும் முக்கியமென்று இறைவன் இதன் மூலமாய் காண்பித்திருக்கிறார். லேவியருக்கு ஒரு வித மான போஷிப்பை அளித்து, அவர்களுக்கு 48 பட்டணங்களை ஒதுக்கி வைத்தார் (எண். 35:2-8). சகல ஜனத்தாருக்குள்ளும் அவர்கள் சிதறப்பட்டு இருந்தார்கள். ஆனா லும் தங்கள் மேலான ஸ்தானத்தை காத்துக் கொண்டனர். தேசத்தாரின் ஆவிக்குரிய வாழ்க்கையை குறித்து இவர்கள் விசாரித்தவர்களாய் இருந்தனர். ஊழியரின் பராமரிப் பானது மிகவும் முக்கியமானது. ஊழியரின் குடும்பத்தை பராமரிக்கிற உத்திரவாதம் ஜனங்களுடையது ஆகும்.

ஜனங்கள் இஷ்டத்துக்கு தங்கள் உத்திரவாதத்தை உணர்ந்தோ, உணராமலோ இஷ்டபிரகாரம் நடக்க தேவன் விடவில்லை. ஊழியருடைய காரியம் அவ்வளவு அற்ப மான காரியமல்ல. சுவிசேஷத்தை பிரசங்கிக்கிறவர்களுக்கு சுவிசேஷத்தினால் பிழைக்க வும் வேண்டுமென்று புதிய ஏற்பாட்டில் வாசிக்கிறோம், (1 கொரி. 9:14). தேவன் அவர் களைப் போஷிக்க ஒரு வித ஏற்பாடு செய்திருந்தார்.

ஜனங்களுடைய ஆவிக்குரிய வாழ்க்கையை இவர்கள் விசாரிக்கிறவர்களானபடி யினால் அவர்களுடைய சரீர வாழ்க்கைக்கு அடுத்த சகல தேவைகளையும் சந்திப்பது மக்களுடைய கடமையாகும். லேவியரின் மூன்று பெரிய வகுப்புகள், லேவியரின் மூன்று குமாரரின் நாமங்கள் வாயிலாக தோன்றின. அவர்கள் கோகாத்தியர், கெர்சோனியர், மெரார்ரியர் என்பவர்களே (யாத். 6:16).

மேலும் ஆசாரியர் ஆரோனின் குமாரர்கள் ஆசாரியர்கள், ஆசாரியர் அல்லாத வர்கள் என கோகாத்தியர் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டனர். லேவியரின் இந்த

பரிசுத்த விவாகம

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. அல்போன்ஸ் | Sis. குளோரிபாய் | காப்புக்காடு | 30-4-98 |
| Bro. ஆபிரகாம் ஜோசப் | Sis. தமிழரசி | பள்ளப்பட்டி | 2-6-98 |
| Bro. ஜெயபால் | Sis.ஸ்டெல்லா மேரி | கொடைரோடு | 3-6-98 |

நான்கு வகுப்பாருக்கு இப்பட்டணங்கள் பங்கிடப்பட்டன. யோசு. 21:3-ன் பிரகாரம் கர்த்தருடைய வாக்கின்படியே இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சுதந்திரத்திலே லேவியருக்கு பட்டணங்களையும், அவைகளின் வெளி நிலங்களையும் கொடுத்தார்கள். இதன் மூலமாக லேவி கோத்திரத்தார்கள் இஸ்ரவேலருக்கு பல இடங்களில் பிரிக்கப்பட்டு அமர்த்தப் பட்டார்கள். ஆதி. 49:7-ல் சொல்லப்பட்ட தீர்க்கதரிசன வார்த்தை இதன் மூலமாக நிறைவேறுகிறது என்று தெரிகிறது. வெளி நிலங்கள் ஆடு மாடுகளுக்கு மேய்த்தலுக் கானவைகளாகும் (யோசு. 21:41,42). இளைப்பாறுதலும், சமாதானமும் உண்டாயிற்று. எல்லாம் நிறைவேற்ற தேவன் உண்மையுள்ளவராக விளங்கினார். தாம் வாக்குத்தத்தம் பண்ணினதை இஸ்ரவேல் புத்திரரிலே நிறைவேற்றினார் என்று பார்க்கிறோம் (யோசு. 21:43-45).

யோசு. 22:1-34 இரண்டரை கோத்திரம் ரூபன், காத், மனாசேயின் பாதி கோத்திரத்தார், திரும்பி கிழக்கு சுதந்திரத்திற்குப் போனதும், சாட்சியின் பலிபீடமும்:-

யோசு. 22:5,8 இரண்டரைக் கோத்திரத்தார் நதிக்கு கிழக்கே போவதினால் யேகோவாவைப் பற்றிய பக்தியையும் நியாயப்பிரமாணத்தையும் இழந்துவிடக் கூடாது என்று திடசாட்சியாய் எச்சரிக்கப்பட்டு வழியனுப்பி வைக்கப்பட்டனர்.

யோசு. 22:11:- மெய் பக்தியை பற்றிக் கொண்டிருக்கும்படி யோசுவா போதித்ததை மனதில் கொண்டு கிழக்கே இருந்த கோத்திரத்தார் தாங்கள் கிழக்கே போனவுடனே யோர்தான் கரையில் கர்த்தரின் பலிபீடத்தின் சாயலாக ஒரு பலிபீடத்தைக் கட்டினார்

(தொடர்ச்சி 8-ம் பக்கம் பார்க்க)



PRAISE THE LORD JESUS CHRIST

"புதிய எருசலேம் சபை"

"எழுந்து கட்டுவோம் வாருங்கள்" (முத்துச்சாமிபுரம் கிளை)

# ஆலயப் பிரதிஷ்டை

12-6-1998 அன்று வெள்ளிக்கிழமை காலை 10.00 மணியளவில் நடைபெற்றது. பல பரிசுத்தவான்களும், தேவனுடைய பிள்ளைகளும் கலந்து கொண்டு ஆலயப் பிரதிஷ்டையை சிறப்பாக நடத்தித் தந்தார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

அல்லேலூயா! தேவனுக்கு மகிமை!

இப்படிக்கு,
பாஸ்டர் S.P. சுப்பாராஜ்,
முத்துச்சாமிபுரம் [கிளை].



கள், குற்றமற்ற இச் செய்கையைக் குறித்து அவர்கள் மோசேயின் பிரமாணத்துக்கு விரோதமாய் மற்றொரு பலிபீடத்தை கட்ட முயற்சிப்பதாக மேற்கத்தியர் தப்பிதமாக எண்ணினர் (லேவி. 17:8,9).

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் ஏற்கனவே பாகால்பேயோர், ஆயியில் சகல கோத்திரத்தாருக்கும் நேர்ந்த ஆபத்தைக் குறித்து அவர்களை எச்சரிக்கும்படியாக மேற்கத்தியக் குடிகள் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பினார்கள் கூட ஆசாரியனும் சென்றான். யோர்தானுக்குக் கிழக்கேயுள்ள நாடு தீட்டாயிருக்குமானால் மேற்குத் திசையில் தங்களுக்கு சுதந்திரத்தை தெரிந்து கொள்ளலாமே என்று ஆலோசனை கூறினார்கள். தங்கள் ஜனத்தார் மத்தியில் பாவம் குடிகொண்டிருக்குமானால் அதைக் குறித்து அசட்டையாயிருக்க முடியாதென்பதையே மேற்கத்தியர்களுடைய வாதமும் அவர்கள் அறிந்த அறிவுமாக இருந்தது. அது சரியே.

ஒரு யூதனுடைய பாவமோ, கீழ்ப்படியாமையே. விசாரிக்கப்படாவிட்டால் அது தேவ ஆசீர்வாதத்தைத் தடுத்துவிடும். கிறிஸ்தவர்களாகிய நாமும்கூட ஒருவருக்கொருவர் உத்தரவாதமுள்ளவர்களாக இருக்கிறோமா? பாவம் செய்தவர்களை விசாரித்துத் தண்டிக்க வேண்டும். அதற்கு எல்லோரும் ஒத்துழைப்புக் கொடுத்து ஒரே அணியில் நிற்க வேண்டும் பாவம் செய்தவர்களுக்கு சார்பாக பரிந்து பேசக்கூடாது. அவர்களை

பாவம்

# தேவனுடைய அதிசயங்களும், அற்புதங்களும்

பல வருடங்களுக்கு முன்பு ஆவியானவரால் நடத்தப்பட்டு கொடைக்கானல் பழம்புத்தூர் என்ற கிராமத்திற்கு சென்றோம். கொடைக்கானலிலிருந்து காலை 9 மணிக்கு புறப்பட்டு 10 மணிக்கு பூம்பாறை என்ற இடத்தில் பஸ்ஸிலிருந்து இறங்கி நடந்து மாலை 5 மணிக்கு பசியுடன், தாகத்துடன் மலைநாடான பழம்புத்தூர் போய் சேர்ந்தோம்.

மந்தை என்ற இடத்தில் நின்று சுவிசேஷம் பிரசங்கிக்க ஆரம்பித்தோம். உடனே ஊர் மக்கள் ஒடி வந்து எங்களை தடுத்து நிறுத்தினார்கள்; கூட்டம் கூடிவிட்டது, பல கேள்விகள் கேட்டனர். ஒன்றரை மணி நேரம் எங்களை நெருக்கிக் கொண்டு இருந்தனர். கடைசியாக எங்கள் ஊருக்கு மழை வருமா என்று கேட்டனர். நான் கூறினேன், நீங்கள் தேவனை விசுவாசித்தால் மழை வரும் என்றேன்; ஊர்த்தலைவரும் வந்தார். தலைவர் கூறினார், மழை வராவிட்டால் நீங்கள் இருவரும் திரும்பி போக முடியாது, எங்கள் தேவதைகளுக்கு பலியிட்டு விடுவோம் என கோபமாகக் கூறினார்.

பதிலாக நான் கேட்டேன், மழை வந்தால் என்ன செய்வது என்றேன். தலைவர் கூறினார், நீங்கள் கூறுகிற கர்த்தரை (இயேசுவை) ஏற்றுக் கொள்கிறோம் என்றார். மந்தைக்கு மீதமுள்ளவர்களை அழைத்து வரக் கூறினேன்; அனைவரும் வந்தனர். முழங்கால் படியிட்டு ஊர் மக்களுடன் ஜெபித்தோம். பின்பு இரவு எங்களை ஒர் வீட்டில் வைத்து பூட்டி விட்டனர். காலை வரையும் தான் நேரம் என்று எச்சரித்து சென்று விட்டனர். பசியோடும், தாகத்தோடும் இரவு ஜெபிக்க ஆரம்பித்தோம். சுமார் இரவு 1 மணியளவில் மழை பெய்ய ஆரம்பித்தது. இரவு முழுவதும் கடுமையான மழை பெய்தது.

காலையில் தலைவருடன் ஊர்மக்கள் வந்து பூட்டப்பட்ட கதவை திறந்து, எங்கள் கால்களில் விழுந்தனர்; நீங்கள் தெய்வம் என்றனர், கர்த்தர் ஒருவரே மெய்யான தெய்வம் என்று நிருபித்து காண்பித்தோம். அவர்கள் வணங்கி வந்த தேவதைகளை எடுத்து எறிந்து விட்டனர். ஆலயம் கட்ட இடம் கொடுத்தனர். எல்லா வீட்டிலும் சாப்பிட அழைத்தனர், தேவ நாமம் மகிமைப்பட்டது. அல்லேலூயா! ஊர் மக்களும், தலைவரும் இயேசுகிறிஸ்துவை தெய்வமாக ஏற்றுக் கொண்டார்கள்.

மூன்று மாதமாக அங்கே மழை பெய்யவில்லை. இதனால் நுகத்தடிக்கு உட்படாத இளங்காளையைப் பிடித்து, கட்டி வைத்து பொங்கல் பொங்கும் போது மாட்டை அடிப்பார்கள். அது கதறி கதறி துடிக்கும். அப்போது தேவதை (பிசாசு) இறங்கி பூசாரியுடன் பேசும். அப்படி அடித்து கேட்டு இருக்கின்றனர். நாங்கள் போகும் 1 வாரத்துக்கு முன்பு பூசாரி கூறினனும் குறிஞ்சி செடியை வெட்டினபடியால் நான் கோபமாக இருக்கிறேன்; எனவே இன்னும் 3 மாதத்துக்கு மழையை கொடுக்கமாட்டேன் என்று. இதனால் எங்கள் மீது கோபப்பட்டு அந்த தேவதைக்கு பலியிட்டு மழை கேட்க ஊர் மக்கள் நினைத்திருந்தார்கள். ஆனால் தேவனே வெற்றி சிறந்தார்; நல்ல மழையைக் கொடுத்து எங்கள் ஜெபத்தைக் கேட்டார். இப்போதும் பழம்புத்தூர் என்ற இடத்தில் ஆலயத்திற்கு இடம் இருக்கிறது. ஊழியத்தை தொடர்ந்து செய்ய உதவி ஊழியர்கள் இல்லை, இப்போதும் ஊழியத்தை அங்கே ஆரம்பிக்க ஜெபியுங்கள் ஊழியம் செய்ய நீங்கள் ஆயத்தமா? தேவனுக்கே மகிமை உண்டாவதாக. பழம்புத்தூரில் குருடனாய் இருந்த ஒரு வாலிபனின் கண்ணும் திறக்கப்பட்டது. இப்போது இரட்சிக்கப்பட்டு சபையோடு அவர் இருக்கிறார். அல்லேலூயா!

இப்படிக்கு,
பாஸ்டர் A. வாசன்
புதிய எருசலேம் சபை.
கொடைக்கானல், தமிழ் நாடு.



உற்சாகப்படுத்தாமல் இருந்தால் அவர்கள் பாவத்தை விட்டு மனந்திரும்பி பிழைப்ப தற்கு ஏதுவாக இருக்கும். இல்லையென்றால் அவர்களினிமித்தம் முழு சபைக்கும் நஷ்டம் உண்டாகும்.

இந்த நாட்களிலே பாவம் செய்த குற்றவாளிகள் பிரிவினைகளையும், பலவிதமான குழப்பங்களையும் உண்டுபண்ணுகிறார்கள். ஒரு சிலர் அவர்களுக்கு ஒத்துழைப்பதினாலே இவ்விதமான தீமைகள் நடக்கிறது, பிரிவினைகளை உண்டுபண்ணுகிறார்கள். அவர்களும், இவர்களும் விழுந்துபோகிறார்கள். ஆனபடியால் நீ பாவத்திற்கு உறுதுணையாக போகாதே; பாவிகளுக்கு உறுதுணையாக நிற்காதே. உண்மையான சிநேகிதன் தன்னுடைய சிநேகிதன் தவறான வழியில் போகும்போது அவனை எச்சரித்து, சீர்திருத்திக் கண்டிக்கிறவனே. உண்மையற்ற சிநேகிதன், தன் சகோதரன் தவறான வழியில் போகிறதை கண்டும் அவன் மேல் உள்ள பாசத்தினால் அல்லது அவன் மூலமாய் கிடைக்கும் சகாயத்தினால், இன்பத்தினால் அவனுக்கு ஒத்துழைப்பு செய்கிறார்கள் இவர்கள் மகா பெரிய துரோகிகளேயாகும்.

இங்கே இரு சாராருக்கும் சமாதானத்தின் மேல் சமாதானத்தை நாட்ட விருப்பம் இருந்தது. இடறலைக் குறித்து அவர்கள் கருத்தாய் விசாரித்த விதமானது எந்த கலகத்தையும் தவிர்க்கும் சாதனங்களில் சிறந்ததொன்றாகும். சமாதானக்கட்டினால் ஆவியானவரின் ஒருமையைக் காத்துக் கொள்ளும் மக்களின் எண்ணிக்கை ஏராளமாய் நம் மத்தியில் பெருக வேண்டும். கோத்திரங்களுக்கும், பின் வரும் சந்ததியாருக்கும் நடுவே இவர்கள் கர்த்தரையே சேவிப்பார்கள் என்பதற்கு ஞாபகச் சின்னமேயன்றி வேறொன்றுமல்ல என்பது கிழக்கத்தியக் கோத்திரத்தாரின் பிரதிவாதமாயிருந்தது. இந்த நியாயத்தை மேற்கத்தியக் கோத்திரத்தார் ஒப்புக் கொண்டனர். இங்ஙனம் மகிழ்ச்சியான ஓர் ஒப்புரவாகுதல் ஏற்படலாயிற்று. மேற்கத்தியர் கிழக்கத்தியருடைய விளக்கத்தை அறிந்ததும் தாங்கள் யுத்தம் செய்யப் போய் கிழக்கத்திய தேசத்தை அழித்துவிட வேண்டுமென்கிற எண்ணத்தை விட்டுவிட்டு சமாதானமாயிருந்தார்கள்.

யோசு. 22:19 ன் கருத்து:- கர்த்தரின் வாசஸ்தலம் இல்லாததால் தேசம் தீட்டாயிருக்குமானால் என்ற கருத்தாகும்; இந்நாட்களிலே கர்த்தருடைய திருச்சபை இல்லாத இடங்களில் இருக்கிற மக்கள் பரிதவிக்கிறதை நாம் பார்க்கிறோம். கர்த்தருடைய வாசஸ்தலம் இருக்கிற இடங்களில், இருக்கிற மக்கள் மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். அவர்கள் தேவனுடைய சந்நிதானத்தைக் கனம்பண்ணுவார்களாக! அப்படியே கர்த்தருடைய வாசஸ்தலம் இல்லாத இடங்களில், சபை இல்லாத இடங்களில் இருக்கிற மக்கள் பண்டிகை நாட்களிலும், விசேஷித்த நாட்களிலும் அவர்கள் விசேஷ பொருத்தனைகளை சபை இருக்கிற இடத்தில் வந்து கொண்டாடி செலுத்துவார்களாக.

யோசு. 22:31:- சங்கடமான வாக்குவாதங்களின் மத்தியில் சாமார்த்தியமான தலைவரைப் பினெகாஸ் விளங்கினார். அவ்விதமான ஞானமும், அறிவும் திறமையுள்ள ஆசாரியர்கள் தேவை.

யோசு. 22:34:- 'ஏத்' என்றால் சாட்சி என்று அர்த்தமாகும். இப்படியாக கிழக்கத்திய கோத்தாரர்கள் கட்டிய பலிபீடம் கிழக்கத்தியர்களும் யேகோவாவுக்கு ஆராதனை செய்யத்தக்கவர்கள்; இஸ்ரவேலின் கோத்திரத்தார்கள், தேவ ஜனங்கள் தான் என்பதற்கு அந்த பலிபீடம் சாட்சியாக அமைந்தது.

யோசு. 23:1-16:- யோசுவாவின் முதலாம் பிரிவு உபசார பிரசங்கம். இப்பிரசங்கத்தை மூன்று பாகமாகப் பிரிக்கலாம்.

1) வசனம் 1-4:- கடந்தகால ஆசீர்வாதங்களைக் குறித்து விமர்சனம்.

2) வசனம் 5-11:- வருங்காலத்தைக் குறித்த வாக்குத்தத்தங்களைக் குறித்த நினைப்பூட்டுதல்.

3) வசனம் 12-16:- கீழ்ப்படியாமைக்கு வரும் பிரதிபலன் ஆபத்து. விசேஷமாக இந்த பிரசங்கம் ஜனங்களின் தலைவர்களுக்கு பிரதானமாக செய்யப்பட்டது. தன் தலைமையின் கீழ் தேவனுடைய உண்மை விளங்கினதைக் குறித்து. அவர்கள் பெற்றிருந்த சொந்த அனுபவத்தை அவர்களுக்கு யோசுவா நினைப்பூட்டுகிறார்.

தேவ மக்களுடைய, திருச்சபையினுடைய ஒரு அனுபவத்தை பொது விதியாக (வச. 10 ஐ) எடுத்துக் கொள்ளலாம். தேவனைக் குறித்து அவர்கள் அனுபவமானது எதிர்காலத்தில் தைரியத்தையும் தேவ பிரமாணங்களுக்கு உண்மையையும், சகலவித தீமையினின்று பிரிந்திருப்பதையும் எதிர் நோக்கக் கூடியதாக இருக்கிறது. பின் வாங்குவதில் பிராணபத்தான முடிவைக் குறித்தும் யோசுவா அவர்களை எச்சரிக்கிறார் வச 13. கண்ணியும், வலையும் என்றால் வஞ்சனையும் ஏமாற்றும், சவுக்கும் முள்ளும் என்றால் அவைகள் தண்டிக்கும் கருவிகள். சோதனைக்குட்படாதபடிக்கு எப்பொழுதும் நாம் விழித்திருந்து ஜெபம்பண்ண வேண்டும். தேவனுடைய உண்மை, அன்பு, வல்லமை இவற்றை நாம் எப்போதும் நம்ப வேண்டும். தேவன் நமக்காக தம்முடைய அதிசயங்களை பெருக்குகிறவராக இருக்கிறார். சேனைகளின் கர்த்தாவே உம்மை நம்பியிருக்கிற மனுஷன் பாக்கியவான் (சங். 84:12).

[தொடரும்]

## "என் ஓய்வு நாளை பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக" (யாத். 20:8)

"என் ஓய்வு நாட்களை ஆசரித்து, என் பரிசுத்த ஸ்தலத்தைக் குறித்துப் பய பக்தியாயிருப்பீர்களாக!" (லேவி. 19:30).

ஓய்வு நாள். தேவன் தம்முடைய சிருஷ்டிப்பின் கிரியைகளையெல்லாம் முடித்து 7 ம் நாளில் ஓய்ந்திருந்தபடியால் தேவன் ஏழாம் நாளை ஆசீர்வதித்து அதைப் பரிசுத்தமாக்கினார் (ஆதி. 2:7).

வாரத்தில் ஒரு நாள் ஓய்ந்திருக்கும் நாள். ஓய்ந்து சும்மா இருக்கும் நாளல்ல. அன்றையத் தினம் கர்த்தருடைய சமுகத்தில் போய் தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும். தெய்வீகப் பணிகளில் ஈடுபட

# பெந்தெகொஸ்தே பண்டிகை

ஆவியானவர் பெந்தெகொஸ்தே பண்டிகையை ஆசரிக்கவில்லையா? என்று கேட்டார். இந்த பண்டிகை ஒரு விசேஷித்த நாளாய் இருக்கிறதென்றும் ஆவியானவர் பொழிந்தருளப்பட்ட நாளென்றும், ஆதிச் திருச்சபை ஆரம்பமான நாளென்றும், ஆவியானவரை மகிமைப்படுத்த வேண்டிய நாளென்றும் ஆவியானவர் உணர்த்தினர். மற்ற பண்டிகைகளைப்போல ஆவியானவர் வல்லமையாய் பொழிந்தருளப்படவும் அந்த நாளை விசேஷமாகக் கொண்டாட வேண்டும். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மரித்த மறுநாள் தொடங்கி எண்ணி வரும் 50 வது நாள் ஞாயிற்றுக் கிழமை. இந்த நாளை ஆசரிக்க வேண்டும் [அப். 2:1-4]. அப். பவுல் இந்த பெந்தெகொஸ்தே பண்டிகையை முக்கியப்படுத்தி கலந்து கொண்டதாகத் தெரிகிறது [அப். 20:16; 1 கொரி. 16:8]. ஆதிசபையால் கொண்டாடப்பட்ட இந்த பண்டிகை காலா காலங்களில் நின்றுவிட்டது. பெயர் கிறிஸ்தவர்களும், பெந்தெகொஸ்தேகாரர்களும் இப்பண்டிகையை ஆசரிப்பதில்லை. "புதிய எருசலேம் சபையாராகிய நாம் பெந்தெகொஸ்தே பண்டிகையைக் கொண்டாட வேண்டும்.

வேண்டும். நன்மையானதைச் செய்ய வேண்டும்; பலியிட வேண்டும்; பலிகளை ஆயத்தப்படுத்த வேண்டும். ஆசாரியர்கள் ஓய்வு நாளிலும் வேலை (ஆசரிப்புக் கூடாரத்தில்) ஆசாரிய ஊழியம் செய்ய வேண்டும்.

நீ ஆறு நாளும் வேலை செய்து, ஏழாம் நாளில் ஓய்ந்திருந்து உன் ஆத்துமத்திற்காக தேவனை ஆராதிப்பாயாக. நன்மை செய்வாயாக.

நான் உங்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தர் என்பதற்கு அடையாளமாக என் ஓய்வு நாளைக் கட்டளையிட்டேன் என்றார் கர்த்தர் (எசே. 20:12). கடவுளுக்கு ஆராதனை செய்யும்படிக்கு ஓய்வு நாளைக் கட்டளையிட்டார் [எசே. 20:20]. இந்த ஓய்வு நாள் எது என்பதைக் குறித்து கிறிஸ்தவர்கள் மத்தியிலே சர்ச்சையுண்டு. எந்த நாள் என்பதைக் குறித்த சர்ச்சையல்ல, கிறிஸ்தவர்கள் எந்த நாளில் தேவனை ஆராதிக்க வேண்டும், ஏழாம் நாளா, முதலாம் நாளா என்ற சர்ச்சையாகும் அது. கிறிஸ்தவர்கள் எல்லா நாளிலும் தேவனை ஆராதிக்கலாம்.

யூதர்கள் ஆசரித்து வந்த ஓய்வு நாளைப்பற்றி நாம் பார்ப்போம். இந்த ஓய்வு நாளைப்பற்றிய கட்டளை: இஸ்ரவேலர்கள் பார்வோனின் கையினின்றும், எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்தும் விடுதலையாகி வனாந்திர பிரயாணத்தில் இருக்கும் போது தேவன் அவர்களுக்கு வானத்திலிருந்து மன்னாவை ஆகாரமாக அருளினர். அப்பொழுது தான் ஓய்வு நாளைப்பற்றிய கட்டளையை முதல் முறையாக தேவன் கொடுத்தார் (யாத். 16:22-26,29,30).

அந்த நாளில் ஒருவனும் தன் ஸ்தானத்தை விட்டு புறப்படலாகாது (யாத்.

16:29). அப்படியே ஜனங்கள் ஏழாம் நாளில் ஓய்ந்திருந்தார்கள் (யாத். 16:30). பின்பு அது நியாயப்பிரமாணத்தில் பத்து கற்பனைகளில் ஒன்றாக கட்டளையிடப்பட்டது [யாத். 20:8-11]. அந்த 7-ம் நாளில் சபை கூடிவந்து தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும் [லேவி. 23:3].

நீ ஆறு நாளும் வேலை செய்து ஏழாம் நாளில் யாதொரு வேலையும் செய்யாமல் சபை கூடி வந்து தேவனுக்கு ஆராதனை செய்ய வேண்டும். இந்த கட்டளை ஆதி முற்பிதாக்களாகிய ஆபிரகாமுக்கோ, யாக்கோபுக்கோ, ஈசாக்குக்கோ, அதற்கு முன்னுள்ள பரிசுத்தவான்களுக்கோ, யோபுக்கோ ஏன் ஆதாமுக்கோ கொடுக்கப்படவில்லை. ஏனென்றால் தேவன் தம்முடைய சிருஷ்டிப்பின் கிரியைகளை 6-ம் நாளில் நிறைவேற்றி ஏழாம் நாளில் ஓய்ந்திருந்திருந்தார்.

ஆனால் மனிதன் ஆறும் நாளில் தான் சிருஷ்டிக்கப்பட்டான். அவன் ஒரு நாள் கூட வேலை செய்யவில்லை. ஆதாம் எப்படி ஓய்வு நாளை ஆசரிக்க முடியும்? ஆதலால் ஓய்வு நாள் யூதர்களுக்குக் கொடுக்கப்பட்ட நியாயப்பிரமாண கட்டளையாகும். ஆனால் தங்களை கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற சிலர் ஓய்வு நாள், ஓய்வு நாள் என்று பிதற்றிக் கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் கிறிஸ்தவர்களல்ல.

2) ஓய்வு நாளைப்பற்றிய கட்டளையை மோசே விஸ்தரித்து உபதேசிக்கும் போது "நீ எகிப்திலே அடிமையாயிருந்தாய் என்றும் உன் தேவனாகிய கர்த்தர் உன்னை அவ்விடத்திலிருந்து வல்லமையுள்ள கரத்தினாலும் ஓங்கிய புயத்தினாலும் புறப்படப்பண்ணினார் என்றும் நினைப்பாயாக. ஆகையால் ஓய்வு நாளை ஆசரிக்க உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கட்டளையிட்டார்" (உபா. 5:15) என்று கூறினார்.

ஆம், இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டது நிசான் அல்லது ஆபிப் மாதத்தில் 15-ம் தேதி காலையில் அது யூதர்களின் சாபத் நாளாகிய ஏழாம் நாளாகும் [யாத். 12:37-42; எண். 33:3]. முதலாம் நாளும் சபை கூட வேண்டும், ஏழாம் நாளும் சபை கூட வேண்டும். அந்த நாளில் யாதொரு வேலையும் செய்யாமல் ஓய்ந்திருந்து தேவனுக்கு பண்டிகை கொண்டாட வேண்டும் (லேவி. 23:5-8; யாத். 12:15-17). இந்த இரண்டு நாட்களும் ஓய்வு நாட்களாகும்; முதலாம் நாளும் ஓய்வு, ஏழாம் நாளும் ஓய்வு.

3) யூதரின் ஓய்வு நாள், 24 மணி நேரங்களுள்ள ஒரு நாள் அளவு மாத்திரமல்ல அதின் காலம், நீளம் வெவ்வேறானவையாகும். [எல்லா தேசத்தாரும் ஒரே நாளை அனுசரிக்க முடியாது. உலகம் உருண்டை என்பதை நினைவு கூரவும்].

1] ஒரு நாள் ஓய்வு (யாத். 16:23-29).

2] இரண்டு நாட்கள் ஓய்வு (லேவி. 23:5-8 15-22).

3] மூன்று நாட்கள் ஓய்வு. முதலாம் நாள், ஏழாம் நாள், எட்டாம் நாள் (லேவி. 23: 7,8,39).

4] ஒரு வருஷம் ஓய்வு (லேவி. 25:4-7).

புதிய ஏற்பாட்டின் ஆதி சபை கூடி புறஜாதிகளில் கிறிஸ்தவர்களான விசுவாசிகள் ஆசரிக்க யூதரின் நியாயப்பிரமாணமாகிய விருத்த சேதனம், ஓய்வு நாள் இவைகளைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை, [அப். 15:19,20,28,29]. ஆனபடியினால் கிறிஸ்தவனை நியாயப்பிரமான அடிமைத்தனத்திற்கு மறுபடியும் திரும்பாதே (கலா. 4:8-11. 5:1-1). நியாயப்பிரமாணம் விசுவாசத்திற்குரியதல்ல (கலா. 3:12; 2:15,16). ஆகையால் ஒருவனும் கிறிஸ்தவ விசுவாசியை போஜனத்தையும், பானத்தையும் குறித்தாவது, பண்டிகைகளையும், மாதப்பிறப்புகளையும், ஓய்வு நாட்களையும் குறித்

தாவது குற்றப்படுத்தாதிருப்பானாக (கொலே. 2:16,17). முதலாவது பாவத்தை விட்டு ஓய்ந்திரு [1 பேது. 4:2]. இளைப்பாறுதல் அடை (மத். 11:28,29). பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள் ; ஏசா. 28:11,12.

காரியத்துக்கு வருவோம். பழைய உடன்படிக்கை மாற்றப்பட்டு, பிரமாணங்களும் மாற்றப்பட்டன. ஓய்வு நாளும் கர்த்தருக்கு ஆராதனை செய்யதக்க நாளும், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் மாற்றப்பட்டது. அதாவது அவருடைய பலியாகத்துக்குப் பின்னுல் (சங். 118:22-24). ஆதி அப்போஸ்தலர்கள் சுவிசேஷத்தை அறிவிக்க ஓய்வு நாளில் யூதர்களின் ஓய்வு நாளாகிய [7-ம் நாளில்] ஓய்வு நாளில் யூதர்களுடைய ஜெப ஆலயங்களுக்குப் போனுலும், அவர்கள் கிறிஸ்தவ ஆராதனை செய்ய தேவனை தொழுது கொள்ள நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த நாளில் முதலாம் நாளில் (மத். 28:1-7; மாற். 16:2-7; லூக். 24:1-9; யோவா. 20:1-10,19,20,26). பரிசுத்த ஆவியானவர் பூமியில் இறங்கி வந்த பெந்தெகொஸ்தே என்னும் வாரத்தின் முதல் நாளாகிய ஞாயிற்றுக்கிழமை கர்த்தருடைய நாளில் தான் கூடி வந்து அப்பம் பிட்டு, தேவனுக்கு ஆராதனை செய்தார்கள் (அப். 20:7; 1 கொரி. 16:2). அந்த நாளிலே தேவன் பரிசுத்த யோவான் அப்போஸ்தலுக்கு வெளிப்படுத்தின விசேஷத்தை அருளினர் (வெளி. 1:10).

யூதருடைய ஓய்வு நாளுக்குரிய சகல வாக்குத்தத்தங்களும் இந்த நாளுக்குமாற்றப்பட்டிருக்கிறது. இது கர்த்தர் உண்டுபண்ணின நாள், இதிலே தேவனுக்கு ஆராதனை செய்து களி கூர்ந்து மகிழக்கடவோம் (சங். 118:24). நீ தேவனுக்கு தவறுமல் ஆராதனை செய். அந்த நாளை நீ ஆசரிக்கிறதினல் ஆசீர்வாதம், பரிசுத்தம் இறங்கும் (ஆதி. 2:3; ஏசா. 58:13,14). கர்த்தர் படிப்படியாய் உன்னைப் பரிசுத்தப்படுத்துவார் (எசே 20:12,20.) அந்த நாளில் உனக்கு இஷ்டமானதை சிந்திக்காதே. உனக்கு இஷ்டமானதை செய்யாதே, தூரப்பிரயாணம் போகாதே [ஏசா. 56:2-4; 58:13,14; லூக். 24:13; அப். 1:12].

தேவனை அவருடைய நாளில் நீ ஆராதிக்காவிட்டால், அவரைக் கனம் பண்ணுவிட்டால் வீணானவைகளை பின்பற்றுவாய், அவைகள் வீணானவைகளே [1 சாமு. 12:20,21]. விக்கிரக ஆராதனைகளில், பொருளாசைகளில் விழுவாய், நாம் அவரைக் கனம்பண்ணுவிட்டால் நம்மை நாமே கனவீனப்படுத்துவோம் [1 சாமு. 2:30]. உலகத்தில் பெரிய நன்மை ஆராதனை செய்வதேயாகும். நாம் தேவனுக்கு ஆராதனை செய்யும்படிக்கே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறோம் (சங். 102:18. ஏசா. 43:21,7). நீ தேவனுக்கு ஆராதனை செய்யாவிட்டால் பாவம் உன் வாசற்படியில் படுத்திருக்கும், பாவம் பெருகும் [ஆதி 4:7]. ஆதலால் புதிய எருசலேம் மக்கள் ஒழுங்காக தேவனுக்கு அவருடைய நாளில், கர்த்தருடைய நாளில், ஞாயிற்றுக்கிழமைகளில், பண்டிகை நாட்களிலும், விசேஷித்த நாட்களிலும் அவருக்கு ஆராதனை செய்வீர்களாக.

அவருடைய பரிசுத்த நாளில், அவருடைய பரிசுத்த ஸ்தலத்தைக் குறித்து பயபக்தியாயிருப்பீர்களாக [லேவி. 19:30]. சாட்சி சொல்ல தவறுதிருப்பீர்களாக [மத். 10:32] பஸ்காவை [திருவிருந்து] ஆசரியுங்கள் [1 கொரி. 5:7,8]. நான் உங்களைப் பரிசுத்தப்படுத்துவதற்கு எனக்கும் உங்களுக்கும் நடுவில் அடையாளமாக என் ஓய்வு நாட்களைக் கட்டளையிட்டேன் [எசே. 20:12] என்று உன் தேவன் சொல்லுகிறுர் எசே. 20:20. கர்த்தருக்கு பரிசுத்த ஆராதனை செய்வோம். அவருக்குப் பிரியமான ஆராதனை செய்வோம் [எபி. 12:28] வாருங்கள்.

நாம் ஒருமித்து தேவனுக்கு ஆராதனை செய்வோம். எல்லா இடங்களிலும் அவருக்கு ஆராதனையை ஸ்தாபிப்போமாக. சீக்கிரம் தேவன் பதிலளிப்பார்; நமக்கு நன்மை செய்வார் [மல்கி. 3:16-18].

இதோ கர்த்தர் வருகிறுர்!

# சாட்சி

என்னுடைய பெயர் தேவராஜ். எனது சொந்த ஊர் பெத்தேல்புரம். நாங்கள் C.S.I சபையை சேர்ந்தவர்கள். நான் சில வருடங்கள் மருத்துவமனையில் மருந்து கொடுக்கும் வேலை செய்து வந்தேன். என்னுடைய வாழ்க்கையின் முன்னேற்றத்தை தடை செய்ய எனக்கும் என்னுடைய குடும்பத்துக்கும் பில்லிசூனியம் செய்தார்கள். பிசாசின் தொல்லையால் என்னுடைய மனைவி படுக்கையில் ஆனாள். C.S.I குருவானவர்கள் வந்து ஜெபித்தார்கள்; பயன் இல்லை. என் துணைவி இறந்து போனாள்.

பின்னர் எனக்கும் வேலை செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டது. நான் என் மூத்த மகளோடு நாகர்கோவிலில் தங்கி வருகிறேன். செய்வினைக் கோளாறினால் பல ஆயிரங்கள் செலவானது. சரீரத்துக்கோ விடுதலை கிடைக்கவில்லை. கடைசியாக மருத்துவர்களின் ரிப்போர்ட்டின்படி என்னுடைய கிட்னிகள் கெட்டுப் போய்விட்டது. இரத்தத்தில் உப்பு சத்து கலந்து விட்டது. இனி பிழைப்பது கடினம் என்று கூறிவிட்டார்கள். என்னுடைய உடம்பு முழுவதும் வீக்கம் கண்டு விட்டது. என்னைக் காணவருகிற யாவரும் இவர் இனி பிழைக்கமாட்டார் என்றே கூறுவார்கள். நிலைமை அந்த அளவுக்கு மோசமாகி விட்டது.

இப்படியிருக்க நாகர்கோவில் புதிய எருசலேம் சபை பாஸ்டர் இரண்டு பேர்கள் (S. சுந்தர்ராஜ், S ஏசுதாசன்) எங்கள் வீட்டிற்கு வந்தார்கள். நான் செய்த பாவங்களையெல்லாம் தேவ சமுகத்தில் அறிக்கையிடும்படி கூறினார்கள். அவர்கள் ஆலோசனையின்படி என் பாவங்களை அறிக்கையிட்டேன். என்ன ஆச்சரியம், கர்த்தர் எனக்கு அற்புதமான சுகம் தந்தார். பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான் (நீதி. 28:13) என்ற வேதவாக்கியம் எத்தனை உண்மை என்பதை உணர்ந்து கொண்டேன்.

என் கிட்னிகள் நல்ல முறையில் இயங்க ஆரம்பித்தன. தேவன் எனக்குப் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் தந்தார். என்னுடைய வாழ்க்கையில் ரொம்ப சந்தோஷம் உண்டாகி விட்டது. பின்னர் வேத வசனத்தின்படி புதிய எருசலேம் சபையில் ஞானஸ்நானம் பெற்று தேவனோடு உடன்படிக்கை செய்து கொண்டேன். மீண்டும், மீண்டும் எனக்கு பில்லிசூனியம் வைத்தார்கள். நான் ஆவிக்குரிய ஜீவியத்தில் சிறிது சோர்வு அடையும் பொழுது என்னை விட்டுப்போன ஆவிகள் மீண்டும் வந்து என்னைத் தாக்குவதுண்டு. மீண்டும் ஒரு நாள் நான் மரித்துப் போகும் நிலைமை ஏற்பட்டது. உடனே பரிசுத்தவான்கள் என்னுடைய குறைகளை உணர்த்திக் காட்டி அவைகளை அறிக்கை செய்யும்படி செய்து; எனக்காக உபவாசித்து ஜெபித்தார்கள். தேவன் அற்புதமாய் சுகமளித்தார். அல்லேலூயா!

இப்பொழுது நான் கர்த்தருக்குள் சந்தோஷமாய் இருக்கிறேன். இந்நாட்களில் நான் அறிந்து கொண்ட காரியம், ஒரு மனிதன் கர்த்தருக்குள சந்தோஷமாய் வாழ வேண்டுமானால் பரிசுத்தவான்களுடைய ஐக்கியம் மிகவும் தேவையாக இருக்கிறது. நாம் பரிசுத்தவான்களோடும், பரிசுத்தவான்கள் தேவனோடும் ஐக்கியமாயிருப்பதே நமக்கு நிறைவான சந்தோஷத்தை தரும் என்பதை அறிந்து கொண்டேன் (1 யோ. 1:3,4).

கர்த்தருக்குள் அன்புள்ள,
S. தேவராஜ்,
புதிய எருசலேம் சபை,
நாகர்கோவில் (கிளை).

# வீண் சிந்தனைகள் விலக வேண்டும்

1) மனநிலை:-

"போதுமென்கிற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம்" [1 தீமோ. 6:6]. இறைவன் மேல் கொண்ட பக்தியும், அதற்கான மார்க்கமும் உண்மையானதா இல்லையா என்பதை ஒரு மனிதர் கொண்டுள்ள மனப்பக்குவம், மனதிருப்தி போன்ற விசேஷமான குணங்கள் வித்தியாசம் காட்டி விடும். இறைவன் கொடுத்தவை போதும் என்று இறைவனுக்குள் மகிழ்ந்திருப்பவன் மெய்யான இறைபக்தியை வெளிப்படுத்துகிறான். தரித்திரமும் வேண்டாம், மிகுந்த ஐசுவரியமும் வேண்டாம், அன்றன்று என்படியை அளந்து என்னை போஷித்தருளும் என்ற வேத வசனம் (நீதி. 30:8,9) உலகப்பற்றும் ஆசையுமில்லாத விசுவாசத்துடன் கூடிய தேவ பக்தியை நமக்கு போதிக்கிறது

தேவனுக்கு எதிரி பிசாசு, தெய்விகத்துக்கு எதிரி உலகப்பற்று. தெய்விகம் மனதுக்கு சமாதானமும், சரீரத்துக்குப் பாதுகாப்பும் கொடுத்து ஆத்துமாவை உயிர்ப்பிக்கும். மாறாக (ஆத்துமாவை அழித்துப் போடும்) மண்ணுக்குரியவைகளில், மனித மனதை எந்தவொரு காலக்கட்டத்திலும் திருப்திதரக் கூடியவைகள் ஒன்றுமில்லை. இந்த உலகை இறுகப்பற்றிக் கொண்ட மனமானது, மலட்டுக் கர்ப்பமாய், தண்ணீரால் திருப்தி அடையாத நிலமாய் போதும் என்று ஒரு போதும் சொல்லாது. இவர்கள் கொண்டுள்ள இறை பற்றும், இறை வழியும் தேவனால் அருளப்பட்டதல்ல. இவர்களின் சிந்தனைகளும் செயல்களும் தாறுமாறாக எழுந்து கட்டுப்பாடில்லாத மனநோய் கொண்டவர்களாய் பூமியை அந்தகாரப படுத்துகிறார்கள். இந்த மனநிலைக்குத்தப்ப வேண்டும்.

2) எண்ணங்களின் மூல சக்தி:- 'நாங்கள் குருடரைப்போல் சுவரைப் பிடித்து கண்ணில்லாதவர்களைப் போல் தடவுகிறோம். இரவில் இடறுகிறது போலப் பட்டப்பகலிலும் இடறுகிறோம் [ஏசா. 59:10]. பாவக் கிரியைகள் மனிதனுடைய எண்ணங்களை இடறச் செய்யும். இருக்க இடமில்லாதவன் சுற்றித்திரிவது போல் மனம் எதிலும் நிலை கொள்ளாமல் அலையும். கற்பனை காவியத்திலும் சமய வழி உணர்வுகளிலும் சரி, அறிவுத்திறன் ஆராய்ச்சியிலும் சரி, எவ்வளவு தான் முன்னேறினாலும் எண்ணங்களின் மூலத்தையும், அவைகள் வந்து போகும் வழிகளையும் நாம் அறியோம்.

அக்கிரம சிந்தனைகளின் அழிவு சக்தியை முற்றிலுமாக மாற்றி ஆக்க சக்தியாக மாற்றும் மனம் பெற வழி காணவில்லை. மனிதனுடைய மூளையே எண்ணங்களின் மூலக் கருவி என்று உறுதிப்படுத்தியிருந்த விஞ்ஞானிகள் இன்று மாறாக சரீரத்தின் ஒவ்வொரு அணுக்களிலுமிருந்து அவனுடைய எண்ணங்கள், குணங்கள் இன்னும் அவைகளால் உறுதிப்படுத்தப்படும் நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் வெளிப்படுகின்றன என்று அறிவித்திருக்கிறார்கள். வருங்காலங்களில் இதுவும் தவறென்று நிரூபிக்கப்படலாம்.

தேவனால் மறைக்கப்பட்டவைகளை அவர் சித்தமில்லாமல் எந்தவொரு மனிதனும் வெளிச்சத்துக்கு கொண்டு வரமுடியாது. 'தேவனுடைய செயலைக் கவனித்துப் பார். அவர் கோணலாக்கினதை நேர்மையாக்கத்தக்கவன் யார்?" (பிர. 7:13). தனக்குள்ளே மட்டுமல்ல தன்னை சுற்றியிருக்கும் கோடிக்கணக்கான மனிதர்களின் அடுத்த கண நேர சிந்தனை என்னவாயிருக்கும் என்பதையும், அவைகள் தன்னை பாதிக்கும்

வேகத்தையும் அறியாத மனிதன் எந்தவொரு நேரத்திலும் தன் மனதை திடப்படுத்த முடிவதில்லை. "இன்னது சம்பவிக்கும் என்று அவன் அறியானே, அது இன்னவிதமாய் சம்பவிக்கும் என்று அவனுக்குச் சொல்லத்தக்கவன் யார்?" (பிர. 8:7). மனிதன் தன்னை சீர்படுத்திக் கொள்ள தனுளுள் வெளிப்படும் எல்லா எண்ணங்களையும் பரிசுத்தமாய் எழுப்பி, ஒழுங்கு முறையில் திடப்படுத்தி, நீதி, நியாயம் என்னும் கட்டுப்பாட்டுக்குள் செயல்படச் செய்ய வேண்டும். இந்த காரியம் தன்னுலே அல்ல, தன்னை நடத்துகிறவராலே ஆகும் என்று நாம் உணரும் போது இதற்கான வழி பிறக்கும்.

3) *சரீரத்துக்கும் அப்பால்...:-* ஒருவர் செய்கிறதான செயல்களை வைத்து அவருடைய சிந்தனைகளை, நோக்கங்களை ஓரளவுக்கு யூகிக்கலாம். மனிதனுடைய செயல் திறன் அவனுடைய சிந்தனைக்கு மேலாகவோ மீறுதலாகவோ இருக்க முடியாது என்ற கூற்றுப்படி மனம் ஒருமனமாய் நின்று இயக்கப்பட்டாலும் சரி, ஒருமனப் போராட்டத்தினுல் தடுமாறி செயல்பட்டாலும் சரி, சரீரமானது எண்ணங்களால் இயக்கப்படும் கருவியேயன்றி அதன் கருவாக அமையவில்லை. மூளையும், மாம்ச அணுக்களுமே எண்ணங்கள் பிறக்குமிடமென்ற இப்போதான கண்டுபிடிப்பை நாம் தாண்டிப்போக வேண்டும்.

காணக்கூடிய சரீரமானது காணக்கூடாத எண்ணங்களை உருவாக்க இயலாது. காணக் கூடாத மின்சாரம் தரும் இயந்திரங்களெல்லாம் அதை எடுத்துக் கொடுக்கும் ஒரு வகையான கருவியேயன்றி உற்பத்தியின் மூலம் அல்ல. மனிதனின் கைவேலையான இயந்திரமே மூலமாக இருக்குமானுல் அதிலிருக்கும் மிகவும் அபாயகரமான மனித உயிரைக் குடிக்கும் மாய சக்தியை எடுத்துவிடக் கூடுமே. அதனுல் எண்ணங்கள் இந்த சரீரத்தின் உற்பத்தியல்ல,

நாமெல்லாருக்கும் சாதாரணமாக பார்வைக்குத் தெரியாத ஆவிக்குரிய சரீரம் (Spirit Body) உண்டு. நமக்கு ஜென்ம சரீரமுமுண்டு, ஆவிக்குரிய சரீரமுமுண்டு என்று வேதம் கூறுகிறது (1 கொரி. 15:44). 'அவன் சரீரத்திலிருந்தானே, சரீரத்துக்குப் புறம்பேயிருந்தானே, அதை அறியேன் தேவன் அறிவார்' (2 கொரி. 12:4) என்ற அப். பவுலின் வேத வசனம் இந்த நிலையை திட்டமாக உறுதிப்படுத்துகிறது. இப்படிப்பட்ட ஆவியின் சரீரமே நம்முடைய எல்லா நினைவுகளும் எழும் இடமாயிருக்கிறது.

ஆவியின் வழியை அறியாத எந்த ஒரு சாதாரண மனிதனும் அதன் மூலம் உருவாகி எழும்பும் எண்ணங்களையும் அறியமாட்டான் (பிர. 11:5). தான் அறியாத ஒன்றை அவன் தன் சுய சித்தத்தாலும் சுயமான முயற்சியாலும் கட்டுப்படுத்தவோ, சீர்படுத்தவோ கூடாத காரியமாயிருக்கிறது. ஒருவனுடைய நினைவுகளின் வழியே [Through his Thought] நினைவுகளின் தொடர்பாக [In Line of his Thought Continuation] அவருடைய ஜீவியம் வெளிப்படுகிறது (Exhibited) இம்மையில் முடிவுவரை உருவப்படுத்துகிறதும் (Shaping) இப்படிப்பட்ட நினைவுகள், எண்ணங்களால் உந்தப்பட்டு வெளிவரும் சொல்லும் செயலும் நியாயத்தீர்ப்பின் முன் நிறுத்தக்கூடியதுமாயிருக்கிறது. முடிவு ஆக்கமோ – அழிவோ, பலமோ – பலவீனமோ, இன்பமோ – இன்னல்களோ இன்னும் பிறனுக்கு நாம் செய்யவிருக்கும் நன்மையோ, தீமையோ எல்லாமே இப்படிப்பட்ட தொடர்பான அதே நேரத்தில் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் நம்மை மீறி வரும் எண்ணங்களே இவைகளுக்கு முழுக்கக் காரணமாயிருக்கிறது. மனிதன் தன் பலவீனத்தை உணர்ந்து நன்மைக்கான, பரிசுத்தமான சிந்தனைகள் பெற இறைவனைப் பற்றிக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் அவன்

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd No. 040088/84
Postal Regd. No, MH BY NE-94/95
Tamil Monthly Magazine

வழிதப்பிய ஆட்டுக்குட்டியாய் சிதறுண்டு போவான், 'கர்த்தராலே மனுஷருடைய நடைகள் வாய்க்கும், ஆகையால் மனிதன் தன் வழியை தெரிந்து கொள்வதெப்படி?' (நீதி. 20:24). நடைகள் எண்ணங்களின் பிரதிபலிப்பு. 'உன் செய்கைகளைக் கர்த்தருக்கு ஒப்புவி; அப்பொழுது உன்யோசனைகள் உறுதிப்படும் (நீதி. 16:3).

4) சுய புத்தி பலவீனம்:-

நாம் நம்முடைய மனதின் ஐந்து சதவித அளவு மட்டுமே பயன்படுத்துகிறோம் என்று ஐன்ஸ்டீன் முதற்கொண்டு இன்னும் அநேக விஞ்ஞானிகள் கூறியதாகக் கேட்கும் போது, அளவில்லாமல் இயங்கும் மனதை இவர்கள் அளந்தது ஆச்சரியமே. இவ்வளவு தான் என்று குறிப்பிட்டு அளவு காணக் கூடாதபடி பலம் கொண்டதாகவும், அதே சமயத்தில் மனம் தன்னையே அளவு காணக் கூடாதபடி பலம் கொண்டதாகவும் இருப்பதை காண்கிறோம். ஆஸ்தி, அந்தஸ்து, அதிகாரம் என்று வெளிப்படையாக பலமாகத் தோன்றுபவனுக்குள்ளே அகந்தை, கோபம், ஆசை, வெறி கொண்ட பலவீன மனம் இல்லாமலில்லை. பற்று களைந்து, பந்தம் விடுவித்து பின் இச்சை அடக்கி எல்லாருக்கும் மேலாக எழுந்து நிற்பவன் கூட விழுந்து விடுவோமோ என்று பயம் கொண்ட பலவீனத்துக்கு தப்புவது கடினம். நல்ல உபதேசங்களையும், நாலுபேருக்கு பயன்தரும் யோசனைகளையும் தரக்கூடிய பக்குவப்பட்ட மனம், தனக்கும் பயன்படும் வழியில் கைக் கொண்டு நடக்க முடியாத பலவீன பாண்டமாகவும் இருக்கிறது.

மனதின் காரியங்களெல்லாம் ஆவியின் இயக்கம் என்று பார்த்தோம். பலமுள்ளவைகள் தேவ ஆவியாலுண்டாகும்; முடிவு பரியந்தம் நன்மை பயக்கும். பலவீன மனதின் கிரியைகள் பிசாசின் ஆதிக்கத்துக்குட்பட்டு ஆரம்பத்தில் எப்படித் தோன்றினாலும் முடிவு நாசமும் வேதனையுமே தரும் ஆச்சரியமும், அதிசயமுமான சாட்சியாக தோன்றினாலும், கண்டுபிடிப்புகளும் மனிதனின் மனம், அறிவுக்கு பலமான சாட்சியாக தோன்றினாலும். பெரும்பான்மைக் காரியங்கள் நாச வேலைக்கும், அழிவுக்கும் துணையாகியிருப்பதைக் காண்கிறோம்.

[தொடரும்]

அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

10 [திங்கள்] ஆகஸ்டு 1998
7 [திங்கள்] செப்டம்பர் 1998
6 [செவ்வாய்] அக்டோபர் 1998

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
ஆண்டு சந்தா Rs. 30-00
வெளிநாடு Rs. 400-00
அனுப்ப வேண்டிய முகவரி :
CHIEF APOSTLE N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR,
DARGA CROSS ROAD, BHANDUP,
BOMBAY-400 078, INDIA.

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. "புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிக்கையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, and Published by: Chief Apostle N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai 400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 168 - SEP. 98'

"புதிய எருசலேம் சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37


EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N.LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

கடவுள் எல்லாவற்றையும் நேர்த்தியாக செய்திருக்கிறார். ஒரு செடியாக இருக்கட்டும், ஒரு பூவாக இருக்கட்டும், எத்தனை இதழ்கள் அந்த பூவிற்கு இருக்க வேண்டும், என்ன நிறம் இருக்க வேண்டும். தேவன் சரியாக செய்திருக்கிறார். அதோடு நாம் ஒரு இதழைக் கூட்டவோ, குறைக்கவோ முடியாது. அப்படியே வர்ணத்தையும் நாம் மாற்றினால் அது ஒரிஜினலாக [இயற்கையாக] இருக்காது. இப்படியிருக்க பழைய ஏற்பாட்டு சபைக்கு, ஆசரிப்பு கூடாரத்துக்கு மாதிரி கொடுத்தவர் மிகப் பெரிய தமது கடைசி திட்டமாகிய புதிய ஏற்பாட்டு சபைக்கு மாதிரியில்லாமல் அவரவர் யோசனைப்படி செய்ய விட்டு விட்டார் என்று நினைப்பது எவ்வளவு தப்பிதம்.

புதிய ஏற்பாட்டில் தேவன் அப்போஸ்தலர்களுக்கு பரிசுத்த ஆவியானவரைப்பற்றி வாக்கருளும்போது அவர் வந்து சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார். தாம் கேள்விப்பட்ட யாவையும் சொல்லி வரப்போகிற காரியங்களை உங்களுக்கு அறிவிப்பார். அவர் என்னுடையதில் இருந்து எடுத்து உங்களுக்கு அறிவிப்பார்; அதினால் என்னை மகிமைப்படுத்துவார். எல்லாவற்றையும் உங்களுக்கு போதிப்பார். நான் உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார் என்றார் (யோ. 16:13,14; 14:26). பரிசுத்த ஆவியானவர் எல்லாருக்கும் வாக்கருளப்பட்டாலும், மேற்கண்ட வாக்குத்தத்தங்கள் அப்போஸ்தலர்களுக்கு மட்டுமே பிரத்தியேகமாக வாக்கருளப்பட்டது. அவர்களிலே மாத்திரம் நிகழும். மற்றவர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றாலும் அது மட்டுக்குட்பட்டதே. அவர்கள் தங்களுக்கு சகல சத்தியமும் தெரியுமென்றோ, சகல சத்தியத்திற்குள்ளும் தாங்கள் வழிநடத்தப்படுவதாகவோ, சகலமும் ஞாபகமூட்டப்படுகிறதென்றோ, வரப்போகிற காரியங்களெல்லாம் தங்களுக்கு வெளிப்படுகிறதென்றோ சொல்லமுடியாது; சொல்லுவதில்லை. ஆகையால் புதிய ஏற்பாட்டு சபைக்கு தேவன் அப்போஸ்தலனைக் கொடுக்கிறார். அப்போஸ்தலனால் ஆரம்பிக்கப்பட்டு, அப்போஸ்தலனால் ஆளப்படுகிற சபை முழுமையாயிருக்கும். இதுவே தேவனுடைய மெய்யான சபை. இது கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகைக்கு ஆயத்தப்படும். நீயும் அதில் அங்கமாயிரு.

கிறிஸ்துவுக்குள்.

CHIEF APOSTLE N. LAZAR.

# திருச்சபை (தொடர்ச்சி)

6) எல்லாம் கிறிஸ்துவுக்குள் கூட்டப்பட பரிசுத்தவான்கள் பூரணப்பட சபை அவசியம் (எபே. 1:9,10):-

எல்லா பரிசுத்தவான்களும் கூட்டப்படப்போகிறார்கள். கர்த்தருடைய வருகைக்கு முன் குறிப்பிடப்பட்டவர்கள் திருச்சபையாகக் கூடுவார்கள். இஸ்ரவேலர்கள் எல்லாரும் மறுபடியும் கூட்டப்படுகிறது போல தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட பரிசுத்தவான்களும், இன்னும் தேவனால் முன் குறிக்கப்பட்டவர்களும் திருச்சபையாகக் கூட்டப்படுவார்கள். தேவன் திருச்சபையைப் பற்றிய வெளிப்பாடு கொடுத்திருக்கிறார். தேவன் அனுப்பியபடியால் நாம் இந்த திருப்பணியை செய்கிறோம். தேவன் அனுப்புகிற அப்போஸ்தலன் என்றால் யார்? என்பதற்குரிய அடையாளங்கள்.

இந்நாட்களிலே சிலர் எல்லாவற்றையும் விட்டு விட்டவர்கள் அப்போஸ்தலர்கள் என்று சொல்லி கொள்கிறார்கள். அனுப்பப்பட்டவர்களே அப்போஸ்தலர்கள்.

## அப்போஸ்தலனுடைய தகுதிகள்:-

1) அவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தரிசித்திருக்க வேண்டும். இது பிரதான அப்போஸ்தலனுக்கு இருக்க வேண்டிய தகுதிகளில் ஒன்றாகும். அப்படி கிறிஸ்துவை தரிசித்திராதவர்கள், கிறிஸ்துவினால் அதிகாரம் பெறாதவர்கள் பிரதான அப்போஸ்தலர்கள் அல்ல.

2) அப்போஸ்தலனுக்குரிய அடையாளங்கள் அவனிலே காணப்பட வேண்டும். அற்புதங்கள், அடையாளங்கள், அதிசயங்கள் இவைகளோடு கூட, வல்லமைகளோடும் கூட நிச்சயமாக பொறுமை காணப்பட வேண்டும் (2 கொரி. 12:12).

3) கலா. 1:1. அப்போஸ்தலன் தேவனால் எழுப்பப்பட்டிருக்க வேண்டும். இயேசு கிறிஸ்துவினால் எழுப்பப்பட்டிருக்க வேண்டும். அவனே அப்போஸ்தலன்.

4) அப்போஸ்தலன் தேவனுடைய கட்டளையின்படி எழுப்பப்பட்டவராக, தேவனால் போதிக்கப்பட்டவராக இருக்க வேண்டும். ஒரு மனிதனிடத்திலிருந்து இன்னொரு மனிதன் போதனை கற்றுக் கொள்ளும் பொழுது அந்த மனிதனுடைய சீஷனாகிறான். ஆனால் அப்போஸ்தலன் என்றால் தேவனிடத்திலிருந்து நேரடி உபதேசம் பெற்றவனாக இருக்க வேண்டும் (எபே. 1:1; கலா. 1:11,12,17).

5) அப்போஸ்தலன் என்று சொல்லப்படுகிறவர்கள் தேவனுடைய ஆசீர்வாதத்தை பூரணமாக பெற்றவர்களும், தேவனுடைய வரங்களினால் நிரம்பினவர்களுமாயிருக்க வேண்டும். அவர்கள் கைவைத்து வரங்களை பகிர்ந்து கொடுக்கவும், அற்புத அடையாளங்கள் நடப்பிக்கவும், பூரணமான சுவிசேஷத்தை பிரசங்கிக்கக் கூடியவர்களுமாய் இருக்கிறார்கள் ரோம. 15:16,19.

6) அப்போஸ்தலர்கள், அவர்களே புதிதாக அஸ்திபாரமிட்டு திருச்சபையைக் கட்டக் கூடியவர்களாக இருக்க வேண்டும். ஒருவர் கட்டின அஸ்திபாரத்தின் மேல் இன்னொருவர் கட்டுகிறதல்ல. ஒருவர் ஆதாயம் பண்ணின ஆத்துமாக்களை வஞ்சித்து எடுத்துக் கொள்ளுகிறதில்லை. இவர்களுக்கு தேவன் வல்லமையைக் கொடுக்கிறார். இவர்கள் அஸ்திபாரமிட்டு சபை கட்ட தேவனால் அதிகாரம் பெற்றவர்கள் (1 கொரி. 3:10,11; ரோம. 15:21,29; 12:3).

அப்போஸ்தலர்கள், வெளிப்படுத்தல் பெற்றவர்களாயும், நேரடி உபதேசம் பெற்றவர்களுமாயிருப்பார்கள். நான் உங்களுக்கு ஒப்புவித்ததை கர்த்தரிடத்தில் பெற்றுக் கொண்டேன் என்று அவர்கள் சொல்லக் கூடியவர்களாக இருப்பார்கள் (1 கொரி. 15:1-4; 11:23-26). அவர்கள் மக்களை ஊன்றக் கட்டக் கூடியவர்களாய், திருச்சபையைக் கட்டக் கூடியவர்களாய், ஊழியர்களை சேர்த்துக் கட்டக் கூடியவர்களாக இருக்கிறார்கள் (2 கொரி. 10:8, 13:10). அப்போஸ்தலர்கள் பாவங்களை மன்னிக்க அதிகாரம் உடையவர்களாக இருக்கிறார்கள். இதுவே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்பு முதலாவது கொடுத்த கட்டளையும், அதிகாரமுமாகும் [யோ. 20:19-23].

இந்த அதிகாரம் கொடுத்த பொழுதே அவர்களை அப்போஸ்தலர்களாக கர்த்தர் தமக்கு பின்பு உலகத்தில் அனுப்புகிறார் பரிசுத்தாவியானவர் அவர்களை ஆட்கொண்டது முதற் கொண்டு அவர்கள் திருச்சபையைக் கட்டும் பணியில் ஈடுபட்டு அதை நிறைவேற்றுகிறார்கள். இந்த அடையாளங்கள் உள்ளவனெவனோ அவனே அப்போஸ்தலன். புதிய எருசலேமுக்கு அப்போஸ்தலன் உண்டு. ஆனபடியினால் புதிய எருசலேமே திருச்சபை. விசுவாசிகள் வந்து சேர்ந்து கொள்ளுங்கள். கர்த்தருடைய வருகைக்கு தகுதியுள்ள பரிசுத்தவான்களைக் கூட்டி ஆயத்தப்படுத்தும்படியாய் புதிய எருசலேம் சபை எழுப்பப்பட்டிருக்கிறது. அதற்காக அப்போஸ்தலர் N. லாசர் அனுப்பப்பட்டிருக்கிறார். இது தெய்வீக வெளிப்பாடு (Revelation).

## காலங்களின் விசேஷம்

ஆதியாகமத்தில் முற்பிதாக்களின் காலத்தில் தேவனுடைய தரிசனங்களும், தேவ தூதர்களின் நடமாட்டங்களும், அற்புதங்களும், அதிசயங்களும், அற்புதமான தரிசனங்களும், விடுதலைகளும் காணப்படுகின்றன. வெகு காலங்களுக்குப் பின் மோசேயின் காலத்தில் தேவ தரிசனங்களும், அற்புதங்களும், அடையாளங்களும், வல்ல செயல்களும் காணப்பட்டன. விசேஷமாக இஸ்ரவேலரின் நாற்பது ஆண்டு வனாந்திர பிரயாணத்தில் தினந்தோறும் அற்புதங்களும் அதிசயங்களும், அடையாளங்களும் காணப்பட்டது. தினந்தோறும் (ஓய்வு நாள் தவிர) மன்னா வானத்திலிருந்து பொழிந்தது. பகலில் மேக ஸ்தம்பமும் இரவிலே அக்கினி ஸ்தம்பமும் அவர்களை விட்டு நீங்காமல் இருந்தது.

வெகு காலங்களுக்கு பின், சாமுவேல் தீர்க்கதரிசி, தாவீது ராஜா போன்றவர்களின் காலங்களில் சில அற்புதங்களும், அதிசயங்களும், அடையாளங்களும், தரிசனங்களும் உண்டாயின. அதற்குப்பின் எலியா, எலிசா போன்ற பெரிய தீர்க்கதரிசிகளின் காலத்தில் அதிசயங்களும், அற்புதங்களும், பலத்த செய்கைகளும் காணப்பட்டன.

அதற்குப் பின்பு வெகு காலத்திற்குப் பின் தேவ தூதர்கள் நடமாட்டம் யோவான் ஸ்நானனுடைய பிறப்பைப் பற்றிய செய்திகளும், அதைத் தொடர்ந்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய பிறப்புக்கடுத்த செய்திகளும், அவர் பிறந்தது முதற் கொண்டு தேவதூதர்களின் நடமாட்டமும் அதிசயங்களும், அற்புதங்களும் அவருடைய ஜீவியத்திலேயும், மரணம், அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதலிலும் தேவ தூதர்களுடைய நடமாட்டங்களையும் காண்கிறோம்.

பின் ஆதித்திருச்சபையின் ஆரம்ப நாட்களில் தேவ தூதர்களுடைய நடமாட்டங்கள் காணப்பட்டன. அற்புதங்கள், அதிசயங்கள் நடந்தன. இவைகளின் மூலமாக நாம அறிந்து கொள்வது என்னவென்றால் விசேஷித்த காலங்களில் இப்படி தேவ தூதர்களின் நடமாட்டங்களும், அற்புதங்களும், அடையாளங்களும், தேவ தரிசனங்

களும் காணப்பட்டன எனவும், மற்ற காலங்களில் அவை அவ்வளவாக இல்லை என்றும் அறிந்து கொள்ளுகிறோம்.

அந்தப்படியே, இந்தக் கிருபையின் காலக் கடைசியில் புதிய எருசலேம் சபையும் இதன் ஆரம்ப முதற்கொண்டு பின்மாரி கால மழையும், அற்புதங்களும், அடையாளங்களும் தேவ தூதர்களின் நடமாட்டமும், தரிசனங்களும், வெளிப்படுத்தலும் அதிகமதிகமாய்க் காணப்படுகின்றன. உன் பிள்ளைகளெல்லாரும் கர்த்தரால் போதிக்கப்பட்டிருப்பார்கள் என்ற வாக்கியத்தின்படி தேவன் திருச்சபையின் அங்கங்களோடு காட்சிகள், தரிசனங்கள், வெளிப்படுத்தல்கள் வசன வியாக்கியானங்கள், உணர்த்துதல்கள் மூலம் இடைபடுகிறார். ஊழியர்களைக் கொண்டு பெரிய பெரிய அற்புதங்களும், அடையாளங்களும், அதிசயங்களும், குணமாக்குதலையும், கட்டளையிடுகிறார். தேவ இரகசியம் சபையில் வெளிப்படுகிறது. இதை அடுத்து ஒரு பெரிய நிகழ்ச்சி நடைபெறப் போகிறது என்பதை அறிவிக்கும் அடையாளமாய் இருக்கின்றது.

மற்ற சபைகளில் ஒரு சொப்பனங் கண்டால் அதை பிரமாதப்படுத்தித்திரிகிறார்கள். சென்னைப் பட்டணத்தில் ஒரு சபையில்] ஞாயிறு பள்ளி சிறுவன் ஒருவன் சொப்பனத்தில் தேவதூதன் தோன்றி இயேசு கிறிஸ்துவை தேவன் என்று சொல்ல அதைப் பிரமாதப்படுத்தி சபை சபையாய் அழைத்துச் சொல்ல வைத்ததாகக் கேள்விப்பட்டோம். அது ஒரு அதிசயமாக அவர்களுக்குக் காணப்பட்டது.

இங்கு புதிய எருசலேம் சபையிலோ, அப்போஸ்தல ஆளுகை, எங்கெங்கு சபை கூடிவருகிறதோ அங்கெல்லாம் தேவன் அற்புதங்களையும், அடையாளங்களையும் தரிசனங்களையும், சொப்பனங்களையும், வெளிப்படுத்தல்களையும், வியாக்கியானங்களையும், தெய்வீக இரகசியங்களையும் வெளிப்படுத்துகிறார். தெய்வீக அனுபவங்களை தினந்தோறும் மக்களுக்கு அருளுகிறார். அது அநேகமாயிருக்கிறதினால் புதிய எருசலேம் சபையார் இவைகளை பிரபலப் படுத்துவதில்லை. இரட்சிப்பை, பரிசுத்தத்தையே முக்கியப்படுத்துகிறார்கள்.

முன்மாரியும் பின்மாரியும் சேர்ந்தே பொழிகிறது. அதற்குப் பின்பு நான் மாம்சமான யாவர் மேலும் என் ஆவியை ஊற்றுவேன் அப்பொழுது உங்கள் குமாரரும், உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனம் சொல்வார்கள். உங்கள் மூப்பர் சொப்பனங்களையும், உங்கள் வாலிபர் தரிசனங்களையும் காண்பார்கள் என்றும் அப்பொழுது கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொள்ளுகிறவன் எவனோ அவன் இரட்சிக்கப்படுவான் என்று கர்த்தர் சொன்னபடி சீயோன் பர்வதத்திலும், எருசலேமிலும் கர்த்தர் வரவழைக்கும் மீதியாயிருப்பவர்களிடத்திலும் இரட்சிப்பு உண்டாயிருக்கும் என்று யோவேல் 2:32-38 வரை எழுதப்பட்டுள்ள தீர்க்கதரிசன வார்த்தைகள் புதிய எருசலேமில் நிறைவேற்றப்படுகின்றன.

புதிய எருசலேம் சபையில் வந்து கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொள்ளுகிறவன் எவனோ அவன் இரட்சிக்கப்படுகிறான் (ரோம 10:11-13) வரையுள்ள வசனங்கள் நிறைவேறிக் கொண்டிருக்கின்றன. ஆம், கர்த்தர் எருசலேமில் வாசம்பண்ணுகிறார். கர்த்தர் எருசலேமைக் கட்டுகிறார். துரத்துண்ட இஸ்ரவேலரைக் கூட்டிச் சேர்க்கிறார்.

"யோவானாகிய நான், புதிய எருசலேமாகிய பரிசுத்த நகரத்தை தேவனிடத்திலிருந்து பரலோகத்தை விட்டு இறங்கி வரக் கண்டேன்: அது தன் புருஷனுக்காக அலங்கரிக்கப்பட்ட மணவாட்டியைப் போல (சபை) ஆயத்தமாக்கப்பட்டிருந்தது" [வெளி. 21:2].

☀ முற்றும் ☀

# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம் (தொடர்ச்சி)

அதி. 31. என்ஸ்ஷன் என்னும் தம் சிறிய மகனுக்கு லூத்தர் எழுதிய கடிதம்:-

லூத்தருக்குக் கடிதப் போக்குவரத்து ஏராளம். அவருடைய குமாரன் என்ஸ்ஷனுடைய உபாத்தியாயர் லூத்தருக்கு எழுதின கடிதத்தில் தம் மாணுக்கனுடைய முயற்சியையும், சாக்கிரதையையும் புகழ்ந்து பேசி இருந்தார். லூத்தர் போர்க்கள முழக்கத்தின் நடுவிலிருந்த போதிலும், பின்வரும் அன்பும் இனிமையுமான கடிதத்தைத் தம் நான்கு வயதுள்ள சிறிய மகனுக்கு எழுத நேரம் செலவிட்டார்.

'என் கண்மணியாகிய சிறு குழந்தாய்! உனக்குக் கிருபையும், சமாதானமும் உண்டாவதாக. நீ நன்றாயும், சுறுசுறுப்பாயும் படிக்கிறாய் என்று கேள்விப்படுவது எனக்குச் சந்தோஷம். என் அருமைக் குழந்தாய்! அப்படியே செய், விடாமுயற்சியாய்ச் செய். நான் வீட்டுக்கு வரும்போது உனக்கு சில அழகான பொருட்கள் கொண்டு வருவேன். மகிழ்ச்செய்யும் ஒரு சிங்காரத்தோட்டம் எனக்குத் தெரியும். அதில் சுவர்ணமயமான மேலங்கி தரித்த அநேக சிறுவர்களிருக்கிறார்கள். அவர்கள் அங்கிருக்கும் மரங்களிலிருந்து கண்ணுக்கு மிக அழகான ஆப்பிள், பேரி, செரி, திராட்சப்பழங்களைப் பறித்துக் குவிக்கிறார்கள்; ஆடிப்பாடிக் களிப்பாயிருக்கிறார்கள்.

அங்கே அவர்களுக்குப் பொற்கடிவாளமும், வெள்ளி ஜேணமும் உள்ள மட்டக் குதிரைகள் உண்டு. பிறகு அங்கிருந்த மனுஷனை அந்தத் தோட்டம் யாருடையது, அங்கிருந்த பிள்ளைகள் யார் என்று விசாரித்தேன். அதற்கு அவர், 'அப்பிள்ளைகள் ஜெபிக்கவும், படிக்கவும், பிரியப்படுகிறவர்கள். பக்தியிலும் சிறந்தவர்கள்' என்று பதில் சொன்னார். அப்போது நான் அந்த மனுஷனை நோக்கி, 'என் பிரியமுள்ள ஐயாவே! என்ஸ்ஷன் என்று பெயருள்ள ஒரு மகன் எனக்கு இருக்கிறான். அவனும் இந்த தோட்டத்திற்குள் வந்து இந்த அழகான ஆப்பிள், பேரிப்பழங்களைத் தின்று சிறு குதிரைகள் மேல் ஏறிச் சவாரி செய்து இந்தப் பிள்ளைகளோடு விளையாடலாமா? என்று கேட்டேன்.

அதற்கு அவர், 'உம்முடைய மகன் ஜெபப்பிரியனும், நன்றாய்ப் படிக்கிறவனும் பக்தியுள்ளவனுமாயிருந்தால் இந்தத் தோட்டத்திற்குள் வரலாம். மெலாங்தன் சாஸ்திரியாரின் குமாரன் லிப்சுஸ், யுஸ்துஸ் யோனா சாஸ்திரியாரின் குமாரன் யோஸ்தும் இங்கு வரலாம். அவர்கள் இங்கு வந்து எல்லாரும் ஒன்றாயிருக்கும்போது, குழலும், முரசும், வீணையும் எல்லாவித நாண் ஏற்றிய கின்னரங்களும் அவர்களுக்குக் கொடுக்கப்படும்; அவர்கள் இங்கே துள்ளி ஆடி எக்கிர வில் எய்து விளையாடிக் களிப்பாய் இருக்கலாம்' என்று சொன்னார். பின்பு அவர் தோட்டத்தில் நடனம் செய்வதற்காகப் பக்குவம் செய்து சிங்காரிக்கப்பட்ட ஒரு பசும்புல் சம நிலத்தை எனக்குக் காட்டினார்; அங்கே தங்கக் குழல்களும், முரசுகளும், வெள்ளி வக்கிர வில்லுகளும் தொங்கவிடப்பட்டு இருந்தன. ஆனால் அந்நேரம் அதிகாலையாய் இருந்தது. பிள்ளைகள் இன்னும் சாப்பிடவில்லை.

ஆகையால் நான் அவர்களுடைய நடனத்தைப் பார்க்கக் காத்திருக்கக்கூடவில்லை. நான் தோட்டக்காரரை நோக்கி, 'பிரியமுள்ள ஐயாவே, என் மகன் சிறிய என்ஸ்

ஷனும் இந்தத் தோட்டத்துக்கு வரும்படி அவன் ஊக்கமாய் ஜெபித்து, நன்றாய்ப் படித்துப் பக்தியுள்ளவனாயிருக்க வேண்டுமென்று நான் சீக்கிரம் எழுதுவேன். ஆனால் அவனுக்கு லீனா என்று பெயருள்ள ஒரு அத்தை இருக்கிறாள். அவளையும் அவன் தன்னோடு இங்கு கூட்டி வர வேண்டும்' என்று சொன்னேன். அவர் அதற்கு, அப்படியே ஆகட்டும்; நீர் அவனுக்கு அப்படியே சொல்லும் என்று மறுமொழி சொன்னார்.

ஆகையால் என் அருமை என்ஸ்ஷனே, நன்றாய்ப் படி, நன்றாய் ஜெபி. லிப்சும், யோஸ்த்தும் அப்படியே செய்யும்படி அவர்களுக்குச் சொல். இப்படிச் செய்தால் நீங்கள் எல்லாரும் இந்த சிங்காரத்தோட்டத்துக்கு வரலாம். தேவனுடைய வல்லமையுள்ள கரத்தில் உன்னை ஒப்புவிக்கிறேன். உன் அத்தையாகிய லீனாளுக்கு என் வாழ்த்துதல் சொல்லி எனக்காக அவளுக்கு முத்தமிடு. 1530-ம் வருஷம், உன் அருமைத் தகப்பன், மார்த்தீனுஸ் லூத்தர்.

தன் மனைவி அனுப்பிய மக்தலேனாளாகிய தம் குமாரத்தியின் படத்தைப் பார்த்து லூத்தர் வெகு பூரிப்படைந்தார். தம் பிரிய மனைவியாகிய கத்தெரினாள் அம்மாளுக்கு எப்போதும் போல் கடிதம் எழுதி நடந்த சம்பவங்களை எல்லாம் தெரிவித்து, முழு நம்பிக்கையோடு ஜெபித்தால் ஆண்டவர் நமக்குதவி செய்வாரென்று சொல்லி, அவர்கள் ஊக்கமாய் ஜெபிக்கும்படி ஏவினார்.

ஆனால் அவருடைய எண்ணமெல்லாம் இப்போது அகுஸ்தாபுரி சங்கத்தில் சம்பவிக்கும் வர்த்தமானங்கள் பேரிலேயே இருந்தது. அஞ்சல்காரர் இங்குமங்கும் இடைவிடாமல் செய்தி கொண்டு போனார்கள். இந்த உன்னத கோபுர்க் கோட்டையாகிய சீனாய் பருவதத்திலிருந்து பிரதான தளகர்த்தராகிய லூத்தர் மகா ஆபத்தான இத்தருணத்தில் அகுஸ்தாபுரி சங்கத்தின் நடபடிக்கைகளை வழிகாட்டி நடத்தினார்.

(தொடரும்)



❋ ❋

# தேவனுடைய அதிசயங்களும், அற்புதங்களும்

என்னுடைய ஏழு வயதான மகள் ரோசிலின் 2வது வகுப்பு படித்துக் கொண்டிருந்தாள். கடந்த வருடம் 1997 ஏப்ரல் மாதம் 15-ம் தேதி பள்ளியிலிருந்து வீட்டிற்கு வருவதற்காக சாலையை அவள் கடக்கும் போது வேகமாக வந்த மோட்டார் பைக் மோதி, கால் ஒடிந்து விட்டது. மோட்டார் பைக்காரன் குழந்தையை அருகிலுள்ள மருத்துவ மனையில் சேர்த்து டாக்டரிடம் ரூ. 150 கொடுத்து விட்டு போய் விட்டான். தகவல் அறிந்து மருத்துவமனைக்குச் சென்று பார்த்தோம். டாக்டர் ஏதோ சிகிச்சை செய்துள்ளார். காலில் கட்டுப்போடப்பட்டும் இரத்தம் வந்து கொண்டே இருந்தது. மறுநாள் குழந்தையை நாட்டு வைத்தியரிடம் கொண்டு சென்றோம். அவர் பார்த்து விட்டு குழந்தையின் காலில் புண் ஆகி இருப்பதால் கட்ட முடியாது என கைவிரித்து விட்டார்.

குழந்தையை வீட்டிற்கு கொண்டு வந்து, இரண்டு நாட்களாக இரத்தம் நிற்காமல் பிறிட்டுக் கொண்டே இருந்தபடியால் ஒரு தனியார் மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றோம். டாக்டர் 'எக்ஸ்-ரே' எடுத்த போது கால் ஒடிந்து புண் ஆகியுள்ளதாகவும், மாவு கட்டுப் போட்டு ஒரு வாரம் கழித்துத்தான் சொல்ல முடியும் என்றார். அவ்வாறே மாவுகட்டு போட்டுவிட்டு, உள்ளேயுள்ள புண் ஆறாமல் நீர் பிடித்தால் கண்டிப்பாக காலை ஆபரேசன் செய்ய நேரிடும் என்றார். உடனே நாங்கள் திருப்பூர் ஊழியர் ஐயாவிடம் சென்று குழந்தையின் நிலையைச் சொல்லி, குழந்தையின் காலில் ஆபரேசன் செய்ய வேண்டியுள்ளது என்று டாக்டர் சொன்னாரென்று கண்ணீருடன் ஜெபிக்குமாறு வேண்டினோம்.

புதிய எருசலேம் சபை, திருப்பூர் கிளை ஊழியர் பம்பாயிலுள்ள புதிய எருசலேம் சபையின் தலைமை அப்போஸ்தலர் ஐயா அவர்களிடம் போன் மூலம் குழந்தையின் கால் ஒடிந்த விபரத்தையும், காலில் புண் ஆறாமல் இருப்பதால் ஆபரேசன் பண்ண வேண்டியுள்ளதையும் தெரிவித்து ஜெபிக்குமாறு சொல்லியுள்ளார்கள். தலைமை அப்போஸ்தலர் ஐயா அவர்களும் ஜெபிப்பதாக சொன்ன உடனே, எங்கள் குழந்தை ரோசிலினுக்கு மிகப் பெரிய அதிசயம் நடந்தது. டாக்டர் சொன்னபடி ஒருவாரம் கழித்து குழந்தையை சிகிச்சைக்கு கொண்டு சென்றோம். அவர் மாவுக் கட்டை பிரித்தவுடன் காலைப் பார்த்துவிட்டு அவர் அடைந்த ஆச்சரியத்துக்கு அளவே இல்லை, காலில் மிகவும் மோசமான நிலையில் இருந்த புண் இப்பொழுது ஆறியிருக்கிறது. ஏதோ இடையில் அதிசயம் நடந்திருக்கிறது என ஆச்சரியமாகச் சொன்னார்.

குழந்தை பூரணமாக குணமடைந்து எழுந்து நடக்கிறாள். திருச்சபையின் தலைமை அப்போஸ்தலர் ஐயா அவர்கள் ஜெபத்தின் மூலமாக எங்களுடைய குழந்தைக்கு சுகம் கொடுத்த தேவனுக்கு கோடா கோடி ஸ்தோத்திரம்.

இப்படிக்கு,

Bro. ஸ்டீபன் / வீதியாள்,

புதிய எருசலேம் சபை,

திருப்பூர் (கிளை).

# வீண் சிந்தனைகள் விலக வேண்டும்

(ஆகஸ்டு மாத தொடர்ச்சி)

அதனாலே இன்று எங்கு பார்த்தாலும், மக்கள் அழுகையும், கூக்குரலுமாய், பஞ்சம் பட்டினியுமாய், கொலையும் தற்கொலைகளும் பெருகி மனிதன் பாரத்தோடும், துக்கத்தோடும் அலைகிறான். பாவங்களுக்கு ஆளாகி நிற்கும் பலவீனம் கொண்ட மனிதர்கள் பெருகி பூமியை ஆத்துமாக்களின் அழிவுக் கூடாரமாக மாற்றிப் போடுகிறார்கள். உலகத்தின் பார்வையில் பலங்கொண்டவனாக ஆட்சிப் பீடத்திலிருக்கும் அநேகர் உள்ளான மனதில் பலவீனர்களாக இருப்பதால் எங்கும் இன்று சமாதானக்கேடு நிறைந்து மக்கள் பாரமும் பயமும் கொண்ட மனதோடு அலைகிறார்கள்.

இந்த நிலையில் பெரும் பகுதியான மனிதர்கள் மனகட்டுப்பாட்டுக்கான வழி தேடாமலும், அதை அறியக்கூடாமலும் பலவீனத்தை பலம் என்று எண்ணி தன்னையே வஞ்சித்துக் கொள்கிறார்கள். தன்வசமிழந்து போன மனம் மெய்யறிவுக்கும் பரம ஞானத்துக்கும் தாரமாக தெய்வீக வழி காணாமல் தனக்குத்தானே அழிவு உண்டுபண்ணும். 'பட்டணத்தை பிடிக்கிறவனைப் பார்க்கிலும் தன் மனதை அடக்குகிறவன் உத்தமன்' என்று வேதம் நமக்குப் போதிக்கிறது (நீதி 16:32).

மாம்சத்தின் பிடியில் அடிமைப்பட்டுப் போய் விடாமல் மனம் பாதுகாக்கப்பட வேண்டும். 'நான் என் மனதிலே தேவனுடைய நியாயப்பிரமாணத்துக்கும், மாம்சத்திலேயோ பாவப் பிரமாணத்துக்கும் ஊழியஞ் செய்கிறேன் என்று தன் உள்மனப் போராட்டத்தை நமக்குப் பாடமாக தந்தார் அப். பவுல் [ரோம. 7:25]. மாம்ச பலமும், பாவமும் தரும் பலவீனம் நம் மனதை பற்றிக் கொள்ளாமல் தேவனையே நோக்கிப் பார்க்க வேண்டும். 'பலங்கொண்டு திடமனதாயிரு' என்று கர்த்தர் யோசுவாவின் மனதுக்கு பலங்கொடுத்தார் [யோசு. 1:9].

சுயமாக தன்னைத் திடப்படுத்தவோ, பலப்படுத்தவோ மனிதனுக்கு மார்க்கமில்லை என்று நாம் உணர வேண்டும். 'மனுஷனுடைய யோசனைகள் வீணென்று கர்த்தர் அறிந்திருக்கிறார்' (சங். 94:11). சுயசிந்தனையில் பலங்கொள்ள நினைப்பவன் கடிவாளமில்லாத குதிரையைப்போல கட்டுப்பாடில்லாமல் வழி தப்பிப் போவான், திகில் பிடித்துக் கொள்ள மனம் நோய்ப்படும். மனிதன் தேவனிடத்தில் திரும்ப வேண்டும். 'என் உள்ளத்தில் விசாரங்கள் பெருகுகையில் உம்முடைய ஆறுதல்கள் என் ஆத்துமாவைத் தேற்றுகிறது' (சங். 94:19).

ஆத்துமாவின் இளைப்பாறுதல் திடமான பலமான, பரிசுத்தமான மனதினால் கிடைக்கப் பெறுகிறது. இவையெல்லாம் தேவன் அளிக்கும் ஈவு. என் ஆத்துமாவே நீ ஏன் கலங்குகிறாய்? ஏன் எனக்குள் தியங்குகிறாய்? தேவனை நோக்கிக் காத்திரு' [சங் 42:5].

[தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க]

பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. தேவதாஸ் | Sis. எலிசபெத் | சேலம் | 15-7-98 |

தாவீதுக்கு உண்டாயிருந்த நெருக்கம் அவருக்கு இருந்த மனப் பலத்தை அழித்துப் போடக் கூடியதாய் அநேக முறை அவரை வாதித்தது. அவன் தன் சுய புத்தியை எடுத்துப் போட்டு தேவன் மேல் நோக்கமாயிருந்து. தேவனையே நினைத்திருந்து, தேவ பலத்துக்காக காத்திருந்து பெற்றுக் கொண்டார். அவர் தன் எண்ணங்களை எல்லாம் ஒருமித்த நிலையில் தேவனை நோக்கி எழுப்பினர், கடைசி வரை அவர் பலங் கொண்டவராய் தேவனுக்கு சாட்சியாக ஜீவித்தார். 'உன் சுய புத்தியின் மேல் சாயாமல் உன் முழு இருதயத்தோடும் கர்த்தரில் நம்பிக்கையாயிருந்து அவரை நினைத்துக் கொள். அப்பொழுது அவர் உன் பாதைகளைச் செவ்வைப்படுத்துவார் (நீதி. 3:5,6).

5) சுய சித்தம் அழிவு:-

வர்த்தகத்தில் முன்னணியில் நிற்கும் மும்பை (பம்பாய்) நகரில் முப்பத்தாறுக்கும் மேற்பட்ட சதவித [36%] மக்கள் தன்னையே வருத்திக் கொள்ளும், எதிலும் பற்றில்லா ஒருவித மனநோயால் (Mental-depression) பாதிக்கப்பட்டிருப்பதாக ஒரு அறிக்கை வெளி வந்திருக்கிறது. இது ஆச்சரியமான செய்தியாக நமக்குத் தோன்றினாலும் வேதம் அறிந்தவர்களுக்கு அதன் காரணங்கள் தெரியும். பணபலம் மாமிச பலத்தை வெளிப்படுத்தி, இச்சை வழி நடந்தவர்கள் மனம் பலவீனமானது; அதன் விளைவுகள் தோய்ந்துபோன ஆவியின் வழியே இன்று வெளிப்படுகிறது. நீதி நியாயங்களை மறந்து கோடிக்கணக்கான மக்கள் குளிரிலும், மழையிலும் வதைபட்டு, பசியிலும், பட்டினியிலும் வருத்தப்பட்டு அலைபவர்களுக்கு மத்தியில் இரக்க சிந்தையற்றவர்களாய் தகாத முறையில் பணம் தேடியவர்கள் குடி, கூத்து, வேசித்தனம், பொய் பித்தலாட்டம், கொள்ளை, கோபம் வெறுப்பு போன்ற பழக்கங்களும், குணங்களும் கொண்டவர்களாய் மாறும்போது பலம் என்று எண்ணப்பட்டதனைத்தும் பலவீனமாய் நின்று தாக்கும் போது மனிதன் இப்படிப்பட்ட நோய்க்கு ஆளாகிறான்.

மெய் தேவனை அறியாது, பொய்யான தெய்வங்களை இப்படிப்பட்ட நாச வேலைக்கு துணையாக்கி தங்கள் ஜீவனை அழித்துக் கொண்டவர்கள் இப்படிப்பட்ட நோயிலிருந்து மீளமுடியாது. ஏனென்றால் இவர்கள் துக்கம் இவர்களின் ஆவியை முறித்துப் போடும். 'மனதுக்கத்தினாலே ஆவி முறிந்துபோம்' என்று வேதம் சொல்லுகிறது (நீதி. 15:13).

(10-ம் பக்கம் பார்க்க)

ஞானஸ்நானம்

12-7-98 அன்று நாகர்கோயில் கிளை சபையில் 27 பேர்களும், 13-7-98 அன்று புதுக்கோட்டை கிளை சபையில் 2 பேர்களும், 8.8.98 அன்று தலைமை சபையில் (பம்பாய்) 4 பேர்களும் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமானவர்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இவர்களை வாட்டும் நோய் இவர்களின் எண்ணங்களே. போதுமென்ற மனமோ, உண்மையான தெய்வ பக்தியோ இல்லாது போன இவர்களுடைய மனம் இன்று இவர்களை மீறி வந்து தீலாட்டும் எண்ணங்களேயாகும். தேவ ஆவி இறங்கி கட்டுப்படுத்தக் கூடாமல் தங்கள் ஆவியை முறித்துப் போட்டது. இவர்களின் கடந்தகால கொடூரமான சிந்தனைகளேயாகும். இவர்களின் பாதைகள் திரும்பப்பட இவர்களுடைய ஆவி திரும்பவும் உயிர்ப்பிக்கப்பட வேண்டும். சரீரம், ஆவி, ஆத்துமா அனைத்திலுமுண்டான பாவக்கறைகள். அசுசிகள் நீக்கப்பட வேண்டும். தேவ ஆவியானவரே இதைச் செய்யக் கூடும். 'மனுஷனுடைய ஆவி கர்த்தர் தந்த தீபமாயிருக்கிறது. அது உள்ளத்தில் உள்ளவைகளையெல்லாம் ஆராய்ந்து பார்க்கும்' (நீதி. 20:27).

இந்த தீபம் எரிய வேண்டும். இந்த மனநிலை இன்று உலகெங்கிலும் அநேகரை ஆட்கொண்டிருக்கிறது என்பது உண்மை. ஆதிகாலத்தில் பாவம் செய்தவர்களை தேவன் மொத்தமாக அழித்தார். இன்று பாவ மீட்புக்கு இயேசு கிறிஸ்துவின் பலி நிரந்தரமாயிருக்கும் போது மனந்திருந்த மனமில்லாமல் ஜீவிப்பவர்கள் தங்களை மீறிப்போன அக்கிர சிந்தை கொண்ட கட்டுப்பாடில்லாத எண்ணங்களாலே அழிந்து போகிறார்கள். மீட்பு ஆவிக்குரிய காரியமாயிருக்கிறது. தேவ ஆவி இறங்கி, தேவ சித்தம் நின்று, சுயசித்தம் நீங்கி, மனம் விடுதலையாகி சுகம் பெறும்போது இந்த மனநோய்கள் நீங்கி, மனம் தேவனுக்குள் பலம் பெறும். சுய சித்தமோ, சுயமான சிந்தனையோ; இவையெல்லாம் தேவ சித்தம், தேவ கட்டளை, தேவ நீதிக்குட்பட்டு இருக்க வேண்டுமென்பது தேவ கட்டளை (ஆதி. 2:16,17).

6) வேதமே வழி காட்டும்:-

ஒரு நிமிடம் கூட நிலை கொள்ளாமல் பகலெல்லாம் போராடும் மனம், போதும் என்று சொல்லாதபடி ஆட்டுவிக்கும் ஆசைகள், இரவிலும் தன் சொப்பனங்களால் உண்டாகும் பயம், திகில், இப்படி சமாதானமேயில்லாமல் மனித மனம் அவர்களை அழிவுக்கு கொண்டு செல்லும் என்று அறிந்த இயேசு, நிலையில்லாமல் வந்து போகும் இவ்வுலக சமாதானத்தைவிடுவித்து தன்னுடைய சமாதானத்தை நமக்குக் கொடுத்தார். அப்படிக் கொடுத்த அருள் நாதர் 'உங்கள் இருதயம் கலங்காமலும், பயப்படாமலும் இருப்பதாக' என்று சொன்னார் (யோ. 14:27).

மனமெல்லாம் இயேசுவின் மகிமையால் நிறைவாக, அவர் காட்டிய வழியில் நடக்க வேண்டும். ஏற்றுக் கொண்டவர்கள் அநேகர் சத்திய போதனைக்கு மாறாக ஜீவிக்கிறார்கள். இவர்கள் மனம் இயேசுவின் சமாதானத்தில் பங்கு பெறாது. நாமோ வேதத்தின்படி நடப்போம். அளவற்று, நிறைவாகி நிற்கும் அவருடைய கற்பனைகளை அறிந்து கொள்ள நமது இருதயத்தை விசாலப்படுத்துவோம். சத்திய வேதம் அறியும் அறிவும், உணர்வும் தேவனுடைய திருச்சபையில் இறங்கும். அங்கே நாம் காத்திருப்போம்

தேவனுடைய அன்பும், தேவ சமாதானமும் நம்மை நிறைவாக்கி மனம் வீணான சிந்தனைகளை வெறுத்து ஒதுக்கும். வேதம் வழிகாட்டும், சபை வழி நடத்தும், நல்ல பயனுள்ள, பரிசுத்தமான சிந்தனைகள் நம்மை ஆட்கொள்ளும். 'வீண் சிந்தனைகளை நான் வெறுத்து, உமது வேதத்தில் பிரியப்படுகிறேன்' (சங். 119:113). மனம் இறைவனுக்குள் சுகம் காண வேதமே வழி காட்டும். வீணான சிந்தனைகளனைத்தும் விலகிப் போகும், அல்லேலூயா.



# புதிய எருசலேம் சபையின் 30வது ஆண்டு நிறைவு விழா (8.8.1968-8.8.1998)

## தேவனுக்கே மகிமை

திருச்சபையின் 30வது ஆண்டு நிறைவு விழா தலைமை சபையிலும், கிளை சபைகளிலும் (வெளிநாடுகளிலும்) மகிமையாகக் கொண்டாடப்பட்டது. திருச்சபையின் மக்கள் மிகவும் களிகூர்ந்து தேவனுக்கு ஸ்துதி செலுத்தினார்கள். பிற சபையாரும், பொது மக்களும் கூட திருச்சபையை வாழ்த்தினார்கள். ஏனென்றால் அது ஒரே சரீரமாக கட்டப்பட்டு 30வது ஆண்டுகள் நிறைவடைந்தது என்பதாகும்.

அநேக வெளிச்சத்துருக்களும், போராட்டங்களும், உள் சத்துருக்களும், துரோகிகளும், எழும்பின போதும் தேவன் திருச்சபையை மகிமைப்படுத்தி 30 ஆண்டுகள் நிறைவடையச் செய்தார். ஆதி சபை சிதறின பின்பு வெவ்வேறு சபைகள் எழும்பி, பெரும் பெரும் ஸ்தாபனங்களாக இயங்கி வருகின்றன. அவைகளிலிருந்து பிரிந்து போய் சிலர் பெரிய ஸ்தாபனங்களை எழுப்பியுள்ளனர். ஆனாலும் புதிய எருசலேம் சபை தேவனுடைய பரிபூரணமான கடைசிக் கால சரீரமான சபையாக இருக்கிறபடியால் இதிலிருந்து பிரிந்து போயோ, விழுந்து போனவர்களோ வேறொன்றும் செய்ய முடியாதபடி தேவன் அவர்களை வெட்கப் படுத்தி, சிதறடித்து புதிய எருசலேம் சபை ஒன்றே மெய்யான திருச்சபை என் பதை நிருபித்து நிலைநிறுத்திக் காட்டியுள்ளார் என்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக் கிறோம். தேவனை ஸ்துதிக்கிறோம்.

---

*N.J.C யின் 30-ம் ஆண்டு விழாவை சிறப்பாகக் கொண்டாடின எல்லோருக்கும் நன்றி!*

---

CHIEF APOSTLE **N. LAZAR.**



# வேதபாடம் (தொடர்ச்சி)

## யோசுவா

### யோசு. 24:1-28

சீகேமின் புனித சூழ்நிலை மத்தியில் யோசுவா இஸ்ரவேலின் கடந்த கால சரிதையை அன்றைய வரைக்குமான கடவுளுடைய உண்மையை மேலும் நிருபிக்கும்படியாக தொகுத்துரைத்தார்? கர்த்தர் சொல்லுகிறதைக் கேளுங்கள் என்று யோசுவா கூறினர்.

இஸ்ரவேல் ஜனங்களையும், மூப்பரையும், அதிபதிகளையும், தலைவர்களையும், நியாயாதிபதிகளையும் அழைத்து யோசுவா கர்த்தர் சொல்லுகிறதாவது என்று இந்த பிரசங்கத்தை ஆரம்பிக்கிறார். ஆபிரகாமுடைய அழைப்பிலிருந்து அவர்கள் சத்துருக்கள் கானனில் முறியடிக்கப்பட்டது வரைக்கும் இஸ்ரவேலின் சரித்திரம் விவரிக்கப்படுகிறது. அவர்கள் பெற்ற வெற்றிக்கடுத்த சகல மேன்மையும் தேவனுக்கே சமூலமாய் செலுத்தப்பட்டது (வச. 12,14,15). அவர்களுடைய பிதாக்கள் பின்பற்றின சகலவித விக்கிரகாராதனையைக் குறித்தும் யோசுவா ஜனங்களை எச்சரிக்கிறார். இப்பாகமானது ஏற்ற ஒரு அறைகூவுதலாக முடிவடைகிறது, யாரைத்தான் சேவிப்பது என்பதை இந்நாளிலே தெரிந்து கொள்ளுங்கள் என்பதே அது.

தன்னுடைய தீர்மானத்தை யோசுவா அறிவிக்கிறார். '..நானும் என் வீட்டாருமோவென்றால், கர்த்தரையே சேவிப்போம் என்றார்' (வச. 15). ஆம். இது ஜனங்களுக்கு ஒரு தலைவனின் சிறந்த முன்மாதிரியாகும். நம் வாழ்க்கை முடியுமட்டும் நம்மை ஒருபோதும் நெகிழவிடாத தேவனையே சேவிக்க எச்சரிக்கையாயிருப்போமாக. நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம் என்று அவரும், அவருடைய குடும்பத்தாரும் உறுதியாய் சாட்சியிட்டதாய் நாம் பார்க்கிறோம். இவ்விதமாகவே தலைவர்கள், ஊழியர்கள் என்று சொல்லப்படுகிறவர்கள் – அவர்களுடைய குடும்பத்தார்களும் திட்டமாய் கர்த்தரை சேவிக்கிறவர்களாய், கர்த்தருடைய ஊழியத்தை செய்கிறவர்களாய், கர்த்தருக்காக சாதிக்கிறவர்களாக இருக்க வேண்டும்.

பின்மாறிப் போகிறவர்கள், வழுவிப்போகிறவர்கள், கெட்ட சாட்சியுடையவர்கள், விழுந்து போகிறவர்களெல்லாரும் சாத்தானால் தாக்கப்பட்டு இழந்துபோனவர்களாகும் அவர்கள் தங்களுடைய ஆத்துமாக்களை விற்றுப்போட்டார்கள். அப்படிப்பட்டவர்களை விட்டு விசுவாசிகள் விலக வேண்டும். நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம்; நீங்கள் யாரை சேவிப்பீர்கள் என்பதை இன்று எனக்கு அறிவியுங்கள் என்றார். நாங்களும் கர்த்தரையே சேவிப்போம் என்று ஜனங்கள் பதிலுரைத்தார்கள் (வச. 15). அதிக சுலபமாக இவ்வார்த்தைகளை அவர்கள் கொடுத்ததினால் தாங்கள் செய்வதாகக் கட்டுப்படுத்திக் கொள்ளும் காரியம் அவ்வளவு லேசானதல்ல என்று யோசுவா நினைப்பூட்டுகிறார். ஆதலால் கர்த்தரை சேவிப்பது உங்களால் ஆகாத காரியம் என்று சொன்னார் [வச. 19]. ஜனங்கள் மறுத்து, அப்படியல்ல, நாங்கள் கர்த்தரையே சேவிப்போம் என்றார்கள் [வச. 21].

இவ்வளவு பயபக்தியான வாக்கு செய்ததற்கு அவர்களே சாட்சிகளாயிருந்து அவர்கள் நடுவே இருந்த அந்நிய தெய்வங்களை அகற்றிவிடுவதே, அது முடிவடைந் திருக்க வேண்டும் (வச. 23). இறுதியில் ஜனங்கள் தமது கடவுளாகிய கர்த்தரையே சேவித்து, அவர் சத்தத்துக்கு செவி கொடுப்போம் என்றார்கள் (வச. 24). அநேகர் சபைகளிலேயும், சங்கங்களிலேயும், தேவ சமூகத்திலேயும் சாட்சி கொடுக்கிறோம். சிலர் வருஷ ஆரம்பத்தில் வருஷத்தின் முதல் தேதியில் ஒப்புக் கொடுப்பார்கள். கதவோடு கூட சேர்ந்து காதை குத்துகிறதற்கு ஒப்புக் கொடுக்கிறேன் என்று சொல்லி, அதாவது ஜீவிய காலமெல்லாம் கர்த்தருக்கே அடிமையாயிருந்து கர்த்தர் சித்தம் செய்வேன்; அவர் சொல்லுகிற பிரகாரம் நடப்பேன் என்று, மறுநாளே கர்த்தரை விட்டு, தேவ சமூகத்தைவிட்டு ஓடிவிடுவார்கள். இவர்கள் சொல்லுகிற பிரகாரம் கர்த்தர் நடக்கவில்லை சபை நடக்கவில்லை என்பது இவர்களுடைய பிராதாக இருக்கும்.

இப்படிப்பட்ட முதுகெலும்பில்லாத மனிதர்களாக இருக்கக் கூடாது. மனிதனுக்கு வைராக்கிய சிந்தனை வேண்டும். வாக்கு நாணயம் வேணும். தான் சொன்ன வாக்கை காப்பாற்றி கொள்ளுகிறதற்காக எதையும் தியாகம் செய்ய, எந்த அவமானத்தையும் தாங்க ஒரு மனிதன் ஆயத்தமாயிருக்க வேண்டும். கீர்த்தி பெற்ற யோசுவாவினுடைய அறைகூவுதலுக்கு செவி சாய்த்தவர்களாக அன்றிருந்த ஜனததாரெல்லாரும் சமூலமாய் தங்களை தேவனுக்கு அர்ப்பணம் செய்தார்கள்.

இவ்விதமான ஸ்திரமான ஊழியர்களே ஜனங்களை தெய்வ பக்தியில் கர்த்தருடைய வருகைக்காக ஆயத்தப்படுத்துவதில், திருப்பணி செய்வதில் தேர்ச்சியடைவர்கள் – தேவை. யோசுவா பயபக்தியுடன் உடன்படிக்கையைப் புதுப்பித்து அவர்கள் பிரதிஞ்டைக்கு சாட்சியாக ஒரு பெரிய கல்லை சீகேமிலிருந்த பெரிய கர்வாலி மரத்தின கீழ் நாட்டினர் (வச. 26).

இந்த வேதபாகத்தின் மூலமாக நாம் அறிவது என்னவென்றால் பழைய ஏற்பாட்டு சபையின் தலைவனாக அப்பொழுது இருந்த யோசுவா தனக்குப் பின் இந்த ஜனங்கள் யேகோவாவைப் பற்றிக் கொண்டு ஆசீர்வாதத்தை சுதந்தரித்துக் கொள்ள வேண்டும். தேவ சித்தம் செய்ய வேண்டும், உலகத்தில் உயர்ந்திருக்க வேண்டும் என்று மிகவும் தாகமாக ஜனங்களை கூட்டி பிரசங்கித்து கீழ்ப்படியச் செய்து உடன்படிக்கை செய்து உறுதிப்படுத்தி சாட்சி வகித்தார்

யோசு. 24:29;- தலைவனாக ஏற்படுத்தப்பட்டவுடன் யோசுவாவின் புஸ்தகம் தொடங்கி அவருடைய பிரிவு உபசார பிரசங்கம், மரணம் இவற்றோடு முடிவடைகிறது. வச. 31ல யோசுவா உயிரோடிருந்த சகல நாட்களிலும், கர்த்தர் இஸ்ரவேலுக்குச் செய்த அவருடைய கிரியைகள் யாவையும் அறிந்து யோசுவாவுக்குப் பின்பு வெகுநாள் உயிரோடிருந்த மூப்பருடைய சகல நாட்களிலும், இஸ்ரவேலர் கர்த்தரைச் சேவித்தார்கள் என்றதால் அவருடைய வாழ்க்கைக்கான மிகவும் மேன்மையான புகழ்மாலை நட்டப்பட்டுள்ளது.

அநேகருடைய ஊழியங்கள் அவர்களோடுகூட அழிந்து போகிறது. காரணம் என்னவென்றால் மாம்சத்தின்மேல் அஸ்திபாரம் போட்டு ஒரு கவர்ச்சியினால் மக்கள் ஒட்டிக் கொண்டிருப்பார்கள். அவருக்குப் பின்பு அவருடைய வேலை அழிந்துபோய் விடும்.

ஊழியம் அழிந்துபோய் விடும். ஆனால் சத்தியத்தை அஸ்திபாரம் கொண்டு திருச்சபையாய் இருக்கிற மக்களோ என்றென்றும் நிலைத்திருப்பார்கள். யோசுவாவின் மரணத்தோடு யோசேப்பின் எலும்புகள் அடக்கம்பண்ணப்பட்ட விபரம் இணைக்கப்பட்டிருக்கிறது விசுவாசத்தால் இஸ்ரவேலர் எகிப்து தேசத்தை விட்டு புறப்படுவதைக் குறித்தும் தன் அந்திய காலத்தில் பேசி தன் எலும்புகளைக் குறித்து கட்டளை கொடுத்தார் என்று எபி. 11:22 ல் வாசிக்கிறோம். வனாந்தரத்தில் அலைந்து திரியும்போதெல்லாம் சுமந்துகொண்டு வரப்பட்டு முடிவில் வாக்குத்தத்தத்தின் தேசத்தில் இளைப்பாறும்படி யோசேப்பின் எலும்புகள் அடக்கம் பண்ணப்பட்டதின் மூலம் இக்கட்டளை நிறைவேறியதைக் காண்கிறோம்; ஆம், தேவனுடைய முற்றும் சார்ந்திருந்த விசுவாசம் எப்படிப்பட்டது!

வச. 29-31ல் எலெயாசார் எழுதினதாயும், பினெகாஸ் சேர்த்து [வச. 33ஐ] எழுதினதாயும் நம்பப்படுகிறது. பினெகாஸ் சுதந்திரத்தில் எலெயாசார் என்ற ஆசாரியன் அடக்கம்பண்ணப்பட்டான். இப்புஸ்தகம் மரணத்தோடு தொடங்கி, மரணத்தோடு முடிவடைகிறது. மிகவும் பிரசித்திப் பெற்றவரும் மகா பிரயோஜனமுள்ளவருமான அநேக தலைவர் தேவ சித்தத்தின்படி தங்கள் தலைமுறையாரை நடத்தி முடிவு மரணத்தைக் கண்டனர். ஆனால் நமது ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவோ மரணத்தின்மேல் வெற்றி சிறந்தார்.

வாக்குத்தத்தத்தின் தேச பிரவேசத்தைவிட மகா உன்னதமான ஒரு இராஜ்யத்தைக் கர்த்தரால் மீட்கப்பட்டவர்களிமித்தம் கர்த்தர் ஆயத்தப்படுத்தியிருக்கிறார். அந்த பரம கானானை சுதந்தரிக்க நாம் விசுவாசத்தோடு வாஞ்சித்துக் காத்துக் கொண்டிருக்கிறோம் (யோ. 14:1-6; மத். 25:34). அக்காலத்தில் தேவன் உண்மையுள்ளவராய் இருந்தது போலவே இக்காலத்திலும் உண்மையுள்ளவராயிருந்து நம்மை வாக்குத்தத்த தேசத்தில் கொண்டு போய் சேர்ப்பார்.

அதற்கு நாம் சபையின் தலைவர்களுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அடங்கியிருக்க வேண்டும். யோசுவாவின் புஸ்தகம் முதல் அதிகாரத்தில் ஜனங்களும், அதிபதிகளும் இவ்விதமாக சொல்லுகிறார்கள் (யோ. 1:16-18) முதல் "அப்பொழுது அவர்கள் யோசுவாவுக்கு பிரதியுத்தரமாக: நீர் எங்களுக்குக் கட்டளையிடுகிறதையெல்லாம் செய்வோம்: நீர் எங்களை அனுப்பும் இடமெங்கும் போவோம். நாங்கள் மோசேக்குச் செவி கொடுத்ததுபோல உமக்கும் செவி கொடுப்போம். உம்முடைய தேவனாகிய கர்த்தர் மாத்ரம் மோசேயோடே இருந்ததுபோல, உம்மோடும் இருப்பாராக. நீர் எங்களுக்குக் கட்டளையிடும் சகல காரியத்திலும் உம்முடைய சொல்லைக் கேளாமல், உம்முடைய வாக்குக்கு முரட்டாட்டம்பண்ணுகிற எவனும் கொலை செய்யப்படக்கடவன்; பலங்கொண்டு திடமனதாய் மாத்திரம் இரும் என்றார்கள்; ஆம், இப்படிப்பட்ட உதவி ஊழியர்களும், தலைவர்களும், ஜனங்களுமே தலைவரோடுகூட சேர்ந்து பெரும் வெற்றி பெறுவார்கள் என்று யோசுவாவின் புஸ்தகம் நமக்குப் போதிக்கிறது.

யோசு 24:31 யோசுவாவின் சகல நாட்களிலும் என்று எழுதியிருக்கிறது. யோசுவாவின் மரணத்துக்குப்பின் 30 வருடங்கள் வரை என்று சொல்லி நம்பலாம், 30 வருடங்கள் வரை என்று அர்த்தம். அருமையான தலைவரும் தீர்க்கதரிசியுமான யோசுவாவின் புஸ்தகம் முடிந்தது. கர்த்தர் நம்மை யோசுவாவைப்போல, யோசுவாவோடுகூட இருந்த அதிபதிகளைப் போல, ஜனங்களைப் போல நடத்தி நிறைவடையச் செய்வாராக!

[தொடரும்]

சுவிசேஷம் :-

# ஆதாமே நீ எங்கே இருக்கிறாய்?

ஆதியிலே தேவன் வானத்தையும், பூமியையும் சிருஷ்டித்தார். பூமியிலே சகல ஜீவ ஜந்துக்களையும் சிருஷ்டித்தார். கடைசியிலே மனுஷனை (ஆதாமை) தம்முடைய சாயலாக சிருஷ்டித்தார். அவனை தேவ சாயலாக சிருஷ்டித்தார். பின்பு மனுஷன் தனிமையாயிருப்பது நல்லதல்ல, ஏற்ற துணையை அவனுக்கு உண்டாக்குவேனென்று அவன் விலா எழும்புகளில் ஒன்றை எடுத்து மனுஷியாக [ஏவாளை] உருவாக்கி ஆதாமிடத்தில் கொண்டு வந்தார். தேவனாகிய கர்த்தர் கிழக்கே ஏதேன் என்னும் ஒரு தோட்டத்தை உண்டாக்கி தாம் உருவாக்கின மனுஷனை அதிலே வைத்தார்.

அப்பொழுது அவர் ஆதாமை நோக்கி நீ தோட்டத்திலுள்ள சகல விருட்சத்தின் கனியையும் புசிக்கவே புசிக்கலாம்; ஆனாலும் நன்மை, தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்க வேண்டாம்; அதைப் புசிக்கும் நாளிலே சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார். தேவன் மனிதனோடு ஏதேன் தோட்டத்தில் உலாவிக் கொண்டு வந்தார். அப்படி இருக்கையில் இந்த தேவ ஐக்கியத்தை பாதிக்கும்படி சாத்தான் திட்டம்பண்ணி சர்ப்பத்திற்குள் புகுந்து ஏவாளையும், ஆதாமையும் வஞ்சித்து புசிக்கக் கூடாது என்று விலக்கின விருட்சத்தின் கனியை புசிக்கும்படி செய்தான். அவர்கள் தேவ கட்டளையை மீறினார்கள். அப்பொழுது தேவன் தோட்டத்தில் உலாவ வரும் நேரத்தில் போய் ஒளிந்து கொண்டார்கள். இருந்தாலும் தேவன் அவர்களை தேடி வந்து ஆதாமே? நீ எங்கே இருக்கிறாய்? என்று அன்போடு அழைத்ததாக நாம் வேதத்தில் வாசிக்கிறோம்.

மனிதன் தேவ கட்டளையை மீறினதின் நிமித்தமாக தேவனுக்கும் மனிதனுக்கும் பிரிவினை உண்டானது. ஆதாமும், ஏவாளும் பாவம் செய்ததின் நிமித்தமாக ஏதேன் தோட்டத்தை விட்டு துரத்தப்பட்டார்கள். தேவன், ஆதாம் நிமித்தமாக பூமியை சபித்தார். அது முதல் மனுக்குலம் வருத்தத்தோடே அதன் பலனை அநுபவிக்க நேரிட்டது. நெற்றி வேர்வையை நிலத்தில் சிந்தி கஷ்டப்பட்டு உழைத்து சாப்பிடும்படி நேரிட்டது. கடைசியாக, பாவத்தின் சம்பளமாக மரணம் அவனுக்கு நியமிக்கப்பட்டது.

நீ மண்ணாயிருக்கிறாய், நீ மண்ணுக்கு திரும்புவாய் என்று கர்த்தர் சபித்துவிட்டார். தேவனோடு என்றென்றும் வாழும்படியாக சிருஷ்டிக்கப்பட்ட மனுஷன், நித்திய ஜீவனுக்காக நியமிக்கப்பட்டவன்; மரணத்தை கண்டான். அன்று முதல் இன்று வரை மனுக்குலம் பலவித கஷ்டங்களோடு வாழ்ந்து கொண்டு இருக்கிறதை நாம் பார்க்கிறோம். மனுஷன் தேவ துரோகம் செய்து, கட்டளையை மீறி பாவம் செய்தாலும் ஆதாமே? நீ எங்கே இருக்கிறாய்? என்று தேவன் தேடி வருகிறவராய் இருக்கிறார்.

தேவனுடைய சிருஷ்டிப்பின் திட்டம் தோல்வியடைந்து விட்டதோ? என்று நாம் எண்ணலாம். இல்லை, மனுக்குலத்தை வஞ்சித்துப்போட்ட சாத்தானை தோற்கடிக்கும்படியாக அவரே மனுஷ அவதாரம் எடுத்து கடந்து வந்து மனுக்குலத்தின் பாவத்தை தானே ஏற்றுக் கொண்டு சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மூன்றும் நாள் உயிர்த்தெழுந்து பரத்திற்கு ஏறி சென்று விட்டார்.

சிலுவையிலே இயேசு வெற்றி சிறந்தார். சாத்தான் தோற்கடிக்கப்பட்டான். தேவனிடத்திலிருந்து பிரிக்கப்பட்ட மனுக்குலத்தை மறுபடியும் ஐக்கியப்படுத்தும் வழியை இயேசுகிறிஸ்து உண்டுபண்ணி விட்டார். இயேசுவே அந்த வழியாக இருக்கிறார் (யோ. 14:6).

நான் பாவியாக இருக்கிறேனே! நான் தேவனை சந்திக்க முடியுமா? என்று அங்கலாய்த்துக் கொண்டிருக்கிறாயா? பயந்து ஒளிந்து கொண்டிருக்கிறாயா? சகோதரனே, சகோதரியே, நீ பயப்படாதே! கலங்காதே! தேவன் (இயேசு) உன்னை நேசிக்கிறார். உன்னை தேடி வந்த தெய்வம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. நீ தேவனோடு ஐக்கியப்பட வேண்டுமானால் நீ முதலாவது மனந்திரும்ப வேண்டும். நீ பாவி என்று உணர வேண்டும். 'அறியாமையுள்ள காலங்களைத் தேவன் காணாதவர் போலிருந்தார்; இப்பொழுதோ மனந்திரும்ப வேண்டுமென்று எங்குமுள்ள மனுஷரெல்லாருக்கும் கட்டளையிடுகிறார்' (அப். 17:30). தகப்பனை விட்டு பிரிந்து போய் தன்னுடைய ஆஸ்தியை எல்லாம் துன்மார்க்கமாய் அழித்துப போட்டு. பன்றிகள் தின்னும் தவிட்டினால் தன் பசியை போக்கும் அளவிற்கு கெட்டுப்போன குமாரன் தன் தகப்பனிடத்தில் போவேன் என்றும், ஒப்புரவாவேன் என்றும் மனந்திரும்பினான் [லூக். 15:17-19]. சகோதரனே, சகோதரியே நீ இன்று மனந்திரும்பினால் தேவன் உன்னை சேர்த்து கொள்வார். நீ எவ்வளவு பெரிய பாவியாக இருந்தாலும் மனந்திரும்பினால் தேவன் உன்னை இரட்சிக்க ஆவலோடு இருக்கிறார்.

மனுஷன் தேவ கட்டளையை மீறி பாவம் செய்தபடியால் மனுஷனுக்கும் தேவனுக்கும் வழக்கு உண்டாயிருக்கிறது. பர்வதங்களே, பூமியின் உறுதியான அஸ்திபாரங்களே கர்த்தருடைய வழக்கைக் கேளுங்கள், கர்த்தருக்கு அவர் ஜனத்தோடே வழக்கு இருக்கிறது. இஸ்ரவேலோடே அவர் வழக்காடுவார் (மீகா 6:2). வழக்காடுவோம் வாருங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; உங்கள் பாவங்கள் சிவேரென்றிருந்தாலும் உறைந்த மழையைப் போல் வெண்மையாகும்; அவைகள் இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப் போலாகும். நீங்கள் மனம் பொருந்திச் செவிகொடுத்தால் தேசத்தின் நன்மையைப் புசிப்பீர்கள் [ஏசா. 1:18,19]. ஆகவே நாம் பாவிகள் என்று ஒத்துக் கொண்டால் தேவன் மன்னிப்பார். நமக்கு பாவமில்லையென்போமானால் நம்மை நாமே வஞ்சிக்கிறவர்களாயிருப்போம். நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும். நீதியும் உள்ளவராயிருக்கிறார். [1 யோ. 1:8,9].

மனுஷன் தேவனோடு ஒப்புரவாகும்படியாக தன் பாவங்களை அறிக்கை செய்ய வேண்டும். தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான்: அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனோ இரக்கம் பெறுவான் (நீதி. 28:13). எந்த மனுஷனும் தன்னைத் தானே பரிசுத்தப்படுத்திக் கொள்ள முடியாது (ஏசா. 66:17). நீ காசிக்குப் போனாலும், கன்னியாகுமரி கடலிலும், கங்கையிலும் ஸ்நானம் செய்தாலும், இமய மலையில் சென்று கடும் பனியில் தவம் புரிந்தாலும் மெக்கா மதினா பயணம் சென்றாலும் உன் பாவம் உன்னைவிட்டு போகாது. நீ முறைப்படி பாவத்தை அறிக்கை செய்ய வேண்டும். தேவனோடு ஒப்புரவாகும் ஊழியத்தை, உபதேசத்தை அதிகாரத்தை தேவன் தம் அப்போஸ்தலர்களுக்கே, திருச்சபைக்கே கையளித்திருக்கிறார்.

அவர் இயேசு கிறிஸ்துவைக் கொண்டு நம்மை தம்மோடே ஒப்புரவாக்கி ஒப்புரவாக்குதலின ஊழியத்தை எங்களுக்கு ஒப்புக் கொடுத்தார். அதென்னவெனில் தேவன் உலகத்தாருடைய பாவங்களை எண்ணாமல், கிறிஸ்துவுக்குள் அவர்களைத்

நமக்கு ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின் உபதேசத்தை எங்களிடத்தில் ஒப்புவித்தார்.

ஆனபடியினாலே, தேவனானவர் எங்களைக் கொண்டு புத்தி சொல்லுகிறதுபோல நாங்கள் கிறிஸ்துவுக்காக ஸ்தானாபதிகளாயிருந்து, தேவனோடே ஒப்புரவாகுங்கள் என்று கிறிஸ்துவினிமித்தம் உங்களை வேண்டிக் கொள்ளுகிறோம் என்று அப் - பவுல் எழுதுகிறார் (2 கொரி. 5:18-20). இயேசு கிறிஸ்துவின் மூலமாய் இந்த ஒப்புரவாகுதல் உண்டாகிறது (ரோம. 5:10,11; கொலோ. 1:20,21). இயேசுகிறிஸ்துவே மத்தியஸ்தராக இருந்து மனுஷனையும், தேவனையும் ஒப்புரவாக்குகிறார் (1 தீமோ. 2:5,6). பிரதான அப்போஸ்தலராகிய இயேசுகிறிஸ்து தம்முடைய அப்போஸ்தலருக்கு ஒப்புரவாகுதலின் உபதேசத்தை, அதிகாரத்தை, ஊழியத்தை கொடுத்திருக்கிறார். அவர்கள் கிறிஸ்துவுக்கு பிரதிநிதிகளாயிருந்து தேவனோடு ஒப்புரவாக்குகிறவர்களாயிருக்கிறார்கள். ஒப்புரவாகுதலின் உபதேசம் பாவமன்னிப்பின் அதிகாரமாயிருக்கிறது.

எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும்: எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார் [யோ. 20:23]. ஆகவே தேவனோடு ஒப்புரவாக வேண்டுமானால் அவரால் அதிகாரப்படுத்தப்பட்ட அப்போஸ்தலரிடத்திலே பாவங்களை மறைக்காமல வெளிப்படுத்தி அறிக்கை செய்ய வேண்டும். அவர்கள் மூலமாக நாம் தேவ ஐக்கியத்தை பெற்றுக் கொள்ள முடியும் [1 யோ. 1:3,4].

இந்த கடைசி காலத்திலே தேவன் புதிய எருசலேமின் தலைமை அப்போஸ்தலர் அவர்களுக்கு இந்த இரகசியத்தை வெளிப்படுத்தியிருக்கிறார். இந்த அதிகாரத்தை, ஊழியத்தை, உபதேசத்தை கையளித்திருக்கிறார். இதை விசுவாசித்து, ஏற்றுக் கொண்டு பாவத்தை அறிக்கையிடுகிறவர்கள் பாவத்திலிருந்தும், பிசாசின் பிடியிலிருந்தும், வியாதியிலிருந்தும், மரணத்திலிருந்தும் விடுதலை பெறுகிறார்கள்; தேவ ஐக்கியத்தையும், தேவ தரிசனங்களையும் காண்கிறார்கள். இதுவே ஒப்புரவாக்குதலின் வழியாக இருக்கிறது.

மனுஷர்களுடைய வழக்கை விசாரிக்கும் இடம் புதிய எருசலேம் திருச்சபையாயிருக்கிறது. 'நீ எழுந்து' பர்வதங்களுக்கு முன் உன் வழக்கைச் சொல்; மலைகள் உன் சத்தத்தைக் கேட்கக்கடவது (மீகா. 6:1). நீ பாவங்களை வெளிப்படுத்தி அறிக்கை செய்யாதவரை உனக்கு பாவத்திலிருந்து விடுதலை இல்லை, பரிசுத்த ஜீவியத்தை பெற முடியாது. நீங்களோ சீயோன் மலையினிடத்திற்கும் ஜீவனுள்ள தேவனுடைய நகரமாகிய பரம எருசலேமினிடத்திற்கும் ஆயிரம் பதினாயிரமான தேவ தூதர்களிடத்திற்கும், பரலோகத்தில் பேரெழுதியிருக்கிற முதற்பேறானவர்களின் சர்வசங்கமாகிய சபையினிடத்திற்கும் யாவருக்கும் நியாயாதிபதியாகிய தேவனிடத்திற்கும், பூரணராக்கப்பட்ட நீதிமான்களுடைய ஆவிகளினிடத்திற்கும், புது உடன்படிக்கையின் மத்தியஸ்தராகிய இயேசுவினிடத்திற்கும், ஆபேலினுடைய இரத்தம் பேசினதைப் பார்க்கிலும் நன்மையானவைகளைப் பேசுகிற இரத்தமாகிய தெளிக்கப்படும் இரத்தத்தினிடத்திற்கும் வந்து சேர்ந்தீர்கள் (எபி. 12:22-24).

"தேவனைத் தேடு"
**"SEEK GOD"**

**Regd No. 040088/84**
**Postal Regd. No. MH BY NE-94/95**
**Tamil Monthly Magazine**

நியாயத்தீர்ப்பு தேவனுடைய வீட்டில் துவங்கும் காலமாயிருக்கிறது. ஆகவே இங்கு மனந்திரும்பி சபையில் பாவ அறிக்கை செய்து ஒப்புரவாகி நியாயத் தீர்ப்பை பெற்றுக் கொள்ளுகிறவர்களுக்கு மீண்டும் நியாயத்தீர்ப்பு நாளில் விசாரணை இல்லை. இன்றே இரட்சணிய நாள். இதுவே அனுக்கிரக காலம் ஆகவே கர்த்தராகிய இயேசுகிறிஸ்து நியாயதிபதியாய் இவ்வுலகை நியாயந்தீர்க்க வருவதற்கு முன்பாக ஒப்புரவாகி, தேவனுடன் ஐக்கியமாகி திருச்சபையாய் சேர்ந்து கொள்ளும்படியாக அன்புடன் அழைக்கிறோம்.

சகோதரனே, சகோதரியே, நீ எந்த தேசத்திலே இருந்தாலும், எந்த மொழியை பேசிக் கொண்டிருந்தாலும் தேவனோடு ஐக்கியம் ஆக வேண்டுமானால் தேவனுடைய பர்வதமாகிய புதிய எருசலேம் திருச்சபையை நாடி, தேவனால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலரை நாடி, அவரால் அதிகாரம் பெற்ற தேவ ஊழியர்களை நாடி தேவ ஐக்கியத்தையும், ஆசீர்வாதத்தையும் பெற்று இன்பமாய் வாழ நித்திய காலமாய் தேவனோடு வாழும் சிலாக்கியத்தை பெற பாவத்திலிருந்து பூரண விடுதலை பெற இரட்சிக்கப்பட அன்போடு அழைக்கிறோம். தேவனும் உங்களை ஆவலோடு அழைக்கிறார். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக! ஆமென்!

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

7 [திங்கள்] செப்டம்பர் 1998
6 [செவ்வாய்] அக்டோபர் 1998
4 [புதன்] நவம்பர் 1998

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
ஆண்டு சந்தா Rs. 30-00
வெளிநாடு Rs. 400-00
அனுப்ப வேண்டிய முகவரி :
**CHIEF APOSTLE N. LAZAR**
**"NEW JERUSALEM CHURCH"**
**CHURCH LANE, TILAK NAGAR,**
**DARGA CROSS ROAD, BHANDUP,**
**BOMBAY-400 078, INDIA.**

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. "புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிக்கையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, and Published by: Chief Apostle N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai 400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 169 - OCT. 98'



"புதிய எருசலேம் சபை"

'...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

— மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11–16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1–3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் –மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்–மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்–மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்–யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்–யோவா. 21:15–17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5–8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்–1 கொரி. 11:23–26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1–6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40–43).

CHIEF APOSTLE N.LAZAR

## இதழின் உள்ளே ..

# ஆசிரியர் உரை

Man Made Priests என்றும், God Made Priests பொதுவாகச் சொல்லுவார்கள். இந்நாட்களில் வேலையில்லா திண்டாட்டம். அதிகம் படித்து விட்டு வேலை தேடி கிடைக்காததால் சிலர் இரண்டோ, மூன்றோ வருஷம் ஒரு பைபிள் ஸ்கூலில் சென்று பாடம் படித்துவிட்டு ஊழியர் என்ற Licence பெற்று ஊழியர்களாகி விடுகிறார்கள். இவர்களால் தேவனுடைய சித்தம், திட்டம் நிறைவேறும் என்று சொல்லுவதற்கில்லை. தேவனால் அழைக்கப்பட்டு இரட்சிப்பைப் பெற்று, பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்று முறையாய் ஊழியத்துக்கு அழைப்பைப் பெற்று அடங்கியிருந்து, ஆயத்தப்பட்டு, தங்களுக்கு மேலுள்ள தேவ ஊழியரால் கைகள் வைத்து (Ordination) அதிகாரம் பெற்றவர்களே சரியாய் தேவபணியை நிறைவேற்றி முடிக்க முடியும். அடங்கியிராதோரும், முறையான அதிகாரம் பெறாதோரும், ஆளுகைக்கு உட்படாதோரும் தேவனுடைய மெய்யான ஊழியர்களல்ல. அவர்கள் அற்புத அடையாளங்கள் செய்தாலும் ஊழியம் நிறைவேறாது; தெய்வ சித்தம், திட்டம் நிறைவேறாது, ஊழியம் வெற்றியடையாது. இப்படிப்பட்டவர்களை நம்புகிறவர்களும், பின்பற்றுகிறவர்களும், சிதறடிக்கப்படுவார்கள். ஏனென்றால் அந்த ஊழியர்கள் தேவனால் ஏற்படுத்தப்பட்டவர்களல்ல என்பதே. ஆதலால் தேவ ஜனங்கள் கள்ள ஊழியர்களுக்கு விலகி இருப்பீர்களாக!

*கிறிஸ்துவுக்குள்,*

CHIEF APOSTLE N. LAZAR.

# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம்

(தொடர்ச்சி)

அதி. 32. அகுஸ்தாபுரி இராஜ்ய சங்கம்:-

யோவான் நியமகப் பிரபுவும் அவருடைய பரிவாரங்களும் மே மாதம் 2-ம் தேதி அகுஸ்தாபுரி வந்து சேர்ந்தார்கள். சக்கரவர்த்தி ஜூன் மாதம் 15-ம் தேதி வந்தார். இதற்கிடையில் மெலாங்தன் சாஸ்திரியார் லூத்தருடைய போதகங்களை ஆதரித்து கோபுர்க்கில் எழுதத் தொடங்கிய நியாயங்களை இப்போது மகா முயற்சியாய்ச் சட்டங் கட்டி எழுதிக் கொண்டிருந்தார்.

இராஜ்ய சங்கம் ஜூன் மாதம் 20-ம் தேதி ஆரம்பித்தது. ஜூன் மாதம் 22-ம் தேதி லூத்தரைச் சார்ந்தவர்கள் தங்களுடைய விசுவாச அறிக்கையை எழுதி ஒப்புவிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார்கள். இந்த அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கை லூத்தரன் திருச்சபைக்கு மகா சாசனப்பத்திரம். இது சுருக்கமும், தெளிவும் மிதமுமான பாஷையில் எழுதப்பட்ட ஒரு சாசனம் இது பல தரம் ஜாக்கிரதையாய்ப் பரிசோதிக்கப்பட்டுப் பிழை திருத்தம் செய்யப்பட்டது. லூத்தர் இதை மனப்பூர்வமாய் அங்கீகரித்தார். 23-ம் தேதி நியமகப் பிரபு தங்கியிருந்த இடத்தில் சுவிசேஷ அநுசாரிகளான அதிபதிகள், பிரதிநிதிகள், ஆலோசனைக் கர்த்தாக்கள், வேத சாஸ்திரிகள் ஆகியவர்கள் முன்பாக இந்த அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கை லத்தீன் பாஷையிலும், கர்மானியா பாஷையிலும் வாசிக்கப்பட்டுக் கையொப்பமிடப்பட்டது.

24-ம் தேதியாகிய அடுத்த நாள் அதை பகிரங்கமாய் இராஜ்ய சங்கத்தில் தாங்கள் வாசிக்க இடங்கொடுக்க வேண்டுமென்று சுவிசேஷ அநுசாரிகள் விரும்பினார்கள். அடுத்த நாளாகிய 25-ம் தேதி அது இராஜ்ய சங்க மண்டபத்தில் அல்ல, ஆனால் சங்கத்தின் அங்கத்தினர்கள் உட்காரக்கூட இடம்போதாத அத்தியக்ஷ மாளிகையின் ஓர் அறையில் அது வாசிக்கப்படுவதற்கு இராயன் வெகு கஷ்டத்தோடு சம்மதம் கொடுத்தான்.

திருச்சபை சரித்திரத்தில் மகா மகிமையான நாட்களில் ஒன்றாகிய 1530-ம் வருஷம் ஜூன் மாதம் 25-ம் தேதி பிற்பகலில் ஆலோசனைக் கர்த்தாக்களாகிய பயர் சாஸ்திரியாரும், ப்ரிக் சாஸ்திரியாரும் ஒருவர் கர்மானியா பாஷையில் எழுதிய பிரதியோடும் மற்றவர் லத்தீன் பாஷையில் எழுதிய பிரதியோடும் மேடையில் ஏறினார்கள். வந்திருந்தவர்களில் அநேகர் கர்மானியா பாஷை தெரியாதவர்களானதால், லத்தீன் பிரதிதான் வாசிக்கப்பட வேண்டுமென்று தந்திரியாகிய கோக்ளேயுஸ் என்பவனால் தூண்டப்பட்டு இராயன் பிடிவாதம் பண்ணினான். நியமகப் பிரபுவாகிய யோவான் எல்லாருக்கும் முன்பாக இராயனுக்குச் சொன்னதாவது: நாமெல்லாரும் கர்மானியர்; கர்மானிய பூமியில் இருக்கிறோம். மாட்சிமை தங்கிய இராயராகிய நீர் நாங்கள் கர்மானியா பாஷையில் பேசும்படி உத்தரவு அளிப்பீரென்று நம்புகிறேன்' என்பதே.

பிறகு ஆலோசனைக் கர்த்தராகிய பயர் சாஸ்திரியார் உலகமெங்கும் புகழ்பெற்ற அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கையைக் கர்மானியா பாஷையில் பிற்பகல் மூன்று மணியிலிருந்து ஐந்து மணிமட்டும் வாசித்தார். மண்டபத்திற்குப் புறம்பே திறந்த வெளியில் கேட்க ஆவலாய்க் கூடியிருந்த ஏராளமான ஜனங்கள் நன்றாய்க் கேட்கும்படி அவர் தீர்க்கமாய் உரத்த சத்தத்தோடு

வாசித்தார். பின்பு ப்ரிக் சாஸ்திரியார் லத்தீன் பிரதியையும் கர்மானிய பிரதியையும் தங்களுடைய கையொப்பத்துடன் இராயனுக்கு ஒப்புவித்தார். இராயன் கர்மானிய பிரதியை இராஜ்ய பிரதான மந்திராலோசனைக் கர்த்தராகிய மேயன்ஸ் நியமகப் பிரபுவாகிய ஆல்பர்ட்டுக்கு ஒப்புவித்தான்.

அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கையை வாசித்தால் உண்டான பலன் மெய்யாகவே பிரமிக்கத்தக்கதாயிருந்தது. அகுஸ்தாபுரி அத்தியக்ஷராகிய ஸ்தாதியான் சொன்னதாவது: லூத்தரைச் சார்ந்தவர்கள் சொன்னது எல்லாம் உண்மையாயிருக்கிறது நாம் அதை மறுக்க முடியாது என்பதே. பவேரியாப் பிரபுவாகிய வில்லியம், எக் சாஸ்திரியை நோக்கி, 'நீர் இந்த அறிக்கையை திக்கரிக்க முடியுமா?' என்று கேட்டார். அதற்கு அவன் மறுமொழியாக, 'அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகளுடைய புஸ்தகங்களைக் கொண்டு அல்ல திருச்சபைப் பிதாக்களுடைய பிரபந்தங்களைக் கொண்டு நான் அதைப் பரிக்கக்கூடும்' என்றான். அதற்கு பிரபு, 'ஆ, அப்படியா? அப்படியானால் லூத்தரைச் சார்ந்தவர்கள் சத்திய வேதத்துக்குள்ளும், நாமோ வெளியேயும் நிற்கிறோமென்று அறிந்துகொள்ளுகிறேன்'' என்றார்.

இராயன் சங்கத்தை முடிவுக்குக் கொண்டுவந்து கலைத்துவிட்டான். அவனே விஷயங்கள் முற்றிலும் மாறுகச் சம்பவித்திருக்க வேண்டுமென்று எதிர்பார்த்ததாகச் சொன்னார்கள். தம் சிநேகிதர்கள், அகுஸ்தாபுரியில் கிறிஸ்துவின் சத்தியத்தைத் தைரியமாய் அறிக்கையிட்டு, உறுதியாய் நின்றார்களென்று கேள்விப்பட்ட போது லூத்தர் மகிழ்ந்து புரித்தார்.

இப்போது இராயன், ரோமை வேத சாஸ்திரிகள், அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கையைப் பரிசோதித்து அதற்கொரு நிராகரணம் எழுத வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். அவர்கள் ஒரு நிராகரணம் எழுதி அதை ஐந்து தரம் மாற்றி மாற்றித் திருத்த வேண்டியிருந்தது. கடைசியாக அவர்கள் எழுதிய ஒட்டு வேலை இராயனுக்குத் திருப்தியாயிருந்தபோது, அது இராஜ்ய சங்கத்தில் ஆகஸ்டு மாதம் 3-ம் தேதி வாசிக்கப்பட்டது. அதன் கையெழுத்துப் பிரதியில் ஒன்றை லூத்தரைச் சார்ந்தவர்களுக்குக் கொடுக்க மறுத்தார்கள். என்றாலும் அதின் பெரும்பான்மையான குறிப்புகள் அவர்களுக்குக் கிடைத்தது. ஒருவேளை அது வாசிக்கப்பட்டபோதே சுருசிகர் அவைகளைக் குறித்து வைத்திருக்கலாம்.

(தொடரும்)

# கைகளைத் தாங்குங்கள்

யாத். 17:11,12:- ஆரோனும், ஊரும் ஒருவன் ஒரு பக்கத்திலும், ஒருவன் மறு பக்கத்திலுமிருந்து அவன் கைகளைத் தாங்கினார்கள்.

எகிப்திலிருந்து புறப்பட்டு கானானை நோக்கி கடந்து போய்க் கொண்டிருந்த இஸ்ரவேலரை வழியில் தடுத்து அமலேக்கியர் (பச்சை மாமிசம்) யுத்தம் தொடுத்தார்கள். இஸ்ரவேலருக்கு யுத்தம் என்பது இது முதல் அனுபவம். இவ் யுத்தத்தில் இஸ்ரவேலர் தோல்வியுற்று மனமடிந்து போய்விடக் கூடாதே என்று உணர்ந்த மோசே தேவன் தனக்கு சொன்னவைகள் எல்லாவற்றையும் நினைவு கூர்ந்து (யாத். 3:12) தேவனிடத்தில் அபயமிட்டு இஸ்ரவேலருக்கு வெற்றியுண்டாக, உதவி செய்யும்படியாக, தனது கரத்தை வானத்திற்கு

நேராக எறெடுத்தார். மோசேயின் கரம் உயர்த்தப்பட்டிருந்ததால் நமது ஜனத்திற்கு வெற்றியுண்டாகும். மோசேயின் கரம் தாழ்ந்து போனால் நமது ஜனத்திற்கு தோல்வியுண்டாகும் என்பதை அறிந்த ஆரோனும், ஊரும் ஒரு பெரிய கல்லை கொண்டு வந்து மோசேயை அதன் மீது இருக்கச் செய்து, ஒருவர் ஒரு பக்கத்திலும், மற்றவர் மறுபக்கத்திலுமிருந்து, இஸ்ரவேலருக்கு வெற்றியுண்டாகும்படியாக மோசேயின் கரத்தை தாங்கினார்கள்.

பிரியமானவர்களே மோசே தேவனிடத்தில் பெற்ற கிருபைகளை சிந்திக்கிற போது, எவ்வளவு கிருபை பெற்றவர் என்று எண்ணத்தோன்றும் [யாத். 3:1,2]. நேரடியாக தேவ தரிசனம் பெற்றவர் (எண்.12:8). இஸ்ரவேலரின் பெருமூச்சைக் கேட்டு அவர்களை மீட்க பரலோகத்திலிருந்து இறங்கின தேவன் ஜனங்களை எகிப்திலிருந்து அழைத்துவர உன்னை அனுப்புகிறேன் வா என்று தேவனுக்கு பதிலாக, தேவ பிரதிநிதியாக தேவனால் ஏற்படுத்தப்பட்டவர் [யாத். 3:7-10].

அதைத் தடுத்து ஐயோ நான் எம்மாத்திரம் எனக்கு தகுதியில்லையே என்று சொன்ன போது, நான் உன்னோடே இருப்பேன் என்று தேவனால் திடப்படுத்தப்பட்டவர் (யாத். 3:11,12). நான் போய் தேவன் என்னை அனுப்பினார் என்று சொல்லும்போது அவர் பெயர் என்னவென்று அவர்கள் என்னிடம் கேட்டால் நான் அவர்களுக்கு என்ன சொல்லுவேன் என்று மோசே அங்கலாய்த்த பொழுது இருக்கிறவராகவே இருக்கிறேன் என்று சொல்லும்படி தேவனால் கூறப்பட்ட தேவ நாமத்தைப் பெற்றவர் [யாத். 3:13,14].

மோசே மேலும் இப்பெரும் காரியத்தை நான் எப்படி நடத்தி முடிப்பேன் அவர்கள் என்னை நம்பார்களே என்ற பொழுது அவர்களை நம்ப வைக்கும்படியாக அற்புதங்களை செய்யும் கோலைப் பெற்றவர் (யாத். 4:1-5,17) இதற்கு பின்னும் மோசே ஆண்டவரே என்னால் சரளமாக பேசவராது அப். 7:22ன் படி எகிப்திய மொழியில் தேர்ச்சி பெற்று வாக்கிலும் செய்கையிலும் வல்லவராக காணப்பட்ட மோசே இஸ்ரவேல் ஜனங்களோடு அவர்கள் மொழியில் நன்றாக பேசமுடியாது, வாய் திக்குப்படும் என்ற ரீதியில் வேறுயாரையாவது அனுப்பும்மென்ற பொழுது தேவனால் உதவியாளனைப் பெற்றவர் (யாத். 4:10-16).

இப்படி ஏராளமான கிருபைகளை பெற்ற மோசே இக்கட்டான சூழ்நிலையில் இஸ்ரவேலர் இருப்பதைக் கண்டு பச்சை மாமிசம் என்று சொல்லப்படும் அமலேக்கியர் அவர்களை மேற்கொள்ளாதபடி காக்க தேவனிடத்தில் அடியமிட்டு இஸ்ரவேலரை மீட்டுவர என்னை அனுப்பினவரே, நான் உன்னோடு இருப்பேன் என்று சொன்னீரே இதோ உம் ஜனங்களுக்கு உதவி செய்யும் என்று மோசே கரத்தை உயர்த்தினார்.

மோசேயின் கரம் உயர்த்தப்பட்ட நோக்கத்தையும், அது உயர்ந்து இருக்க

---

ஞானஸ்நானம்

9-8-98 அன்று வள்ளியூர் கிளை சபையில் 27 பேர்களும்; 14-9-98 அன்று சென்னை கிளை சபையில் 16 பேர்களும் திருமுழுக்கு பெற்று திருச்சபையின அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

---

வேண்டியதின் அவசியத்தையும் அறிந்த மோசேயின் உதவி ஊழியனும், கனமான ஊழியத்திற்காக அழைக்கப்பட்டு பிற்காலத்தில் அதற்காக அபிஷேகிக்கப்பட்ட ஆசாரிய ஊழியம் செய்த ஆரோனும், கர்த்தரைத் துதிப்பேன் என்னும் அர்த்தமுடைய யூதா கோத்திரத்தானாகிய (யாத். 31:1-5) ஊரும் இஸ்ரவேல் ஜனங்களுக்கு ஜெயம் உண்டாகும் வரை மோசேயின் கரத்தை தாங்கினார்கள். சூரியன் அஸ்தமிக்கும் வரை மோசேயின் கரம் உயர்ந்திருந்தது. அதனால் இஸ்ரவேலர் ஜெயித்தார்கள்.

பெரிஜபா

இதேபோல் இன்றும் எகிப்தாகிய இந்த உலகத்தில் விடுதலையாக்கப்பட்டு பரம கானானாகிய பரலோகத்தை நோக்கி கடந்து போகின்ற ஆவிக்குரிய இஸ்ரவேலர் ஏராளம். இவர்களுடைய வழியிலும் இவர்களை முறியடிக்க அழித்துப்போட பிசாசு அமலேக்காய் செயற்படுகிறான். ரோம. 8:6,7 ன் படி அன்று இஸ்ரவேலரோடு அமலேக்கியர் (பசசை மாமிசம்) போராடியது போன்று, இன்று மாமிசத்தின் சிந்தையாகிய பாவ போராட்டத்தினால் தோல்வியுற்று, ஆவிக்குரிய இஸ்ரவேலராகிய கிறிஸ்தவர்கள் அநேகர் பாவத்தில் விழ்ந்து அழிந்து போகிறாகள்.

இன்னிலையிலிருந்து ஜனங்கள் காக்கப்பட்டு பிசாசினால் கொண்டுவரப்படுகின்ற பாவப்போராட்டத்தில் அவனை மேற்கொண்டு ஜெயிக்கவும், பாவ மன்னிப்பின் பூரண வழியினூடாக பரம கானானுக்கு ஜனங்களை ஒன்று சேர்த்து நடத்தவும் பிசாசை [அமலேக்] வானத்தின் கீழ் வான மண்டத்தில் இல்லாதபடி (உபா. 25:19: வெளி. 12:8,9) தள்ளிப்போடவும் இந்நாட்களில் மோசேயைப் போன்றும் அவரைப் பார்க்கிலும் அதிகம் கிருபை பெற்றவரை எழுப்புவோம் என்று தேவன் பல நூற்றுண்டுகளுக்கு முன்பு தீர்க்கதரிசனமாய் எழுதிவைத்திருக்கிறார் [ஏசா. 46:11].

இவர் மோசேயை பார்க்கிலும் எதனால் அதிகம் கிருபை பெற்றவரென்றால், இஸ்ரவேலரை நடத்திச் சென்ற மோசே கானான் தேசத்திற்குள் பிரவேசிக்க முடியவில்லை. கண்களால் மாத்திரம் கண்டார். ஆனால் இவரோ பரம கானானாகிய பரலோகத்திற்கு முதல் தேவனால் எடுத்துக் கொள்ளப்படுவார் என்றும், தேவனிடத்தில் விசேஷித்த அதிகாரம் பெற்று, பின்பு வந்து ஜனங்களை நடத்துவார் என்றும் தீர்க்கமாக எழுதப்பட்டுள்ளது (ஏசா. 41:2,3; வெளி. 12:5).

இவர் எழுப்பப்படும் போது தேவனுடைய நகரத்தை கட்டுவார் (ஏசா. 45:13) அநேகர் கிரயமில்லாமல் மீட்கப்படுவார்கள் [தானி. 12:1]. புஸ்தகத்தில் எழுதப்பட்டவர்கள் எல்லோரும் மீட்கப்படுவார்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. நிறைவேறும்படியாக அந்த நீதிமானை தேவன் எழுப்பியுள்ளார். இவர் மோசேயைப் போன்று நேரடி தேவ தரிசனம் பெற்றவர். தேவ திட்டத்தை நிறைவேற்ற தேவனால் அழைக்கப்பட்டவர். நான் கூட இருந்து கட்டுவேன் என்று தேவனால் திடப்படுத்தப்பட்டவர். ஜனங்களுக்கு அறிவிக்கும்படி தேவனால் கொடுக்கப்பட்ட புதிய எருசலேம் என்னும் நாமத்தைப் பெற்றவர். ஜனங்கள் நம்பிக்கை வைக்க அற்புதங்களை செய்யும் கோல் மோசேக்கு கொடுத்தது போல், ஜனங்கள் எல்லோரும் ஏற்றுக் கொள்ளும்படி மறுரூப வாக்கு [கோல்] பெற்றவர்.

மோசேக்கு உதவியாக ஆரோன் கொடுக்கப்பட்டது போல் தோளோடு தோள் நின்று உழைக்கும்படி கனமான ஊழியத்திற்கென்று தேவனால் அழைக்கப்பட்ட உதவி ஊழியர்களையும் பெற்றிருக்கிறார். அமலேக்கியர் முறியடிக்கப்படும்படியாக மோசேயின் கரம் உயர்த்தப்பட்டது போல் பிசாசை ஜெயிக்கும்படியாக, இவருடைய விண்ணப்பங்களும், ஜெபங்களும் தேவனை நோக்கி உயர்ந்து கொண்டேயிருக்கிறது. மோசேயின் கரம் உயர்த்தப்பட்ட நோக்கத்தையும், அது உயர்ந்திருக்க வேண்டியதன் அவசியத்தையும் அறிந்த ஆரோனும், ஊரும் மோசேயின் கரத்தை தாங்கியது போன்று ஆரோனைப் போன்று அழைக்கப்பட்டு உதவியாய் ஊழியம் செய்கிறவர்களும், யூதா கோத்திரத்து ஊரைப் போல் துதிக்கக் கூடிய அனுபவமுடைய தேவ பிள்ளைகளும் இவரின் விண்ணப்ப ஜெபத்தின் நோக்கத்தையும் அவர்கள் கேட்கப்பட வேண்டியதன் அவசியத்தையும் அதிகம் உணர்ந்தவர்களாய் நம்முடைய ஜெபங்களினாலே அவரை அதிகம் தாங்கி அமலேக்கின் மேல் (பிசாசு) வெற்றியுண்டாக வழியமைப்போமாக.

"ஜெயமோ கர்த்தரால் வரும்" (நீதி. 21:31).

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. Y. சாமுவேல் | Sis. I. ரெபேக்காள் உமா | விளாத்திக்குளம் | 27-8-98 |
| Bro J. ஜெய சிங் | Sis. Y. மரிய பிரேமா லதா | காப்புக்காடு | 14-9-98 |

# தேவனுடைய அதிசயங்களும், அற்புதங்களும்

புதிய எருசலேம் சபை விசுவாசியான சகாயம் என்பவரின் குடும்பம் சென்னை, T.P. சத்திரம் என்ற இடத்தில் உள்ளது. இவரது தம்பியின் மனைவியை ஏப்ரல் 1998 ல் அசுத்த ஆவி ஆட்கொண்டது. இவளோ கர்ப்ப ஸ்திரீயாகயிருந்தாள். அந்த ஆவி இவளை சாப்பிடவோ, தூங்கவோ விடாமல் இரவு பகலாக அல்லல் பட வைத்தது வயிற்றிலிருக்கிற குழந்தையை அழித்துவிட வேண்டும் என்று அந்த ஆவி ஒரே வைராக்கியமாக இருந்தது. அந்தப் பெண்ணை மேடவாக்கத்திலுள்ள, நமது சபைக்கு கொண்டு வந்தார்கள். அந்தப் பெண் கேட்டைப் பிடித்துக் கொண்டு உள்ளே வர மறுத்தது. பலவந்தமாக உள்ளே இழுத்து வரப்பட்டாள்; ஆவியை அதட்டினபோது, சற்று விலகினதுபோலிருந்தது. பல நாள் சாப்பிடாமல் இருந்த பெண் அன்றைய தினம் சபையிலே சாப்பிட்டு, வீடு திரும்பினது. வீட்டுக்கு போனபின் மறுபடியும் ஆவி கலாட்டா செய்தது. தலைமை அப்போஸ்தலரிடம் ஆலோசனை கேட்டேன். இயேசு பிசாசை துரத்தின வசனங்களை வாசிக்க சொல்லி அல்லது வேறொருவரை வாசிக்கப்பண்ணி அசுத்த ஆவியின் கூரை முதலாவது மழுக்க வேண்டும். [அதாவது அந்த ஆவியின் வல்லமையை மட்டுப்படுத்த வேண்டும்]. அந்தப்படி அந்த வீட்டுக்கு சில ஊழியருடன்சென்றோம். இரவு 11 மணி அளவில் வண்டி வீட்டின் முன் வந்த போது, உள்ளே படுத்திருந்த பெண் போய்விடுகிறேன் என்று பெருங் கூச்சல் போட்டது உள்ளே சென்று அதட்டி உட்கார வைத்து, பைபிளை கொடுத்து, மத். 4:10ஐ வாசி என்றேன். அந்தப் பெண் வாசிக்க ஆரம்பித்து, அப்பொழுது இயேசு அப்..பா..லே. போ என்று வாசித்து மேற்கொண்டு வாசிக்கமாட்டேன் என்றது, உடனே பக்கத்திலிருந்தவர் அப்பொழுது இயேசு, 'அப்பாலேபோ சாத்தானே' என்று வாசித்து, மேலும் இயேசு பிசாசு துரத்தின சம்பவங்களை சிலவற்றை வாசித்தார். இந்த சம்பவம் எப்படி இருக்கிறதென்றால், ஒரு நிலத்தைக் குறித்து இரண்டு பேருக்கிடையே வழக்கு வந்தபோது, சிலரைக் கூட்டி வைத்து, தஸ்தாவேசுக்களை (Documents) வாசித்து, இது உனக்கு சொந்தமல்ல என்று சொல்வது போல் இருந்தது. ஐயா சொன்னபடியே ஆவியினுடைய வல்லமை மட்டுப்பட்டது. தலையிலே கைவைக்க, பரிசுத்த ஆவியானவர், போ பிசாசே என்று அதட்டினர். எனக்கு கொடுக்க வேண்டியதை கொடு போகிறேன் என்று கோபமாய் அந்த ஆவி கேட்டது. மறுபடியும் அதட்ட ஆவி விலகி அந்த பெண்ணுக்கு தெளிவுண்டானது. இயேசுவுக்கும் புதிய எருசலேம் சபைக்கும் ஒப்புக் கொடுத்து பாவ அறிக்கை செய்வேன் என்று கணவனும் மனைவியுமாய் வாக்கு கொடுத்து. இயேசுவே என்னையும் என் பிள்ளையையும் காப்பாற்றும் ஐயா என்று கண்ணீர் விட்டு அந்த பெண் ஜெபித்தாள். ஆராதனைகளுக்கு ஒழுங்காக வர ஆரம்பித்தனர். விட்டு சென்ற ஆவி ஒரிரு முறை வந்து கலாட்டா செய்து பார்த்தது. அவர்களோ சபையைப் பற்றிக் கொண்டார்கள். அந்த ஆவி, "நீ பெரிய இடத்தில் போய் சேர்ந்து கொண்டாய்; இனிமேல் நான் வரமுடியாது" என்று சொல்லி முற்றிலுமாய் விலகிச் சென்றது. அந்த சகோதரி இப்போது பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று சந்தோஷமாக இருக்கிறாள். அல்லேலூயா!

இப்படிக்கு.<br>
பாஸ்டர் M. சாம் இஸ்ரேல்,<br>
சென்னை.

1-12-02



# கர்த்தருக்காக காத்திரு

'கர்த்தருக்காக பொறுமையுடன் காத்திருந்தேன், அவர் என்னிடமாய் சாய்ந்து என் கூப்பிடுதலைக் கேட்டார்' (சங். 40:1) என்று அரசனாகிய தாவீது கூறுகிறார். இந்நாட்களில் தேவனுடைய பிள்ளைகளில் அநேகர், தாங்கள் கேட்டவுடன், கர்த்தர் தங்களுக்கு நன்மை செய்யவில்லை என எண்ணி சோர்ந்து போய் விடுகிறார்கள். தேவனாகிய கர்த்தர் எல்லாவற்றிற்கும் காலங்களை நியமித்திருக்கிறார். அவர் சகலத்தையும் அதினதின் காலத்திலே நேர்த்தியாகச் செய்திருக்கிறார். ஒவ்வொன்றிற்கும் ஒரு காலம் உண்டு. வானத்தின் கீழிருக்கிற ஒவ்வொரு காரியத்துக்கும் ஒரு சமயம் உண்டு என்று பிரசங்கி கூறுகிறார் (பிர. 3:1,11).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் கானாவூர் கலியாண வீட்டுக்கு, தம்முடைய முதலாம் அற்புதத்தைச் செய்யக் கடந்து போயிருந்த பொழுது, தன்னுடைய மதிப்பிற்குரிய தாயார் வேண்டுதல் செய்த பொழுதும், என்னுடைய வேளை இன்னும் வரவில்லை என்று கூறிவிட்டு, பின்னர் அந்த வேளை வந்தபோது அற்புதம் நடப்பிக்கிறார் (யோவா. 2:5-9). ஆகையால் தேவனுடைய பிள்ளைகளாகிய நாம் கர்த்தருடைய வேளைக்காக பொறுமையுடன் காத்திருக்க வேண்டும்.

பழைய ஏற்பாட்டு பக்தனாகிய யாக்கோபு தனக்கு வரவிருந்த ஆபத்திலிருந்து அழிவின்றி தானும் தன்னுடைய மனைவி பிள்ளைகளும், ஆடு, மாடுகளும் வேலைக்காரர்கள், வேலைக்காரிகளும் தனக்கு உண்டான எல்லாம் காக்கப்படுவதற்காக, இரவு முழுவதும் போராடி ஜெபித்தார் யாக்கோபு ஜெபிக்க ஆரம்பித்தவுடனேயே தேவன் யாக்கோபின் பக்கத்திலேயே நிற்கிறார். "நம்முடைய தேவனாகிய கர்த்தரை நாம் தொழுது கொள்ளுகிறபோதெல்லாம் அவர் நமக்கு சமீபமாயிருக்கிறார்" என மோசே கூறுவதுபோல (உபா. 4:7). யாக்கோபின் அருகாமையில் தேவன் நிற்கிறார்: பொழுது விடியும் பொழுதுதான், 'நான் போகட்டும் என்னை போகவிடு' என்று கர்த்தர் யாக்கோபோடு பேசினார், அதற்கு யாக்கோபு 'நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய நான் உம்மை போகவிடமாட்டேன் என்றார்'. தேவன் அவனை ஆசீர்வதித்தார் என்று நாம் வாசிக்கிறோம். அல்லேலூயா!

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உன்னதத்திற்கு எழுந்தருளிப் போகும்போது 'நீங்கள் எருசலேமை விட்டுப் போகாமல், என்னிடத்தில் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் நிறைவேறக் காத்திருங்கள்' [அப். 1:5] என்று கட்டளையிட்டார். அப்படியே அவர்களெல்லாரும் ஒருமனப்பட்டு ஜெபத்திலும், வேண்டுதலிலும் தரித்திருந்தார்கள். இரவும், பகலும் ஒன்பது நாட்கள் காத்திருந்தார்கள். பத்தாவது நாளில் பெந்தெகொஸ்தே என்னும் நாள் வந்தபோது, காலை வேளையில் 9 மணி அளவில், பிதா வாக்குத்தத்தம் பண்ணிய பரிசுத்த ஆவியானவர் இறங்கி வந்தார். கூடி இருந்த யாவரையும் நிரப்பினார். ஏன் இவர்கள் பத்து நாட்கள் வரை காத்திருக்க வேண்டும். பெந்தெகொஸ்தே பண்டிகையில் உலகமெங்குமுள்ள தேவ பக்தி உள்ள யூதர்கள், எருசலேமில் கூடி வருவார்கள்.

அந்நாளில் பரிசுத்த ஆவியைப் பொழிந்தருளி, அவர்களில் மூவாயிரம் பேரை சந்தித்து தேவனுடைய திருச்சபையோடு சேர்ப்பது தேவனுடைய திட்டமாய இருந்தது. 'பிதாவானவர் தம்முடைய அதீனத்தில் வைத்திருக்கிற காலங்களையும், வேளைகளையும் அறிகிறது உங்களுக்கு

அடுத்ததல்ல' [அப். 1:7] என்று அருமை இரட்சகர் கூறுகிறார்.

ஆகையால் தேவன் நமக்கு அநேக காரியங்களைச் செய்வோம், தருவோம் என வாக்குத்தத்தம் செய்திருக்கிறார். அவைகளை நாம் பெற்றுக் கொள்வதற்கு பொறுமையோடு காத்திருக்க வேண்டும் என்று கர்த்தர் கூறுகிறார். அநேகர் தேவனை அறிந்திருந்தும் சில வாக்குத்தத்தங்களை பெற்றிருந்தும், அவைகளைப் பெற்றுக் கொள்ளும் வரையிலும் காத்திருக்க மனமில்லாமல், விசுவாச ஜீவியத்தை விட்டு விலகிச் சென்று விட்டார்கள். கண்ணன் என்ற ஒரு பட்டதாரி மாணவன் படித்து முடித்து அரசு வேலைக்காகப் பதிவு செய்து வைத்திருந்தான். வேலை கிடைக்க காலதாமதம் ஆனது.

இவனுடன் படித்து முடித்த சிலருக்கு வேலைகள் கிடைத்து விட்டது. பலரும் இவனிடம் உனக்கு ஏன் இன்னும் வேலை கிடைக்கவில்லை என்று கேட்டார்கள். இவன் மனம் உடைந்தவனாய் இனி நமக்கு வேலை கிடைக்காது. ஆகையால் நாம் ஜீவிப்பது நல்லதல்ல, நம்முடைய வாழ்க்கையை முடித்துக் கொள்ள வேண்டியதுதான் என எண்ணி கடையில் போய் அதிகமான தூக்க மாத்திரைகளை வாங்கி வந்து காலை உணவுக்கு மேலே மாத்திரைகளை போட்டுக் கொண்டு, தனது வீட்டின் மேலறையில் போய் படுத்துக் கொண்டான்.

அன்று பிற்பகல் 1 மணியளவில் தபால்காரர் கண்ணன் பெயருக்கு வந்த ஒரு பதிவு தபாலைக் கொண்டு வந்து, யார் இந்த கண்ணன், அரசு வேலைக்கான ஒரு பதிவு தபால் வந்திருக்கிறது என்று ஊரிலுள்ள வாலிபர்களிடம் விசாரித்தார். வாலிபர்கள் மிகுந்த சந்தோஷத்தோடு நம்முடைய கண்ணனுக்கு அரசு வேலை கிடைத்துவிட்டது; கண்ணனுக்கு இனி சந்தோஷம்தான் என்று கூறி தபால்காரரை கண்ணனுடைய வீட்டிற்கு அழைத்து வந்தார்கள். கண்ணனின் தாயாரிடமும் செய்தியைக் கூறி, அந்த அம்மாவையும் மகிழச்செய்து கண்ணனைத் தேடினார்கள்; காணவில்லை. மேலறையில் தூங்கினாலும் தூங்குவான் என்று தாயார் கண்ணனின் நண்பர்களிடம் கூறினார்கள். நண்பர்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு மேலறைக்குச் சென்றனர். ஆனால் அவர்கள் கண்டது என்னவென்றால் கண்ணன் நிரந்தரமான தூக்கத்தில் ஆழ்ந்து விட்டான்.

அருமையான தேவனுடைய பிள்ளைகளே வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெறும்படிக்குப் பொறுமை உங்களுக்கு வேண்டியதாய் இருக்கிறது (எபி. 10:36) என்று வேதம் கூறுகிறது. நம்முடைய தகப்பனாகிய ஆபிரகாமை பாருங்கள்; நிச்சயமாகவே நான் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, உன்னை பெருகவே பெருகப்பண்ணுவேன் என்றார். அந்தப்படியே அவன் பொறுமையாய் காத்திருந்து வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெற்றார் (எபி. 6 14,15) என்று வேதத்தில் நாம் வாசிக்கிறோம். ஆகையால் தேவனுடைய பிள்ளைகள் பெற்றுக் கொள்ளும் வரையிலும் காத்திருக்க வேண்டும். ஆபிரகாம் 25 ஆண்டுகள் பொறுமையாய் காத்திருந்து வாக்குத்தம் பண்ணப்பட்டதைப் பெற்றார்.

பின்னும் ஏசாயா சொல்லும்பொழுது 'தேவனே உமக்குக் காத்திருப்பவர்களுக்கு நீர் செய்பவைகளை நீரேயல்லாமல் உலகத்தோற்றம் முதற்கொண்டு ஒருவரும் கேட்டதுமில்லை, செவியால் உணர்ந்ததுமில்லை. அவைகளை கண்டதுமில்லை (ஏசா. 64:4) என்கிறார். ஆகையால் உலகத் தோற்றம் முதற்கொண்டே தேவன் தமக்காகக் காத்திருக்கிறவர்களுக்கு நன்மை செய்து வருகிறார் என்று பார்க்கிறோம். ஆகையால் தேவ ஜனங்கள் தேவனிடம் நாம் கேட்கும் எந்த நன்மையான ஈவையும் அவர் நமக்குத் தரும் வரையிலும், நாம் அவரிடம் வேண்டிக் கொண்டதைப் பெற்றுக் கொள்வோம் என்ற விசுவாசத்தோடு (1 யோ. 5:14,15)

காத்திருந்து பெற்றுக் கொள்வது நல்லது. மேலும் ஏசாயா தீர்க்கன் சொல்லும்போது:

"கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ புதுபெலனடைந்து, கழுகுகளைப் போல செட்டைகளை அடித்து எழும்புவார்கள்; அவர்கள் ஓடினாலும் இளைப்படையார்கள், நடந்தாலும் சோர்ந்து போகார்கள்" (ஏசா. 40:31) என்று கூறுகிறார். ஆவிக்குரிய ஜீவியத்திலும் வரங்கள், வல்லமைகள் பெற்று கர்த்தருடைய பாதத்தில் இளைப்படையாமல் சோர்ந்து போகாமல் முன்னேறிச் செல்வதற்கு நாம் காத்திருக்க வேண்டும் என்று ஏசாயா கூறுகிறார்.

இந்நாட்களில் பல தேவனுடைய பிள்ளைகள் ஆத்தும இரட்சிப்பே போதுமென்று திருப்தியடைந்து காணப்படுகிறார்கள். நாம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் முதலாம் உயிர்த்தெழுதலில் பங்கு பெற வேண்டுமானால், நம்முடைய சரீரமும் மீட்படைய வேண்டும். நம்முடைய மாமிசத்தில் (சரீரத்தில்) பாவ உணர்வுகள் உண்டாகாத ஒரு பரிசுத்த தன்மையை அடைய வேண்டும் [ரோம. 6:12]. அப்படிப்பட்ட சரீரமே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் முதலாம் வருகையால் மறுரூபம் அடைந்து பறந்து செல்லும். அப்படிப்பட்ட சரீர மீட்பை நாம் பெற்றுக் கொள்வதற்கு நாம் காத்திருக்க வேண்டும் என்று அப்போஸ்தலராகிய பவுல் கூறுகிறார்; அதுவுமல்லாமல் ஆவியின் முதற்பலன்களைப் பெற்ற நாமும் கூட, சரீர மீட்பாகிய புத்திரசுவிகாரம் வருவதற்கு காத்திருந்து நமக்குள்ளே தவிக்கிறோம்" (ரோ. 8:23).

மேலும் எபிரேய நிருப கர்த்தா கூறும்பொழுது இந்த சரீர மீட்பு தான் பூரண இரட்சிப்பு என்று கூறுகிறார். பூரண இரட்சிப்பு வேண்டுமென்று அதற்காக வாஞ்சித்து எந்த ஆத்துமா காத்திருக்கிறதோ அவர்களுக்கே அந்த பூரண இரட்சிப்பைக் கொடுக்கிறார் இந்த பூரண இரட்சிப்பைக் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகையின் போதே கிடைக்கிறது. அதுவரையிலும் காத்திருக்கிறவர்களுக்கே இந்த பூரண இரட்சிப்பு கிடைக்கிறது. அநேகர் இந்நிலையை அடைய வேண்டுமென்று வாஞ்சித்து காத்திருக்காதபடியால் அதை இழந்துபோவார்கள். நமது தேவனாகிய கர்த்தரும் சொல்லும் பொழுது "முடிவு பரியந்தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்" (மத். 24:13) என்று கூறுகிறார்.

கிறிஸ்துவும் அநேகருடைய பாவங்களைச் சுமந்து தீர்க்கும்படிக்கு ஒரே தரம் பலியிடப்பட்டு, தமக்காகக் காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பை அருளும்படி இரண்டாம் தரம் பாவமில்லாமல் தரிசனமாவார்' (எபி. 9:28) என்கிறார். கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மனுமக்களுடைய பாவத்தை சுமந்து தீர்க்கும்படியாகப் பாவ மாமிச சாயலில் வந்து மனுக்குலத்துக்காக தன்னைப் பலி செலுத்தினார்.

அந்த தியாகப்பலியின் வல்லமையால் ஆத்தும இரட்சிப்பை அடைந்து பூரண இரட்சிப்பாகிய சரீர மீட்பை அடைவதற்காக காத்திருக்கும் மக்களை இரட்சிப்பதற்காகப் பாவமில்லாமல் தரிசனமாவார். அதாவது இனி பாவ மாமிச சாயலில் வராமல், மகிமையான சாயலில் தோன்றுவார். அவர் வரும் போது, ஆன்மீக இரட்சிப்பை பெற்று அவருக்காகக் காத்திருக்கும் மக்கள், அவரைப்போன்று மகிமையான சரீரத்தை [சாயலை] அடைந்து கொள்வார்கள். அவர் எல்லாவற்றையும் தமக்குக் கீழ்ப்படுத்திக் கொள்ளத்தக்க தம்முடைய வல்லமையான செயலின்படியே, நம்முடைய அற்பமான சரீரத்தை தம்முடைய மகிமையான சரீரத்துக்கு ஒப்பாக மறுரூபப்படுத்துவார் [பிலி. 3:21] என்று அப்போஸ்தலனாகிய பவுலும் கூறுகிறார்.

மேலும் சங்கீதக்காரர் கூறும்போது, 'பொல்லாதவர்கள் அறுப்புண்டு போவார்கள்; கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ பூமியைச் சுதந்தரித்துக் கொள்வார்கள்' [சங். 37:9] என்கிறார். இங்கே சொல்லப்படும் பூமி இப்போது நாம் வசிக்கும் இந்தபூமி அல்ல, இந்த பூமியும் அதிலுள்ள யாவும் எரிந்து அழிந்து போகும் என்று அப்போஸ்தலராகிய பேதுரு கூறுகிறார் [2 பேது. 3: 10-12]. தேவனாகிய கர்த்தர் தமக்காகக் காத்துக் கொண்டிருக்கும் தம்முடைய பிள்ளைகளுக்காக அல்லது தமது மணவாட்டிக்காக புதிய வானத்தையும், புதிய பூமியையும் உண்டாக்குவோம் என்று வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறார் (ஏசா. 65:17).

ஆகையால் தேவ ஜனங்கள், தேவன் நமக்காக வாக்குத்தத்தம் பண்ணியிருக்கும் ஆசீர்வாதங்களைப் பரிபூரணமாய்ப் பெற்று என்றென்றும் மகிழ்ச்சியாய் வாழ்வதற்கு, தேவன் வாக்குத்தத்தம் பண்ணின ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொள்ளும் வரையிலும் பொறுமையோடு காத்திருந்து பெற்றுக் கொள்வோமாக.



# வேதம் காட்டும் அப்போஸ்தல அஸ்திபாரம்

மனிதப்பிரகாரமானாலும் சரி, தெய்வீக வெளிப்பாடானாலும் சரி; சரீரத்தின் இயக்கமானாலும் சரி, ஆவியின் நடத்துதலானாலும் சரி. இவை எல்லாவற்றுக்கும் நடுவே 'அஸ்திபாரம்' என்று சொல்லப்படும் ஆதார, மூல இயக்கம் இருக்கவே இருக்கிறது. அந்தப் பிரகாரம் உயிரினங்கள் பூமியின்மேல் நிலை கொள்ள புவி ஈர்ப்பு சக்தியும், பூமி நிலையற்றுப் போகாமலிருக்க சூரியனின் மைய சக்தியும், அந்த சூரியன் இயங்க இறைவனின் அருளும் அஸ்திபாரமாக உள்ளது. அதே போல நம் ஜீவியத்துக்கு மூச்சும், மூச்சுக்கு ஆவியும், நம் ஆவிக்கு தேவ ஆவியும் ஆதாரமாக உள்ளது.

## 1) முதலாவது அப்போஸ்தலர்:-

எல்லாவற்றுக்கும் சர்வ வல்ல தேவனே மூலமாக இருப்பினும் தேவ காரியங்கள், தேவ சித்தப்படி நடந்தேற தேவன் தமது சத்தியத்தின் மூலம் 'அஸ்திபார' தேவைகளை உண்டுபண்ணி நடத்துகிறார். ஜீவனுக்கு தேவனே அஸ்திபாரம், ஆதாரம். ஆனால் அநேகர் இந்த அஸ்திபாரத்தில் தங்கள் ஜீவியம் என்னும் கட்டிடத்தை கட்டாததினால், அந்த ஜீவன்கள் தொடராது மாண்டுபோகிறது. நம்மை தேவன் 'இரட்சிப்பு' என்னும் கவசத்தின் மூலம் ஜீவனோடு காக்கிறார். இந்த இரட்சிப்புக்கு இயேசு கிறிஸ்து அஸ்திபாரம் [1 கொரி. 3:11] இந்த தெய்வீக ஈவைப் பெறுவது எப்படி? மனிதன் மாமிசமாயிருக்க, தேவனோ ஆவியாயிருக்கிறாரே. இரட்சிப்பு ஆவி வழி தொடர்பாக உள்ளது. ஆவிக்கும் மாமிசத்திற்கும் தொடர்பு உண்டாக வேண்டும். இதற்கு பாலமாக இருப்பவரே தேவன் தெரிந்து கொண்ட அப்போஸ்தலர்.

மேலும், இரட்சிப்பு தேவ சத்தியத்தின் வழியில் நின்று, நடந்து பெற்றுக் கொள்ளக் கூடியதாக அருளப்பட்டிருக்கிறது. சத்தியத்தை அறிவீர்கள் சத்தியம் உங்களை விடுதலையாக்கும்' (யோவா. 8:32) என்றும்,

'ஒருவன் என் வார்த்தையை கைக் கொண்டால் அவன் என்றென்றைக்கும் மரணத்தைக் காண்பதில்லை' (யோ. 8:51) என்றும் இயேசு கிறிஸ்து சொன்னார்.

இவ்விதமாக நமக்கு இரட்சிப்பை அருளும் வேத வசனமே சத்தியமென்றும் இவை ஆவியினால் அருளப்பட்டிருக்கிறதென்றும் வேதம் கூறுகிறது [யோ. 17:17; 2 தீமோ. 3:16]. மாம்ச சிந்தைக்கு அப்பாற்பட்டு, தேவஞானம் கொண்டு பெறக்கூடிய ஒன்றை நாம் பெறுவதெப்படி? இதற்கான மார்க்கம் அப்போஸ்தல ஆளுகைக்குள் நின்றால் நமக்கும் வெளிப்படும். 'அவர்களை (கிரேக்கர்கள்) அப்போஸ்தலருக்கு முன்பாக நிறுத்தினார்கள். இவர்கள் ஜெபம் பண்ணி அவர்கள் மேல் கைகளை வைத்தார்கள். தேவ வசனம் விருத்தியடைந்தது' (அப். 6:6,7) என்று வாசிக்கிறோம்.

இரட்சிப்பு ஒரு கால கட்டத்தில் ஆரம்பமானதாயிருப்பினும், அது ஜீவியத்தின் முடிவு பரியந்தம் நிலைப்படுத்தப்பட்டு, காத்து பூரணப்படுத்தப்படும் பெரியதொரு காரியம்; இதனை எடுப்பதும், கொடுப்பதும் திருச்சபையின் மூலம் கர்த்தருடைய அதிகாரத்துக்குட்படுத்தப்பட்டிருக்கிறது [அப். 2:47; வெளி. 22:16,17]. இப்படிப்பட்ட சபைக்கு தேவன் முதலில் தமது அப்போஸ்தலரை ஏற்படுத்தினார் என்று வேதம் சொல்லுகிறது. (1 கொரி. 12:28).

## 2) இரட்சிப்பின் வழி காண..

மனிதன் தன் ஜீவிய காலங்களில், தேவ சித்தப்படி செய்யும் காரியங்களினால் கிடைக்கும் பலன் அவன் தன் தேவனோடு ஐக்கியப்படும் ஆத்தும மீட்பு. இதை நமக்கு எடுத்து தருபவர் இரட்சகர் இயேசு கிறிஸ்து ஒருவரே [அப். 4:12]. இந்தக்காரியங்களை பரலோகத்திலிருக்கும் தேவன் நடத்துகிறார். அவருடைய வழிகளை சுலபமாக அறிந்தவர் யார்? 'பூமியைப் பார்க்கிலும் வானங்கள் எப்படி உயர்ந்திருக்கிறதோ அப்படியே உங்கள் வழிகளைப் பார்க்கிலும் என் வழிகளும், உங்கள் நினைவுகளைப் பார்க்கிலும் என் நினைவுகளும் உயர்ந்திருக்கிறது' என்று கர்த்தர் உரைத்திருக்கிறார் (ஏசா. 55:9).

இரட்சிப்பின் வழிகளை எல்லாரும் தானாகத் தெரிந்து, அதிலே நடந்து கொள்ளக் கூடுமானால் இன்றும் கோடிக்கணக்கான மக்கள் வழி விலகி தங்கள் ஆத்துமாக்களை அழித்துக் கொள்ள மாட்டார்களே. திருச்சபையும் தேவ சத்தியமும் தேவையற்றதாகி விடுமே! மேய்ப்பன் இல்லாத ஆடுகள் இன்றும் அநேகமாக அலைகிறதே. 'மேய்ப்பன் இல்லாததினால் அவைகள் சிதறுண்டு போயின; சிதறுண்டு போனவைகள் காட்டு மிருகங்களுக்கெல்லாம் இரையாயின' என்று கர்த்தர் எசேக்கியேல் தீர்க்கதரிசியைக் கொண்டு உரைத்திருக்கிறாரே (எசே. 34:5).

இவர்களைக் கூட்டிச் சேர்க்க தேவன் தமது மேய்ப்பருக்கு, தமது அப்போஸ்தலருக்கு கட்டளையிடுகிறார். மறைக்கப்பட்டதும், அறியப்படாததுமான தமது வழிகளை இவருக்கு வெளிப்படுத்துகிறார். 'நான் செய்யப் போகிறதை ஆபிரகாமுக்கு மறைப்பேனோ?' என்றவர், தாம் வெளிப்படுத்திய இரட்சிப்பின் வழியை காத்து நடக்கும்படி தன் வீட்டாருக்கு அவன் கட்டளையிடுவான் என்று கர்த்தரே சாட்சி கொடுக்கிறார் (ஆதி. 18:18,19) இந்த ஆபிரகாம் வீட்டாரே இன்று தேவ ஜனங்கள். அந்த நாட்கள் தொட்டு தேவன் தமது மேய்ப்பர்களை, அப்போஸ்தலர்களை அந்தந்த காலங்களில் அனுப்பி வைத்து, தமது ஜனங்களை இரட்சிக்கிறார். கர்த்தர் தமது வழிகளை மோசேக்கு தெரியப்படுத்தினார் (சங்.103:7).

இரட்சிப்பின் வழியை அறிவது மட்டுமல்ல, அதைக் காத்துக் கொள்வது மிகவும் பெரிய காரியமாக இருக்கிறது. அநேக

தடைகளைக் கடந்து, ஓட்டத்தை ஜெயமாக முடித்து, பந்தயப் பொருளைப் பெரும்படியாக அது சிலருக்கே கிடைக்கக் கூடியதாக உள்ளது [லூக். 13:23]. ஆதலால் தேவனுடைய அப்போஸ்தலர் இந்த வெற்றி வழியின் இரகசியம், சட்டதிட்டங்கள், கிடைக்கப் போகும் வெகுமதிகளை அறிவிக்கிறவராக மட்டுமல்ல, அதைப் பெறுவதற்கு நம்மை ஆயத்தப்படுத்தி, திடப்படுத்துகிறவராகவும் சத்தியம் வெளிப்படுத்துகிறது. நமது ஆத்துமாக்களுக்கு உத்தரவாதம் பண்ணுகிறவர்களாய் அவர் விழித்திருந்து இந்தக் காரியத்தை செய்கிறார்கள் என்று வேதம் கூறுகிறது [எபி. 13:17].

இலக்கை நோக்கி ஓடும்போது அநேக இடங்களில் பாதைகள் பிரிந்து குழப்பத்தை உண்டுபண்ணும் போது அங்கே நின்று வழிகாட்டுவார் அப்போஸ்தலர் [பிலி. 3:17–20]. "நீங்கள் வலது புறமாய்ச் சாயும் போதும், இடது புறமாய்ச் சாயும் போதும் வழி இதுவே, இதிலே நடவுங்கள் என்று உங்களுக்கு பின்னாலே சொல்லும் வார்த்தையை உங்கள் காதுகள் கேட்கும் (ஏசா. 30:21). வழியிலே சத்துருக்களும், கள்ளர்களும் எதிர்ப்பட்டால், அவர்களோடு போராடி நம்மை விடுவிப்பார் (2 கொரி 10:4,5,8).

இரவிலும் நம் பயணம் தொடர, தேவன் தந்த வசனம் என்னும் விளக்கின் வெளிச்சத்தை தருவார். களைப்படையாதிருக்க, நமது ஆவி, ஆத்துமா, சரீரம் அனல் கொள்ளும்படியாக தேவனைத் துதிக்கும் பாடலை பாடுவார். முடிவாக நம்முடைய ஆத்துமா கடேற, தேவனோடு ஐக்கியப்பட இந்த அப்போஸ்தலர், இயேசு கிறிஸ்துவினிமித்தம் எல்லா பாடுகளையும் படுவார் (யோ. 21:17,18; அப்.21:11). ஆனாலும், மரித்தும் உயிரோடிருக்கிற இயேசு கிறிஸ்துவின் மகிமையின் ஒளி அவருடைய இருதயத்தில் என்றும் பிரகாசித்துக் கொண்டிருப்பதால் அவர் மனமுறிந்து போவதில்லை என்று வேதம் சொல்லுகிறது (2 கொரி, 4:5-9).

தேவன் தமது திருக்குமாரனைக் கொண்டு, தமது சபையில் அருளிய இரட்சிப்பை தன்னை விட்டு தூரமாகிப் போன தமது ஜனங்களுக்கு கொடுக்க சத்தியத்தைக் கொண்டு, சத்தியத்தின் வழியிலே தமது அப்போஸ்தலருக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறார். 'ஆகையால் நீங்கள் அந்நியரும் பரதேசிகளுமாயிராமல், பரிசுத்தவான்களோடே, ஒரே நகரத்தாரும் தேவனுடைய வீட்டாருமாயிருந்து, அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகள் என்பவர்களுடைய அஸ்திபாரத்தின் மேல் கட்டப்பட்டவர்களுமாயிருக்கிறீர்கள். அதற்கு இயேசு கிறிஸ்துதாமே மூலைக்கல்லாயிருக்கிறார் [எபே. 2:19,20]. அந்தப்படி இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்திலும், அந்நியோந்நியத்திலும், உறுதியாய்த் தரித்திருந்தார்கள் என்று வேதம் சொல்லுகிறது [அப். 2:42]

## 3) அனுப்பப்பட்டவரைக் கேளுங்கள்:-

'..கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொள்ளுகிற எவனும் இரட்சிக்கப்படுவான். அவரை விசுவாசியாதவர்கள் எப்படி அவரைத் தொழுது கொள்வார்கள்? அவரைக் குறித்து கேள்விப்படாதவர்கள் எப்படி விசுவாசிப்பார்கள்? பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால் எப்படி கேள்விப்படுவார்கள்? அனுப்பப்படாவிட்டால் எப்படி பிரசங்கிப்பார்கள்?..' (ரோம. 10:12-15).

இப்படியாக அனுப்பப்பட்டவரின் போதகத்தைக் கேள்விப்பட்டு, விசுவாசித்து, தேவனைத் தொழுது கொள்பவர்களுக்கு இரட்சிப்பு உண்டு என்று வேதம் திட்டமாக கூறுகிறது. இந்த அதிகாரமும் பிரசங்கமும், கேள்வியும், விசுவாசமும் தொழுகையும் இரட்சிப்பின் படிகள் என்று வேத வசனம் அநேக வழிகளில் உறுதிப்படுத்துகிறது.

a) இரட்சிப்பு - தொழுகை:-

ஆதி முதல் தம்மோடிருந்தவர்கள், தமக்குக் கீழ்ப்படிந்து, கடைசிவரைத் தமக்கு சாட்சியாக இருக்கும் தமது ஜனத்தை, மறுமையிலும் தேவ மகிமைக்குள் அழைத்து, தேவனோடு ஐக்கியப்படுத்தும்; இயேசு கிறிஸ்து தரும் ஜீவியமே இரட்சிப்பு (யோ. 15:27; எபி. 5:9). அதைத் தொடர்ந்து நியாயந்தீர்ப்படைவதும், தேவன் அவனவன் கிரியைகளுக்குத் தக்கதாக பலனளிப்பதும் இரட்சிப்பின் முக்கியத்தை நமக்கு உணர்த்துகிறது.

இரட்சிக்கப்பட்டவர்கள் இராக்காலம் இல்லாத, சூரியன், சந்திரன் இல்லாதபடி தேவ மகிமை என்னும் நித்திய வெளிச்சத்தின் பிரகாசத்தில் நடப்பார்கள். இந்தக் காரியங்களை அப். யோவானுக்கு வெளிப்படுத்திய தேவ தூதனை வணங்க முற்பட்ட போது; தேவ தூதன், 'தேவனை தொழுது கொள்' என்றான் [வெளி. 22:8,9]. எல்லாவற்றிலும் ஸ்தோத்திரம் செலுத்தி, இடைவிடாமல் ஜெபம் பண்ணுவதே இரட்சிப்புக்காக நமக்குண்டான தேவ சித்தமாயிருக்கிறது (1 தெச. 5:17,18). கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொள்ளுகிறவன இரட்சிக்கப்படுவான் என்பதே வேத வாக்கு (அப். 2:21)' தொழுகையினால் வரும் பலன் இரட்சிப்பு.

b] தொழுகை – விசுவாசம்:-

"கர்த்தர் எனக்கு செய்த எல்லா உபகாரங்களுக்காகவும், அவருக்கு என்னத்தைச் செலுத்துவேன். இரட்சிப்பின் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்வேன [சங். 116:12,13]. தொழுகையினால் இரட்சிப்பு வருவதும், இரட்சிப்பு நிலைக்க தொழுகை செய்வதும் கிறிஸ்தவ ஜீவியம். ஆராதனை ஜெபம், விண்ணப்பம், திருவிருந்து, உபவாசம், பொருத்தனை, காணிக்கை, துதித்தல் இவையெல்லாம் தொழுகையின் அம்சங்களே.

ஆனாலும் இந்தக் காரியங்களை மக்கள் சத்தியத்தின் கட்டளைப்படி அனுசரிக்காமல், தங்கள் மனம் போனபடியேயும், மாம்ச சிந்தை கொண்டும் செய்வதால் இரட்சிப்பு இவர்களுக்கு கிட்டாமலும், அதனை அவர்கள் அறியக் கூடாமலும் போய் விடுகிறார்கள். தேவன் ஆவியாயிருப்பதால், ஆவியின் பெலங்கொண்டு, தொடர்பு கொள்வதும், அவரோடு பேசுவதுமே தொழுகையாகும். ஆவியோடு தொழுது கொள்வதையே பிதாவானவர் விரும்புகிறார் என்றும், அப்பொழுது நாம் தேவனை அறிவோம்; இரட்சிப்பை பெறுவோம் என்று இயேசு கிறிஸ்து அறிவித்தார் [யோ. 4:22-24].

ஆபிரகாம் காலத்திலும், அதற்கு முன்னும் இந்த தொழுகை பற்றிய சாட்சியை சத்திய வேதத்தில் நாம் காண்கிறோம் (ஆதி. 8:20,21). வேதம் வெளிப்படாதிருந்த காலங்களிலும், ஆண்டவரை அறியாதிருந்த நாட்களிலும், ஆபிரகாம் தேவன் கூட்டிச் சென்ற இடங்களில் பலிபீடம் கட்டி தேவனை தொழுது கொண்டார் (ஆதி. 12:8; 13:4; 21:33).

இந்த தொழுகைக்கு மூலக்காரணமாயிருந்தது ஆபிரகாம் தேவன் மேல் கொண்டிருந்த முழு நம்பிக்கை அன்பு. அவர் தேவன் என்று தன் இருதயத்திலே விசுவாசித்தார். ஆபிரகாம் விசுவாசத்தில் வல்லவனானான் (ரோம, 4:18-21; ஆதி. 15:6). அப்படிப்பட்ட விசுவாசத்தோடே ஆபிரகாம் தேவனைத் தொழுது கொள்ளும் போதெல்லாம் தேவன் அவரோடே பேசினார். விசுவாசமுள்ளவனுடைய ஜெபம் பிணியாளியை இரட்சிக்கும் (யாக். 5:15). விசுவாசம் தொழுகைக்கு முதல் தேவை,

c) விசுவாசம் – கேள்வி:-

தேவனை நாம் விசுவாசிக்கிறோம் என்றால், அது நிரந்தரமான இரட்சிப்பை நமக்கருளக் கூடியதாக இருக்க வேண்டும். இரட்சிப்புக்கேற்ற விசுவாசம் உண்டென்று கண்டு பிறவி சப்பாணி: "நீ எழுந்து காலூன்றி நில்" என்ற அப். பவுலின் விசுவாசத்துடன் கூடிய வார்த்தையால் குதித்தெழுந்து நடந்தான் என்று வேதத்தில் வாசிக்கிறோம் (அப். 14:8-10).

இயேசு கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசம் ஆத்துமா ஈடேறவும், தேவனிடத்தில் சேரும் சிலாக்கியத்தைப் பெறவும், செய்கிறது (எபி. 10:39; ரோம. 5:2; எபே. 3:12). இப்படிப்பட்ட விசுவாசம் நம்பப்படுகிறவைகளின் உறுதியும் காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது என்று வேதம் கூறுகிறது [எபி. 11:1]. "காணாமலிருந்தும் அன்பு கூறி, தரிசியாமலிருந்தும் நாம் வெளிப்படுத்தும் விசுவாசத்தினால் நமக்குக் கிடைக்கும் பலன் ஆத்தும இரட்சிப்பு" (1 பேது. 1:8,9).

இப்படி காணப்படாதவைகளை நிச்சயப்படுத்தும் பொருட்டு, அவைகளை அறிந்து, உணர்ந்து பற்றிக் கொள்வதெப்படி? காண்பவைகளை நம்புவதற்கே நமக்கு போதனை, விளக்கம் தேவைப்படும் போது அதரிசனமான ஆத்மீகக் காரியங்களுக்கு இன்னும் அதிகமான கேள்வி ஞானமும், விளக்கமும் தேவைப்படுமல்லவா? தேவனையும் அவருடைய மகத்துவத்தையும் கேட்டு, அறிந்து, விசுவாசிப்பதே இரட்சிப்புக்கான வழி. 'நீங்களும் உங்கள் இரட்சிப்பின் சுவிசேஷமாகிய சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசிகளானபோது, வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பரிசுத்த ஆவியால் அவருக்குள் முத்திரை போடப்பட்டீர்கள்' (எபே. 1:13). கேள்வி ஞானம் விசுவாசத்துக்கு வழி காட்டும்.

d) கேள்வி – பிரசங்கம்:-

"சத்தியத்தை அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் என்றார்" இயேசு கிறிஸ்து [யோ. 8:32]. தேவ சத்தியம் தானாகப் படித்து, அறிந்து கொள்ள முடியாத ஒன்று. தானாகப் படிக்கும்போது அதனால் அறிவு உண்டாகலாம். ஆனால் அந்த வார்த்தைகளினால் வரக்கூடிய தேவ சித்தம் காணும் உணர்வு கிட்டாது. மேலும் தேவ வசனம் நம் இருதயங்களில் இறங்கி, கிரியை செய்து, ஆத்துமாவை உயிர்ப்பிக்க வேண்டிய நமக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. 'என் ஆத்துமா மண்ணோடு ஒட்டிக் கொண்டிருக்கிறது உமது வசனத்தின்படி என்னை உயிர்ப்பியும்' என்று தாவீது ராஜா வேண்டினார் [சங். 119:25].

மேலும் கர்த்தருடைய வேதம் அளவற்று விரிந்து கிடக்கிறது 'சகல சம்பூரணத்திற்கும் எல்லையைக் கண்டேன், உம்முடைய கற்பனையோ மகா விஸ்தாரம்' என்றார் தாவீது ராஜா [சங். 119:96]. இதை உணர்ந்து நமக்கு விடுதலை தரும் சத்தியத்தைத் பெற்றுக் கொள்ள தேவ ஞானம் அவசியம். அப்படி தேவ ஞானம் பெற்றவர்கள், பரிசுத்தவான்கள் உபதேசிக்க நமக்கு வேதம் விளங்கும். அவர்கள் ஆசீர்வதிக்க வசனம் நமக்குள் கிரியை செய்யும் அறிந்திராத தேவனை அறியவும் உணரவும் செய்வதே வேதம். தேவனை தரிசிக்க, தேவன் தரவிருக்கும் நன்மைகளைப் பெற்றுக் கொள்ள வேதமே வழி. 'வேதத்தைக் கேளாதபடி தன் செவியை விலக்குகிறவனுடைய ஜெபமும் அருவருப்பானது' (நீதி. 28:9) என்ற பிரகாரம் வேதம் அறியப்பட வேண்டும்.

நித்திய ஜீவனை தேடுபவர்கள் யாவரும் கேள்வியினால் கிடைக்கப் பெறும் திருவசனத்தை ஆர்வமாய்ப் பெற்றுக் கொள்ள வேண்டும். 'அவர்கள் (அப். பவுல்)

யூதருடைய தேவாலயங்களிலிருந்து புறப் படுகையில், அடுத்த ஓய்வு நாளிலே இந்த வசனங்களைத் தங்களுக்கு சொல்ல வேண் டும். புறஜாதியார் வேண்டிக் கொண்டார் கள்' என்றும், கேட்டு சந்தோஷப்பட்டு நித்திய ஜீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள் விசுவாசித்தார்கள் என்றும் அப்போஸ்தலர் நடபடிகளில் வாசிக்கிறோம் [அப். 13:48]. கேட்க மறுத்த யூதர்களோ அதைப் பெற வில்லை [அப். 13:46].

"ஆண்டவமாரே, இரட்சிக்கப்படு வதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று அப். பவுலிடம் கேட்ட சிறைச் சாலைக்காரன், கேட்டதை விசுவாசித்து, குடும்பமாய் இரட்சிப்பைப் பெற்றான் (அப். 16:30). வேத வசனத்தைக் கேட்டதுமல்லா மல், விசுவாசித்து அதன்படி நடக்க வேண் டும். சத்திய வேதம் நம் இருதயத்தை விட்டு விலகி விடாதபடி காத்துக் கொள்ள வேண்டும். "தேவனுடைய வார்த்தையைக் கேட்டு அதைக் காத்துக் கொள்கிறவர் களே அதிக பாக்கியவான்கள்" என்று இயேசு சொன்னார் (லூக். 11:28).

எப்படி மனிதன் தன் சுய அறிவால் வேதத்தை தானாக எடுத்துக் கொள்ள முடி யாதோ, அப்படியே எந்த மனிதனும் தன் சுயசித்தத்தால் தானாக எடுத்துக் கொடுக்க வும் கூடாததாக இருக்கிறது. சுய சிந்தனை களால் சத்திய வசனம் மாற்றப்படாமல், எழுதியிருக்கிறபடியே போதிக்கப்பட வேண்டும். "ஒருவன் போதித்தால் தேவ னுடைய வாக்கியங்களின்படி போதிக்கக் கடவன்.." (1 பேது. 4:11). மனிதன் ஆவி யிலே உயிர்ப்பிக்கப்பட்டுப் பிழைத்திருக்க அருளப்பட்ட சுவிசேஷம் வரம் பெற்றவர் களே போதிக்கக் கூடும் (1 பேது. 4:6,10). தேவ ஆவியால் அழைக்கப்பட்டவர்களே இந்தக் காரியத்துக்கான பிரசங்கிகள்.

அந்த எத்தியோப்பிய மனிதன் மந்திரி யாக இருந்தும், தான் வாசித்த ஏசாயா தீர்க்கதரிசியின் ஆகமத்தின் பொருளை அறியக்கூடாமல், அங்கே வந்த சுவிசேஷ கர் பிலிப்பை நோக்கி, அதன் கருத்தைத் தனக்கு தெரிவிக்கும்படி வேண்டி பின்பு போதிக்கப்பட்டவைகளை அறிந்து, விசுவா சித்து, ஞானஸ்நானம் பெற்றுக் கொண் டான். அப். பிலிப்பு பரிசுத்த ஆவியான வராலே ஏவப்பட்ட பிரகாரம் போதித்தார் என்றும் வாசிக்கிறோம் (அப். 8:27-40). அந் தப்படி அப். பவுலும் தேவ அறிவிப்பினாலே போய் புறஜாதிகளுக்கு தான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை அவர்களுக்கு விவரித்துக் காண்பித்தேன் என்கிறார் (கலா. 2:2). வேத வசனம் அனுப்பப்பட்ட அப்போஸ்தலரிட மிருந்து பிரசங்கிக்கப்பட்டு விருத்தியடை கிறது. நல்ல போதனைகள் கேட்போரை விசுவாசிக்கப்பண்ணும்.

---

## ஆ) பிரசங்கி – அனுப்பப்பட்டவர்:-

---

"அன்றியும் மனந்திரும்புதலும், பாவ மன்னிப்பும் எருசலேம் தொடங்கி சகல தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே பிரசங்கிக்கப்படவும் வேண்டியது' என்று இயேசு கிறிஸ்து கட்டளையிட்டார் [லூக். 24:47]. இது இரட்சிப்புக்கான முதல் தேவை அவ்வண்ணமாய் சீஷர்கள் புறப்பட்டுப் போய் எங்கும் பிரசங்கித்தார்கள் [மாற். 16:20]. இவர்கள் அனுப்பப்பட்ட பிரசங் கிகள்.

அவர்கள் விசுவாசித்தவர்களாகவும், தேவ அதிகாரம் கொண்டவர்களாகவும், நின்று அந்தக் காரியத்தை தைரியமாகச் செய்தார்கள் பரலோகத்திலிருந்து அனுப் பப்பட்ட பரிசுத்த ஆவியினாலே உங்க ளுக்கு அறிவிக்கப்பட்டு வருகிறது (1 பேது. 1:12). சுவிசேஷத்தைப் பிரசங்கித்தவர்களைக் கொண்டு இவைகள் இப்பொழுது உங்க ளுக்கு பிரசங்கியின் பிரசங்கங்கள் பரிசுத்த ஆவியினாலே அருளப்பட்டு வெளிப்பட வேண்டும். இவ்வண்ணமாய், இயேசு கிறிஸ்துவானவர், உலகத்துக்குள் அனுப்பி பிரசங்கிக்கிறவர்களின் வார்த்தைகளைக்

கேட்டு தன்னை விசுவாசிக்கிறவர்களுக்காக அவர் பிதாவை வேண்டிக் கொள்கிறார் (யோ. 17:18-20).

இப்படிப்பட்ட சுவிசேஷத்தை இன்று யார் நமக்குப் பிரசங்கிப்பார்கள்? சுயநலக் காரர்களும், சுய மகிமை தேடுபவர்களும், தங்கள் வயிறே தங்களுக்கு தெய்வமாகக் கொண்டவர்களும், மிஞ்சின நீதிமான்களும் இன்னும் பாவத்திலிருந்து விடுதலை பெறாதவர்களும்: அனுப்பப்படாதவர்களாய், பரிசுத்த ஆவியால் சுவிசேஷம் தங்களுக்கு அருளப்படாதிருந்தும், தங்கள் இஷ்டப்படி பிரசங்கித்து அநேக ஆத்துமாக்களை அழிவுக்கும், மரணத்துக்கும் அழைத்து செல்கிறார்கள்.

இவர்கள் சத்தியத்தின்படி போதிக்காமல், மக்களின் தேவைக்குத்தக்கதாகவும், பிசாசின் கிரியைகளை அநுசரித்துப் போகும் வண்ணமாகவும் மாறான சத்தியத்தை போதிப்பதால் பலவீனமான ஆத்துமாக்களின் கூட்டம் இங்கு அநேகம் உண்டு. இவர்கள் சாத்தானோடு எதிர்த்துப் போராடவோ, ஜெயங்கொள்ளவோ திராணி இல்லாததால் சாத்தானை துணைக்கு வைத்துக் கொண்டு செல்கிறார்கள். தேவனால் அனுப்பப்பட்டவரே சாத்தானை ஜெயிக்க வல்லமை கொண்டவராய் அனுப்பப்பட்டிருக்கிறார். இவருடைய போதனை பரிசுத்த ஆவியினால் அருளப்பட்டு இரட்சிப்பை நமக்கு உத்தரவாதம் பண்ணுவதாய் இருக்கிறது. இவர் தேவனிடம் பெற்றுக் கொண்டதை நமக்கு பிரசங்கிப்பார் [1 கொரி. 11:23]. அனுப்பபபட்டவரின் பிரசங்கமே ஆதாயம்.

I) அனுப்பப்பட்டவர்:-

அனுப்பப்படாவிட்டால் எப்படி பிரசங்கிப்பார்கள்? இது தேவன் தமது அப்போஸ்தலர்களைக் கொண்டு கேட்கும் கேள்வி. அப்படி பிரசங்கிக்கிறவர்கள் இருப்பதாலே அவர் கேட்கிறார். இது ஆதி முதல் நடந்துவரும் மாறான காரியம். 'அந்த தீர்க்கதரிசிகளை நான் அனுப்பாதிருந்தும் அவர்கள் ஓடினார்கள்; அவர்களிடம் நான் பேசாதிருந்தும் அவர்கள் தீர்க்கதரிசனம் சொன்னார்கள் என்று கர்த்தர் அன்று எரேமியாவைக் கொண்டு உரைத்தார் (எரே. 23:21).

தேவன் தாம் அனுப்புகிற அப்போஸ்தலரை இன்னார் என்றும், இன்ன காரியத்துக்காக என்றும் வெளியரங்கமாய் அறியப்பண்ணுகிறார். அப். பவுலைக் குறித்து புறஜாதிகளும், ராஜாக்களுக்கும், இஸ்ரவேல் புத்திரருக்கும், தன்னுடைய நாமத்தை அறிவிக்க தான் தெரிந்து கொண்ட பாத்திரம் என்று இயேசுவானவர் சாட்சி கொடுக்கிறார் (அப். 9:15). இன்னும் தாம் அனுப்பிய அப்போஸ்தலர்களிடம் வேதம் கேட்டு அறிந்து இரட்சிபபைப் பெற்றுக் கொள்ளும்படி, அவர் தாம தெரிந்து கொண்ட ஜனங்களுக்கு கட்டளையிடுகிறார்.

இத்தாலியா பட்டாளத்தின் நூற்றுக்கு அதிபதி தேவ பக்தியுள்ளவனாக இருந்தும் இரட்சிப்பைப் பெறாதவனாயிருந்தான். தேவன் அவன் மேல் இரக்கம் கொண்டு அவனை இரட்சிக்கும் பொருட்டு அவனுக்கு சுவிசேஷம் அறிவிக்கும்படி அப். பேதுருவுக்கு கட்டளையிட்டார். அதே நேரம், தம்முடைய தூதனைக் கொண்டு, தம்முடைய அப்போஸ்தலரான பேதுருவை அவர் சந்திக்கும்படி கட்டளையிடுகிறார். பேதுருவை சந்தித்த கொர்நேலியு, "தேவனாலே உமக்குக் கட்டளையிடப்பட்ட யாவையும் கேட்கும்படிக்கு நாங்கள் எல்லோரும் இப்பொழுது, இங்கே தேவ சமூகத்திலே கூடிவந்திருக்கிறோம் என்றான் (அப். 10:33).

இரட்சிப்பின் சுவிசேஷம் பிரசங்கிக்கப்பட்டது. ஆவியானவர் எல்லோர் மேலும் இறங்கினார், கேட்டவர்கள் ஞானஸ்நானம் பெற்று இரட்சிபபை சுதந்தரித்துக் கொண்டார்கள். அனுப்பப்பட்டவரை அவர்கள் தெரிந்து கொண்டதினால் இரட்சிப்படைந்தனர். உனது நாமம் கொர்நேலியுவைப் போல்

Regd No. 040088/84
Postal Regd. No. MH BY NE-96/96
Tamil Monthly Magazine

தேவ பக்தி, தேவ பயம் கொண்டு, ஜெப விண்ணப்பங்கள் ஏறெடுப்போமானால் நம்முடைய இரட்சிப்புக்காக இந்தக் காலத்தில், இந்த பூமியில் அனுப்பப்பட்டவரை அறிந்து, சேர்ந்து கொள்வது மட்டுமல்லாமல், விட்டுவிடாமல் முடிவு வரை ஐக்கியப் பட்டிருப்போம். இதை நாம் ஆவியில் உணரவேண்டும்.

9) ஆவியிலே உணருங்கள்:- இரட்சிப்பு கர்த்தருடையது. பரலோகத்தில் இரட்சிப்பின் அஸ்திபாரம் இயேசுகிறிஸ்து. இரட்சிப்பு தேவ ஜனங்களுக்குரியது. பூமியிலே இரட்சிப்பின் அஸ்திபாரம் கர்த்தரின் அப்போஸ்தலன். அதனாலேயே அப்போஸ்தலர், தீர்க்கதரிசி என்னும் அஸ்திபாரத்திலே கட்டப்பட்டிருப்பவர்கள் தேவனுடைய மக்கள் என்று வேதம் சொல்லுகிறது (எபே. 2:20). இது தேவனால் கொடுக்கப்பட்ட அஸ்திபாரம், எந்தவொரு மனிதனும் தானாக தன்னிச்சையாய் போட முடியாது. சபை இயேசு கிறிஸ்துவின் சரீரம் [கொலோ. 1:18,24]. இதை தேவ உத்தரவின்றி தொட முடியாது. ஆரோனைப் போன்று தேவனால் அழைக்கப்பட்டாலொழிய ஒருவனும் இந்த கனமான ஊழியத்துக்குத் தானாய் ஏற்படுகிறதில்லை என்று வேதம் திட்டமாக உரைக்கிறதை வாசிக்கிறோம் (எபே. 5:4).

பூமியிலே தமது சந்ததி எழும்ப தேவன் ஆபிரகாமைத் தெரிந்து கொண்டார் (ஆதி. 17:7). அந்த சந்ததி, தான் காட்டும் வழியில் நடக்க தேவன் மோசேயை தெரிந்து கொண்டார் [யாத். 3:10,12]. தன் ஜனங்கள் தனக்கு ஆராதனை செய்ய தேவன் ஆரோனை தெரிந்து கொண்டார் [யாத். 28:1; எண். 18:20]. தேவ ஜனங்களை ஆளுகை செய்ய தாவீது ராஜாவையும், தனக்கு பரிசுத்த ஆலயம் ஒன்றைக்கட்ட சாலமோன் ராஜாவையும் தேவன் தெரிந்து கொண்டார் [1 சாமு. 16:1,12; 2 சாமு. 7:13]. இரட்சிப்பின் சுவிசேஷத்தை புறஜாதிகளுக்கும், இஸ்ரவேலருக்கும் அறிவிக்க அப். பவுலை தெரிந்து கொண்டார் (அப். 9:6,15). இயேசு கிறிஸ்துவின் வருகை, நியாயத் தீர்ப்பு, இவற்றில் பங்கு கொள்ள அழைக்கப்பட்டு, தெரிந்து கொள்ளப்பட்டவர்களை தடை செய்யும் சாத்தானின் எல்லா அந்தகார கிரியைகளையும் தேவ பெலங்கொண்டு முறியடித்து தேவனுடைய ஆடுகளை தொழுவத்தில் கட்ட 'என் சபையைக்கட்டு' என்று இயேசு கிறிஸ்து யாருக்கு கட்டளை கொடுத்தார்? தேவன் பேரிட்ட திருச்சபையான் புதிய எருசலேம் சபையின் தலைமை அப் N. லாசர் ஐயா அவர்களுக்கே இயேசு கிறிஸ்து கட்டளையிட்டார். தேவன் தமது மக்களுக்காக பூமியிலிட்ட அப்போஸ்தல அஸ்திபாரம் இது. ஆவியில் பெலங்கொண்டு, அனுப்பப்பட்டவரை தெரிந்து கொள்ளுங்கள். ஜீவ புஸ்தகத்தில் உங்கள் பேர் எழுதப்பட அனுப்பப்பட்டவரின் பிரசங்கத்தை தேவனே தன் திருச்சபையில் முழங்க செய்கிறார் அல்லேலூயா!

## அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

6 [செவ்வாய்] அக்டோபர் 1998
4 [புதன்] நவம்பர் 1998
3 [வியாழன்] டிசம்பர் 1998

**புதிய எருசலேம் செய்தி பத்திரிகை**
ஆண்டு சந்தா Rs. 30-00
வெளிநாடு Rs. 400-00

அனுப்ப வேண்டிய முகவரி :
CHIEF APOSTLE N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR
DARGA CROSS ROAD, BHANDUP,
BOMBAY-400 078, INDIA

3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. "புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited and Published by: Chief Apostle N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai 400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 170 - NOV. 98

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N.LAZAR

### இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

இது கடைசி காலமாயிருக்கிறது. தேவனுடைய கிரியை தீவிரமாய் இருக்கிறது. பிசாசு தன்னுடைய முழு வல்லமையையும் வெளிப்படுத்தி, கிரியை செய்கிற இந்த காலத்தில் தேவாவியானவரின் கிரியை தீவிரமாய் பரவி வருகிறதற்காய் நாம் தேவனை ஸ்துதிப்போமாக. வெள்ளம்போல் சத்துருவானவன் தேசத்தை மூடிவருகிற இந்நாட்களில் நாம் பயப்படாமல் இருப்போமாக. பரிசுத்த ஆவியானவராகிய தேவன் அவனுக்கு விரோதமாய் கொடியேற்றுவார். ஜெயம் நமக்கே. தேவனுடைய பிள்ளைகள் சோர்ந்து போகாமல் கிரியை செய்ய வேண்டும், ஜெபிக்க வேண்டும். நியாயத்தீர்ப்பின் ஆயுதமாய் தேவன் நம்மை எடுத்து உபயோகிக்க ஆயுதம் பரிசுத்தமாய் இருக்க வேண்டுமென்பதை (யோசுவா ஆதிகாரம் 7,8 யை) மறந்து விடாதிருங்கள், சேனைகளின் கர்த்தர் நம்மோடிருக்கிறார்.

*கிறிஸ்துவுக்குள்,*

CHIEF APOSTLE N. LAZAR.

# திரியேகத்துவம்

தேவனில் மூன்று ஆள்தத்துவம் உண்டு. மூவரும் ஒன்றாயிருக்கிறார்கள். ஒருவரில் மூவர் மூவரில் ஒருவராக இருக்கிறார்கள். திரித்துவம், திரியேகத்துவம் வேதாகமத்தில் தொகுத்து கூறப்படவில்லை. ஆனால் திரித்துவ தேவனாக, தேவன் வேதாகமத்தில் தம்மை வெளிப்படுத்தியுள்ளார்.

இது அறிகிறதற்கு அரிதான தேவ இரகசியமாயிருக்கிறபடியால் கவனமாகவே ஆராய வேண்டியதாயிருக்கிறது. மனித அறிவு, ஞானம், கணக்கு ஆராய்ச்சி மூலம் திரித்துவ சித்தாந்தத்தை வகையறுக்க முடியாது. தெய்வீக அறிவும், ஞானமும், அருளும் வேண்டும். திரித்துவ சித்தாந்தம் ஏனைய கிறிஸ்தவ சித்தாந்தங்களோடு இணைந்தே இருக்கிறது. திரிதுவ திரியேக சித்தாந்தத்தை தவிரமைப்படுத்துவோமானால் சபை பிதாக்கள் காலத்தில் தோன்றிய ஏதாவது தப்பு உபதேசத்திற்கு மாறான 'இயேசு வணக்கம்' [Jusupatory] என்ற மாறுபாட்டில் விழநேரிடும்

புதிய ஏற்பாட்டில் காணப்படுகிற இயேசுவின் நாமம் 'இயேசுவின் ஆவி' என்ற பதங்களைக் கொண்டு திரித்துவத்தை மறுத்து 'இயேசுவே கடவுள்' என்று துணிந்து திரித்து கூறுவர் சிலர். இயேசுவானவர் திரித்துவத்தில் ஒருவராய் இராவிட்டால் 'என்னைக் கண்டவன் பிதாவைக் கண்டான்' என்று இயேசு கூறுவதும் 'நானும் பிதாவும் ஒன்றாயிருக்கிறோம்' என்று இயேசு கூறுவதும். இவர் என்னுடைய நேசகுமாரன் இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று பிதா கூறுவதும். இயேசு கடவுளின் ஒரே பேரான குமாரன் என்று கூறுவதும் மாறுபாடாகுமே. இத்தகைய வேற்று உபதேசம் வேற்று வணக்கம் ஏற்படாதபடி கிறிஸ்தவ விசுவாசத்தை ஊன்றக் கட்டுவது திரித்துவ உபதேசமேயாகும்.

திரித்துவ உபதேசத்தை விளக்க உபயோகிக்கும் எந்த விதமாக மனிதீக ஒப்பனைகளும் முடிவானதல்ல. ஆனால் மனிதனின் புலனுக்கு ஏற்பவைான உருவங்களையும், உபமேயங்களையும் உபயோகிக்க நிர்ப்பந்தம் உண்டாகும். ஆனால் இவைகளிலொன்றும் உண்மையுமல்ல, பூரணமுமல்ல. ஏனெனில் இப்பொழுது நாம் கண்ணாடியில் நிழலாட்டமாய்ப் பார்க்கிறோம் என்ற சிந்தையோடே தியானிப்போமாக. ஞானம், அறிவு, கணக்கு, ஆராய்ச்சி இவற்றின் மூலமும் திரித்துவத்தை வரையறுப்பதும் கூடாது. ஞானம் அறிவு ஓர் அளவு மட்டும் விசாரிக்கக் கூடும். ஓர் அளவுக்கு மேல் அல்லது ஓர் அளவுக்கு அப்பால் மனித தன்மைக்குரிய யாவும் நின்று விடும். கண் ஓர் அளவே பார்க்கக் கூடும்.

அதற்கப்பால் ஒரு பொருள் உண்டாயின அதைப் பற்றிய நம்பிக்கையே அதன் உண்மையை நிரூபிக்கக் கூடும். (Reason Ends. Faith Begins) ஆதலால் தேவனே வெளிப்படுத்தினால் தான் நாம் அறியக் கூடும், ஏனென்றால் அது ஆழ்ந்த இரகசியம் (Mystery) ஆகும்.

கடவுள் இருக்கிறார் (God is) என்பதே திரித்து சித்தாந்தத்தின் மூலப் பொருள் அச்சு ஆகும். கடவுள் வெளிப்பாடும் மக்களின் விசுவாசமுமே திரித்துவத்தை உறுதிப்படுத்தும். திரித்துவ சித்தாந்தத்தை விளக்க முற்படும் போது உபமான, உபமேயங்களை அனாவசியமாக மாறாத விதியாகவோ கொள்ளக் கூடாது விசுவாசமும். அனுபவமுமே விளக்கும்.

திரித்துவ உபதேசத்தைப் படிப்பவர் முதற்கண் 'கடவுள் இருக்கிறார்' (God is) 'கடவுள் செயலாற்றுகிறார்' (God acts) என்ற அடிப்படை கொள்கை உடையவராய் இருக்க வேண்டும், நாஸ்திகனுக்

இது பைத்தியம்; கெட்டுப் போகிறவனுக்கும் இது பைத்தியமே. கடவுள் உண்டு என்று நிரூபிக்கும் மூலகாரணங்களை நாம் இங்கு விளக்க முற்படவில்லை. கடவுள் உண்டு எனக் கூறும் ஒருவனை முன் வைத்தே இவ்வாராய்ச்சியில் ஈடுபடப் போகிறோம். திரித்துவ சித்தாந்தத்தின் அடிப்படையும், விருத்தியும், பூரணமும், வணக்கமே. ஏசாயா சொல்வது போல் சேனைகளின் தேவனாகிய கர்த்தர் பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர் என்று வணங்குவோம்.

(தொடரும்)

"இப்பொழுதோ கர்த்தராகிய ஆண்டவரும், அவருடைய ஆவியும் என்னை அனுப்புகிறார்" (ஏசா. 48:16)

# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம் (தொடர்ச்சி)

கொஞ்சக் காலத்துக்குப் பிறகு இருதரத்தாரும் ஒப்பந்தத்திற்கு வரும்படி இராயன் எத்தனம் செய்தான். மெலாங்தன் சாஸ்திரியார் இதற்கிணங்கும்படி மிகவும் மனமுள்ளவராயிருந்தார். ஆகையால் லூத்தர் சீனை மலையாகிய கோப்புர்க்கிலிருந்து மெலங்தனுக்கு உறுத்துதலான கடிதங்கள் எழுதி, கிறிஸ்துவையும், பேலியாளையும் ஐக்கியப்படுத்தி ஒப்பந்தம் செய்ய இணங்கக்கூடாதென்று எச்சரித்தார். முடிவாக அவர் தம் சிநேகிதர்கள் விவகாரங்களை நிறுத்தித் தங்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்புவது உசிதம் என்று யோசனை சொன்னார்.

செப்டம்பர் மாதம் 23-ம் தேதி இராயன லூத்தரைச் சார்ந்தவர்கள் செய்த அறிக்கைகள் எல்லாம் கேட்கப்பட்டுத் திரிக்கரிக்கப்பட்டனவென்று அறிவித்து அவர்கள் கபடற்ற மனதோடு கீழ்ப்படிய வேண்டுமென்று கட்டளையிட்டான. அவர்கள் இதை யோசித்துச் செய்வதற்கு 1531ம் வருஷம் ஏப்ரல் மாதம் வரையில் தவணை கொடுத்தான். மேலும் ரோமைச் சபையிலிருக்கும் கெடுதிகளை அகற்றும்படி கூடிய சீக்கிரம் ஒரு சங்கம் கூட்டப்படுமென்றும் வாக்களித்தான்

மேற்சொன்ன சங்கேதங்களுக்கு எதிர் உரையாக, அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கையை ஆதரித்துச் சொல்லும் நியாயங்களென்று அர்த்தங்கொள்ளும் அப்பலோஜியா என்னும் பிரபந்தத்தை வாசித்து, இரண்டாம் தரமாக இராயனுடைய கட்டளைகளை எதிர் மறுத்தார்கள். அடுத்த நாள் லூத்தரைச் சார்ந்தவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட நிபந்தனைகளை ஒப்புக்கொள்ளமாட்டோமென்று வெகு உறுதியாய்ச் சொன்னபோது, பதிதர்கள் எல்லோரையும் பட்டயத்தால் சங்கரித்து நாசமாக்க வேண்டுமென்பது தன் தீர்மானம் என்று இராயன் எரிந்து சொன்னான். இதற்குமேல் அரசர் தங்கள் தங்கள் வீட்டுக்குத் திரும்புவதைத் தவிர அவர்கள் செய்யத்தக்கது ஒன்றுமில்லை. கோபுர்க்கிலே லூத்தர் அவர்கள் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அதி. 33. லூத்தர் வித்தன்புர்க் பட்டணத்துக்கு திரும்பி வந்தது.

நியமகப் பிரபுவாகிய யோவான் பிரதெரிக் அகுஸ்தாபுரியிலிருந்து திரும்பினபோது செப்டம்பர் மாதம் 14ம் தேதி லூத்தரைக் கோபுர்க்கில் சந்தித்தார். அப்போது நியமகப்பிரபு லூத்தர் சாஸ்திரியாருக்கு ஒரு விலையுயர்ந்த முத்திரை மோதிரம் வெகுமதி அளித்தார்: ஆனல் அது லூத்தருடைய எந்த விரலுக்கும் சரியில்லாமல் பெரிதாயிருந்தது. அம்முத்திரையில அர்த்தமுள்ள அடையாளங்கள் நிறைந்திருந்தன. அந்த அடையாளங்கள் ஒவ்வொன்றுக்கும் லூத்தர் சாஸ்திரியார் பின்வருமாறு லாசருஸ் ஸ்பேங்களர் என்பவருக்கு வியாக்கியானம் செய்கிறார்.

"முதலாவது இயற்கையான நிறமுள்ள ஒரு இருதயத்தில் ஒரு கருப்பு சிலுவை இருக்கிறது. அது நாம் சிலுவையில் அறையுண்ட இயேசுவின் பேரிலுள்ள விசுவாசத்தினல் இரட்சிக்கப்படுகிறேமென்று என்னை ஞாபகப்படுத்துகிறது. ஏனென்றல் நாம் முழு இருதயத்தோடும் விசுவாசித்தால் இரட்சிக்கப்படுகிறேம். அந்தச் சிலுவை கறுப்பாயிருப்பது மனமடிவும், நோவும் உண்டுபண்ணுகிறது. என்றலும் அதே சமயத்தில் இருதயத்தை அதன் சொந்த நிறத்தோடு காட்டுகிறது. அதன் சுபாவத்தை கெடுக்கிறதுமில்லை, அதை கொல்லுகிறதுமில்லை.

ஆனல் அது இருதயத்தை உணர்ச்சியோடு வைத்திருக்கிறது. ஏனென்றல் நீதிமான் சிலுவையிலறையுண்ட கிறிஸ்துவின் பேரிலுள்ள விசுவாசத்தினல் பிழைக்கிறன். ஆனல் விசுவாசம், சந்தோஷம். சமாதானம். ஆறுதல் இவைகளைக் கொடுக்கிறதென்று காட்ட இந்த இருதயம் ஒரு வெள்ளை ரோஜா புஷ்பத்தின் மத்தியில் நிற்கவேண்டும். ரோஜா புஷ்பம் சிவப்பாயல்ல, வெள்ளையாயிருக்க வேண்டும். ஏனென்றல் ஆவிகளும், தேவ தூதர்களும் வெள்ளையாயிருக்கிறர்கள். இந்த ரோஜா ஆகாயா நீலவர்ணமான இடத்தில் வைக்கப்பட வேண்டும். ஏனென்றல் ஆவிக்கடுத்த சந்தோஷமும். விசுவாசமும் மறுமையில் நாம் அனுபவிக்கப் போகிற சந்தோஷத்திற்குத் துவக்கம். மறுமையின் சந்தோஷம் நமக்கு இவ்வுலகில் பரிபூரணமாய் வெளிப்படுத்தப்படா விட்டாலும் நாம் அதை நம்பிக்கையில் இங்கேயே அனுபவிக்கிறேம். இந்த ஆகாய நீலவர்ண இடத்தைச் சுற்றிலும் சுவர்ணமயமான ஒரு வட்டம் இருக்கிறது. இது இரட்சிப்பு முடிவில்லாத நித்திய இரட்சிப்பென்றும், தங்கள் எல்லா லோகங்களிலும் அதிக விலையுயர்ந்ததுமாய் இருக்கிறது போல், இரட்சிப்பு மகா அருமையானதென்றும் காட்டுகிறது.

நியமகப் பிரபுவாகிய யோவான் பிரதெரிக் என்பவர் லூத்தரை வித்தன்பர்க்

---

# கேசட் வெளியீடு

ஆடியோ கேசட் வெளியீடு "கிறிஸ்மஸ் சிறப்புச் செய்தி" மண்ணுருவானர் என்ற தலைமையின் பாடலுக்கு புதிய எருசலேம் சபை இசைக்குழுவினர் இசையமைக்க வெளியாக உள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேம். சில பாடல்களும் இடம் பெறுகின்றன. தேவைப்படுவோர் முந்துங்கள்.

Address.
Pastor A. Vasan,
B.L.Shad, Kodaikanal.

---

குக்கு தாயே அழைத்துப் போகப் பிரியப் பட்டதாகச் சொன்னார். ஆனால் லூத்தர் கோப்புர்க்கிலேயே தங்கி இருந்து அகுஸ்தா புரியிலிருந்து திரும்பி வரும் தம் சிநேகிதர் கள் சகோதரர்களுக்கு இராஜ்ய சங்கத்தில் செய்த வெந்நீர் ஸ்தானத்துக்குப் பிறகு அவர்கள் முகத்திலுண்டான வியர்வையைத் துடைப்பதற்காகக் காத்திருக்கப் பிரியப் பட்டேனென்று லூத்தர் மெலாங்தன்சாஸ்திரி யாருக்கு எழுதினார். செப்டம்பர் மாதம்8-ம் தேதி அவர் தம் மனைவிக்கு வெகு சந்தோஷமாய் சீக்கிரம் அவளோடிருப்பதாக எழுதி யிருந்தார்.

நியமகப் பிரபுவுக்கு அவர் அக்டோபர் மாதம் 3-ம் தேதி எழுதினதாவது. "நீர் அகுஸ்தாபுரியிலுள்ள நகரத்திலிருந்து அப புறப்பட்டிருப்பதாக மனப்பூர்வமாய்ச் சந் தோஷப்படுகிறேன்" என்பதே. அவர் அக் டோபர் மாதம் 5-ம் தேதி அகுஸ்தாபுரி யிலிருந்து வந்து தம் சிநேகிதர்களோடு அவரவர் வீட்டிற்குக் திரும்பிப் போக புறப் பட்டார்கள். ஆல்டன்புர்க் பட்டணத்தில் அவர்கள் தங்கினார்கள். லூத்தர் அங்கே அக்டோபர் 9-ம் தேதியாகிய ஞாயிற்றுக் கிழமையில் பிரசங்கம்பண்ணினார்.

மெலாங்தன் சாஸ்திரியார் பகற்போஜ னம் சாப்பிட்ட உடனே அகுஸ்தாபுரி விசு வாச அறிக்கையை உறுதிபடுத்தும்படி அவசரமாய்த் திரும்ப எழுதித் திருத்தம செய்வதில் வெகு முயற்சியாயிருந்தார். ஞாயிற்றுக் கிழமையில் அவர் இந்த வேலை செய்து கொண்டிருக்கும்போது, லூத்தர் அவர் கையிலிருந்த இறகைப் பிடுங்கிக் கொண்டு, ஞாயிற்றுக் கிழமையில் நாம் ஓய்ந்து இளைப்பாறுவதினாலும் கடவுளுக்கு ஊழியஞ்செய்கிறோமென்று சொன்னார். (திருத்தித் தேற்றம் செய்யப்பட்ட இரத அப்பலோஜிபா என்னும் பிரபந்தம் லூத் தரன போதகத்தை தெளிவாய் ரூபித்து அநுபாலிக்கிறது. அது 1531-ம் வருஷம் ஏப்ரல் மாதம் பிரசுரம் செய்யப்பட்டது)

(தொடரும்)

மாதர் பகுதி:-

# மரியாளின் தாழ்மை

"இதோ நான் ஆண்டவருக்கு அடிமை உம்முடைய வார்த்தையின்படி எனக்கு ஆகக்கடவது" என்று தன்னைத் தாழ்த்தி மரியாள் தன்னை தேவனுக்கு ஒப்புக் கொடுத்தார்கள். அவர்களது தாழ்மை தேவனுக்கு முன்பாக மேன்மையுள்ளதாக இருந்தது. ஆம், தாழ்மை உள்ளவர்களுக்கு தேவன் கிருபை அளிக்கின்றார் (யாக். 4:6).

தாழ்மை என்றால் அநேகர் 'அவமானம்' என்றும், 'தன்மான இழுக்கு' என்றும் கருதுகிறார்கள். அப்படியல்ல தேவப்பிள்ளையே நீ உயருவதற்கு, கர்த்தர் உன்னை உயர்த்துவதற்கு அதுவே நேரடியான வழி. சிலருக்கு தாழ்மைப்படவே விருப்பமில்லை. எல்லாவற்றிலும் பெருமையாக இருக்கவே விரும்புகிறார்கள். தங்களைக் குறித்து பெருமைபாராட்டினால் சந்தோஷப்படும் அநேகர், அயலவர்களின் உயர்ச்சியைக் கண்டு மிகவும் துக்கப்படுவார்கள்.

மரியாள் ஆண்டவரின் வார்த்தையை கேட்ட உடனே தன்னை தேவனுக்கு ஒப்புக் கொடுத்தார்கள். நம்மில் அநேகர் வேதத்தை ஒரு புறம் வைத்துவிட்டு மனம் போன போக்கெல்லாம் போக எண்ணுகிறார்கள். கிறிஸ்தவர்களாய் இருக்க விரும்பும் அநேகர், வார்த்தைக்கு கீழ்ப்படிந்து நடப்பதையோ, கடிந்து கொள்ளுதலையோ விரும்புவதில்லை இன்று ஆவிக்குரிய கிறிஸ்தவர்கள் என்று தங்களை அடையாளப் படுத்திக் கொள்ளுகிறவர்களும், கனியற்ற வாழ்க்கை வாழ்வதை கண்கூடாக காண முடிகின்றது. மரியாள் ஆண்டவருடைய தாய் என்று பெருமைபாராட்டவில்லை. எப்போதும் தேவனுக்குள் தன்னைத் தாழ்த்தி பரிசுத்த வாழ்க்கை மேற்கொண்டார்கள்.

மற்றவர்களை வாழ்த்தும் சுபாவம்:-

வேதம் சொல்லுகிறது "மரியாள் எழுந்து... சகரியாவின் வீட்டிற்குள் பிரவேசித்து, எலிசபெத்தை வாழ்த்தினார்கள்". எலிசபெத் மரியாளின் வாழ்த்துதலைக் கேட்டபோது அவர்களுடைய வயிற்றிலிருந்த பிள்ளை துள்ளிற்று, எலிசபெத் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டாள் லூக். 1:40,41.

எவ்வளவு மேன்மையான அனுபவம்! மரியாள் எலிசபெத்தை கனம்பண்ண முந்திக் கொண்டார்கள். வாழ்த்தும்போது எவ்வளவு எழுப்புதல் உண்டானது! வயிற்றிலிருந்த பிள்ளைக்கும் எழுப்புதல், எலிசபெத்துக்கும் எழுப்புதல்! ஆவியின் நிரப்புதல்! அல்லேலூயா! ஒருவரை ஒருவர் தங்களிலும் மேன்மையுள்ளவராக எண்ணுங்கள் என்ற அப்போஸ்தலர் பவுலின் ஆலோசனை எத்தனை ஆழமானது. மற்றவர்களை வாழ்த்த வேண்டும், அவர்களுக்காக ஜெபிக்க வேண்டும், உதவி செய்ய வேண்டும். இப்படியாக நாமும் கூட நினைக்க வேண்டும், இதுவே தேவனுக்கு பிரியமானது. வாயின் வார்த்தைகள் பக்தி விருத்திக்கு ஏதுவாக அமைய வேண்டும். அயலவர்களின் இருதயத்தை புண்படுத்துவதாக நம் வார்த்தைகள் அமையக் கூடாது.

சிந்தனை செய்யும் குணம்:-

அதிகமாய் கர்த்தரைத் தியானிப்பது; கர்த்தர் தன்னோடு பேசுகிற விஷயங்களைச் சிந்தனை செய்வது, அவற்றை எல்லாம் தன் இருதயத்தில் வைத்துக் கொள்ளுவது ஆகிய சுபாவங்கள் மரியாளை மேன்மையாக உயர்த்துகின்றது.

"இந்த வாழ்த்துதல் எப்படிப்பட்டதோ என்று சிந்தித்துக் கொண்டிருந்தார்கள் (லூக். 2:19)". மரியாளோ அந்த சங்கதிகளையெல்லாம் தன் இருதயத்திலே வைத்து சிந்தனை பண்ணினாள் [லூக். 2:29]. இந்நாட்களில் அநேகருக்கு ஜெபம்பண்ணுவதற்கே நேரமில்லை. இயந்திரமயமான வாழ்க்கைவாழுகின்றார்கள். அயல் வீடுகளில் போய் குறை கூறுவதிலும், வேறு பொழுது போக்குகளிலும் நேரத்தை செலவிடுகின்றார்கள். சொற்களின் மிகுதியினால் பாவம் வந்து சேரும். ஆனபடியால் நேரம் கிடைக்கின்ற வேளைகளில் மாத்திரமல்ல, நேரத்தை ஒதுக்கி, கர்த்தருடைய பாதத்தில் காத்திருந்து, மரியாளைப் போல கிருபை பெற்றவர்களாக மாற வேண்டும். அதிகமாய் வேதத்தை தியானித்து தேவன் சொல்லும் ஆலோசனைகளின்படி நம் வாழ்க்கையை கட்டியெழுப்ப வேண்டும்.

மரியாளின் உள்ளம் ஆவியில் எளிமையுள்ள உள்ளம்! குழந்தைகளின் இருதயம் போல கர்த்தரில் மகிழ்ந்து களிகூரும் சுபாவம்! தேவன் செய்த நன்மைகளை அவர்கள் மறந்து விடவில்லை. 'வல்லமையுடையவர் மகிமையானவைகளை எனக்குச் செய்தார், அவருடைய நாமம் பரிசுத்தமுள்ளது' (லூக். 1:49) என்று துதித்தார்கள். நாமும் கூட நம்முடைய வாழ்க்கையில் தேவன் செய்த எல்லா நன்மைகளுக்காகவும் நாள்தோறும் துதித்து தேவனை மகிமைப்படுத்த வேண்டும்.

"..இதோ நான் ஆண்டவருக்கு அடிமை, உம்முடைய வார்த்தையின்படி எனக்கு ஆகக்கடவது என்றாள்.." லூக் 1:38.

---

# விவரித்துச் சொன்னாலும் விசுவாசிக்க முடியாத கிரியை

ஆதி முதல் அந்தம் வரை முன் அறிகிற தேவன், யார், யார் நித்திய ஜீவனுக்கு பாத்திரவான்கள் என்று முன் அறிந்து, அவர்களை தெரிந்து கொண்டார். இப்படி தெரிந்து கொள்ளப்பட்டவர்கள் உலகெங்கும் பற்பல ஜாதிகளோடும், பாஷைக்காரர்களோடும், பாவச்செய்கைகளோடும் கலந்து இருக்கிறபடியால் இவர்களை வேறுபடுத்தி நித்திய ஜீவனுக்குட்படுத்த தேவன் ஒரு ஏற்பாடு செய்தார். அது என்னவென்றால், விவரித்துச் சொன்னாலும் எல்லாரும் விசுவாசிக்க முடியாத ஒரு கிரியையை நடப்பித்தார். அதை ஆபகூக் தீர்க்கன் மூலம் முன் அறிவித்தார் (ஆபகூக் 1:5; அப். 13:41).

தாம் சொன்னபடி பிதாவாகிய தெய்வம் தம்முடைய குமாரனை இந்த பூலோகத்துக்கு அனுப்பினார். அவர் இயேசு என்னும் பெயரில் வெளிப்பட்டார். நித்திய ஜீவனை பெறவேண்டுமா, இயேசு தேவனுடைய குமாரன் என்று விசுவாசி என்றார். சிலர் விசுவாசித்தார்கள்; விசுவாசித்தவர்கள் ஞானஸ்நானம் பெற்று தேவனுடைய இராஜ்யத்திற்குட்பட்டார்கள் அப் 8:37,38. பலர் இயேசுகிறிஸ்துவின் கிரியைகளைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

ஆனால் அவர் தேவனுடைய குமாரன் என்று விவரித்து சொல்லப்பட்டாலும் விசுவாசிக்கவில்லை. நித்திய ஜீவனுக்கென்று

நியமிக்கப்பட்டவர்கள் விசுவாசித்தார்கள். மற்றவர்கள் அசட்டை பண்ணினார்கள், எதிர்த்தார்கள், தூஷித்தார்கள், பயித்திய காரத்தனம், எத்தான கிரியை, பிசாசின் செய்கை என்று இயேசுவைத் தள்ளிப் போட்டார்கள்.

அத்தேனே பட்டணத்திலுள்ள மார்ஸ் மேடையிலே பெருங் கூட்டத்தின் மத்தியில் பவுல் ஒரு சுவிசேஷ பிரசங்கத்தை நிகழ்த்தினார். கேட்டவர்களில் சிலர் பவுலைப் பற்றிக் கொண்டு விசுவாசிகளானார்கள் (அப். 17:21-34). யார், யார் நியமிக்கப்பட்டவர்கள் என்று தெரியாது. சுவிசேஷம் அறிவிக்கப்படுகையில் கேட்கிற எவர்களிடத்தில் விசுவாசம் உருவாகி, வசனத்துக்கு கீழ்ப்படிகிறார்களோ அவர்கள் நித்திய ஜீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள் என்று அறியலாம். விவரித்துச் சொன்னாலும் கேட்டின் பிள்ளைகள் விசுவாசிப்பதில்லை. விசுவாசிக்கிறவர்கள் தேவனுடைய பிள்ளைகளாகிறார்கள். பைத்தியமாகத் தோன்றுகிற பிரசங்கத்தினாலே விசுவாசிக்கிறவர்களை இரட்சிக்க தேவனுக்கு பிரியமாயிற்று (1 கொரி. 1:21).

யோவான் ஸ்நானகரைக் கவனித்துப் பாருங்கள். அவர் ஒரு அற்புதத்தையும் செய்யவில்லை. ஒட்டக மயிர் உடையைத் தரித்திருந்தார்: வெட்டுக் கிளியையும், காட்டுத் தேனையும சாப்பிட்டார். வனாந்தரத்தில் பிரசங்கித்தார்; ஆனபடியால் சரியான பயித்தியக்காரன் என்று, அநேகர் இகழ்ந்தார்கள்; உண்மையிலேயே அவர் யார் என்றால் தேவனால் அனுப்பப்பட்ட ஒரு மனுஷன். இவருடைய பணியைப் பற்றி ஏற்கனவே தீர்க்கர்களால் முன் அறிவிக்கப்பட்டவர், தேவ தரிசனம் பெற்றவர், தேவ கட்டளை பெற்றவர். ஆனாலும் யார் இவரை விசுவாசித்தார்? இவருக்குப்பின் வருகிற இயேசுவை பின் செல்லும் உத்தம ஜனத்தார் விசுவாசித்தார்கள்.

விசுவாசித்தவர்கள் யோவானோடே சேர்ந்து நின்றார்கள். அச்சமயம் இயேசு கடந்து போனபோது, இதோ தேவ ஆட்டுக் குட்டி என்றார் யோவான். அதைக் கேட்ட சீஷர்கள் இயேசுவுக்கு பின் சென்றார்கள் (யோ. 1:35-37). இவரை விசுவாசியாதவர்கள், இவருடைய வாயிலிருந்து புறப்பட்ட தேவ ஆலோசனையை விசுவாசியாதவர்கள். கீழ்ப்படியாதோர் கெட்டுப் போனார்கள் [லூக். 7:29,30].

யார் இந்த யோவான்? இவர் தேவனால் அனுப்பப்பட்ட ஒரு மனுஷன் (யோ. 1:6). ஜலத்தினால ஞானஸ்நானம் கொடுக்கும்படி

(தொடர்ச்சி 10ம் பக்கம் பார்க்க)

# கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள்

16-8-98 அன்று புதிய எருசலேம் சபை திருப்பூர் கிளையைச் சேர்ந்த சகோ. பவுல் தாயார் கிட்டாள் என்ற மரியாள் (வயது 62) அவர்கள் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறோம். அம்மாவுடைய பிரிவால் வருத்தத்தில் இருக்கும் குடும்பத்தாருக்கும், பற்றும் உறவினருக்கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் ஆறுதல் கூறிக் கொள்ளுகிறோம்.

# தேவனுடைய அதிசயங்களும், அற்புதங்களும்

கர்த்தருக்கு ஸ்தோத்திரம். எனது பெயர் சாலேத் மேரி என்ற தாசன்னாள். நான் கத்தோலிக்க மார்க்கத்திலிருந்து இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு, தலைமை அப்போஸ்தலரால் பள்ளப்பட்டி புதிய எருசலேமில் ஞானஸ்நானம் பெற்று தற்சமயம் திண்டுக்கல் சபையில் விசுவாசியாக உள்ளேன்.

கர்த்தர் என் வாழ்க்கையில் செய்த அதிசயத்தை பகிர்ந்து கொள்ள வாஞ்சிக்கிறேன். என் மகள்கள் பெர்சியா, எஸ்தர் முறையே 9 மற்றும் 6ம் வகுப்பில் படித்து வந்தனர். பள்ளி நிர்வாகம் படிப்பில் பிள்ளைகள் சரியில்லை, பெயில் என T.Cஐ கொடுத்து அனுப்பி விட்டனர். ஆனாலும் கர்த்தருடைய கிருபையால் பாஸ் சர்டிபிகேட் வாங்க 6ம் வகுப்பு 9ம் வகுப்பிற்கு அந்த பள்ளி அதிகாரியின் கண்களிலும் கிருபை செய்தார்.

கர்த்தருடைய கிருபையால் நிலக்கோட்டையில் Matriculation பள்ளியில் மூன்று மாதம் படிப்பைக் கவனித்துதான் நாங்கள் பத்தாம் வகுப்பில் சேர்ப்போம் என்றனர். சபையில் சொல்லி ஜெபித்தோம் உபவாசம் இருந்தும் ஜெபித்தோம், கர்த்தர் பிள்ளைகள் படிக்க உதவி செய்தார். அரசு தேர்வில் வெற்றி பெறுவது கடினம் என்று தெரிந்தும், கர்த்தரிடத்தில் உபவாசித்து ஜெபித்தேன். என்னே! ஆச்சரியம் ஒருவரும் ஏற்றுக் கொள்ளா விதத்தில் 9ம் வகுப்பு பெயிலாயிருந்த போதும், 10ம் வகுப்பில் சேர்ந்தும் கர்த்தர் என் மகள் பெர்சியாளுக்காக தேர்வு எழுதி Matriculation தேர்வில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற கிருபை செய்தார். அவருக்கே ஸ்தோத்திரமும், கனமும், மகிமையும் உண்டாவதாக.

அவர் அதிசயமானவர். அடுத்த 11ம் வகுப்பு படிக்க திண்டுக்கல் Our Lady பள்ளியில் போராட்டத்தின் மத்தியில் இடம் கிடைக்க செய்தார். பெர்சியா வாழ்வில் கர்த்தர் பெரிய காரியங்களை செய்துள்ளார். ஒவ்வொரு ஆண்டும் May விடு நாட்களில் பிசாசின் போராட்டம் இருக்கும். அவள் Jan 16, 1998ல் ஞானஸ்நானம் பெற்றாள். அதுமுதல் கர்த்தர் போராட்டங்கள் இல்லாதபடி காத்துக் கொண்டார் கர்த்தர் நல்லவர். அதிசயமானவர் அல்லேலூயா!

இப்படிக்கு,
Sis. சாலேத்மேரி என்ற தாசன்னாள்
திண்டுக்கல் கிளை.



தேவ வார்த்தையை பெற்று அனுப்பப்பட்டவர் (யோ. 1:33). மல். 3:1ம் வசனத்தின் முன் பகுதியில் சொல்லப்பட்ட, இயேசுவுக்கு முன் போய் வழியை ஆயத்தம்பண்ணும்படி அனுப்பப்பட்ட தூதன் (மத். 11:10). மல்-4:6(a),5ல் குறிக்கப்பட்டபடி பிதாக்களுடைய இருதயத்தை பிள்ளைகளிடம் திருப்பும்படி அனுப்பப்பட்ட எலியா தீர்க்கதரிசி [லூக். 1:16,17].

இவர் யார் என்று மேலும் சொல்ல வேண்டுமானல் ஏசாயா தீர்க்கதரிசி சொன்னபடியே வனந்தரத்தில் கூப்பிடுகிறவனுடைய சத்தம், அதாவது இவர் வனந்தரத்தில் கூப்பிடுகிறவனுடைய சத்தம் (யோ. 1:23). இந்த சத்தம் உண்டானபோது, யூதாயா தேசத்தார், எருசலேம் நகரத்தார் அவரிடத்திற்குப் போய் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, ஞானஸ்நானம் பெற்று, அவருடன் சேர்ந்து நிற்கையில் இயேசு கடந்து போனர். இதோ தேவ ஆட்டுக்குட்டி என்று சொல்லி தன்னுடன் இருந்தவர்களை இயேசுவுடன் நடக்க செய்தார் (மாற். 1:4,5: யோவா. 1:35-37).

இதோ சீக்கிரமாய் வருகிறேன் என்று சொன்ன இயேசு கிறிஸ்து மறுபடியும் இவ்வுலகிற்கு வரப்போகிறர். அவர் வருமுன்னே பாதைகளை சீர்படுத்த ஒருவர் அனுப்பப்படவேண்டுமல்லவா? தேவன் ஒருவரை அனுப்பி இருக்கிறர் அவர் பெயர் பாஸ்டர்: N. வாசர் சபையைக் கட்டி, ஜனத்தை சீர்படுத்தி கர்த்தரின் வருகைக்கு ஆயத்தப்படுத்த கட்டளை கொடுத்து கர்த்தர் அனுப்பியிருக்கிறர். இவர் யாரென்றல் மல். 3:1ம் வசனத்தின் பின் பகுதியில் சொல்லப்பட்ட நீங்கள் தேடுகிற ஆண்டவரும், நீங்கள் விரும்புகிற உடன்படிக்கையின் தூதனுமானவர். அவர் புடமிடுகிறவனுடைய அக்கினியைப் போலவும், வண்ணருடைய சவுக்காரத்தைப் போலிருந்து, ஆலயத்தில் உட்கார்ந்து, பாவங்களை மன்னிக்கும்படி தனக்கு கொடுக்கப்பட்ட அதிகாரத்தைக் கொண்டு விசுவாசிக்கிறவர்களை சுத்திகரித்து கொண்டிருப்பார். எழுதியிருக்கிறபடி இதை எல்லாரும் சகிக்க முடியாது, ஆகையால் ஓடிப்போவார்கள் [மல். 3:2,3]. இவர் மல். 4:6(b),5ல் குறிப்பிடப்பட்டபடி பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடத்தில் திருப்பும் எலியா தீர்க்கதரிசியாவார் (மாற். 9:11,12).

மேலும் இவர் யார் என்று சொல்ல வேண்டுமானல், 'இதோ மணவாளன் வருகிறர், அவருக்கு எதிர் கொண்டு போகப் புறப்படுங்கள் என்கிற சத்தம் உண்டாயிற்று' [மத். 25:6] என்று இயேசு சொன்னரே அந்த சத்தம் இவர்தான். கர்த்தரின் வருகையில் மறுருபமடைந்து, அவரோடே சேர்க்கப்படும்படி நியமிக்கப்பட்டவர்களுக்குள் இவர் மேல் விசுவாசத்தை இறைவன் துவக்குவார்.

இந்த சத்தத்தைக் கேட்டு அவரோடே சேர்ந்து நிற்கிற, அதாவது ஆயத்தப்படுத்தும்படி அனுப்பப்பட்ட தேவ மனுஷரோடே சேர்ந்து நிற்கிற, நாம் கர்த்தருக்கு எதிர் கொண்டு போக மேகங்கள் மேல் ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு, இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம் [1 தெச. 4:17].

ஷிபோலேத் என்று சரியாக உச்சரித்தவன் அக்கரைப்பட்டான் [நியா. 12:4-6]. இயேசு கிறிஸ்து தேவன், குமாரன் என்று விசுவாசித்து, கீழ்ப்படிந்தவனுக்கு நித்திய ஜீவனுண்டு. யோவானை விசுவாசித்து அவ

# வேதபாடம் (தொடர்ச்சி)

## யோசுவா புஸ்தகத்தின் கருத்துரை

யோசுவாவின் படையெடுப்புப்பற்றி விநோதமான விபரங்கள் யோசுவாவின் புஸ்தகத்தில் நாம் கண்டோம். அதோடுகூட யோசுவாவின் புஸ்தகத்தில் முக்கிய செய்திகளும் அடங்கியிருக்கின்றன.

1) தேவனுடைய உண்மை:- தேவனுடைய உண்மையை அறிவித்து அதை நிரூபிக்கிறது. வாக்குப்பண்ணினவர் எப்போதும் உண்மையுள்ளவராயிருக்கிறார். அவர் வேறு விதமாய் இருக்க முடியாது. இறைவன் தாம் வாக்கருளின தேசத்தை சுதந்தரிக்கிறதற்கு இஸ்ரவேலருக்கு கட்டளையிட்டது மாத்திரமல்ல தேவ சேனாதிபதியாய் முன்சென்று அதை சுதந்தரிக்கச் செய்தார் என்று இந்த புஸ்தகம் நமக்கு விளக்குகிறது. தேவன் தாம் சொன்னதை நிறைவேற்றுவதில் உண்மையுள்ளவராயிருக்கிறார்.

2) தேவன் வாக்குப்பண்ணின சுதந்தரத்தை சொந்தமாக்கிக் கொள்ள மனிதன் விரும்ப வேண்டும்:- தேவ ஈவுகளை நாம் பெறறுக் கொள்ளும்படி, அனுபவிக்கும்படி அவைகளைத் திட்டமாக நமக்கே உரியதாக்கிக் கொள்ள வேண்டும். எந்த ஒரு வாக்குத்தத்தையும் நாம் சுதந்தரித்துக் கொள்ள விரும்பி, அதற்காய் ஜெபம்பண்ணி அதைத்தேட வேண்டும். இறைவனிடத்தில் கேட்க வேண்டும் பிரயாசம் எடுக்க வேண்டும். அப்பொழுது அது நமக்கு சொந்தமாகும் [எபி. 4:1]. பின்வாங்கிப் போகிறவர்கள் எல்லாவற்றையும் இழந்து போவார்கள். ஜாக்கிரதையாய் வாக்குத்தத்தம் பண்ணினதை பெற்றுக் கொள்ள நாம் முன்னேற வேண்டும்

3) தேவனுடைய பரிசுத்தம்:- தேவன் பாவத்தை பகைக்கிறார் கானானியர் மகா பயங்கரமான துர்நடக்கைக்கும், பாவத்திற்கும் இடம் கொடுத்து பொல்லாப்பில் மூழ்கிக் கிடந்தனர். அவர்களை அடக்கி ஒழித்துவிட்டு, விரட்டி விட்டு அந்த தேசத்தை சுதந்

தரித்துக் கொள்ளும்படி இஸ்ரவேலர்களுக்கு தேவன் கட்டளையிட்டார். இது ஓர் திருப்போர் ஆகும். நியாயத்தீர்ப்புக் கென்று அவர் பிரயோகிக்கும் ஆயுதங்களும் பரிசுத்தமாயிருக்க வேண்டும் என்று தேவன் வற்புறுத்துகிறார். தேவன் நம்மைக்கொண்டு உலகத்தில் எதையாவது நடப்பிக்க வேண்டுமென்றால், நாம் அவருடைய கையின் ஆயுதமாக வேண்டுமென்றால் அவருடைய கரத்தில் உபயோகிக்கபட வேண்டுமென்றால், நாம் பரிசுத்தமும், உண்மையுள்ளவர்களுமாயிருக்க வேண்டும், அப்பொழுதுதான் தேவன் நம்மை உபயோகிக்க முடியும்.

இஸ்ரவேலருடைய தினசரி ஜீவியத்திற்குத்தக்கபடி அவர்களுக்கு தோல்வியாவது வெற்றியாவது கிடைத்தது. 'ஆகையால் பொல்லாங்காய் தோன்றுகிற எந்த காரியத்திலின்றும் தினந்தோறும் நாம் நம்மை சுத்திகரித்துக் கொண்டு தூய்மையான வாழ்க்கையாற்றும் படிக்கு யோசுவா புஸ்தகம் நமக்கு எச்சரிப்புக் கொடுக்கிறது. அவர்களுக்கு தேவன் எச்சரித்தது நமக்கும் உரியது.

4) எழுதப்பட்டிருக்கும தேவ வசனமாகிய வேதாகமத்திற்கு கீழ்ப்படிய வேண்டும் யோசு. 1:8:- சொப்பனத்திலும், தரிசனத்திலும் தூதருடைய பணிவிடையிலுமாக இம்மட்டும் தேவன் பேசினார். எழுதப்பட்டிருக்கும் வசனத்திற்கு, நியாயப்பிரமாணத்திற்கு கீழ்ப்படிந்து சகலத்தையும் கைக்கொள்ள இப்புது முறையானது கட்டளையிடுகிறது (யோசு. 1:8). இந்த வார்த்தையை ஏற்றுக் கொண்டு அதற்குக் கீழ்ப்படிந்து நட. ஒரு சத்துருவுக்கும் நீ பயப்பட வேண்டியதில்லை. நான் எப்போதும் உன்னோடு இருப்பேன் என்று கடவுள சொன்னார். எனவே நாம் வாசிக்க வேண்டிய பிரகாரம் நமது வேதாகமத்தை நாம் வாசித்து, அதற்குக் கீழ்ப்படிந்தால் வெற்றியுள்ள வாழ்க்கை செய்யக் கூடியவர்களாக இருப்போம். காட்சி, தரிசனம், சொப்பனம், அற்புதங்கள், அதிசயங்கள், அடையாளங்களைத் தேடிக் கொண்டிராமல் முதலாவது வசனத்துக்குக் கீழ்ப்படிய வேண்டும். யோசுவாவின் புஸ்தகத்தின் ஆரம்பத்திலேயே கர்த்தர் யோசுவாவுக்குக் கட்டளையிட்டது இதுதான். என் தாசனாகிய மோசே மூலமாய் நான் சொன்ன நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்படிந்து நட, அதை தியானி, அதை விட்டு வலது இடது புறம் சாயாதே. அது உன் வாயை விட்டு பிரியாதிருப்பதாக. அப்பொழுது நீ உன் காரியத்தை வாய்க்கச் செய்வாய், ஜெயமடைவாய், எங்கும் புத்திமானாய் விளங்குவாய். நான் உன்னோடுகூட இருப்பேன் என்று கர்த்தர் வாக்கருளுகிறார் (சங் 119:11; எபி. 4:11,12), நாம் வெற்றியடைவதோ, தோல்வியடைவதோ நாம் கர்த்தருடைய வசனத்துக்குகீழ்ப்படிவதற்கு ஏற்றவாறு அமையும். சிலர் கர்த்தருடைய வசனத்தை தள்ளிப்போட்டு, தங்கள் இஷ்டபிரகாரம் காட்சி, சொப்பனம், தரிசனம் என்று சொல்லியும்; கருத்தவர் சொன்னதை கர்த்தர் சொன்னார் என்று சொல்லியும் சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு கிடுகிடு பாதாளத்துக்குப் போய் சேருகிறார்கள். நாம் இவைகளைக் குறித்து எச்சரிக்கையாயிருக்கும்படி யோசுவாவின் புஸ்தகம் முதல் அதிகாரம் 1-9 வசனங்கள் மிகவும் திட்டமாய் போதிக்கின்றன. ஆனபடியினால் யோசுவாவின் புஸ்தகம் நமக்கு அளிக்கிற இந்த நாலு தூதுகளையும் நாம் எப்போதும் நம்முடைய வாழ்க்கையிலே தியானித்து, கைக்கொண்டு நடப்போமாக; யோசுவாவின் புஸ்தகம் முற்றிற்று. ஆமென்!



# 1998 கிறிஸ்மஸ் செய்தி

உலகத் தோற்றத்துக்கு முன்னே கிறிஸ்து பாவத்தில் விழப்போகும் மனிதனை மீட்கும்படி உலகத்தில் அவதாரமாய் வர தீர்மானப்படி புறப்பட்டு விட்டார். ஆம், அவருடைய புறப்படுதல் அநாதி காலத்திலுடையது (மீகா 5:2).

கிறிஸ்து வந்து பாவியான மனிதனுக்காய் கல்வாரி சிலுவையில் மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, உயிர்த்தெழுந்து பரத்துக்கு எழுந்தருளி, பரிசுத்த ஆவியானவரை பூமிக்கு அனுப்புவதன் மூலம் சுவிசேஷத்தை கேட்டு, மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கும் மனிதன், தண்ணீர் ஞானஸ்நானம், பரிசுத்த ஆவியின் ஞானஸ்நானத்தின் மூலம் கிறிஸ்துவுக்குள்ளாகி, கிறிஸ்துவோடு இணைக்கப்பட்டு, புது சிருஷ்டியாகி தேவ சாயலடைந்து தேவ குமாரர்களாய், குமாரத்திகளாய் ஆகி கிறிஸ்துவோடு கூட உலகத்தை ஆளுகை செய்யும்படி தேவன் திட்டமிட்டார்.

அதற்காய் இயேசு கிறிஸ்து மனிதனாய் உலகத்தில் தோன்றினார். தேவ ஆவி மரியாள் மேல் நிழலிட தேவனுடைய வல்லமையால் மரியாளிடத்தில் கிறிஸ்து தோன்றினார். அதனால் மனிதனானார், அவர் தேவனாக இருந்தார். பல அற்புத அடையாளங்களை நிகழ்த்தினார். அதெல்லாம் மனிதருடைய தேவைக்காகவே செய்யப்பட்டன. தன்னை தேவன் என்று காண்பிக்க பெருமைக்காக யாதொன்றையும் அவர் செய்யவில்லை. யூதர்கள் அவரிடத்தில் அடையாளத்தை கேட்ட போது தம்முடைய மரணம், அடக்கம் பண்ணப்படல், உயிர்த்தெழுதலையே அடையாளமாகச் சொன்னார். பரிசுத்தமான வாழ்வு வாழ்ந்தார், இறைவனை வெளிப்படுத்தினார். மனுமக்களுக்காகப் பலியாக வந்தேன் என்றார். என் மூலமாய் நீங்கள் முக்தியடைய முடியும் என்றார். என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவண்டை வரான் என்றார்.

இதற்கெல்லாம் ஆரம்பம் வேத வாக்கியங்களின்படி கிறிஸ்து ஒரு கன்னிகையினிடத்திலே [ஒரே ஒரு கன்னிகையினிடத்திலே] பிறந்ததே. கிறிஸ்து வரவில்லை என்றால், உலகத்தில் வெகுகோடி மககள் காட்டுமிராண்டிகளாகவே இருந்திருப்பார்கள். அவனவன் மனம்போல ஜீவித்து, எல்லோரும் நரகத்திற்குப் போயிருப்பார்கள் இப்பொழுதோ கிறிஸ்துவை விசுவாசித்த, அநேக லட்சக்கணககான கோடிக்கணக்கான மக்கள் பாவத்திலிருந்தும், சாபத்திலிருந்தும், நோயிலிருநதும் விடுதலையாகி மகிழ்ச்சி பெற்று, சந்தோஷத்தோடே தங்தங்கள் வாழ்க்கையை நம்பிக்கையோடே முடித்துள்ளார்கள்.

அநேக கோடிக்கணக்கான மக்கள் இயேசுவண்டை வந்து மனநிறைவுடன் வாழ்கிறார்கள். இயேசுவின் மூன்றரை வருட ஊழியம் உலகத்தை மாற்றியமைத்துள்ளது. உலகத்தில் அநேக பெரியவர்கள், தலைவர்கள் பல்லாண்டு வாழ்ந்து, சாதிக்க முடியாததை பெத்லகேமில் பிறந்த இயேசுவாகிய குழந்தை அநேக மக்களின் வாழ்க்கையை மாற்றியமைத்துள்ளது. இன்னும் தொடர்கிறது.

மற்ற அநேக சாமிகள் ஆசாரிகளாயிருக்கிறபடியால் அவர்களைப் பின்பற்றுகிற மக்கள் காட்டுமிராண்டிகளாய், மிருககுணமுள்ளவர்களாய், கயவர்களாய், கொலைஞர்களாய், இழிஞர்களாய், வஞ்சகர்களாய், பொய்யர்களாய், வேஷதாரிகளாய் மாறிவருகிறார்கள். அவர்கள் கனிகளினாலே அவர்களை அறிவீர்கள் என்ற வேத வாக்கின்படி

அவர்கள் அந்த தெய்வங்கள், பேய்கள் என்பதை அறிந்து கொள்ளலாம். தலைவன் எப்படி அப்படியே குடிமக்கள் என்ற மெய்யான பழமொழியும் நிரூபிக்கிறது.

இயேசுவை நோக்கிப்பார். இறை இயேசுவை நோக்கிப்பார். இதோ உங்களுக்காக தாவீதின் ஊரிலே கிறிஸ்து என்னும் இரட்சகர் பிறந்திருக்கிறார். அவரை விசுவாசியுங்கள்; அவரைத் தொழுது கொள்ளுங்கள்; உங்கள் தெய்வமாக ஏற்றுக் கொள்ளுங்கள்; உங்களுக்கு சமாதானமும், சந்தோஷமும், உங்கள் மேல் தேவ பிரியமும் உண்டாகும்.

# HAPPY CHRISTMAS HALLELUJAH!

# ‘வாசல்’ பிரவேசம்

‘வீட்டுக்கு வீடு வாசற்படி’ என்பது பழமொழி. அதாவது வசற்படி இல்லாத வீடு இல்லையென்பது போல், துக்கமில்லாத மனிதனில்லை, துயரமில்லாத வீடில்லை. ‘அவன் மாம்சம் அவனுக்குள்ளிருக்குமளவும் அதற்கு நோவிருக்கும், அவன் ஆத்துமா அவனுக்குள்ளிருக்கு மட்டும் அதற்கு துக்கமுண்டு’ (யோபு 14:22). தேவனிடமிருந்து தன்னை தூரப்படுத்திக் கொண்டவர்களுக்கும், அந்நிய தேவனைத் தேடி வணங்குவோர்க்கும், பிசாசின் பிடியில் சிக்குண்டவர்களுக்கும் விதைக்கப்பட்டிருப்பது வேதனையே. ‘வஸ்து’ சாஸ்திரம் பார்த்து, எட்டு திசை திரும்பி, நாள் நட்சத்திரம் பார்த்து, தேங்காய் உடைத்து தீவினை நீக்கி, பால் பொங்க, பூசணிக்காய் தொங்க, அக்கினி எழுப்பி ‘வாசல்’ நிலை நாட்டியும் இந்தக் கூட்டத்துக்கு இந்த பழமொழி உண்டாக விட்டுக்கு வீடு துக்கங்கள் ஏன்?

இவர்கள தங்கள் கைகளால் கட்டி, காலடி எடுத்து நுழைந்த வாசல்கள் எல்லாமே இருளுக்குத் தானே வழி காட்டியது. உலகிலேயே உண்டாவது இரண்டு; இருளும், ஒளியும்.. ஒளியாகவும், ஒளிக்கு அதிகாரியாகவுமிருப்பவர் இயேசு கிறிஸ்து. இருளாகவும், இருளில் நடக்கும் அந்தகாரக் கிரியைகளுக்கு காரணமாயிருப்பவன் பிசாசு. தங்கள் இல்லங்களிலும், இருதயங்களிலும் இவர்கள் வருந்தி அழைத்துக் கொண்டதும். இவர்கள் நுழைந்த வாசலும் இந்த இருளின் வழியே. ‘அந்நிய தேவனை நாடி பின்பற்றுகிறவர்களுக்கு வேதனைகள் பெருகும்’ (சங். 16:4). ‘அவர்கள் வெளிச்சத்துக்கு விரோதமாய் நடக்கிறவர்களின் கூட்டத்தார்: அவர்கள் அவர்களுடைய வழிகளை அறியாமலும், அவருடைய பாதைகளில் தரிக்காமலும் இருக்கிறார்கள்’ (யோபு 24:13). இவர்களுக்கு இளைப்பாறுதலில்லை.

காணப்படுகிறதல்ல; காணக்கூடாததும், கர்த்தரால் கட்டப்பட்டதுமான, நமக்குண்டான நித்திய வாசலைத் தேடி அதில் பிரவேசிக்க வேண்டும். ‘நானே வாசல்’ என்றார் இரட்சகர் இயேசு கிறிஸ்து. இது ஆவியில் நிறைந்து தன் இருதயத்தில் உணரும்படியாகக் கொடுக்கப்பட்டுள்ள இரட்சிப்பின் வாசல். இதைக் கண்டவன் இதிலே நுழைந்து தன் கண்களால் அவருடைய ஆலய வாசலையும் காண்பான். காலெடுத்து வைக்கும் தன்னுடைய வீட்டு வாசலையும் காண்பான், இம்மைக்கான இளைப்பாறுதலும், மறுமைக்கான இரட்சிப்பும் இந்த வாசலுக்குள் பிரவேசித்தால்

கிடைக்கும். 'என் வாசல் வழியாய் ஒருவன் உட்பிரவேசித்தால், அவன் இரட்சிக்கப்படுவான், அவன் உள்ளும், புறமும் சென்று மேய்ச்சலைக் கண்டடைவான்' (யோ. 10:9) என்றார் இயேசு. இதை அறியாதவர்களும், இதை அறிந்தும் தேடாதவர்களும், அப்படித் தேட தங்களைத் தகுதிபடுத்தாதவர்களுமே இன்று கிறிஸ்தவர்கள் என்ற பெயரில் மலிந்து கிடக்கிறார்கள்.

ஒரு மனோதத்துவ மருத்துவரின் (Psychiatrist) வீட்டு வாசலில் இரண்டு நோயாளிகள் சந்தித்தார்கள். ஒருவர் மற்றவரைப் பார்த்து, யோ, நான் உள்ளே போகிறேனா, வெளியே வருகிறேனா என்று எனக்கு சொல்லும் என்றான் எதிரே நின்றவர், போய்யா-போ- இது தெரிஞ்சா நான் ஏன் இந்த வாசலுக்கு வரனும் என்றாராம். இன்றுள்ள பெரும்பான்மையான கிறிஸ்தவர்களின் நிலை இதுதான். நாம் சரீரத்துக்குள்ளான மனம் இயற்கைக்கு மாறான நிலையடைய மனநோயாளியாகிப் போகிறோம். தேவ ஆவியின் எழுப்புதலுக்கும் மனமே கருவி. தேவ சித்தத்துக்கு மாறுகிப் போன மனிதனும் மன நோயாளிதானே.

இந்த மனிதர்களெல்லாம் வெறும் கட்டட வாசலைத் தாண்டுகிறார்களே தவிர கர்த்தரின் வாசலான இயேசு கிறிஸ்துவுக்குள் நுழைவதில்லை. பிள்ளையில்லாத வீட்டில் கிழவன் துள்ளி விளையாடினானும். அதுபோல் தேவனால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலர் இல்லாத இடைப்பட்ட காலங்களில் சுய நலக்காரர்களும், சுயபோதனைக்காரர்களும் தேவன் பேரில் உண்டுபண்ணின ஆலயங்களிலெல்லாம், பயனற்றதும், வெறுமையுமான வழிபாடுகள் இந்த இரட்சிப்பின் வழியை காட்டவில்லை.

பாவத்தோடு நுழைந்தவர்கள் பாரத்தோடு வெளிவந்தார்கள். கொடுமை, கொடுமை என்று கோயிலுக்கு போனானாம்: அங்கு கூட இரண்டு கொடுமை சேர்ந்து கொண்டதாம். அருவக்கும் விக்கிரகம் ஆவியில்லாத பிரகாரம், போதகன் பாவி, மமதையோடு மனிதன் கால்களில் பாதரட்சை, பாவிப் பெண்கள் கூட பிரகாரப் பீடத்தில், இவைகளில் எந்தக் காரியம் சத்தியத்துக்குட்பட்டது? வாசல் வழியா பிரவேசியாத இவர்களையெல்லாம் கள்ளர்கள், கொள்ளைக்காரர்கள் என்று இரட்சகர் இயேசு சொல்லுகிறார் (யோ. 10:1). வாசலைக் காணாத, காணக்கூடாத இந்த வழிப்போக்கர்களிடம் தேவன் தன் ஆடுகளை அனுப்புவாரோ? அவர் தன் ஆடுகளை அறிந்திருக்கிறாரே (யோ. 10:15).

இரட்சகர் இயேசு, நானே வாசல் என்றார், வேறு வாசல் இல்லை. அவர் தன் மேய்ப்பனை, பிரதான அப்போஸ்தலனை இந்த வாசல் வழியே பிரவேசிக்கப் பண்ணுகிறார் (யோ. 10:2). அழைத்துப் பரிசுத்தப்படுத்தி அதிகாரப்படுத்துகிறார். இதை கவனியுங்கள், இதுவே சத்தியம் இறங்கி நமக்கு இரட்சிப்பு வழங்கும் வழி. தேவனுடைய ஆடுகளாக அவர் தொழுவத்தை கண்டடைகிறவன் பாக்கியவான். பாவம் செய்த இஸ்ரவேல் மக்களைத் தேவன் அழித்துவிடாதபடி மோசே தேவனுக்கு முன்பாக திறப்பின் வாசலில் நின்றதுபோல் இந்த அப்போஸ்தலர், இரவும், பகலும் தன் சுக துக்கங்களை மறந்து, ஜெபம், தியானம், துதி, ஸ்தோத்திரம் கொண்ட உபவாசம், ஆராதனை என்று ஜீவித்து தேவனுடைய ஆடுகளனைத்தும் அவருடைய சந்நிதியில் சமாதானம் காணச் செய்வார்

இந்த வாசலில் நம் எல்லாருக்கும் விடுதலை அருளப்படுகிறது [யோ. 8:36]. பாவத்துக்கு மரித்து, நீதிக்கு அடிமையாகும் விடுதலை இதுவே. 'தேவனுக்கு அடிமையாக இருந்தீர்களானால், பரிசுத்தமாகுதல் உங்களுக்கு கிடைக்கும் பலன், முடிவோ

நித்திய ஜீவன்.. (ரோம. 6:18,22) இந்த வாசலின் உள்ளும், புறமும் நிலை கொள்ளும் மனிதன் காணும் நன்மைகள் எண்ணுக்கடங்காதவைகளாயிருக்கிறது. சிந்தனைகள் சீர்படும். எண்ணங்கள் இடறாது மனதில் மகிழ்ச்சி கானங்கள் ஒலிக்கும். மனோரம்மியம் என்னவென்று காண்பான்; மாம்ச சிந்தை மறைய உலகத் தேவைகள் குறையும், நோய்கள் நீங்கிப்போகும். 'அப்பத்தையும், தண்ணீரையும் ஆசீர்வதிப்பேன், நோய்களை நீக்குவேன்' என்று கொடுக்கப்பட்ட வாக்குத்தத்தின் வெளிப்பாடு காண்பான்.

பானையில் மாவும், கலயத்தில் எண்ணையும் குறையாது. 'ஆயிரம் நாளைவிட, ஆகாமியக் கூடார வாசத்தைவிட, உமது ஆலய வாசலில் ஒரு நாள் காத்திருப்பது நல்லது' என்று ஞானமாய்ப் பாடுவான் (சங். 84:10). செங்கடல் பிரிந்த போதும், யோர்தான் தண்ணீர் விலகி வழிவிட்ட போதும் துள்ளிய கால்களும் இப்படித்தான் துள்ளிற்று என்று காட்டுவான். கற்பாறையின் தண்ணீரும், காட்டாற்றின நீருற்றும் என் தேவனின் திருவிளையாடல் என்று தியானித்து மகிழ்வான். இவர்கள் அநேகராகயிருந்தாலும் இருதயங்கள் ஒன்றாகிப் பேசும். பரிசுத்தமான இந்தக் கூட்டம் பரமனின் ஆலயத்தை, துதிசத்தத்தால் நிறைக்கும். 'இந்த நீதிமான்களுக்காக வெளிச்சம் விதைக்கப்பட்டிருக்கிறது என்று சத்தியம் சொல்லுகிறது [சங். 97:11].

வாருங்கள், இந்த திருவசனம் சொல்லும் வாசலுக்கு ஆதாயம் தேடி அல்ல. ஆத்துமா இளைப்பாறவும், ஆதாயப்படவும் வாருங்கள். இன்னும் அநேகரை அழைத்து நிலைப்படுத்த வாருங்கள். இந்த தொழுவத்திலுள்ளவைகளெல்லாமல் வேறு ஆடுகளும் உண்டென்று சொல்லி அவைகளையும் கொண்டுவந்து ஒரே மந்தையாக்க சித்தம் கொண்டுள்ளார் [யோ. 10:16]. ஒருவராய் அநேக அதிசயங்களை செய்யும் தேவனின் வாசலும் ஒன்றே. இதோ புதிய எருசலேம் சபையில் அவர் இறங்கி வாசலாய், வழியாய், ஜீவனாய், சத்தியமாய் இருக்கிறார். அவருடைய ஆடுகளனைத்தும் ஒன்றுகூட, ஒரே மந்தையாக தங்கள் ஜீவனைத் தந்து நிற்கும்; அப்போஸ்தலா தீர்க்கதரிசிகளுக்கு, ஊழியர்களுக்கு உற்ற துணையாயிருநதால் மனிதனே நீ ஒளியிலுள்ள பரிசுத்தவான்களுடைய சுதந்தரத்தில் பங்கடைவாய் [கொலோ. 1:12].

மாறாக உமியைக் கொண்டு வந்து கொட்டிவிட்டு, அரிசியை அள்ளிக்கொண்டு போகாதே. ஆண்டவர் இயேசு அங்கு வாசலாக நிலைத்திருக்கிறார். வெளியாகத் தாண்டும் போது தண்டனைக்கு தப்பமாட்டாய். நன்மை கண்ட நாம், இளைப்பாறுதல் பெற்ற நாம் இன்னும் இதைக் காணாத அநேகருக்காக பாடுபடவேண்டும்; அதுவே நம் இளைப்பாறுதலை நிலைப்படுத்தும். 'என் ஆத்துமாவே, கர்த்தர் உனக்கு நன்மை செய்தபடியால், நீ உன் இளைப்பாறுதலுக்கு திரும்பு' [சங். 116:7]. நமக்கு கிடைத்த விடுதலையின். இரட்சிப்பின் வாசலில் நுழைந்து, நாம் காணிக்கைகள், பொருத்தனைகள், துதிஸ்தோத்திரம்செலுத்தி மகிழ்வோம். 'கர்த்தருடைய ஆலயத்தின் பிரகாரங்களிலும், எருசலேமே உன் நடுவிலும் [பொருத்தனைகளை] நிறைவேற்றுவேன், அல்லேலூயா' (சங். 116:14).



# சாட்சி

என்னுடைய பெயர் அகிலா என் தகப்பனரின் பெயர் இஸ்ரவேல். நான் 9-வது வகுப்பு படிக்கிறேன். நாங்கள் நாகர்கோவில் புதிய எருசலேம் சபையின் விசுவாசிகள். எனக்கு கடந்த நான்கு ஆண்டுகளுக்கு முன்பே தேவன் தம்முடைய பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தை தந்துள்ளார்.

தேவன் எனக்கு நல்ல காட்சி, தரிசனங்களை தந்து என்னோடு பேசுவார். என்னோடு படிக்கும் மாணவிகளுக்கு நான் புதிய எருசலேம் சபையின் மேன்மையைக் குறித்து கூறுவேன், சில மணவிகள் ரொம்ப ஆச்சரியமாய் கேட்பார்கள், சில மாணவிகள் என்னைப் பரிகாசம் பண்ணுவார்கள். புதிய எருசலேம் காரி வருகிறாள் என்று என்று எனக்கு பட்டப்பெயரும் சூட்டுவார்கள். நான் புதிய எருசலேம் பிள்ளை என்பதை பிறர் வாயால் கூறுவதை கேட்கும்போது எனக்கு சந்தோஷமாகவே இருக்கும்.

இப்படியிருக்க போனவாரம் ஜூலை 1998 இராத்தரிசனத்தில்: ஒரு பெரியவர் என்னிடம் வந்து, உன்னுடைய சபையின் பெயர் என்ன? என்று கேட்டார். நான் புதிய எருசலேம் சபை என்று கூறினேன். அதற்கு அவர், உன் சபையின் பெயர் வேதாகமத்தில் இருக்கிறதா என்று கேட்டார். உடனே நான் ஆமாம். வெளி. 21:2ல் யோவானாகிய நான் புதிய எருசலேமாகிய பரிசுத்த நகரத்தை தேவனிடமிருந்து பரலோகத்தை விட்டு இறங்கி வரக்கண்டேன் என்று எழுதியிருக்கிறது என்று கூறினேன். அதற்கு அவர், வேத புஸ்தகத்தில் புதிய எருசலேம் நகரம் என்று தானே எழுதியிருக்கிறது. நீ புதிய எருசலேம் சபை என்று சொல்லுகிறயே அது எப்படி சரியாகும் என்று கூறினர். அப்பொழுது நான்: உலகமெங்கிலும் சிறு சிறு கூட்டமாக சபையாக ஆராதிக்கிறோம். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரும்பொழுது எல்லாம் ஒன்றாய் கூட்டிச் சேர்க்கப்பட்டு ஒரே நகரமாக மாறிவிடும் என்று கூறினேன். அது சரிதான என்று அந்தப் பெரியவர் கூறினர்.

பின்னர் அவர் உங்கள் சபையில் சிறு பிள்ளைகளுக்கு ஞானஸ்நானம் கொடுப்பீர்களா? என்று கேட்டார் கொடுக்க மாட்டார்கள் என்று கூறினேன். அது ஏன் கொடுக்கமாட்டார்கள்? என்று கேட்டார். மாற்கு 16:16ல் வசனத்தில் 'விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான். விசுவாசியாதவனே ஆக்கினைக்குள்ளாகத தீர்க்கப்படுவான்' என்று எழுதி இருக்கிறதல்லவா. ஆகையால் சிறு பிள்ளைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்க மாட்டார்கள் என்று கூறினேன். அந்தப் பெரியவர் நீ போகிற புதிய எருசலேம் சபைதான் மெய்யான திருச்சபை என்று கூறிக் கடந்து போனர்; நான் விழித்துக் கொண்டேன். நானும் என் வீட்டாரும் மெய்யான திருச்சபையில் சேர்க்கப்பட்டதற்காக கர்த்தரைத் ஸ்துதிக்கிறேன். பிள்ளைகளே நீங்களும் புதிய எருசலேம் சபையாகிய மெய்யான திருச்சபையில் சேர்ந்து கொண்டு தேவாசீர் பெறுவீர்களாக?

"தேவனைத் தேடு"
**"SEEK GOD"**

**Regd No. 040088/84**
**Postal Regd. No, MH BY NE-84/85**
**Tamil Monthly Magazine**

"ஆலயத்தைக் கட்டுங்கள். அதின் பேரில் பிரியமாயிருப்பேன். அதிலும் என் மகிமை விளங்கும்" (ஆகாய் 1:8).

# கோழியூர் ஆலயப் பிரதிஷ்டை

## தென் ஆற்காடு மாவட்டம், தமிழ்நாடு

9-9-1998 புதன் கிழமை அன்று சுமார் 11-00 மணிக்கு திட்டக்குடி சபையை அங்கிருந்து மாற்றி, ஊர்வலமாக ஸ்துதி பாடலுடன் கோழியூர் சென்று, கோழியூரில் புதிதாகக் கட்டப்பட்ட சிற்றாலயத்தை திருச்சபையின் தலைமையும் அப்போஸ்தலருமா கிய N. லாசர் அவர்கள் [பம்பாய்] திறந்து வைத்து, பிரதிஷ்டை ஆராதனை நடத்தி, சபையை அங்கே அமரச் செய்தார்கள். திருச்சபையின் பல கிளைகளிலிருந்து ஊழியர் களும், சபை மக்களும், பொது ஜனங்களும் வந்து இந்த வைபவங்களில் கலந்து கொண்டு இறைவனை போற்றினார்கள், புகழ்ந்தார்கள், தொழுது கொண்டார்கள் என்பதை மகிழ்ச் சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஊழியர் S. ஜேக்கப்,
புதிய எருசலேம் சபை (கிளை),
கோழியூர், [Near திட்டகுடி].
தென் ஆற்காடு மாவட்டம்,
தமிழ்நாடு.

### அறிவிப்புகள்

**முழு இரவு விழிப்பு ஜெபம்**

6 [செவ்வாய்] அக்டோபர் 1998
4 [புதன்] நவம்பர் 1998
3 [வியாழன்] டிசம்பர் 1998

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
ஆண்டு சந்தா Rs. 30-00
வெளிநாடு Rs. 400-00

அனுப்ப வேண்டிய முகவரி :
CHIEF APOSTLE N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK NAGAR,
DARGA CROSS ROAD, BHANDUP,
BOMBAY-400 078, INDIA.

1. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

2. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

3. "புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிக் கையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, and Published by: Chief Apostle N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai 400 078

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 171 - DEC. 98'

## "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

– மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF APOSTLE N. LAZAR

MUMBAI, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும். சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக்கு காண்பித்து, கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF APOSTLE N LAZAR

## இதழின் உள்ளே ...

# ஆசிரியர் உரை

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். தேவன் தம்முடைய பிள்ளைகளை ஆசீர்வதிக்கிறார். ஆசீர்வதிக்க வேண்டுமென்பதே அவருடைய சித்தம். ஆனாலும் மனிதனுடைய பாவங்கள் அவர்களுக்கு நன்மை வரவொட்டாமல் தடுக்கிறது (எரே. 5:25). இரட்சிக்கக் கூடாதபடிக்கு அவருடைய கை குறுகிப் போகவில்லை. கேட்கக் கூடாதபடிக்கு அவருடைய செவி மந்தமாகவில்லை. விடுவிக்கக் கூடாதபடிக்கு அவர் பெலனற்றவருமல்ல. ஆனபடியினால் இந்த ஆண்டின் முடிவிலேயே நம்முடைய தவறுகளையெல்லாம் அறிக்கை செய்து, மன்னிப்புக் கேட்டு, ஒப்புரவாக வேண்டியவர்களிடத்தில் ஒப்புரவாகி வழிகளிலே நின்று பூர்வ பாதைகள் எவையென்று கேட்டு, விசாரித்து, நல்ல வழி எங்கே என்று பார்த்து, அதிலே நடப்போமாக. அப்பொழுது நம்முடைய ஆத்துமாவுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும். தேவ ஆசீர்வாதம் பெருகும். நம்முடைய ஜெபத்தை தேவன் கேட்பார். இந்தப் புத்தாண்டு நமக்கு ஆசீர்வாதமும், மகிமையுமாயிருக்கும். தேவ சமாதானம் இந்த 1999 ம் புத்தாண்டிலும் நதியளவாய் புறப்பட்டு வருவதாக. இறைவனுடைய கற்பனைகளைக் கைக் கொள்வோமாக! புதிய எருசலேம் செய்தி வாசகர்கள் எல்லாருக்கும் 1999 ம் புத்தாண்டு வாழ்த்துக்களைக் கூறிக் கொள்கிறோம். தேவ சமாதானம் உங்கள் இருதயங்களில் ஆளக்கடவது!

*கிறிஸ்துவுக்குள்,*

CHIEF APOSTLE N. LAZAR.

# ஒருவன் மல்யுத்தம் பண்ணினலும்...

ஒருவன் மல்யுத்தம் பண்ணினலும் சட்டத்தின்படி பண்ணுவிட்டால் முடிசூட்டப்படான் என்று வேதம் ஆணித்தரமாக கூறுகிறது (2 தீமோ. 2:5). சட்ட திட்டங்களை வரைந்து நமக்களித்த தேவன், அவைகளின்படி நாம் செய்கிறோமா என்று ஆவலுடன் கண்ணோக்கிக் கொண்டிருக்கிறார். வாகன ஒட்டுனர் முதலாவது சாலை விதி முறையை நன்றாக கற்றாலொழிய அவருக்கு Picense கொடுக்கப்பட மாட்டாது. நியாயப் பிரமாணம் ஓர் சட்ட புஸ்தகமே! சட்டங்களை சரியாக கற்றவனே சட்ட நிபுணராக திகழ முடியும். பள்ளிகளில் படிக்கும் குழந்தைகள் சீருடை அணியாமல் பள்ளிக்கு செல்வாரேயாகில் உள்ளே அனுமதிக்கப் பட மாட்டார். ஏன் என்றால் சீருடை அணிவது பள்ளி சட்டம். இப்படியே அடுக்கி கொண்டே போகலாம் சட்டங்களை குறித்து!

கிறிஸ்தவ வாழ்வில் சில சட்ட விதி முறைகளை தேவன் நியமித்திருக்கிறார். வெருமனே ஒருவனும் லக்கை சென்றடைய முடியாது. நோக்கமுடையவனாய் ஜெபிப்பவனே வெற்றி கனியை பறித்து உண்பான். வேதாகமத்தில் ¡ எங்கெங்கு 'ஆனாலும்' மற்றும் 'ஆகையால்' வார்த்தைகள் இடம் பெறுகின்றனவோ அவைகளை கிரமமாய் தியானித்தால் அங்கு தேவன் எதை அழுத்தி கூற முற்படுகிறார் என்பதை அறிய முடியும்.

அன்றாட வாழ்வில் இறையாசீரை பெற ஜெபம் செய்வது, வேத வாசிப்பு, தேவாராதனை, நற்கிரியைகள், பிறருடனான தொடர்புகள் முக்கிய இடம் பெறுகின்றன. நமது தொடர்புகள் முக்கிய இடம் பெறுகின்றன. ஆனால் இவைகளை செய்யும்போது நாம் வசனத்தின்படி செய்கிறோமா? என கவனிப்பது மிக அத்தியாவசியம். சிலர் இவைகளை உணர்ச்சிவசப்பட்டு செய்ய ஆரம்பித்து, வேகமாக ஒடி பின்பு பாதியிலே மூச்சிறைத்து நின்று விடுவது, பின்னோக்கி சென்று விடுவது போன்ற காரியங்கள் நிகழ்கின்றனவே.

உதாரணம்: வருட ஆரம்பத்தில் எல்லாரும் தீர்மானங்களை எடுக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் அதே வருட முடிவில் நான் எடுத்த தீர்மானத்தில் நிலைத்திருந்து வெற்றி பெற்றேன் என்று வெற்றி முழக்கமிடுபவர் சொற்ப மக்களே! ஏன் தோல்விகள்?, ஏன் முடியாமை?, ஏன் சாதனையற்ற வாழ்க்கை? இவைகளுக்கெல்லாம் ஒரே பதில் அர்ப்பணிப்பற்ற வாழ்வே! ஒரு காரியத்தில் தன்னை முழுவதுமாக ஈடுபடுத்தாவிட்டால் தோல்வியையே தழுவ நேரிடும்.

ஆகையால் இப்பொழுது நாம் செய்ய வேண்டுவது என்ன? தேவா இவைகளை செய்ய உமது கிருபை தேவை என் வாஞ்சையுடன் இறைவனை நோக்கி கூப்பிடுவதும் தேவன் நம்மில் தமது கிரியைகளை நிறைவேற்ற அவருக்கு நம்மை முழுவதும் ஒப்புக் கொடுப்பதுமே நமது கடமையாயிருக்கட்டும்.

1) நாம் ஜெபம்பண்ணினலும்:-

ஜெபம் மனிதனின் வாழ்வில் முக்கிய இடம் பெறுகின்றது. நாத்திகனும் கூட கடவுள் இல்லை என வாதிட்டாலும், அவனுக்கு கஷ்டம், துன்பம், துக்கம் ஏற்படும்போது கடவுளே என்னை காப்பாற்றும் என அவன உள்ளம் நிச்சயம் கூப்பிடத்தான் செய்யும். ஆனால் கிறிஸ்துவினுடையவர்களாகிய நாமோ ஜெபம்பண்ண வேண்டும் என நமது ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவினால் கட்டளை பெற்றுள்ளோம் பின் வரும் வசனங்களை கவனியுங்கள்.

a). அன்றியும் நீ ஜெபம்பண்ணும் போது. (மத். 6:5).

b) நீயோ ஜெபம்பண்ணும்போது (மத் 6:6)

c) அன்றியும் நீங்கள் ஜெபம்பண்ணும் போது [மத். 6:7].

d) நீங்கள் ஜெபம்பண்ண வேண்டிய விதமாவது [மத். 6:9].

e) மேலும் நான் உங்களுக்கு சொல்லுகிறதாவது, கேளுங்கள், தேடுங்கள், தட்டுங்கள் [லூக். 11:9].

f) சோர்ந்து போகாமல் எப்பொழுதும் ஜெபம்பண்ண வேண்டும் [லூக். 18:1]. இன்னும் பல, பல!

நாம் ஜெபிக்கத்தான் செய்கிறோம். ஆனாலும் அவர் சித்தத்தின்படி கேட்கிறோமா? (1 யோ. 5:14).

பாவங்களை அறிக்கை செய்து தூய்மையான மனதுடன் தேவனை நோக்கி கூப்பிடுகிறோமா? (ஏசா. 59:2).

அற்புதங்கள் நடைபெற வேண்டும் என்கிற அவலுடன் ஜெபிக்கிறோமா? (அப். 4:24-31)

ஒரு மனதுடன் விண்ணப்பிக்கிறோமா? (மத். 18:19).

தேவன் ஜெபத்தை கேட்கிறவரென்றும், தம்மை தேடுபவர்களுக்கு பலனளிப்பவர் என்றும் விசுவாசத்தோடு ஜெபிக்கிறோமா? (சங். 65:2; எபி. 11:6).

அப்படியில்லையென்றால் இனிமேலாவது இவ்விதம் ஜெபிப்போமாக! நமது ஜெபம் கேட்கபடவில்லையென்றால் நம்மிடத்தில் ஏதோ குறை இருக்கிறது. தீவிரமாக நம்மை ஆராய்ந்து, தேவ சமுகத்தை தேடுவோமாக! ஜெபிக்கும் ஒவ்வொருவருக்கும் இறைவனின் பதில் மூன்று விதங்களில் வெளிப்படுகின்றது.

1) சரி 2) இல்லை 3) பொறுத்திரு என்பதே. பதில் பெற்றுவிடுவதே நமது நோக்கமாயிருக்கட்டும். ஏன் என்றால் ஒருமுறை தாவீது தேவனிடம் 'ஆண்டவரே, பெலிஸ்தரை பின் தொடர்ந்து நான் போகலாமா? போகலாகாதா? என்று கேட்டபோது இறைவனின் பதில் நீ போ! ஆனாலும் நேராய் போகாமல், பின்னாலே சுற்றி முசுக்கட்டை செடிகளின் நுனிகளிலே செல்லுகிற இரைச்சலை கேட்கும்போது, வேகமாய் எழும்பிப் போ என்பதே [2 சாமு. 5:23-25]. இறைவன் தனக்கு முன் செல்வதை முசுக்கட்டை செடிகளில் உண்டாகும் இரைச்சலை கேட்க தாவீது எவ்வளவு பொறுமையாக காத்திருந்திருப்பார் என்பதை நீங்கள் சிந்தித்ததுண்டா? மட்டுமல்ல, இரைச்சலின் சத்தத்தைக் கேட்க தாவீதின் காதும் மிகவும் கூர்மையானதாயிருந்திருக்கும். நாமும் நமது காதை தீட்டி இறைவனின் பதில் பெறும் நோக்கத்துடன் விண்ணப்பம் பண்ணுவோமாக!

நிச்சயமில்லாமல் ஜெபிக்காதீர்! (1 கொரி. 9:26).

வெறுமனே கடமைக்காக ஜெபிக்காதீர் (1 கொரி. 9:21).

ஆகாயத்தில் அடிப்பவராக சிலம்பம் பண்ணாதீர்கள்! [1 கொரி. 9:26].

ஆபிரகாமைப்போல் ஜெபித்து உங்கள் சகோதரர் [சகோதரி] அழியாமல் தப்புவிக்கப்படுவதை கண்டு மகிழுங்கள். ஈசாக்கை போல் ஜெபித்து உங்கள் விதை பலன் தந்திருப்பதை கண்டு மகிழுங்கள். யாக்கோபை போல் ஜெபித்து தேவ பாதுகாப்பை, தேவாசீர்வாதத்தை அனுபவியுங்கள். தானியேலைப் போல் ஜெபித்து தேவ ஞானத்தை பெறுங்கள். யோபை போல் ஜெபித்து உங்கள் சிறையிருப்பு மாறியிருப்பதை காணுங்கள்.

ஜெபியுங்கள், ஜெபியுங்கள், ஜெபித்துக் கொண்டேயிருங்கள் எது மட்டும்?

தேவன் வந்து தமது நீதியை உங்கள் மேல் வருஷிக்கப் பண்ணுமட்டும் [ஓசி. 10:12]. ஏன் என்றால், நோக்கமற்ற ஜெபம் ஆகாயத்தில் அடிக்கிறவர்களாக சிலம்பம் பண்ணுவதற்கு சமானம்.

2) நீங்கள் வேதம் வாசித்தாலும்:-

ஆவிக்குரிய ஒழுங்குகளில் வேத வாசிப்பு சிறப்பு அம்சமாக இடம் பெறுகின்றது. வேதத்தின் மூலமே நாம் தேவனை குறித்து, சிருஷ்டிப்பின் வரலாறு, பாவம் ஏற்பட்ட விதம், பாவத்தை போக்க கிறிஸ்து உலகத்தில் பிறந்தது, நமக்காக அவர் மரித்தது, அடக்கம்பண்ணப்பட்டு உயிர்த்தது, திருச்சபை எழும்பின சரித்திரம் இனிவரும் நாட்களில் ஓர் நாள் அவர் இரண்டாம் விசை பூமியில் தோன்றுவார், நியாயத்தீர்ப்பு போன்ற பல சத்தியங்களை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. ஆனால் வெறுமனே இவைகளை அறிந்து கொள்ள மாத்திரம் வேதம் கொடுக்கப்பட்டுள்ளதா? இல்லை. இரட்சிக்கப்பட்ட ஒவ்வொரு மனிதனும் தனது இரட்சிப்பு நிறைவேற பிரயாசப்பட வேண்டும் என்றும், அனுதினமும் அவன் தன்னை வேதம் என்னும் கண்ணாடி முன் நிறுத்தி நோக்கி, தனது ஆத்துமாவின் நிலையை உணர வேண்டும் என்று போதிக்கிறது.

ஜெபம் எப்படி நாம் தேவனோடு பேசுவதாக இருக்கிறதோ அதேபோல் வேதம் வாசிக்கும்போது தேவன் நம்மோடு பேசுகிறார். இந்த உணர்வு இல்லாமல் வேதம் வாசிப்பது தேவ சத்தத்தை கேட்டும் உணராதிருக்கும் இருதயமாகவே திகழும் என்பதில் சந்தேகமேயில்லை.

வேத வாசிப்பில் முக்கிய நோக்கம் தேவன் என்னிடம் என்ன கூறுகிறார்? என்ற கேள்வியுடன் அதனை கிரகிக்க முற்பட வேண்டும். அநேகர் இந்நாட்களில் வேதத்தை வாசிக்கிறார்கள் (They are Reading the Bible) ஆனால் அதை படிக்கத் தான் மறுக்கிறார்கள் (But are negpeeting to study it) இரவும் பகலும் அதில் தியானமாயிருந்தால். அவன் செய்வதெல்லாம் என்னும் வாக்குத்தத்தத்தை சுதந்தரிப்போம்.

கர்த்தருடைய வேதத்தின்படி நடக்கிற உத்தம மார்க்கத்தார் பாக்கியவான்கள் [சங். 119:1]. ஆம் வேதத்தின்படி நடக்க வேண்டும். நம்மைக் காண்பவர்கள், இவர்கள் கிறிஸ்தவர்கள் என்று நம்மை குறித்து ஆச்சரியப்பட்டு தங்கள் மூக்கின்மேல் விரலை வைக்கும் அளவு நாம் ஏன் ஜீவித்து காண்பித்து கூடாது? கோபப்படுபவர்கள், சண்டையிடுகிறவர்கள், தூஷண வார்த்தைகளை உபயோகிப்பவர்கள் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்பதில்லை என்னும் சத்தியத்தை உணர்ந்துள்ளவர்கள் எத்தனைபேர்? மிக சொற்பமானவரே! வேதத்தை சத்தமாக வாசித்தபோது ஜனங்கள் தங்களது பாவ நிலையை உணர்ந்தார்கள், உடனே பாவத்தை தங்களை விட்டு அகற்றினார்கள் [நெகே. 13:1-3].

எஸ்றா போன்ற பக்தர்களின் உன்னத நிலை, அவர்கள் தேவ கட்டளைக்கு தங்களை மனப்பூர்வமாய் ஒப்புக் கொடுத்து, வேதத்தை ஆராய்ந்து, அதின்படி செய்ய தனது இருதயத்தை பக்குவப்படுத்தியிருந்ததிலிருந்து அறிய முடிகிறது: [எஸ்றா 7:10].

சிறு குழந்தைகளை அனுதினமும் பாடம் படி, படி என்று அடியோ தண்டமாய் பெற்றோர்கள் அடிக்கிறார்கள். தேவனும் தினமும் நம்மை வேதத்தை படி, படி என்று அடித்தாலொழிய சிலர் வேதத்தை கையிலேயே எடுக்க மாட்டார்போல் தெரிகிறது. ஒரு சிலர் கொடுக்கும் சாக்குபோக்கு, கண் தெரியவில்லை, ஆகையால் படிக்கவில்லை மூக்கு கண்ணாடி வாங்கி அணிந்து, ஏன் இறைவனின் வார்த்தைகளைபடிகக கூடாது?

வேத வாசிப்பில் நீங்கள் ஆர்வமற்றவர்களாயிருப்பின் ஒரு சிறுகதையை [நான் சமீ

பத்தில் படித்தது] கீழே சுருக்கமாய் தருகிறேன், படியுங்கள்.

சுவிசேஷகர் Robeet. L. Sumner தன்னுடைய புத்தகமாகிய "தேவனுடைய வார்த்தையின் மகத்துவம்" என்னும் நூலில் ஒரு கிறிஸ்தவ விசுவாசியைக் குறித்து இவ்வாறு எழுதியுள்ளாராம். கன்சாஸ் என்னும் பட்டணத்தில் நடந்த பயங்கர குண்டு வெடிப்பின்போது இந்த விசுவாசி பயங்கரமாய் காயப்பட்டு தனது இரண்டு கண்களையும், இரண்டு கைகளையும் இழந்து விட்டார். அவருக்கு ஏற்பட்ட ஒரே கவலை, அய்யோ நான் வேதம் வாசிக்க முடியாமல் என் கண்களின் ஒளியை இழந்து விட்டேனே என்பதே!

இப்படியிருக்கும்போது ஓர் நாள் இவர் கேள்விப்பட்டாராம். இங்கிலாந்து தேசத்தில் ஓர் பெண் தனது உதடுகளால் குருடர்கள் வாசிக்கும் Braille என்னும், எழுத்துக்களை வாசிப்பதாக அறியவே உடனே ஒரு Braille Bible வாங்கிவர சொல்லி தனது உதடுகளால் அந்த எழுத்துக்களை தொட முற்பட்டபோது தான், இவர் அறிந்து கொண்டார். தனது உதடுகளின் நரம்புகளும் செயலிழந்துள்ளது என்பதை. ஆனும் அவர் வேதத்தை எப்படியாவது வாசிக்க வேண்டும் என்னும் ஆவலில் தொடர்ந்து முயன்று கொண்டிருந்தார். ஓர் நாள் திடீரென்று இவர் தனது உதடுகளால் அந்த எழுத்துக்களை தொட முற்பட்ட போது இவரது நாக்கு வெளியே வரவே அந்த நாக்கின் மூலம் அந்த வேத எழுத்துக்களை அவர் உணர முடிந்தது. அவருக்கு ஒரே சந்தோஷம், துள்ளினர், குதித்தார்,

சத்தமாக இவ்வாறு கூறினராம். "I can read the holy bible with my tongue" [என் நாவின் மூலம் நான் பரிசுத்த வேதாகமத்தை படிக்க முடிகிறது] என்பதே.

சுவிசேஷகர் Robeet. L. Sumner தனது புத்தகத்தை எழுதி முடிக்கும் முன் அந்த விசுவாசி தனது நாக்கின் மூலமாகவே முழு வேதாகமத்தை நான்கு (4) முறை படித்து முடித்திருந்தாராம்

ஒரு குருடர், அங்கவீனமாய் மாறிப் போனவர் இவ்வாறு வேதத்தின் மீது அன்பு வைத்திருந்தாரேயாகில், நல்ல கண்களையும் வேதத்தை புரட்டி, ஆராய்ச்சி செய்து

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. S. மனோகர் ரூபன் | செல்வி எஸ்தர் ராணி | வள்ளியூர் | 28-10-98 |

வாசிக்க, நல்ல கைகளையுமுடைய நாம் எவ்வளவு அதிகமாய் வேதத்தை வாசித்து அதின்படி நடக்க வேண்டும். ஒரு கனம் மேலேயுள்ளவரை சிந்திப்போம். அந்த விசுவாசி ஏன் விடாப்பிடியாக முயன்றார்? வேதம் என்ன சொல்லுகிறது? என்பதை அறிய வாஞ்சையாயிருந்ததினாலல்லவா? ஆகையால் தேவனுடைய வார்த்தைகளை வாசித்தாலும் அதின்படி நடவாமல் இருப்போமானால் நமது வேத வாசிப்பு வீண்.

வேத வாசிப்பில் மிகவும் தீவிரமாயிருந்த ஓர் பரிசுத்தவான் அப்போஸ்தலனாகிய பவுல். தீமோத்தேயுவுக்கு தனது கடைசி கடிதத்தை எழுதும் போது அவர் மிகவும் வாஞ்சையுடன் கேட்கும் இரண்டு பொருள்கள் என்ன? 1) அவருடைய மேல் அங்கி 2) அவருடைய தோற்சுருள்கள், புத்தகங்கள் (2தீமோ.4:13). அவர் மரிக்க போகும் நேரம் சமீபித்ததை அறிந்தும் தனது வேதம், வாசித்த புஸ்தகங்கள் தன்னோடு இருக்க விரும்பினார் என்பது புலப்படுகிறதல்லவா? இத்தனைக்கும் அவர் பரலோகத்தை கண்டவர் (2 கொரி. 12:1-6), உயிர்த்த இயேசுவை தரிசித்தவர் (அப.9:5), பரிசுத்த ஆவியினால் அற்புதங்களை நிகழ்த்தியவர் [அப். 14:10], தேவ ஆவியினால் வேத எழுத்துக்களை, சத்தியத்தை பரப்பினவர் [2 பேது. 3:15,16]. அப்படியிருந்தும் முதிர் வயதிலும் வேதத்தை கற்க, அதின்படி நடக்க தன்னை ஆராய்ந்து பார்க்க, தேவ சத்தத்தை கேட்க அவர் வாஞ்சித்தார் என்று அறிய முடிகிறது. நாம் எப்படி இருக்கிறோம்?

இரு சகோதரர்கள் தங்களது தகப்பனின் தோட்டத்தை சுற்றிப் பார்த்தபோது ஒரு மரம் மிகுந்த கனிகளால் நிறைந்திருந்ததை கண்டார்களாம். இருவரும் நன்றாக வயிறு நிறைய கனிகளை பறித்து புசித்துவிட்டு வீடு திரும்பும் சமயம் மூத்தவர் மீதியிருந்த அத்தனை கனிகளையும் பறித்து சென்றாராம். ஆனால் இளையவரோ அந்த மரத்தையே பிடுங்கி தனது வீட்டினருகில் கொண்டு சென்று நட்டு வைத்து தேவைப்பட்டபோதெல்லாம் அதின் கனிகளை பறித்து உண்டாராம். மூத்தவரோ தான் கொண்டு சென்ற வெறும் கனிகளை சிறிது நாள் மாத்திரம் உபயோகிக்க முடிந்தது. வேதாகமம் இந்த மரத்தைபோல் உள்ளது. வேதத்தை இருதயத்தில் பதித்து வைத்தால் தான் நமக்கும் பிரயோஜனம், பிறருக்கும் நமது கனிகளை உண்ண கொடுக்கலாம். விதை முளைத்தெழும்பி மரமானால் தான் அநேக பட்சிகள் கடந்து வந்து நம்மிடத்தில் தங்கி இளைப்பாறிவிட்டு செல்லும்.

வேதத்தை வாசிப்போமாக!

வேதத்தை நேசிப்போமாக!

வேதத்தை தியானிப்போமாக!

வேதத்தின்படி நடப்போமாக!

ஏன் என்றால் நீங்கள் வெறுமனே வேதம் வாசித்தாலும் அதின்படி நடவாவிட்டால்- அவனவன் நடக்கைக்குத்தக்கதாக அவனவனுக்கு பலனளிக்கிறார் (யோபு 34:11) என்று பக்தனாகிய எலிகூ கூறுகிறார்.

## ஞானஸ்நானம்

7-10-98 அன்று குமராட்சி கிளை சபையில் 21 பேர்கள் திருமுழுக்குப் பெற்று திருச்சபையின் அங்கமானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### 3) தேவாராதனை:-

உன் தேவனாகிய கர்த்தரை பணிந்து கொண்டு அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வாயாக [மத். 4:10,11]. இன்று இயேசுவானவர் கூறியே சாத்தானை விரட்டியடித்தார். தொழுகை என்பது நமது உள்ளத்திலிருந்து இறைவனுக்கு செலுத்தப்படும் நன்றி காணிக்கை. தேவனே நீர் எனக்கு செய்த எல்லா உபகாரத்துக்கும் நான் என்னத்தை செலுத்துவேன்? இரட்சிப்பின் பாத்திரத்தை எடுத்து கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்வேன் என்று முழங்குகிறார். பக்தனாகிய தாவீது.

மேலும் அவர் கூறுகிறார், 'என் ஆத்துமாவே நீ கர்த்தரை ஸ்தோத்தரி' நதொழுது கொள் என்கிறார். முதல் முதலாக உண்மையான ஆராதனை செய்த ஆபேலை, பொல்லாங்கனால் உண்டாயிருந்த காயீன் கொலை செய்து போட்டான். அப்படியானால் உண்மையான ஆராதனை செய்பவர்களை சாத்தான் கங்கனங்கட்டி கொண்டிருக்கிறான். நாம் ஜாக்கிரதையுள்ளவர்களாய் ஆராதனையின்போது ஒரு மனமுடையவர்களாய் திகழுவோமாக.

ஆராதனையின்போது ஒரு மனம் இல்லாவிட்டால் நமது ஆராதனை வீண். பவுல் கூறுகிறார், 'நான் ஆவியோடும் பாடுவேன், கருத்தோடும் பாடுவேன்' நமது பலி அங்கீகரிக்கப்படும் வண்ணமாக ஆராதனை செய்வதவசியம். பிள்ளைகள் ஆராதனையின்போது சில்மிஷம் செய்வதைக் கண்டு ரசிக்கக் கூடாது. அவர்களைக் கண்டித்து, நம்மோடு அவர்களும் தேவாசீர்வாதம் பெற அவர்களை ஒரு ஒழுங்குக்குள் கொண்டு வர வேண்டும். அப்படி செய்ய தவறினால் அவர்கள் மேல் சாபத்தை வரவழைப்பவராய் பெற்றோர் கருதப்படுவார்.

நமது ஆண்டவராகிய இயேசு மொழிந்த வார்த்தைகளை கவனமாய் கேட்டுக்கொண்டிருந்த ஜனங்களுடன் அவர்கள் குழந்தைகளும் இருந்தனர் ஆனால் மூன்று நாட்களாய் அவர்கள் சாப்பிடாமல் இருப்பதை இறைவன் கண்டறிந்து, ஓர் அற்புதத்தை நிகழ்த்தி ஸ்திரீகளும், பிள்ளைகளும் தவிர 5000 பேர் அவைகளை உண்டனர் என வேதம் போதிக்கின்றது. பிள்ளைகள் மூன்று நாட்கள் சாப்பிடாமல் இருந்தனர். ஆனால் அவர்கள் பெற்றோரை தொல்லைப்படுத்தவில்லையே.

இன்று நமது தாய்மாரோ கூட்டத்திற்கு வந்தவுடன் பிள்ளைகளுக்கு பிஸ்கட் கொடுப்பதும், சோறு ஊட்டுவதும், அடிக்கடி தண்ணீர் கொடுக்கவும், பாத்ருமுக்கு கூட்டிக்கொண்டு ஓடுவதுமாக அல்லவா தங்கள் சிந்தனையை சிதறடிக்கிறார்கள்? மூந்நாட்களில் இருந்த யூத குழந்தைகளை நோக்குங்கள். ஒரு மனமற்ற ஆராதனை பிரயோஜனமற்றது. எவனொருவன் தேவனோடுள்ள ஐக்கியத்தை சரியாக உணர்ந்து, அனுதினமும் தனது வீட்டில் தேவனை ஆராதிக்கிறானோ அவனே தனது சந்ததியும் அப்படியே உருவாக பிரயாசப்படுவான்; அவனே ஞாயிறு ஆலயத்தில் கடந்து வந்து உண்மையான ஆராதனை செய்வான். பெற்றோர் எப்படிப்பட்டவர்? தேவ பக்தியுள்ளவரா? தேவ பக்தியற்றவரா? என்பதை அவர்களின் பிள்ளைகளின் கிரியைகள் மூலமே கணித்து விடலாம்.

அன்னாள் தனது குழந்தையாகிய சின்ன சாமுவேலுக்கு தேவ போதனை கொடுத்து வளர்த்து, தொழுகையின் மேன்மையை எடுத்துரைத்ததினாலல்லவா சாமுவேலும் முதல் முறை தேவாலயத்தில் பிரவேசித்த போது ஆண்டவரை பணிந்து கொண்டான் (1 சாமு. 1:28) பிற்காலத்திலும் தனது முதிர் வயதுவரை இறைவனின் சேவை செய்து

# தேவனுடைய அதிசயங்களும், அற்புதங்களும்

கர்த்தருக்கு ஸ்தோத்திரம். எனது அம்மாவுக்கு கழுத்தில் ஒரு கட்டி நெல்லிக் காய் அளவு ஏற்பட்டு, அது கொடிய வேதனையைக் கொடுத்துக் கொண்டிருந்தது. எவ்வித ஆகாரமும் உட்கொள்ள முடியாமலும், உமிழ்நீர் விழுங்க முடியாமலும், பேச முடியாமலும் தாங்க முடியாத வேதனைப்பட்டார்கள். தனியார் மருத்துவமனையில் காண்பித்து விலையுயர்ந்த ஊசி, மாத்திரைகளைக் கொடுத்தும் சுகம் கிடைக்கவில்லை. அம்மா வேதனை தாங்க முடியாமல் எட்டயபுரம் அரசு மருத்துவமனையில் போய் சேர்ந்தார்கள். அங்கு ஒரு வாரமாக இருந்தும் சிகிச்சை பலனளிக்கவில்லை. அம்மா மருத்துவமனையில் இருப்பதை அறிந்த தேவ பிள்ளைகள் அவர்களைப் பார்க்கப் போனபோது, "அன்று காலையில்தான் அவர்களை அனுப்பி விட்டோம்; ஐ கிரவுண்ட் ஆஸ்பத்திரிக்கு போகும் படி லட்டர் கொடுத்தனுப்பியுள்ளோம்; அந்த கட்டி புற்றுநோய்க்கு அறிகுறியாகக் காணப்படுகிறது; ஆகவேதான் நாங்கள் இங்கு ஆப்ரேஷன் பண்ணவில்லை; இதை அவர்களுக்கு நாங்கள் அறிவிக்கவில்லை; நீங்களும் அவர்களிடம் சொல்ல வேண்டாம்" என்று சொல்லி அனுப்பிவிட்டார்கள். அவர்கள் இந்த செய்தியை கோவில்பட்டி புதிய எருசலேம் சபை ஊழியர் ஐயாவிடம் சொல்லியிருக்கிறார்கள். செய்தி அறிந்ததும் ஊழியர் ஐயா வீட்டிற்கு வந்திருக்கிறார்கள். நானும் அம்மாவும் ஐ கிரவுண்ட் ஆஸ்பத்திரிக்கு போய் விட்டோம். ஆகவே ஊழியர் ஐயா திரும்பிப் போய் திருச்சபையின் தலைமை ஐயாவுக்கு எங்கள் நிலையை கடிதம் மூலம் தெரிவித்து, ஜெபிக்கும்படி எழுதியிருக்கிறார்கள். நாங்கள் ஆஸ்பத்திரிக்கு போக காலதாமதமானதால் மருத்துவமனையிலும் அனுமதிக்கப்படவில்லை. இவ்வளவு தூரம் அலைந்தும் பலனற்ற நிலையில் வேதனையோடே வீடு திரும்பி வந்து நான் ஜெபிக்க ஆரம்பித்தேன். அம்மாவும் அதுவரையில் அரைகுறையாகத்தான் கர்த்தரைத் தேடுவார்கள். அந்த வேளையில் வேதனையினிமித்தமாக அழுகையோடு கர்த்தரை நோக்கி எனக்கு இந்த வேதனையை மாற்றி, பரிபூரண விடுதலையைத் தாரும், நான் ஞானஸ்நானத்திற்கு ஒப்புக் கொடுக்கிறேன். இல்லாவிட்டால் என் உயிரை என்னை விட்டு எடுத்துக் கொள்ளும் என்று ஜெபித்தார்களாம். எனக்கு அந்த நேரத்தில் இந்த வியாதி என் அம்மாவைக் கர்த்தர் இரட்சிப்புக்குள்ளாக வழி நடத்துவதற்கு அனுமதித்தார் என்று அறிந்து கொண்டேன். இந்த நேரத்தில் அம்மாவுடைய வேதனையின் கண்ணீர் என் மனவேதனை, பரிசுத்தவான்கள் ஜெபம், சபையாருடைய ஜெபங்கள் இவையனைத்தோடுங் கூட திருச்சபையின் தலைமைக்கு அனுப்பியக் கடிதம் அது தீவிரமாகக் கடந்து சென்று பரலோகத்தின் தேவனுடைய அற்புத கரம், அற்புத கிரியைகளை நடப்பிக்கச் செய்தது. அந்த நேரமே என் அம்மா சத்தமிட்டு தேவனை ஸ்தோத்தரித்தார்கள். என்ன ஆச்சரியம்! உமிழ் நீர் விழுங்க முடியாமலிருந்த அம்மா நன்றாகப் பேசினார்கள், சாப்பிட்டார்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பரிபூரணமான சுகத்தை தந்தார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். அல்லேலூயா!

Sis. கோமதி,
துரையூர்,
கோவில்பட்டி (கிரா).

பிழை பற்ற வாழ்வு நடத்த அவரின் தாயின் போதனையே உதவியாயிருந்திருக்கும் என எண்ணுகிறேன்.

ஆகையால் ஆராதனையின் போது ஆவியோடும், உண்மையோடும், அவரை ஆராதியுங்கள் (யோவா. 4:24).

ஒரு மனதுடன் அவரை பணிந்து கொள்ளுங்கள், அவரைத் துதித்து, கனம்பண்ணி, அவர்பேரில் பயபக்தியாயிருங்கள் (சங். 22:23).

மகிழ்ச்சியோடு கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள் (சங். 100:2).

பயத்தோடும் பக்தியோடும் தேவனுக்கு பிரியமாய் ஆராதனை செய்ய கிருபையை பற்றிக் கொள்ளக் கடவோம். ஏன் என்றால் நம்முடைய தேவன் பட்சிக்கிற அக்கினியாயிருக்கிறாரே! (எபி 12:28,29).

உங்கள் ஆராதனையின் கருத்து என்ன என்று உங்கள் பிள்ளைகள் உங்களிடம் கேட்கும் விதமாக ஆராதியுங்கள் [யாத். 12:26]. ஏன் என்றால் ஒருமனமற்ற ஆராதனை நிச்சயமில்லாமல் ஓடுவதற்கு சமானம் [1 கொரி. 9:26].

ஆசீர்வாதத்தை பெறத்தக்கவராய் ஆராதியுங்கள். வாரத்தின் [7] ஏழு நாட்களும் நீங்கள் அவரை ஆராதிக்கவில்லையென்றால் ஒரு நாள் ஆராதிக்கிறோம் என்று எப்படி கூற முடியும்?

4] நற்கிரியைகள்:-

நற்கிரியைகள் செய்கிறதற்கு நாம் கிறிஸ்து இயேசுவுக்குள் சிருஷ்டிக்கப்பட்டு தேவனுடைய செய்கையாயிருக்கிறோம் (எபே. 2:10) என வேதம் கூறுகிறது. நாம் என்றால் யார்? இரட்சிக்கப்பட்ட ஒவ்வொருவரும் இந்தப் பட்டியலில் அடங்குவர்.

பெண்கள் நற்கிரியைகளினால் தங்களை அலங்கரிக்க வேண்டும் என்று அப். பவுல் எழுதுகிறார் (1 தீமோ. 2:10). தொற்காள் என்னும் சீஷி நற்கிரியைகளை மிகுதியாய் செய்து வந்ததினாலல்லவோ பேதுரு அவளை உயிரோடே எழுப்ப வேண்டும் என்ற விசுவாசத்தோடு விதவைகளெல்லாரும் பேதுருவை வரவழைத்து அவரை சூழ்ந்து நின்றனர் (அப். 9:36-41). வெறும் தானதர்மம் செய்வது நற்கிரியை என்று கருதப்படுவதில்லை. அந்நியரை உபசரிப்பது ஆதி. 18: 1-8, வியாதியுள்ளோருக்கு ஆறுதலாக பணிவிடை செய்வது, அவர்களை விசாரிப்பது, பசியோடிருக்க போஜனம் கொடுத்தல், தாகமுள்ளவரின் தாகத்தை தீர்த்தல்,

வாசகர் கவனத்திற்கு

புதிய எருசலேம் செய்திக்கு, கட்டுரைகள், செய்திகள், தங்கள் அனுபவ சாட்சிகள் சுருக்கமாக, இரண்டு அல்லது மூன்று பக்கங்கள் அமையும்படியாக எழுதி அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

வஸ்திரமில்லாதோருக்கு வஸ்திரம் கொத்தல், சுவிசேஷத்தினிமித்தம் காவலில் இருப்போரை போய் பார்த்து அவர்களை சந்தித்தல், இவைகள் யாவும் நற்கிரியைகளின் பட்டியலில் அடங்கும் (மத் 25:35,36).

உங்கள் கிரியைகள் பிறர் மத்தியில் வாசனை வீசட்டும். அன்று அந்த மரியாள் விலையுயர்ந்த நளதம் என்னும் தைலத்தை உடைத்து இயேசுவின் சிரசின்மேல் ஊற்றி அவரை கனம்பண்ணின போது அந்த வீடு மாத்திரம் முழுவதும் தைலத்தின் வாசனையால் நிரம்பிற்று. ஆனால் இயேசுவோ அவளை புகழ்ந்து அகிலமெங்கும் அவளது அந்த கிரியை வாசனை வீசும்படி நமக்கு வேத எழுத்துக்களில் அவளின் உயர்ந்த எண்ணத்தை எடுத்துரைத்துள்ளாரே [யோ. 12:3].

நாம் நற்கிரியை செய்ததினால் தேவன் நம்மை தெரிந்துக் கொள்ளவில்லை. ஆனால் நாம் தேவனுடைய பிள்ளைகளாய் மாறின தினிமித்தம் நற்கிரியைகளை செய்கிறோம். அப்படி நாம் செய்வதை புகழ்ந்து பேச கூடாது. ஒருவருக்கு உதவி செய்து விட்டு 'நான் அவனுக்கு உதவினதினால் தான் அவன் வாழ்கிறான்' என்று சொன்னோமானால் நாம் செய்த புண்ணியம் இறை சந்நிதியில் எண்ணப்படாமல் போய்விடும் என்பதை மறக்க வேண்டும். அந்த பரிசேயன் செய்த ஜெபத்தை தேவன் அங்கிகரிக்கவில்லையே. ஏன் என்றால் தனது நீதியை அவன் உயர்த்தி பேசி, பிறரை பழிசாட்டி தேவனிடம் எதையும் கேட்க தவறினதினிமித்தமே (லூக். 18:10:14). செய்த புண்ணியம் சொன்ன பேச்சு என்று ஆகையால் பழமொழி கூறுகிறது.

ஆகையால் நீங்கள் யாருக்கும் உதவி செய்தீர்களென்றால் அதை வெளியே பறை சாற்றி திரிய வேண்டாம். தேவன் ஏற்ற காலத்தில் உங்களுக்கு பதிலளிப்பார் நற்கிரியைகளை குறித்து இறையேசு கூறின ஓர் வாக்கியம் அடிக்கடி என் மனதில் முன்பு வந்து போவதுண்டு. எது? உன் வலது கை செய்வது இடது கை அறியாதிருக்கக் கடவது என்னும் வாக்கியமே! இதன் உண்மையான அர்த்தம் தான் என்ன என்று நீண்ட நாட்களாக இதனின் விடையை அறிய முற்பட்டேன். எல்லாரும் கூறினார்கள். நாம் செய்யும் பணி உதவிகளை உடனே மறந்து விடவேண்டும் அதுவே இதன் அர்த்தம் என்று பலரும் கூறினார். எனக்கோ திருப்தியில்லை. பின்பு ஓர் நாள் தேவன் ஒரு சம்பவம் மூலம் இந்த வசனத்தை விளக்கினார்.

பிரயாணப்பட்டு ஓர் இடத்துக்கு கடந்து சென்றுக் கொண்டிருந்த போது Signal லில் வாகனம் நின்றது. அப்பொழுது பிச்சை கேட்கும்படி சிலர் வந்தனர். அவர்களின் நிலை மிகவும் பரிதாபமானது. ஒருவர் இன்னொருவரை கழுத்தில் தூக்கி வைத்துக் கொண்டு பிச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார். மேலே இருப்பவரின் தோற்றம், குரஙைவிட பரிதாபம் இரண்டு கைகளும், இரண்டு கால்களும் சூம்பினவை, எலும்பும் தோலுமான தேகம், தலையில் ஓர் சிண்டு, மனநிலையில் பாதிக்கப்பட்டவர்; ஆகையால் நமட்டு சிரிப்பு. இப்படிப்பட்ட காட்சியை கண்டதும் எங்கள் மனம் உருகினது. Green Signal விழுவதற்கும் முன்பு தர்மம் செய்ய வேண்டும் என்று Bag ஐ திறந்த பொழுது எந்த இடம் பணம் வைத்தோம் என்று அறியாமல் தடுமாறவே, வேகமாக கையில் வந்த நிறைய சில்லரை காசுகளை துரிதமாக எடுத்து, வெளியே நீட்டி அவரின் கைகளில் வைத்தேன்.

இருதயம் மிகவும் பாரமாக இருந்தது. ஆண்டவரே உலகத்தில் இப்படிப்பட்ட ஜீவன்களின் ஆத்தும நிலை என்ன? என்ற கேள்வி மனதில் எழுந்தது. ஓர் கணம்

கண்களை மூடி இறைவா இப்பொழுது நாங்கள் போட்ட தர்மம் உமக்கு பிரீதியாயிருக்கட்டும் என வேண்டினேன். உடனே என் மனதில் உதித்த பதில் 'இதுவே வலது கை செய்தது இடது கை அறியாதிருக்கக் கடவது' என்னும் வசனத்தின் உண்மையான அர்த்தம் என்று என் உள்ளுணர்வில் இறைவன் பேசினர்.

ஆம், அன்று எவ்வளவு சில்லரை போட்டோம் என்பதை நானறியேன். ஆனல் சில்லரை அத்தனையும் 5ரூபாய், 2ரூபாய் மற்றும் 1ரூபாய் நாணயங்களை தவிர வேறெதுவுமில்லை என்பதை மட்டும் நிச்சயம் அறிவேன். ஆகையால் நான் எவ்வளவு போட்டேன் என்பதை நானே அறியாமல் பிச்சைக்காரருக்கு தர்மம் செய்வதே இறைவனின் மேலான கட்டளை என்பதை புரிந்து கொண்டேன். ஒவ்வொரு மனிதனுக்கும் இப்படிப்பட்ட வெளிச்சங்கள் உதிக்க வேண்டும் என வாஞ்சிக்கிறேன்.

வாரியிறைப்போம் ஏழைகளுக்கு கொடுப்போம். அப்பொழுது நமது நீதி என்றென்றைக்கும் நிற்கும் (2 கொரி. 9:10). நற்கிரியை எதுவானலும் சோர்ந்துபோகாமல் செய்யுங்கள் (ரோம. 2:7). நற்கிரியைகளாகிய கனிகளை தர தேவன் எதிர்பார்க்கிருர் (கொலோ 1:10).

லாசரு என்னும் தரித்திரன் உணவுக்காக நாய்களோடு போராடினதை கண்ட பின்பும் இரக்கம் காண்பிக்க தவறின ஐசுவரியவான் நரகத்தில் வேதனைப்பட்டான் என்று வேதம் கூறுகிறது (லூக். 16, 19-25). ஆகையால் எளியோருக்காக இரங்குவோமாக! யோபு எளியோரின தகப்பனுக விளங்கினர் (யோபு. 29:11-17). ஆகையால் தேவன் அவரது சிறையிருப்பை மாற்றிப்போட்டார். சாத்தானுக்கு சவுக்கடி கிடைத்திருக்கும்.

நன்மை செய்ய உனக்கு திராணியிருக்கும்போது அதை செய்யத்தக்கவருக்கு செய்யாமல் இராதே (நீதி 3:27). நியாயப்பிரமாணத்தை முழுவதும் கைக்கொண்ட வாலிபனொருவன் இன்னும் என்னிடத்தில் என்ன குறையுண்டு என்று இயேசுவிடம் கேட்டான். அவனுக்கு அவர் கொடுத்த பதில் உனக்குண்டானவைகளை விற்று தரித்திரருக்கு கொடு என்பதே [மத். 19:16-21] ஆகையால் நியாயப்பிரமாணத்தை முழுவதும் கைக் கொண்டவனயிருந்தும் அவனிடம் குற்றமுண்டு என்று இயேசு அறிவித்தார். ஏழைக்கு இரங்குகிறவனுக்கு தேவன் கொடுக்கும் ஆசீர்வாதம்.

1] அவனுக்கு எந்த நஷ்டமும் ஏற்படுவதில்லை (நீதி. 19:17).

2] அவனுக்கு சுகவாழ்வு உண்டாயிருக்கும் (ஏசா 58:8).

3] அவன் சத்துருக்களின் இஷ்டத்துக்கும் அவனை ஒப்புக் கொடாமலும், வியாதியின் படுக்கையை மாற்றியும் போடுவார் [சங் 41:1-3].

4] தேவ சந்நிதியில் அவன் நினைப்பூட்டப்படுவான் (அப். 10:4).

5) அவன் நீதி என்றென்றைக்கும் நிற்கும் [2 கொரி. 9:9].

குணசாலியான ஸ்திரீயின் நற்கிரியைகளை நாம் நீதி. 31:10-31ல் காண்கிறோம். ஒவ்வொரு பெண்ணும் அதனை வாசித்து, அதன்படி நடந்தால் புருஷனல் வாழ்த்துதல்களும் பிள்ளைகளால் புகழ்ச்சியும் ஏற்படும். நற்கிரியைகளை நடப்பிப்பதற்கு மிகுந்த தேவ கிருபை இல்லாவிட்டால் நிச்சயம் கிரியை செய்ய முடியாது.

ஆகையால் நீங்கள் எதை செய்தாலும் தேவனுடைய நாம மகிமைக்காக செய்யுங்கள். அப்படியில்லையென்றால் உங்கள் நற்

கிரியைகள் பிரயோஜனமாயிருக்க மாட்டாது. பணிவிடையின் ஆவியால் நிறைந்திருந்த சாராள், ரெபெக்காள், ருத், அபிகாயில் போன்ற பெண்களை இந்நாட்களில் இளம் தலைமுறையினரிடம் [வாலிப பெண்களிடம்] காண்பது ரொம்ப அரிதாயிருக்கிறது. வேதாகம பெண்கள் தங்களை நற்கிரியைகளினால் அலங்கரித்தனர்.

துர்க்கிரியைகளுக்கு அடையாளமாகிய சோம்பல் [வீட்டில் சமைக்காமல், புருஷனை சமைக்க வைப்பது]. வீடுவீடாய் திரிதல், அலப்புகிறது. வீண் அலுவல், மற்றும் தகாத காரியங்களை பிறரோடு பேசுதல், இவைகளில் ஒன்றும் புதிய எருசலேம் பெண்களிடம் காணப்பட வேண்டாம். நமது நற்கிரியைகளை காணும் புறஜாதியார் சந்திப்பின் நாளில் இறைவனை மகிமைப்படுத்தும் வண்ணமாக நாம திகழுவோமாக ஏன் என்றால் தேவதூதர் நமது கிரியைகளை உற்று நோக்கி கொண்டிருக்கிறார்கள் என்பதை மறக்க வேண்டாம் [1 தீமோ. 5:13; 1 பேது. 2:12-17]

பிறருக்கு பிறயோஜனமற்ற எந்த கிரியையும் நற்கிரியை என்றெண்ணப்படமாட்டாது. நற்கிரியைகளை செய்ய ஜாக்கிரதையாயிருப்போமாக! [தீத்து 3:1,8].

வெளியரங்கமாய் பிறர் அறியும்படி எந்த நற்கிரியையும் செய்ய வேண்டாம். யோவான் ஸ்நானகனுடைய பிரசங்கம் தான் என்ன?

1 இல்லாதவருக்கு கொடுங்கள் லூக் 3:11.

2 கட்டளைப்படி நடவுங்கள் லூக். 3:13.

3. யாருக்கும் இடுக்கண் செய்யாமல், பொய்யாய் ஆணையிடாமல், சம்பளமே போதும் என்றிருங்கள் என்பதே லூக். 3:14.

இவையாவும் கனியின் வாழ்க்கைக்கு அடையாளம். ஆகையால் நற்கிரியை என்னும் கனியினை நாம் கொடுத்தால் நாம் கிறிஸ்துவினுடையவர்களாயிருப்போம்.

நாம் நற்கிரியைகளில் தேறினவர்களாய் நிலைநிற்க இறை கிருபையை தேடுவோமாக!

5) சகோதர சிநேகம்:-

சகோதர சிநேகத்திற்கு அடையாளமாக முன் நிற்பவர் நமது முற்பிதாவாகிய ஆபிரகாமே! நமக்குள் சண்டை வேண்டாம் நாம் சகோதரர் என்கிறார். ஆபிரகாமும் லோத்து சண்டையிடவில்லை; சண்டை ஏற்பட்டது அவர்கள் இருவரின் மந்தை மேய்ப்பருக்குத்தான். ஆனால் ஆபிரகாமோ எனக்கும் உனக்கும் வாக்குவாதம் வேண்டாம் என்கிறார். இதுவே ஆவிக்குரிய வாழ்வின் உயர்ந்த நிலை. தாராளமாக விட்டுக்கொடுத்த ஆபிரகாம், லோத்து தன்னை விட்டு தூரம் போகலாம் என்று அனுமதியும் வழங்கிவிட்டார். ஆனால் அவரிடத்தில் வைத்திருந்த பாசத்தை அவர் விடவில்லை என்பதற்கு லோத்திற்காக அவர் இறைவன் முன் விண்ணப்பித்த சம்பவம் நமக்கு எடுத்துக்காட்டுகிறது. மட்டுமல்ல சிறைப்பட்டுப்போன லோத்தை திரும்ப தனது மனிதரோடே போய் 5 இராஜாக்களுடன் யுத்தம்பண்ணி மேற்கொண்டார். லோத்தையும் அவருக்கு உண்டான எல்லாவற்றையும் திருப்பிக் கொண்டு வந்தார் [ஆதி. 13:8; 18:23-33; 14:13-16];

அன்பே பிரதானம் என்று முழங்குகிறார் அப். பவுல் [1 கொரி. 13]. இன்று வாக்குவாதங்கள், மனப்பேதங்கள், சண்டைகள், கோபங்கள், விசுவாசிகள் மத்தியிலும் ஏற்படுவதை குறித்து ஆச்சரியப்படுகிறேன். தேவனுக்குள்ளாக புது சிருஷ்டியாக சிருஷ்டிக்கப்பட்ட தேவனைப்போல் மாறுவேன் என்று பாடல் பாடினால் மட்டும் போதாது!

கிரியையில் தான் நமது உண்மை நிலை புலப்படும். மனப்பேதங்கள் ஏற்படுவதற்கு

முக்கிய காரணம் பிறரை புரிந்து கொள்ளாத தன்மையே. பிறரோடுள்ள நமது உறவு எப்பொழுதும் சுமுகமாக இருக்க நாம் பிரயாசப்பட வேண்டும்.

யாவரோடும் கூடுமானவரை சமாதானமாயிருக்க நாடுங்கள் [ரோம. 12:18]. மனதில் ஒன்று பேசுபவராக நாம் இருந்தால் இருதயங்களை ஆராய்கிறவர் அதை அறியாரோ (நீதி. 24:12). ஒரே கூரையின் கீழ் பிறந்த சகோதர, சகோதரிகள் யாவரும் ஐக்கியமுடையவர்களாய் இருக்க வேண்டும் என்கிற போதனையை மோசே, ஆரோனும், மிரியாமும் சேர்ந்து மோசேயுடன் சண்டையிட்டபோது தேவன் மோசேக்கு சார்பாக நிற்க காரணம் எதுவாயிருந்தது? அவரின் [மோசேயின்] சாந்த குணமே; பதிலுக்கு பதில் பேசாத குணமே. தேவன் நம்பக்கத்தில் நின்று நீதியை நிலை நாட்ட ஏதுவாகும்.

இரட்சிக்கப்பட்ட ஒவ்வொரு தேவபிள்ளைகளும் நம்மோடு பிறந்த சகோதர சகோதரிகளாக இருக்கிறார்கள். எந்த வித்தியாசமும் பார்க்க வேண்டிய அவசியமில்லை. போலி கிறிஸ்தவர்களின் நடுவே ஜாதி பிரச்சனை மலைப்பாம்பைபோல் கிறிஸ்தவர்களை சுற்றி அவர்களை என்று விழுங் போகிறதோ நாமறியோம்.

எனது பெற்றோருக்காக நான் இறைவனை துதிக்கிறேன். ஏன் என்றால் சிறுவயதிலிருந்தே சகோதர சிநேகத்தோடும், கண்டிப்போடும், பாவம் என்றால் என்ன அதன் விளைவு என்ன? என்றும், தேவாராதனையில் ஒழுக்கம், பரிசுத்த ஜீவியம் இவைகளை போதித்து வளர்த்தார்கள். நாங்கள் சிறு பிள்ளைகளாக இருந்தபோது சண்டையிட்டு கொண்டால் அப்பா வீட்டிற்கு வந்தவுடன், அம்மா போய் அப்பாவிடம் கூறி விடுவார்கள். உடனே அப்பா எங்களை கூப்பிட்டு கைகாட்டி நிற்க செய்து, எங்கள் தவறை சுட்டிக் காட்டி, நாலு போடுபோட்டு. முழங்காலில் நிற்க வைத்து பின்பு எழுப்பி தடவிக் கொடுத்து; இனிமேல் இவ்விதம் செய்யக் கூடாது என்று எச்சரித்து அனுப்புவது இன்றும் என் மனக்கண் முன் அவை தோன்றுகிறது.

அதேப்போல ஜாதி என்றால் என்ன? என்பதையே அறியாமல் நாங்கள் வளர்க்கப்பட்டுள்ளோம். சமீபத்தில் ஊருக்கு சென்றிருந்தபோது ஒருவருடன் ஜாதியை குறித்து வாதிட்டேன். கடைசியாக அவர்கள் என்னிடம் கூறின வார்த்தை என்ன தெரியுமா? நிச்சயமாக உனது பெற்றோரே சமுதாயத்தில் சிறந்தவர்கள். உங்களுக்கு நற்போதனை கொடுத்து வளர்த்துள்ளார்கள்.

ஆகையால் உன் மனதும் வெண்மையாக இருக்கிறது; நானோ கருப்பு மனதுடையவன் என்றார்கள். ஜாதியைக் குறித்து அறியாமல் வளரும் பிள்ளைகள் எல்லாரிடமும் அன்புடையவர்களாயிருப்பார்கள் என்பதே என் எண்ணம். திருமணத்தின்போது தங்களது ஜாதியிலே துணைகளை தேடும மக்கள் உண்மை கிறிஸ்தவரல்லவே! நீங்கள் உண்மையாகவே சகோதர சிநேகத்தை குறித்து இறைவனால் போதிக்கப்பட்டிருந்ீர்களே யாகில் (அந்த தெசலோக்கியரைப்போல் 1 தெச. 4:9) மனப்பேதங்களுக்கு இடங் கொடுக்கமாட்டீர்கள்.

ஆவியின் கனிகளில் முதலாவது வருவது அன்பு. யாரிடத்தில்? முதலாவது தேவனிடத்திலும், பின்பு சகோதரரிடத்திலும் தானே உறவுகள் முறியாமல் பாதுகாப்பதே நமது மேலான நோக்காமாயிருக்கட்டும். இயேசுகிறிஸ்து தாமே சீஷருக்கு கொடுத்த புதிதான கட்டளை ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள் என்பதே (யோபு 13:34) அதுவே மறுபிறப்பிற்கு சிறந்த அடையாளம் சகோதர சிநேகமோ அல்லது அன்போ இல்லாதவன், முன் செய்த

பாவங்களறத் தான் சுத்திகரிக்கப்பட்டதை மறந்து, கண் சொருகிப்போன குருடனுயிருக்கிறான் என்று அப். பேதுரு நன்றாக தனது நிருபத்தில் எடுத்துரைத்துள்ளார் (2 பேது. 1:5–9).

யாதாமொருவன் தன் சகோதரன் பகைத்தால் (மனதில் கர்வம் வைத்தல், பழி வாங்கும் நோக்கத்தோடு நோட்டமிடுதல், வார்த்தைகளில் குற்றம் கண்டுபிடித்தல், அவனை (அவளை) பார்த்தாலே எனக்கு எரிச்சல் என்று கூறுவது, அவள் பொல்லாதவள், அவன் பொல்லாதவன் என்று பிறரிடம் தூற்றுதல் போன்ற காரியங்கள் நமக்கு வேண்டாம்) அவன் பொய்யன் தேவனிடத்தில் அன்பாயிருக்கிறேன் என்று கூறினுல் அது சகோதர சிநேகத்தில் தான் வெளிப்படும் [1 யோ. 4:7–21].

நீங்கள் பிறரோடு ஸ்தோத்திரம் கூறி பேசிக் கொள்வதை நான் இங்கு குறிப்பிடவில்லை. மனதில் உள்ள எண்ணங்கள் எப்படிபட்டவைகள் என்பதை ஆராய்ந்தறியுங்கள். ஒருவர் வசனத்தின்படி நடக்கவில்லை என்பதை நீங்கள் கண்டீர்களேயாகில், அவரிடம் நேரடியாக கூறுங்கள். அப்படி கூற மனதைரியம் இல்லாவிட்டால் சபையின் தலைவருக்கு அதை தெரிவிக்க அஞ்சவேண்டாம். ஆனுல் தயவு செய்து ஒருவரின் தவறை பிறரிடம் கூறி அவரின் வாசனையை கெடுக்காதீர்கள். ஏரோதை நேரிடையாக எச்சரித்த யோவான் ஸ்நானகனைப்போல் (மாற். 6:18), யோவாசை எச்சரித்த தீர்க்கதரிசியாகிய சகரியாவைப் போல் [2 நாளா. 21:20] இருங்கள்.

பழிக்கு பழி எதையும் செய்யாதீர்கள்! ஒரு முறை என் தங்கை நான் சொல்லிய சிறு காரியத்தை செய்ய தவறினதினுல் அவள் மேல் நான் கோபப்பட்டு அவளுக்கு செய்யும் உதவிகளை நிறுத்த எண்ணியுள்ளேன் என்று என் தகப்பனுரிடம் முறையிட்டபோது, அவர்கள் எனக்கு கூறிய பதில் அப்படி செய்யாதே! அவளை சொல்லி திருத்த வேண்டும். நீ செய்யும் உதவிகளை அவளுக்கு செய் என்பதே! உடனே நான் அதற்கு கீழ்ப்படிந்தேன். பின்புதான் உணர்ந்தேன் என் மனதில் எவ்வளவு பழி வாங்கும் சுபாவம் இருக்கிறது என்பதை! அதை மாற்ற இறைவனிடம் வேண்டினேன்.

சகோதர சிநேகத்துக்கு இன்னெறு நல்ல எடுத்துக்காட்டு யோபுவின் பிள்ளைகள் [யோபு 1:4]. புதிய ஏற்பாட்டில் மார்த்தாள், மரியாள், லாசருவின் வாழ்க்கை நல்ல உதாரணம். அவர்களுடைய நல் ஐக்கியம் கிறிஸ்து அவர்கள் மூவர் மீதும் அன்பு வைக்கவும், அவர்கள் வீட்டில் தங்கவும் செய்தாரே! ஆகையால் நாம் தேவனுல் பிறந்த பிள்ளைகளேயானுல் ஐக்கியமுடையவராய், சகோதர சிநேகமுடையவராய், ஒருவர் பாரத்தை ஒருவர் சுமந்து, கிறிஸ்து நமக்கு மன்னித்ததுபோல் ஒருவரையொருவர் மன்னித்து கிறிஸ்துவைப் போல் மாறுவோமாக! (லூக். 10:38–42; யோ. 11:1-45).

வெளிப்படையாக அன்பு பாராட்டுவது போல நடிக்காதீர் காரியங்களை பேசி தீர்க்கும் முன் திருவிருந்தில் பங்கெடுக்காதீர். தேவனுடைய சந்நிதியில் நான் குற்றமற்ற மன சாட்சியுடையவன் என்று கூறுவதில் எந்த பொய்யும் வேண்டாம். பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்

கினியும், கந்தகமும் எரியும் கடலில் தள்ளப்படுவர் என்று ஆண்டவர் கூறியுள்ளாரே. தேவனுல் முடிசூட்டப்பட வேண்டும் என்னும் நோக்கத்தோடு கிரியை செய்யுங்கள், ஆகையால் முடிவாக நாம் அறிவிப்பது.

1) நோக்கமுடையவராய் ஜெபியுங்கள்.

2) வேதத்தின்படி, நடக்கும்படி வேதம் வாசியுங்கள்.

3) ஒருமனதோடு அவருக்கு ஆராதனை செய்யுங்கள்.

4) எந்த நற்கிரியை செய்தாலும் இயேசுவின் நாமத்தினுல் செய்யுங்கள்.

5) குற்றமற்ற மனசாட்சியோடே சகோதர சிநேகம் கொள்ளுங்கள்; இதுவே வேதத்திலுள்ள சட்டம்.



(தொடர்ச்சி)

# திரியேகத்துவம்

திரித்துவ உபதேசம் நாஸ்திகர்களுக்குப் பத்தியம். ஆம் கெட்டுப் போகிறவர்களுக்கு அது பைத்தியமே. கடவுள் இருக்கிறார்; கடவுள் உயிரோடிருக்கிறார்; கடவுள் செயலாற்றுகிறார். இதை விசுவாசிப்பவர்களுக்கே திரித்துவ திரியேகத்துவ உபதேசம்.

மனிதன் கடவுளின் சாயலில் உண்டாக்கப்பட்டான். 'சாயல்' என்பது ஓர் உரு அல்லது வடிவத்தைக் காண்பியாமல் தத்துவத்தைக் காண்பிக்கும் ஒரு ...ம். பகுத்தறிவுடைய ஆள்தனமையில் ... 'நீ' என்ற பகுத்தறிவுடைய ஆள் ...மையில் பொறுப்போடும், உடன்பாட்டோடும், தனக்கு அப்பலான ஒரு சக்தியா, ஆளேயோ, ஒரு பெருளேயோ ...க்கூடிய வேட்கையும், சக்தியும் ...ய ஆள் தத்துவத்தில் மனிதன் ஆக்...டான். குரங்குக்கோ அல்லது நீ... நிலம் வாழ், ஆகாயம் வாழ், உயிர்ப்...கள் எதற்கும் இல்லாத ஆள்தத்து... மனிதன் உண்டாக்கப்பட்டிருக்கிறான். ஆள் தத்துவம் 'சாயல்' என்ற பதத்தை முற்றிலும் காட்டவில்லை. சாயல் என்பது பிரதிபலிப்பதை குறிப்பிடும். சாயல் என்பது நிழலேயும் குறிக்கும்.

மனிதன் கடவுள் தன்மையில் ஆக்கப்பட்டான். அது பற்றியே மனிதன், பூர்வ மனிதன் உட்பட தனக்கு மேற்பட்ட ஒன்று உண்டு என்பதை உணர்ந்தவனுக அவனவன் காலத்துக்கும் அவனவன் ஒளிக்கும் தக்க 'அதை' அல்லது 'அவரை' அடையப் பிரயாசப்படுகிறான். வெவ்வேறு வழிகளை வகுக்க முயல்கிறான். பூர்வ மனிதன் ஒருவன் ஆவி வணக்கத்தை மேற்கொள்ளுகிறான். அவனுக்குப் பின்னனவன் மற்றய தோன்றும் பொருள்களில் தனக்கு மேற்பட்ட 'ஒன்றை' அல்லது 'ஒருவனை' அடைய முயலுகிறான். மற்றொருவன் தனக்கு மேற்பட்டதை தெய்வம் எனக் கருதி பலவற்றில் அதைக் காண முயலுகிறான்.

சற்று அறிவு படைத்தவன் ஞானத்தாலோ, பக்தியினுலோ, கிரியையினுலோ

அடைய முயலுகிறன். காலங்களில் மக்கள் 'அதை' அல்லது 'அவரை' அடைய முயன் றனர். ஆனால் அவையாவும் மனிதனிலி ருந்து கடவுளை அடைய எடுத்துக் கொண்ட முயற்சியேயாகும்.

ஒன்று குறிப்பிட வேண்டும். மனிதன் தன்னில், தன் மூலம், தன்னுள் கடவுளைப் அறிய முடியாது. கடவுளை அறிய மனிதன் எடுக்கும் முயற்சியாவும் முற்றுகிவிடும். ஒளி யைப் பார்க்கக் கூடாதபடி அவன் கண் கள் கூசிப்போகின்றன. மனிதன் எளிதில் தொடக் கூடாதபடி 'எரிகிற சீனாய் மலைப் போன்றவர் அவர்' மலை உச்சியோ, ஆழ கடலோ, பூமியின் வெப்பமோ, ஆகாயமோ மனிதன் ஆசிக்கும் அவரைக் காட்ட முடி யாது. ஆதாலால் ஆண்டவரின் மனிதர் தனக்கு வெளிப்பாடு கிடைத்த போதிலும் இஸ்ரவேலின் தேவனும் இரட்சகருமாகிய நீர் மெய்யாகவே உம்மை மறைத்துக் கொண்டிருக்கிற தேவனயிருக்கிறீர் என்று கூறியுள்ளார். இதைக் கூறுபவர் மக்களில் பின்னடைந்த வகுப்பைச் சேர்ந்தவரா யிராமல் பூர்வீக வெளிப்பாட்டிற்குரிய ஒரு பெரிய வளர்ச்சியடைந்த சமுதாயத்தைச் சேர்ந்தவராகும்.

தன் அறிவினுல் கடவுளைக் கண்டு கொள்ளாமல் தன சமுதாயத்திற்கும், தனக் கும் கிடைத்த வெளிப்பாட்டின் மூலம் தன்க்கு மேற்பட்ட அவரை ஆண்டவர் என்று கண்டு முகங்குப்புற விழுந்து வணங்குகிறர். அவர் மார்க்கம் விவிலிய முறைப்படி 'யேகோவா' வணக்கம் எனப் படும். அவருடைய சமய நூல் முழுவதும் மனிதன் கடவுளை அடைய எடுத்த முயற் சியைக் கூறுமல், கடவுள் மனிதனுக்கு தம்மை வெளிப்படுத்திய விதத்தையே கூறி யுள்ளது.

சத்திய வேதம் கூறுவதென்ன? பூமியா னது வெறுமையாயும் ஒழுங்கின்மையுமாக இருந்த காலத்தில் 'கடவுள்' உண்டாகக் கடவது என்றர். உண்டாகககடவது என்ற வார்த்தை வெறும் சொல்லாக விளங்காமல், கடவுளின் சுய வெளிப்பாட்டை எடுத்துக் காட்டும் ஓர் உயரிய சித்தாந்த சொல்லா கும், வெளிப்பாட்டின் அதிகாரமுடைய வார்த்தை.

இங்கே 'வார்த்தை' எனப்பட்டது 'ஆள்' அற்ற ஓர் வெளிப்பாட்டைக் குறிக்காமல் அல்லது நாம் விசுவாசிக்க வேண்டிய ஓர் கோட்பாட்டின் அடிப்படையைக் குறிக்கா மல் விவிலிய நூல் ஆதாரப்படுத்தும் கட வுள் செயலின் தொடர்ச்சியையே குறிக்கும். அவ்வெளிப்பாட்டை அனுபவிக்க, அனு பவிக்க விசுவாச சித்தாந்தம் உண்டாயிற்று. இவ்வெளிப்பாடு அக்காலத்தில் அதே முறையில் பாவிக்கப்பட்டது.

பின்னர் மக்களோடு சம்பந்தப்படும் முறையில் 'தூதன்' யேகோவாவின் தூதன்' 'தூதர்' 'நாமம்' ஆகிய ஏதுப்பொருள் வாயி லாகவும், பக்குவப்பட்ட ஓர் ஆன்மாவோ? நேர்முகமாக 'நான் உன்னை ஆசீர்வதிக் கிறேன்' 'இருக்கிறவராக இருக்கிறேன்' நீ போ, நீ இதைச் செய் என்று நேர்முக மாகவும் கிடைக்கப் பெற்றது, இவ்வெளிப் பாடு விவிலிய நூலில் மனிதருக்கு விளங் கக் கூடிய முறையில் கதா ருபத்தில் சொல் லப்பட்டது. ஆனபடியால் எபிரெய நிருப கிரந்த கர்த்தா அது பற்றியே பின்வருமாறு சொன்னர். பூர்வகாலங்களில் பங்கு பங்காக வும், வகை வகையாகவும், தீர்க்கதரிசிக ளின் மூலமாய்ப் பிதாக்களுக்கு திருவுளம் பற்றின தேவன், இந்த கடைசி நாட்களில் குமாரன் மூலமாய்த் திருவுளம் பற்றினர் என்று கூறியுள்ளார்.

இந்த வெளிப்பாடு ஏதோ ஓர் உண் மையின் வெளிப்பாடைக் கூறுகிற தனிக் கூற்ருகவோ, மேற் கோட்களாகவோ எடுத் துக் காட்டப்படாமல் கடவுளின் வெளிப் பாடு என்ற உண்மை இயற்கையிலும், சிருஷ்டிப்பிலும் பிரத்தியட்சமான போதி

லும், சரித்திரத்திலும் பிரத்தியட்க்ஷமாயிற்று என்பதே. பொது வெளிப்பாட்டிலிருந்து தனி வெளிப்பாடு உண்டாயிற்று. ஆபிரகாமில் ஒரு பக்குவப்பட்ட சமுதாயம் உருவாக வேண்டும். குறிப்பாக எகிப்திலிருந்து இஸ்ரவேலை அழைத்த அமைப்பில் யேகோவா தம்மை வெளிப்படுத்தினர். தொடர்ந்த வெளிப்பாடே கிறிஸ்துவின் வெளிப்பாட்டில் பூரணப்பட்டது. இவ் வெளிப்பாட்டில் மனிதன் கடவுளை அறிந்து கொண்டான் என்று சொல்வதைவிட கடவுள் தம்மை மனிதனுக்கு வெளிப்படுத்தினர் என்று கூறலாம்; இதுவே சரி பரிசுத்த ஆவி மூலம் இவ்வெளிப்பாடு நிறைவேறலாயிற்று [யோ. 1:17; 8:32; 16:13,14; 17:17]. கிறிஸ்துவுக்குள் சகலமும் கூட்டிச் சேர்க்கப்படும் என்ற வெளிப்பாட்டின் இலட்சியத்தில் அறியப்பட்டுக் கொண்டே வருகிறது. கண்ணாடியில் நிழலாட்டமாய்ப் பார்க்கிற நாம் தேவனை [கடவுளை] இருக்கிற வண்ணமாகப் பார்க்க அல்லது முகமாகத் தரிசிக்க முயல்வதே வெளிப்பாட்டின் இரகசியம். இந்த அனுபவத்துக்கு வேண்டியவை விசுவாசமும் தாழ்மையுமே

(தொடரும்)

# மார்த்தீன் லூத்தர் சாஸ்திரியாரின் ஜீவிய சரித்திரம் (தொடர்ச்சி)

இதற்குப் பிறகு அவர் மறுபடியும் 16ம் தேதி தொர்கௌ ஊரில் தங்கி இளைப்பாறினர்கள். அங்கேயும் லூத்தர் பிரசங்கித்தர். இப்படியாக அவர்கள் வீட்டை விட்டு ஆறரை மாதங்களுக்குப் பிறகு அக்டோபர் மாதம் 17-ம் தேதி அல்லது 18-ம் தேதி மறுபடியும் வித்தன்புர்க் வந்து சேர்ந்தார்கள்.

அதி. 34. ஸ்மால்கால்தான் பட்டணத்தில் செய்த உடன்படிக்கை:-

1530-ம் வருஷம் நவம்பர் மாதம் 19-ம் தேதி இராஜ்ய சங்கம் நிறுத்தி வைக்கப்பட்டதென்று இராயன் தெரிவித்தான் 1531ம் வருஷம் ஜனவரி மாதம் 5-ம் தேதி தன் சகோதரன் பெர்டினண்ட் என்பவரை ரோமருடைய அரசனக நியமகம செய்யும்படி இராயன் சாமர்த்தியமாய் ஏற்பாடு செய்தான். ஒரு இராயனுடைய ஜீவிய காலத்தல் இப்படிப்பட்ட நியமகம் செல்ல வேண்டுமானல் அது ஏகோபிதமான நியமகமாக இருக்க வேண்டுமென்கிற இராஜ்ய பிரமாணத்தை எடுத்துக் காட்டி யோவான் நியமகப் பிரபு இந்த நியமத்னத எதிர்த்தார்.

யோவான் நியமகப் பிரபு ஒரு வேதப் புரட்டன் ஆனதால், ஆனதால், அவர் செய்த தடையை அவமதிக்கும்படி, இராயன பாப்புவிடமிருநது ஓர் அதிகாரப் பத்திரம் பெற்றன். யோவான் நியமகப் பிரபு அதற்கு இணங்க வேண்டுமென்றும் அப்படிச் செய்யாவிட்டால் இராயன் அவர் மேல் குற்றஞ்சாட்டி ஏகோபித நியமகம் செய்யும்படி கட்டாயம் பண்ணுவானென்றும் லூத்தர் யோசனை சொன்னர்.

அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கைக்குக் கையெப்பமிட்ட அல்லது பிறருக்கு அதற்குச் சம்மதம் கொடுத்த சுவிசேஷப் பிரபுக்கள் இராயனுடைய உபாயங்களால் சீர்திருத்தலுக்குக் கொடிய மோசம் வரும் என்று கண்டு

[தொடரும்]

"தேவனைத் தேடு"
**"SEEK GOD"**

**Regd No. 040088/84**
**Postal Regd. No, MH BY NE-94/95**
**Tamil Monthly Magazine**

# 1999-ம் புதுவருட வாழ்த்துதல்

"தேவனால் பிறப்பதெல்லாம் உலகத்தை ஜெயிக்கும் உங்கள் [விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம்" ஊக்கமாய் தேவனை விசுவாசிப்பீர்களாக தேவ ஆசீர் பெறுவீர்களாக. புதிய எருசலேம் செய்தி வாசகர்களை இயேசுவின் நாமத்தில் ஆசீர்வதிக்கிறோம்.

அறிவிப்புகள்

முழு இரவு விழிப்பு ஜெபம்

5 [செவ்வாய்] ஜனவரி 1999
4 [புதன்] நவம்பர் 1998
3 [வியாழன்] டிசம்பர் 1998

புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை
ஆண்டு சந்தா Rs. 30-00
வெளிநாடு Rs. 400-00

அனுப்ப வேண்டிய முகவரி :
CHIEF APOSTLE N. LAZAR
"NEW JERUSALEM CHURCH"
CHURCH LANE, TILAK-NAGAR,
DARGA CROSS ROAD, BHANDUP,
BOMBAY-400 078, INDIA.

3. மணி ஆர்டர் கூபபனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.

4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.

5. "புதிய எருசலேம் செய்தி" பத்திரிகை வேண்டுவோர் ரூ. 30 [முப்பது] சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் (CAPITAL LETTER) எழுதி பத்திரிக்கையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited and Published by: Chief Apostle N LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Mumbai-400 078. Printed at: NEW JERUSALEM PRESS, Tilak Nagar, Bhandup, Mumbai 400 078